திருவொற்றியூரான்

# கிருஷ்ண எசுர்வேதம்

## தைத்திரீய சங்கிதை

ஆறாங்காண்டம் ஒன்பதாம்பகுதி

வே. மோ. பெ. கா. வெளியீடு, நெ. 5



# கிருஷ்ண எசுர்வேதம்

## தைத்திரீய சங்கிதை

### சோம யாகப் பிராமணம்

சாயணபாடியக் கருத்து பொழிப்புரையுடன் கூடியது

ஒன்பதாம் பகுதி



இது

உயர் திரு.

**காசிவாசி சிவானந்த யதீந்திர சுவாமிகளால்**

மொழி பெயர்க்கப்பெற்று



சென்னை

திருவொற்றியூரான் அடிமை என்னும்

**தி. ப. இராமசாமிப் பிள்ளையவர்களால்**

தமது சொந்தப் பொருட்செலவிற் பதிப்பித்து

நன்கொடையாக அளிக்கப்பெற்றது.



விஷு ஆண்டு அர்ப்பிசித் திங்கள்.

1941

# கிருஷ்ண எசுர்வேத தைத்திரீய சங்கிதை

## சோம யாகப் பிராமணம் என்னும்

## ஆறுங்காண்டம்

### முதற்பிரபாடக விடயச் சுருக்கம்

---



---

## ஆறுங்காண்டம்

### இரண்டாம்பிரபாடக விடயச் சுருக்கம்

## ஆறுங்காண்டம்

### மூன்றும்பிரபாடக விடயச் சுருக்கம்

---



---

## ஆறுங்காண்டம்

### நான்காம்பிரபாடக விடயச் சுருக்கம்

## ஆருங்காண்டம்

### ஐந்தாம்பிரபாடக விடயச் சுருக்கம்

## ஆறுங்காண்டம்

### ஆறும்பிரபாடக விடயச் சுருக்கம்

---



**ஆறுங்காண்டத்தின்**

**விடயச் சுருக்கங்கள்**

முடிந்தன.

---

## கிருஷ்ண எசுர்வேத தைத்திரீய சங்கிதை

### ஆறுங்காண்டத்தின்

### பிழை திருத்தங்கள்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 8 | 16 | சோமஸ்தநா | சோமஸ்யதநா |
| 10 | 22 | வெண்ணெயை | வெண்ணையை |
| 13 | 26 | சாவிதாவின் | சவிதாவின் |
| 17 | 9 | சசங்கற்பம் | சங்கற்பம் |
| ,, | 27 | சரஶ்வத்தை | சரஸ்வத்யை |
| 18 | 16 | பேன்று | போன்று |
| 21 | 8 | வாத்ஸபந்தளாய் | வாத்ஸபந்தங்களாய் |
| 22 | 23 | பெற்றகிதாகி | பெற்றதாகி |
| 31 | 13 | மணைவி | மனைவி |
| 36 | 15 | விளைக்கு | விலைக்கு |
| 38 | 21 | சுருடீகாம் | சுமிருடீகாம் |
| 51 | 5 | गग्ध | गन्ध |
| 55 | 1 | அநு-3. | அநு-6. |
| 56 | 21 | தெளிக்கப்படுகின்றது. | விடப்படுகின்றது. |
| 59 | 28 | பூணை | பூனை |
| 60 | 10 | प्रवीयं | प्रवीय |
| ,, | 11 | प्रवीय | प्रवीयं |
| 65 | 28 | जिनीयान्मि | जिनीयात्तं वान्योजिनीयां |
| 78 | 6 | படுபடுகின்றான் | படுகின்றான் |
| 84 | 17 | त्सन्ध | त्मन्ध |
| 100 | 27 | முதலிலுங்மு | முதலிலும்மு |
| 102 | 21 | கார்மர்ஷ்ய | கார்ஷ்மர்ய |
| 103 | 4 | பகுதி | பரிதி |
| 10+ | 5 | त्या | त्वा |
| 114 | 9 | स | सैं |
| 115 | 5 | உமசத்யாக | உபசத்யாக |
| 117 | 23 | கெடாமலுல் | கெடாமலும் |
| 126 | 6 | स्या | स्रा |
| ,, | 18 | तु | दु |
| 127 | 1 | அநு-2 | அநு-5 |
| 128 | 6 | द्वैथ | द्वैय |
| 146 | 21 | रुते | रुते |
| 156 | 19 | போடுகின்றான் | போடுகின்றாள் |
| ,, | 20 | உண்டாக்குகின்றான் | உண்டாக்குகின்றாள் |
| 166 | 26 | स्स्तो | स्स्तो |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 175 | 27 | தொண்ணூறுகின்றன | நூற்றித் தொண்ணூறுகின்றன |
| ,, | 28 | தொண்ணூறில் | நூற்றித் தொண்ணூறில் |
| 183 | 26 | சாமைத்தை | சாமத்தை |
| 190 | 14 | ஆக்கினிந்திரன் | ஆக்கினீத்திரன் |
| 192 | 21 | வேதஃ | தேவஃ |
| 195 | 13 | ती | ती |
| 201 | 28 | ஒலியை | ஒளியை |
| 238 | 15 | நகஸ்த | நமஸ்த |
| ,, | 18 | நீர்வவிடும் | நீர்விடும் |
| 239 | 1 | ஆயோதேய்ஃ | ஆபோதேவீஃ |
| 264 | 15 | மந்தக்கிரக | மந்திக்கிரக |
| 270 | 7 | हादि | हार्दि |
| 271 | 19 | स्थं | स्य |
| 293 | 17 | प्रा | प्रा |
| 296 | 3 | வாசஸ்பதே | வாசஸ்பதயே |
| 309 | 14 | त्त्सो | न्त्सो |
| 313 | 15 | वाय | वाय |
| 320 | 14 | स्सा | स्मा |
| 325 | 12 | திருத்தி | நிருத்தி |
| 340 | 22 | கிருகங்கள் | கிரகங்கள் |
| 342 | 4 | र्था | र्वा |
| 343 | 1 | பிர-4 அநு-9. | பிர-5 அநு-3. |
| ,, | 3 | மந்திரத்தையும் | மந்திரமாகிய |
| 347 | 19 | ஆகவனீயத்தில் | ஆகவனீயத்தில் |
| 366 | 5 | சேமமாகிய | சேடமாகிய |
| 380 | 14 | यान्त | यन्ति |
| 390 | 13 | வாயிவாக | வாயிலாக |
| 398 | 25 | பஶ்யஃ | பஶ்ய |
| 404 | 23 | या-प्र·ब | या-प्र-ब |
| ,, | ,, | प्रजा एव वरुणपाशान्मुं | प्रजा एव वरुणपाशान्मुं |

பிழை திருத்தம்

முற்றிற்று.



# கிருஷ்ண எசுர்வேத தைத்திரீய சங்கிதை

## ஆறுங் காண்டம்.

காண்ட விடயச் சுருக்கம்.

चयनब्राह्मणं काण्डे पञ्चमेस्फुटमीरितम् ।
षष्ठेतु काण्डे सोमस्य मन्त्राणां ब्राह्मणं क्रमात् ॥ १ ॥

ஐந்தாங்காண்டத்தில் மகாக்கினி சயனத்தின் பிராமணங்கள் கூறப்பட்டன. இவ் வாறுங்காண்டத்தில் சோமயாகத்தின் பிராமணங்கள் கூறப்படுகின்றன என்பது.

ஆறுங் காண்டத்தின்
முதலாம் பிரபாடக விடயச் சுருக்கம்.

षट्स्युः प्रपाठकाष्षष्ठे काण्डे प्रत्येकमेषु च ।
एकादशानुवाकास्स्युस्तदर्थान्वच्म्यनुक्रमात् ॥ १ ॥

प्राग्वंशं क्षुरकर्मादि संस्कृतः प्रविशेदिति ।
आद्ये प्रोक्तं द्वितीये तु दीक्षाहुतय ईरिताः ॥ २ ॥

कृष्णाजिनेन वस्त्रेण दीक्षा मेखलया तथा ।
कुर्यात्तृतीये तत्प्रोक्तं तथा कृष्ण विषाणया ॥ ३ ॥

चतुर्थे दण्डमादाय मुष्टीकरणवाग्यमौ ।
कृत्वासौ दीक्षितो भूत्वा नियमाननु तिष्ठति ॥ ४ ॥

पञ्चमे प्रायणीया स्यात्षष्ठे त्वरुणया क्रयः ।
सप्तमे तत्प्रकारस्स्यादष्टमे पदसंग्रहः ॥ ५ ॥

सोमोन्मानन्तु नवमे दशमेऽन्यैश्च तत्क्रयः ।
एकादशे क्रीतसोमं शकटेन नयेदिति ॥ ६ ॥
प्रपाठकेऽस्मिन्प्रथमेऽनुवाकार्थास्समीरिताः ।

---

*இவ் வாறுங் காண்டத்தில் ஆறு பிரபாடகங்கள் இருக்கின்றன. அவற்றுள் ஒவ்வொரு பிரபாடகத்திலும் பதினொரு அநுவாகங்களுள்ளன. அவற்றிலும், இம் முதல் அநுவாகத்தில் 'பிராக் வம்சம்' என்னும் மூங்கிற் கொட்டகைக்குள் நுழைவது முதலியதும், இரண்டாவதில் தீக்ஷாகுதி முதலியவைகளும், மூன்றாவதில் மான் தோல் முதலியவைகளால் தீட்சை செய்து கொள்வதும், நான்காவதில் தடி எடுத்துக் கொள்வது முதலியதும், ஐந்தாவதில் பிராயணீயேஷ்டியும், ஆறாவதில் சோமத்தைக்கொண்டு வருவதும், ஏழாவதில் சோமத்தை விலைக்கு வாங்குவதன் பொருட்டுச் செய்யும் ஹோமமும், எட்டாவதில் பசுங்கன்றின் காலடி மண்ணை எடுத்துக்கொள்வதும், ஒன்பதாவதில் சோமத்தை அளப்பதும், பத்தாவதில் சோமத்தை விலைக்கு வாங்குவதும், பதினொன்றாவதில் சோமத்தை வண்டியில் வைத்துக்கொண்டு வருவதுஞ் சொல்லப்படுகின்றன என்பது.*

---

## ஆறுங்காண்டம் முதற்பிரபாடகம்

### முதலநுவாகம்.

*பிராசீன வம்ச முதலானவற்றைக் கூறும் பிராமணங்கள்.*

**எட்டுப் பஞ்சாதிக்குமேல் நாற்பத்தேட்டு பதங்களைக் கொண்டது.**

**प्राचीनवꣳशं करोति देवमनुष्या दिशो व्यभजन्त प्राचीं देवा दक्षिणा पितरः प्रतीचीं मनुष्या उदीचीꣳ रुद्रा यत्प्राचीनवꣳशं करोति देवलोकमेव तद्यजमान उपावर्तते परि श्रयत्यन्तर्हितो हि देवलोको मनुष्यलोकान्नास्माल्लोकात्स्वेतव्यमिवेत्याहुः को हि तद्वेद यद्यमुष्मिँल्लोकेऽस्ति वा न वेति दिक्ष्वतीकाशान्करोति [१] उभयोर्लोकयोरभिजित्यै केशश्मश्रु वपते नखानि नि कृन्तते मृता वा एषा त्वगमेध्या यत्केशश्मश्रु मृतामेव त्वचममेध्यामप-**

முதலானவைகள்)

हत्यं यज्ञियो भूत्वा मेधमुपैत्यङ्गिरसस्सुवर्गं लोकं यन्तोऽप्सु दीक्षातपसी प्रावेशयन्नप्सु स्नाति साक्षादेव दीक्षातपसी अव रुन्धे तीर्थे स्नाति तीर्थे हि ते तां प्रावेशयन्तीर्थे स्नाति [२] तीर्थमेव समानानां भवत्यपोऽश्नात्यन्तरत एव मेध्यो भवति वाससा दीक्षयति सौम्यं वै क्षौमं देवतया सोममेष देवतामुपैति यो दीक्षते सोमस्य तनूरसि तनुवं मे पाहीत्याह स्वामेव देवतामुपैत्यथो आशिषमेवैतामा शास्तेऽग्नेस्तूषाधानं वायोर्वातपानं पितृणां नीविरोषधीनां प्रघातः [३] आदित्यानां प्राचीनतानो विश्वेषां देवानामोतुर्नक्षत्राणामतीकाशास्तद्वा एतत्सर्वदेवत्यं यद्वासो यद्वाससा दीक्षयति सर्वाभिरेवैनं देवताभिर्दीक्षयति बहिःप्राणो वै मनुष्यस्तस्याशनं प्राणोऽश्नाति सप्राण एव दीक्षत आशितो भवति यावानेवास्य प्राणस्तेन सह मेधमुपैति घृतं देवानां मस्तु पितृणां निष्पक्वं मनुष्याणां तद्वै [४] एतत्सर्वदेवत्यं यन्नवनीतं यन्नवनीतेनाभ्यङ्क्ते सर्वा एव देवताः प्रीणाति प्रच्युतो वा एषोऽस्माल्लोकादगतो देवलोकं यो दीक्षितोऽन्तरेव नवनीतं तस्मान्नवनीतेनाभ्यङ्क्तेऽनुलोमं यजुषा व्यावृत्त्या इन्द्रो वृत्रमहन्तस्य कनीनिका पराऽपतत्तदाञ्जनमभवद्यदाङ्क्ते चक्षुरेव भ्रातृव्यस्य वृङ्क्ते दक्षिणं पूर्वमाङ्क्ते [५] सव्यꣳहि पूर्वं मनुष्या आञ्जते न निधावते नीव हि मनुष्या धावन्ते पञ्च कृत्व आऽङ्क्ते पञ्चाक्षरा पङ्क्तिः पाङ्क्तो यज्ञो यज्ञमेवाव रुन्धे परिमितमाऽङ्क्तेऽपरिमितꣳ हि मनुष्या आञ्जते सतूलयाऽऽङ्क्तेऽपतूलया हि मनुष्या

आञ्जते व्यावृत्त्यै यदपतुलयाऽऽञ्जीत वज्र इव स्यात्सतूलयाऽङ्क्ते मित्रत्वाय [६] इन्द्रो वृत्रमहन्त्सोऽ १ पो १ ऽभ्यम्रियत तासां यन्मेध्यं यज्ञियꣳ सदेवमासीत्तदपोदक्रामत्ते दर्भा अभवन् यद्दर्भपुञ्जीलैः पवयति या एव मेध्या यज्ञियास्सदेवा आपस्ताभिरेवैनं पवयति द्वाभ्यां पवयत्यहोरात्राभ्यामेवैनं पवयति त्रिभिः पवयति त्रय इमे लोका एभिरेवैनं लोकैः पवयति पञ्चभिः [७] पवयति पञ्चाक्षरा पङ्क्तिः पाङ्क्तो यज्ञो यज्ञायैवैनं पवयति षड्भिः पवयति षड्वा ऋतव ऋतुभिरेवैनं पवयति सप्तभिः पवयति सप्त छन्दाꣳसि छन्दोभिरेवैनं पवयति नवभिः पवयति नव वै पुरुषे प्राणास्सप्राणमेवैनं पवयत्येकविꣳशत्या पवयति दश हस्त्या अङ्गुलयो दश पद्या आत्मैकविꣳशो यावानेव पुरुषस्तमपरिवर्गम् [८] पवयति चित्पतिस्त्वा पुनात्वित्याह मनो वै चित्पतिर्मनसैवैनं पवयति वाक्पतिस्त्वा पुनात्वित्याह वाचैवैनं पवयति देवस्त्वा सविता पुनात्वित्याह सवितृप्रसूत एवैनं पवयति तस्य ते पवित्रपते पवित्रेण यस्मै कं पुने तच्छकेयमित्याहाऽऽशिषमेवैतामा शास्ते [९] ॥ अतीकाशान्करोत्यवेशयन्तीर्थे स्नाति प्रघातो मनुष्याणां तद्वा आऽङ्क्ते मित्रत्वाय पञ्चभिरपरिवर्गमष्टाचत्वारिꣳशच्च ॥ १ ॥

*இதில் பிராசீனவம்சஞ் செய்தல் முதலானவைகள் கூறப்படுகின்றன.*

*பாடியகாரர் இவ்வாறுங்காண்ட வுரையை முறையாய் முற்றும் முதற் காண்டம் இரண்டாம் பிரபாடக முதற்கொண்டு இரண்டு மூன்று பிரபாடகங்களிற் கூறியிருப்பினும், யாம், காண்ட முறைபற்றி இவ் வாறுங்*

முதலானவைகள்)

காண்டத்திற்கு இங்கு அவ்வுரையை எழுதுகின்றோம். ஐந்தாங்காண்டத்திற்கும் அவ்வாறே எழுதியுள்ளோம்.

---

பிராசீன வம்சம்; அதாவது கிழக்குநுனியாக மூங்கிலைப்போட்டுக் கட்டும் ஒரு கூரைவீட்டின் விசேடம்; அதைச் செய்தல்.

பிராமணம்—1

**प्राचीनवꣳशं करोति देवमनुष्या दिशो व्यभजन्त प्राचीं देवा दक्षिणा पितरः प्रतीचीं मनुष्या उदीचीꣳ रुद्रा यत्प्राचीनवꣳशं करोति देवलोकमेव तद्यजमान उपावर्तते ।**

என்பது.

உரை.

கிழக்கில் நுனிகள் வரும்படி மூங்கில்களைப் போட்டு ஒரு வீடுகட்டுகின்றான். கிழக்கில் தேவர்களும், தெற்கில் பிதிர்க்களும், மேற்கில் மனிதர்களும், வடக்கில் உருத்திரர்களும் திக்கைப் பிரித்துக்கொண்டிருக்கின்றார்கள். ஆதலின், வேள்வித்தலைவன் கிழக்கில் நுனியாக வீடு கட்டுதல் என்பது தேவலோகத்தையே உண்டு பண்ணுகின்றான் என்பதாம். இது, தலைமயிர் கழிப்பதற்கு முன் செய்ய வேண்டியதாம். இது வேள்வியால் தேவதைகளை ஆராதனை செய்வதில் ஒரு சிறிய வீடாய் மூங்கில்கள் தேவாராதனையின் சம்பந்தத்தை யடைவதாம். இது கிழக்கில் மூங்கிலின் நுனிவரும்படி செய்தலால் பிராசீனவம்சமெனப்படும். இதுவே தேவாராதனைக் கிடமென்பர் சிலர் என்பது.

---

வீட்டிற்குச் சுவர்போல், மறைத்தல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—2

**परि श्रयत्यन्तर्हितो हि देवलोको मनुष्यलोकात् ।**

என்பது.

உரை.

மனிதலோகத்திலிருந்து தேவலோகம் காணப்படாத தாயிருத்தலின். மனிதர்களாற் பார்க்கப்படா திருத்தற்பொருட்டு இதற்கும் மறைப்புக்கட்டல் வேண்டும் என்பதாம்.

---

வாசல்களை விதிக்கின்றது.

பிராமணம்—3

नास्माल्लोकात्स्वेतव्यमिवेत्याहुः को हि तद्वेद यद्यमुष्मिँल्लोकेऽस्ति वा न वेति दिक्ष्वतीकाशान्करोत्युभयोर्लोकयोरभिजित्यै ।

என்பது.

உரை.

மனைவிமக்கள் முதலானவர்களால் உண்டாகும் இவ்வுலக சுகம் பிரத்தியட்சமாம். இறந்த பின் அடையப்படும் பரவுலகமோ, ஐயப்பாடுடையதாம். ஆதலின், அதன் சுகமும் சந்தேகத்திற் கிடமானதாம். மற்றும், வலியபாவத்தாற்றடுக்கப் படுவதுமாம். ஆதலின், இவ் வுலகத்தினின்றும் இப்போது அடியோடு அங்குப் போய்விடக்கூடாது என்று சான்றோர்கள் கூறுகின்றனர். இதுபற்றி, இவ்வுலகத்தைப் பார்த்துக்கொண்டிருத்தற் பொருட்டு வாசல்கள் வைத்தல்வேண்டும். அதனால், இரண்டுலகங்களும் வெல்லப்பட்டதாகின்றன என்பது.

---

மயிர்களைக் கழித்தல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—4

केशश्मश्रु वपते नखानि नि कृन्तते मृता वा एषा त्वगमेध्या यत्केशश्मश्रु मृतामेव त्वचममेध्यामपहत्य यज्ञियो भूत्वा मेधमुपैति ।

என்பது.

உரை.

தலைமயிர்களையும் மீசைகளையுங் கழித்துக் கொள்ளுகின்றான். நகங்களை அறுத்துக்கொள்கின்றான். இவைகள் அசுத்தங்கள். தலைமயிர்களும் மீசைகளும் மண்ணின் தோல்கள்; இவைகளை நீக்கிவிட்டுப் புநிதனாய் வேள்விக்குரியவனாகின்றான் என்பது.

---

நீராடலை விதிக்கின்றது.

பிராமணம்—5

अङ्गिरसस्सुवर्गं लोकं यन्तोऽप्सु दीक्षातपसी प्रावेशयन्नप्सु स्नाति साक्षादेव दीक्षातपसी अव रुन्धे ।

என்பது

முதலானவைகள்)

உரை.

மொட்டையடித்தல் முதலியன தீட்சையாம். உணவருந்துதலில் நியமம் தவமாம். அங்கிரசர்கள் சுவர்க்கத்திற்குச் செல்லும்போது இவ்விரண்டையும் தண்ணீரிற் புகும்படி செய்தனர். ஆதலின், நீராடுகின்றவன் நேரே இவ்விரண்டையு மடைகின்றான் என்பதாம்.

---

நீராடலும், தீர்த்தமாயிருத்தல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—6

**तीर्थे स्नाति तीर्थे हि ते तां प्रावेशयन् ।**

என்பது.

உரை.

அவர்களுடைய தவமும் தீட்சையும் தீர்த்தத்திற்குட் புகுந்தன. ஆதலின், தீர்த்தமாடல் வேண்டுமென்பதாம்.

---

கூறிய பொருளையே எடுத்துக்கொண்டு துதிக்கின்றது.

பிராமணம்—7

**तीर्थे स्नाति तीर्थमेव समानानां भवति ।**

என்பது.

உரை.

தீர்த்தத்தில் நீராடுகின்றவன், தீர்த்தஞ் சேவிக்கப் படுவதுபோல் தன்னைப் போன்றார்களாற் சேவிக்கப் பெறுகின்றான் என்பது.

---

நீரருந்துவதை விதிக்கின்றது.

பிராமணம்—8

**अपोऽश्नात्यन्तरत एव मेध्यो भवति ।**

என்பது

உரை.

நீரருந்தவதால் புனிதனுகின்றான் என்பது.

---

பட்டாடை யுடுத்தும்படி விதிக்கின்றது.

பிராமணம்—9

**वाससा दीक्षयति सौम्यं वै क्षौमं देवतया सोममेष देवतामुपैति यो दीक्षते ।.**

என்பது.

உரை.

*பட்டு ஆடையால் தீட்சிக்கப்படுகின்ருன். சோமம் அபிமானி தேவதை யாதலின் பட்டாடை யணிவதால் சோமதேவதையை அடைகின்ருன் என் பது*

---

மந்திரத்தின், முற்பாதி பிற்பாதிகட்கு உரை கூறுகின்றது.

பிராமணம்—10

**सोमस्य तनूरसि तनुवं मे पाहीत्याह स्वामेव देवतामुपैत्यथो आशिषमेवै-तामा शास्ते ।**

என்பது.

உரை.

*'சோமஸ்தநூரஸி தநுவம் மேபாஹி' என்றது, பட்டாடை யணிந்தவ னுக்கு தேவதை சோமமாதலின் தனது தேவதையையே யடைகின்ருன் என்னும் இது ஆசீர்வாதம் போன்றதாகின்றது என்பது.*

---

மற்ருருவகையால் அதையே புகழ்கின்றது.

பிராமணம்—11

**अग्नेस्तूषाधानं वायोर्वातपानं पितृणां नीविरोषधीनां प्रघात आदित्यानां प्राचीनतानो विश्वेषां देवानामोतुर्नक्षत्राणामतीकाशास्तद्वा एतत्सर्व-देवत्यं यद्वासो यद्वाससा दीक्षयति सर्वाभिरेवैनं देवताभिर्दीक्षयति ।**

என்பது.

உரை.

*இரும்புக்கம்பியில் நூலைச்சுற்றுதல் அக்கினியின் சம்பந்தமுடையதாம், காற்றில் காயவைத்தல் வாயுவின் சம்பந்த முடையதாம், முடிதல் ஒஷதிக ளின் சம்பந்தமாம், தடியால் அடித்தல் ஆதித்தர்களின் சம்பந்த முடைய தாம், நீளத்தில் நூலை நெய்தல் விசுவதேவர்களின் சம்பந்தமாம், குறுக்கில் நெய்தல் தேவர்களின் சம்பந்தமாம், துவாரங்கள் நட்சத்திரங்களின் சம்*

முதலானவைகள்)

பந்தமுடையனவாம். ஆதலின், ஆடையால் தீட்சை செய்துகொண்டவன் எல்லாத் தேவர்களாலுந் தீட்சை செய்துகொண்டவனாகின்றான் என்பது.

---

உணவருந்துவதை விதிக்கின்றது.

பிராமணம்—12

**बहिः प्राणो वै मनुष्यस्तस्याशनं प्राणोऽश्नाति सप्राण एव दीक्षते ।**

என்பது.

உரை.

வெளிப் பிராணனையுடையவர்கள் மனிதர்கள். அவர்கள் உணவருந்தல் பிராணன் இருத்தற்குக் காரணமாதலின் பிராணனும். ஆதலின், உணவருந்துதலால் பிராணனுடன் தீட்சை பண்ணிக்கொண்டவனாகின்றான். இதுவும் சுற்றத்தார்களாற் போற்றப்பெற்று மிகுதியா யுணவருந்துதலாம் என்பது.

---

உணவருந்துவதில் சிறிது விசேடத்தை விதிக்கின்றது.

பிராமணம்—13

**आशितो भवति यावानेवास्य प्राणस्तेन सह मेधमुपैति ।**

என்பது.

உரை.

இவ்வாறு உணவருந்தியவன் எல்லாப் பிராணன்களுடனும் புநிதத்தை யடைகின்றான் என்பது.

---

நவநீதம் (புதுவெண்ணெயைத்) தேய்த்துக் கொள்வதை விதிக்கின்றது.

பிராமணம்—14

**घृतं देवानां मस्तु पितॄणां निष्पक्वं मनुष्याणां तद्वा एतत्सर्वदेवत्यं यन्नवनीतं यन्नवनीतेनाभ्यङ्क्ते सर्वा एव देवताः प्रीणाति ।**

என்பது.

உரை.

முழுதும் பக்குவமாய் உருகியது நெய் இது தேவர்கட்குரிதாம், சிறிது பக்குவமானது கட்டி நெய் பிதிர்க்கட்காம், முழுதும் பக்குவமிலாதது வெண்ணெயாம் இது மனிதர்கட்காம். இவ்வாறு பக்குவ வேறுபாட்டால்

வெண்ணெ ஒன்றே மூவகைப் படுகின்றது. இதனால், எல்லாத் தேவர்களுங் களிப்படைகின்றனர் என்பது.

---

மற்றொருவகையால் வெண்ணெ தேய்த்துக்கொள்வதைப் புகழ்கின்றது.

பிராமணம்—15

**प्रच्युतो वा एषोऽस्माल्लोकादगतो देवलोकं यो दीक्षितोऽन्तरेव नवनीतं तस्मान्नवनीतेनाभ्यङ्क्ते ।**

என்பது.

உரை.

தீட்சை பண்ணிக்கொண்டவன் வேள்வியையே மேற்கொண்டவனாதலின் இவ்வுலகினின்றும் நீங்கியவனாகின்றான், வேள்வி முற்றாமையின் பரலோகத்தையு மடைந்திலன், மற்றோ, இடையில் நிற்கின்றான். அதுபோல் பாலிலிருந்து வேறுபட்டது வெண்ணெ; ஆனால், நெய்யுமாகவில்லை ஆதலின், இடைப்பட்ட நிலை யுடையதாம் இவ்வாற்றால் வெண்ணெயைத் தேய்த்தல் பொருத்தமானது என்பது.

---

இரண்டுகுணங்களை விதிக்கின்றது.

பிராமணம்—16

**अनुलोमं यजुषा व्यावृत्त्यै ।**

என்பது.

உரை.

மனிதர்கட்கு, உடம்பின் மயிர்களிருக்குமுறையாகத்தேய்த்தல்வேண்டும் என்பது நியமம் அல்ல. மற்றும், வெண்ணெதேய்த்துக் கொள்வதில் மந்திரமுமில்லை, ஆதலின் இங்கு, மயிர்கள் முளைத்து நிற்கும் வகையில்வெண்ணெயைத் தடவிக் கொள்ளல்வேண்டும் மயிர்கட்கு எதிராய்த் தடவல்கூடாது எனவும், மந்திரத்துடன் தேய்த்துக் கொள்ளல் வேண்டுமென்னும் இருவகை நியமங்களையும் விதிக்கின்றது என்பது.

---

முதலானவைகள்)

மந்திரப் பொருளை விரித்துக்கொண்டு மையிடுவதை விதிக்கின்றது.

பிராமணம்—17

**इन्द्रो वृत्रमहन्तस्य कनीनिका पराऽपतत्तदाञ्जनमभवद्यदाङ्क्ते चक्षुरेव भ्रातृव्यस्य वृङ्क्ते ।**

என்பது.

உரை.

இந்திரன் விருத்திரனைக் கொன்றபோது அவனுடைய கருவிழி கீழே விழுந்து மையாயிற்று. ஆதலின், கண்ணிற்கு மையிடுவதால் பகைவனுடைய கண் கெட்டுவிடுகின்றது என்பது.

---

முறையாய் அதன் குணங்களை விதிக்கின்றது.

பிராமணம்—18

**दक्षिणं पूर्वमाङ्क्ते सव्यꣳहि पूर्वं मनुष्या आञ्जते न नि धावते नीव हि मनुष्या धावन्ते पञ्च कृत्व आऽङ्क्ते पञ्चाक्षरा पङ्क्तिः पाङ्क्तो यज्ञो यज्ञमेवाव रुन्धे परिमितमाऽङ्क्तेऽपरिमितꣳ हि मनुष्या आञ्जते सतूलयाऽऽङ्क्तेऽपतूलया हि मनुष्या आञ्जते व्यावृत्त्यै ।**

என்பது.

உரை.

முதலாவது வலது கண்ணில் மையிடுகின்றான்; மனிதர்கள் முதலில் இடது கண்ணில் இட்டுக்கொள்கின்றனர். இவன், மீண்டும் மீண்டுஞ் சுற்றித் தேய்க்காமல் இட்டுக்கொள்கின்றான், மனிதர்கள் மீண்டும் மீண்டுஞ் சுற்றித் தேய்க்கின்றார்கள். இவன், ஐந்துமுறை மையிட்டுக்கொள்ளல் வேண்டும். ஏனெனின்? ஐந்து எழுத்துக்களைக் கொண்டது பந்தி என்னுஞ் சந்தமாம், வேள்வியும், புரோடாசப் பொருள்கள் ஐந்தைக் கொண்டது; ஆதலின், வேள்வியை அடைகின்றான் என்க. அளவுடன் இவன் இட்டுக்கொள்கின்றான் மனிதர் அளவின்றி இட்டுக்கொள்கின்றனர். இவன், நுனிப்பூவுடன் கூடிய தருப்பை ஈர்க்கிலால் இட்டுக்கொள்கின்றான். மனிதர்கட்கு இஃதில்லை ஆதலின், இது, பொது மனிதர்களின் முறையை நீக்குதற் பொருட்டாம் என்பது.

---

இதில் மாறுபடில் கேடுவருமென்பதுடன் தனது பக்ஷத்தை வற்புறுத்துகின்றது.

பிராமணம்—19

**यदपतूलयाऽऽञ्जीत वज्र इव स्यात्सतूलयाऽञ्क्ते मित्रत्वाय ।**

என்பது.

உரை.

பூவுடன்கூடிய தருப்பை ஈர்க்கிலால் மையிடில் மித்திரத்தன்மையை படைவன், பூவின்றிய ஈர்க்கிலால் மையிடில் அது மிகக் கூரியதானதால் வச்சிரம் போன்று பகைமையைத் தரும் என்பது.

---

தேய்த்துள்ள வெண்ணெயை தருப்பைப் பிடியால், தடவிவிடல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—20

**इन्द्रो वृत्रमहन्त्सोऽ१ पो१ ऽभ्यम्रियत तासां यन्मेध्यं यज्ञियꣳ सदेवमासीत्तदपोदक्रामत्ते दर्भा अभवन् यद्दर्भपुञ्जीलैः पवयति या एव मेध्या यज्ञियास्सदेवा आपस्ताभिरेवैनं पवयति ।**

என்பது.

உரை.

இந்திரன் விருத்திரனைக் கொன்றபோது அவன் நீரில் இறந்தனன். அது, புனிதமும் வேள்விக்குரியதுமாகிய தருப்பையாயுண்டாயிற்று. ஆதலின், தருப்பையால் துடைத்து விடில் புனிதமும், வேள்விக் குரியவனும், தேவர்கட்குப் பிரியனு மாகின்றான் என்பது. இதன் விரிவை உத்பவனப் பிராமணத்திற் காண்க.

---

தருப்பைப்பிடியின் எண்ணிக்கையை விதிக்கின்றது.

பிராமணம்—21

**द्वाभ्यां पवयत्यहोरात्राभ्यामेवैनं पवयति त्रिभिः पवयति त्रय इमे लोका एभिरेवैनं लोकैः पवयति पञ्चभिः पवयति पञ्चाक्षरा पङ्क्तिः पाङ्क्तो यज्ञो यज्ञायैवैनं पवयति षड्भिः पवयति षड्वा ऋतव ऋतुभिरेवैनं पवयति सप्तभिः पवयति सप्त छन्दाꣳसि छन्दोभिरेवैनं पवयति नवभिः पवयति नव वै पुरुषे प्राणा-**

முதலானவைகள்)

**स्सप्राणमेवैनं पवयत्येकविꣳशत्या पवयति दश हस्त्या अङ्गुलयो दश पद्या आत्मैकविꣳशो यावानेव पुरुषस्तमपरिवर्गं पवयति ।**

என்பது.

**உரை.**

இரண்டு தருப்பைகளால் துடைக்கில், பகலிரவுகளால் புநிதப் படுகின்ருன். மூன்ருல் புநிதப்படுத்தில் மூவுலகங்களால் புநிதப்படுகின்ருன், ஐந்தால் துடைக்கில், ஐந்து எழுத்துக்களைக்கொண்ட பந்திச்சந்தமாகிய வேள்வியால் புநிதப்படுகின்ருன். ஆருல் துடைக்கில், இருதுக்களால் புநிதப்படுகின்ருன். ஏழால் துடைக்கில், சந்தங்களால் புநிதப்படுகின்ருன். ஒன்பதால் துடைக்கில், புருடனுடைய பிராணன்கள் ஒன்பது அஃதுடன் புநிதப்படுகின்ருன். இருபத்தொன்ருல் துடைக்கில், கை கால்களின் விரல்கள் இருபது, ஆன்மா ஒன்று ஆக இருபத்தொன்றும் புருடனுடைய முழு அவயவங்களாதலின் முழுதும் புநிதமாகின்ருன் என்பது. ஈண்டு, இருக்கும் பிராமணமுங் கூறியவாறே இருபத்தொரு தருப்பைகளால் புநிதமாகுவதே கொள்ளப்படுகின்ற தெனினும், தொடர்பற்றி ஏனையபக்ஷங்களையும் எடுத்துக்காட்டியதாம் என்பதை யுணர்க.

---

மந்திரத்திற்கு உரை கூறுகின்றது.

பிராமணம்—22

**चित्पतिस्त्वा पुनात्वित्याह मनो वै चित्पतिर्मनसैवैनं पवयति वाक्पतिस्त्वा पुनात्वित्याह वाचैवैनं पवयति देवस्त्वा सविता पुनात्वित्याह सवितृप्रसूत एवैनं पवयति ।**

என்பது.

**உரை.**

'சித்பதிஸ்த்வா புநாது' என்றது மனதால் இவனைப் புநிதமாக்கல். 'வாக்பதிஸ்த்வா புநாது' என்றது வாக்கினுல் இவனைப் புநிதமாக்கல். 'தேவஸ்த்வா சவிதா புநாது' என்றது சாவிதாவின் ஏவலால் இவன் புநிதஞ் செய்யப்படுகின்ருன் என்பது.

---

மேற்கூறிய மந்திரத்தின் கருத்தை விளக்குகின்றது.

பிராமணம்—23

**तस्य ते पवित्रपते पवित्रेण यस्मै कं पुने तच्छकेयमित्याहाऽऽशिषमेवैतामा शास्ते ॥**

என்பது.

உரை.

எசமானன் 'தஸ்யதே' என்றது முதலியது, இது ஆசீர்வாதமாக வேண்டுமென்று விரும்புகின்றான் என்பது.

முதலநுவாகம்
முற்றிற்று.

---

## ஆறுங்காண்டம் முதற்பிரபாடகம்

### இரண்டாவது அநுவாகம்

*திட்சாகுதிகளைக் கூறும் பிராமணங்கள்.*

ஏழு பஞ்சாதிக்குமேல் பதினைந்து பதங்களைக் கொண்டது.

यावन्तो वै देवा यज्ञायापुनत त एवाभवन् य एवं विद्वान् यज्ञाय पुनीते भवत्येव बहिः पवयित्वाऽन्तः प्रपादयति मनुष्यलोक एवैनं पवयित्वा पूतं देवलोकं प्रणयत्यदीक्षित एकयाऽऽहुत्येत्याहुस्स्रुवेण चतस्रो जुहोति दीक्षितत्वाय स्रुचा पञ्चमीं पञ्चाक्षरा पङ्क्तिः पाङ्क्तो यज्ञो यज्ञमेवाव रुन्ध आकूत्यै प्रयुजेऽग्नये [१०] स्वाहेत्याहाऽऽकूत्या हि पुरुषो यज्ञमभि प्रयुङ्क्ते यजेयेति मेधायै मनसेऽग्नये स्वाहेत्याह मेधयाहि मनसा पुरुषो यज्ञमभिगच्छति सरस्वत्यै पूष्णेऽग्नये स्वाहेत्याह वाग्वै सरस्वती पृथिवी पूषा वाचैव पृथिव्या यज्ञं प्रयुङ्क्त आपो देवीर्बृहतीर्विश्वशंभुव इत्याह या वै वर्ष्यास्ताः [११] आपो देवीर्बृहतीर्विश्वशंभुवो यदेतद्यजुर्न ब्रूयाद्दिव्या आपोऽशान्ता इमं लोकमा गच्छेयुरापो देवीर्बृहतीर्विश्वशंभुव इत्याहास्मा एवैना लोकाय शमयति तस्माच्छान्ता इमं लोकमा गच्छन्ति द्यावापृथिवी इत्याह द्यावापृथिव्योर्हि यज्ञ उर्वन्तरिक्षमित्याहान्तरिक्षेहि यज्ञो बृहस्पतिर्नो हविषा वृधातु

ஆகுதிகள்)

[१२] इत्याह ब्रह्म वै देवानां बृहस्पतिर्ब्रह्मणैवास्मै यज्ञमव रुन्धे यद्ब्रूयाद्विधेरिति यज्ञस्थाणुमृच्छेद्द्धात्वित्याह यज्ञस्थाणुमेव परि वृणक्ति प्रजापतिर्यज्ञमसृजत सोऽस्मात्सृष्टः पराङैत्स प्रयजुरव्ली नात्प्र साम तमृगुदयच्छद्यदृगुदयच्छत्तदौद्ग्रहणस्यौद्ग्रहणत्वमृचा [१२] जुहोति यज्ञस्योद्यत्या अनुष्टुप्छन्दसामुदयच्छदित्याहुस्त- स्मादनुष्टुभा जुहोति यज्ञस्योद्यत्यै द्वादश वात्सबन्धान्युदयच्छन्नि- त्याहुस्तस्माद्द्वादशभिर्वात्सबन्धविदो दीक्षयन्ति सा वा एषर्गनुष्टु- ग्वागनुष्टुग्यदेतयर्चा दीक्षयति वाचैवैनꣳ सर्वया दीक्षयति विश्वे देवस्य नेतुरित्याह सावित्र्येतेन मर्तो वृणीत सख्यम् [१३] इत्याह पितृदेवत्यैतेन विश्वे राय इषुध्यसीत्याह वैश्वदेव्येतेन द्युम्नं वृणीत पुष्यस इत्याह पौष्ण्येतेन सा वा एषर्क्सर्वदेवत्या यदे- तयर्चा दीक्षयति सर्वाभिरेवैनं देवताभिर्दीक्षयति सप्ताक्षरं प्रथमं पदमष्टाक्षराणि त्रीणि यानि त्रीणि तान्यष्टावुपयन्ति यानि चत्वारि तान्यष्टौ यदष्टाक्षरा तेन [१३] गायत्री यदेकादशाक्षरा तेन त्रिष्टुग्यद्द्वादशाक्षरा तेन जगती सा वा एषर्क्सर्वाणि छन्दाꣳसि यदेतयर्चा दीक्षयति सर्वेभिरेवैनं छन्दोभिर्दीक्षयति सप्ताक्षरं प्रथमं पदꣳ सप्तपदा शक्करी पशवश्शक्करी पशूनेवाव रुन्ध एक- स्मादक्षरादनाप्तं प्रथमं पदं तस्माद्यद्वाचोऽनाप्तं तन्मनुष्या उप जीवन्ति पूर्णया जुहोति पूर्ण इव हि प्रजापतिः प्रजापतेराप्त्यै न्यूनया जुहोति न्यूनाद्धि प्रजापतिः प्रजा असृजत प्रजानाꣳ

सृष्ट्यै [१४] ॥ अग्नये ता वृधात्वृचा सख्यं तेन जुहोति पञ्चदश च ॥ २ ॥

*இதில், தீட்சாகுதிகள் கூறப்படுகின்றன.*

---

பிராசீனவம்ச மென்னுங் கொட்டகைக்குட் புகும் ஆகுதிகளை விதிக்கின்றது.

பிராமணம்—1

**यावन्तो वै देवा यज्ञायापुनत त एवाभवन् य एवं विद्वान् यज्ञाय पुनीते भवत्येव बहिः पवयित्वाऽन्तः प्रपादयति मनुष्यलोक एवैनं पवयित्वा पूतं देवलोकं प्रणयति ।**

*என்பது.*

**உரை.**

*எக்ஞத்தின் பொருட்டுப் புனிதஞ் செய்யப்பெற்ற தேவர்கள் எல்லாரும் ஐசுவரியத்தை யடைந்தார்கள். ஆதலின், இதை யுணர்ந்து செய்து கொள்கின்ற இவனும் ஐசுவரியத்தை யடைகின்றான். மற்றும், பிராசீன வமிச மென்னுங் கொட்டகைக்கு வெளியிற் புனிதஞ் செய்யப்பெற்று, பிறகு அதற்குட் புகுதலின், மனிதலோகத்திற் புனிதனாக்கி தேவலோகத்திற்குட் புகுத்தியவனாகின்றான் என்பது.*

---

முதல் மந்திரத்திலுள்ள 'ஆகூதி' என்னுஞ் சொல்லின் உபயோகத்தைக் கூறுகின்றது.

பிராமணம்—2

**अदीक्षित एकयाऽऽहुत्येत्याहुस्स्रुवेण चतस्रो जुहोति दीक्षितत्वाय स्रुचा पञ्चमीं पञ्चाक्षरा पङ्क्तिः पाङ्क्तो यज्ञो यज्ञमेवाव रुन्धे ।**

*என்பது.*

**உரை.**

*தீட்சை பண்ணிக்கொள்ளாதவன் ஒரு ஆகுதியால் புகுதல் வேண்டும் என்று கூறுகின்றனர். தீட்சை செய்துகொண்டவனுக்கு, சுருவத்தால் நான்கும், சுருவால் ஒன்றுமாக ஐந்தாகுதிகள் செய்தல்வேண்டும். ஏனெனின்? ஐந்தெழுத்துக்களைக்கொண்ட பந்திச்சந்தமாகிய வேள்வியை யடைகின்றான் ஆதலினென்க என்பது.*

---

ஆதுதிகள்)

முதல் மந்திரத்திலுள்ள 'ஆகூதி' என்னுஞ் சொல்லின் உபயோகத்தைக் கூறுகின்றது.

பிராமணம்—3

**आकूत्यै प्रयुजेऽग्नये स्वाहेत्याहाऽऽकूत्या हि पुरुषो यज्ञमभि प्रयुङ्क्ते यजेयेति ।**

என்பது.

உரை.

"ஆகூதியின் பொருட்டு பிரயுஜே அக்னயே ஸ்வாஹா" என்றது. ஆகூதி=சசங்கற்பம். மனதில் சங்கற்பித்த பிறகே வேள்வியைச் செய்ய விரும்பியவன் வேள்விச் செயலாளர்கட்கு முன் யான் வேட்பேன் என்று கூறுகின்றான் என்பது.

---

இரண்டா மந்திரத்திலுள்ள 'மேதை' என்னுஞ் சொல்லை உபயோகப் படுத்துகின்றது.

பிராமணம்—4

**मेधायै मनसेऽग्नये स्वाहेत्याह मेधया हि मनसा पुरुषो यज्ञमभिगच्छति ।**

என்பது

உரை.

'மேதாயை மனஸே அக்னயே ஸ்வாஹா' என்றது, மேதை=கேட்டதை மறக்காமற்கொள்ளல். அத்தகைய மனதால் எக்ஞத்தை யடைகின்றான் என்பது.

---

நான்காம் மந்திரத்தின் பதவாக்கியங்கட்குப் பொருளைக் கூறுகின்றது.

பிராமணம்—5

**सरस्वत्यै पूष्णेऽग्नये स्वाहेत्याह वाग्वै सरस्वती पृथिवी पूषा वाचैव पृथिव्या यज्ञं प्रयुङ्क्ते ।**

என்பது.

உரை.

'சரஸ்வத்தை பூஷ்ணே அக்னயே ஸவாஹா' என்றது, வாக்கால் மந்திரமோதல் சித்தியாகின்றது, பூமியால் வேள்விக்குரிய நெல் முதலியன சித்திக்கின்றன. இவ்விரண்டாலும் எக்ஞத்தை யடைகின்றான் என்பது.

---

ஐந்தாம் மந்திரத்தின் முற்பாதியிலுள்ள விசேடணப் பகுதிகளின் கருத்தைக் கூறுகின்றது-

பிராமணம்—6

**आपो देवीर्बृहतीर्विश्वशंभुव इत्याह या वै वर्ष्यास्ता आपो देवीर्बृहतीर्विश्वशंभुवः ।**

என்பது.

உரை.

'ஆபோ தேவீः' என்பது முதலிய விசேடணங்கட்கு, மழையில் உண்டாகும் தானியங்கள் கருத்து என்பது.

---

மாறுபடில் கேடென்கின்றது.

பிராமணம்—7

**यदेतद्यजुर्न ब्रूयाद्दिव्या आपोऽशान्ता इमं लोकमा गच्छेयुः ।**

என்பது.

உரை.

இவ்வாறு எசுர்மந்திரத்தை ஓதாவிடில் வானிலிருந்துண்டானதால், மின்னல்பேன்று சாந்தமடையாதவைகளாய் இவ் வுலகிற்கு வரும் என்பது.

---

மந்திரத்திற் கூறியபடி குணங்களைப் போற்றில் தண்ணீர்த்தேவதை சாந்தமாய்ச் சுகத்தைச் செய்யுமென்று முடிக்கின்றது.

பிராமணம்—8

**आपो देवीर्बृहतीर्विश्वशंभुव इत्याहास्मा एवैना लोकाय शमयति तस्माच्छान्ता इमं लोकमा गच्छन्ति ।**

என்பது.

உரை.

'ஆபோ தேவீ' என்பது முதலிய விசேடணங்களைக் கூறியது, இவ் வுலகின் பொருட்டு தண்ணீராகிய தேவதையைச் சாந்தப்படுத்தலாம். ஆதலின், அத்தேவதை சாந்தமடைந்து இவ் வுலகிற்கு வருகின்றது என்பது.

---

ஆதுதிகள்)

மந்திரத்தின் இரண்டாவது மூன்ருவது பாகங்களை உபயோகப் படுத்துகின்றது.

பிராமணம்—9

**द्यावापृथिवी इत्याह द्यावापृथिव्योर्हि यज्ञ उर्वन्तरिक्षमित्याहान्तरिक्षे हि यज्ञः ।**

என்பது.

உரை.

*மண்ணில் தேவாராதனை, அந்தரிட்சத்தில் அநுட்டானஞ் செய்தல்; சுவர்க்கத்தில் பயன் என்றிவ்வாற்ருல் எக்ஞம் மூன்றுலகங்களிலும் இருக்கின்றது என்பது.*

---

மந்திரத்தின் நான்காம்பாகத்தின் கருத்தைக் கூறுகின்றது.

பிராமணம்—10

**बृहस्पतिर्नो हविषा वृधात्वित्याह ब्रह्म वै देवानां बृहस्पतिर्ब्रह्मणैवास्मै यज्ञमव रुन्धे ।**

என்பது.

உரை.

*'பிருஹஸ்பதிர்நோ ஹவிஷா வ்ருதாது' என்றது, தேவர்கட்குக் குருவாதலின் பிருகற்பதி பரப்பிரம வடிவாவர். அவரால் இவனுக்கு எக்ஞங் கிடைக்கின்றது என்பது.*

---

ஹவிஷா விதேः என்னும் பிறசாகையில் ஓதியிருத்தலைப் பழித்துவிட்டு தனது பாடத்தைப் புகழ்கின்றது.

பிராமணம்—11

**यद्ब्रूयाद्विधेरिति यज्ञस्याणुमृच्छेद्वृधात्वित्याह यज्ञस्याणुमेव परि वृणक्ति ।**

என்பது.

உரை.

*பிருகஸ்பதி 'விததாது' என்று கூறில் அதனல் வளருதல் குறிப்பிடப் படாமையின் வேள்விக்குத் தடையை யடைவான் எசமானன். 'விருதாது' என்னிலோ, அக்குற்றம் நீங்கிவிடும் என்பது.*

---

'ஔத்க்ரஹணம்' என்னும் ஹோமத்தை விதித்து ஒருகதையால் அச்சொல்லை விரித்து வைக்கின்றது.

பிராமணம்—12

प्रजापतिर्यज्ञमसृजत सोऽस्मात्सृष्टः पराङैत्स प्रयजुरव्लीनात्प्र साम तमृगुदयच्छद्यदगुदयच्छत्तदौद्ग्रहणस्यौद्ग्रहणत्वम् ।

என்பது.

உரை.

பிரமன் எக்ஞபுருடனைப் படைக்கும்போது எக்ஞபுருடன் திரும்பி ஓடினன், அவனைப் பிடிப்பதன்பொருட்டு, மூன்று வேத மந்திரங்களையும் அனுப்பினன். அவைகளுள் எசுர் சாமம் இரண்டும் எக்ஞபுருடனைப் போகாமல் தடுத்துக்கொண்டன. இருக்கு, மேலே பிடித்துக்கொண்டது. ஆதலின் இருக்கால் முடியும் அநுட்டானம் ஔத்க்ரஹணம் எனப்படுகின்றது என்பது.

---

அதை விதிக்கின்றது.

பிராமணம்—13

ऋचा जुहोति यज्ञस्योद्यत्यै ।

என்பது.

உரை.

இருக்கால் ஹோமஞ்செய்கின்றான் அது எக்ஞம் வளருதற் பொருட்டு என்பது.

---

அதனுடைய சந்தத்தைப் புகழ்கின்றது.

பிராமணம்—14

अनुष्टुप्छन्दसामुदयच्छदित्याहुस्तस्मादनुष्टुभा जुहोति यज्ञस्योद्यत्यै ।

என்பது.

உரை.

அநுஷ்டுப் சந்தம் வளர்ச்சியுடையது என்று சொல்கின்றனர். ஆதலின், எக்ஞம் வளருதற்பொருட்டு அநுஷ்டுப்ச் சந்தத்தால் ஹோமஞ் செய்கின்றான் என்பது.

---

ஆகுதிகள்)

இம்மந்திரத்திலுள்ள இருக்கையும் சந்தத்தையும் புகழ்ந்ததுபோல் பதத்தின் எண்ணையும் புகழ்கின்றது.

பிராமணம்—15

**द्वादश वात्सबन्धान्युदयच्छन्नित्याहुस्तस्माद्द्वादशभिर्वात्सबन्धविदो दीक्षयन्ति ।**

என்பது.

உரை.

இம்மந்திரத்திலுள்ள பன்னிரண்டு பதங்களும் வாத்ஸபந்தளாய்த் தோன்றின அதாவது, கன்றை ஒருகயிற்றாற் கட்டுவதுபோல் பன்னிரண்டு பதங்களாலும் எக்ஞம் கட்டுப்படுகின்றது. அதாவது இப்பதங்களால் எக்ஞத்தைக் கைப்பற்றிக்கொள்கின்றான் என்று அறிஞர் கூறுகின்றனர். அதை யுணர்ந்த வேட்போர்கள் இப்போதும் அப்பதங்களால் ஹோமஞ் செய்கின்றார்கள் என்பது.

---

சான்றோர்களாற் பேறப்பட்டபடியே சந்தங்களைத் துதித்துவிட்டு, இனி வாக்குவடிவமானதால் துதிக்கப்படுகின்றது.

பிராமணம்—16

**सा वा एषर्गनुष्टुग्वागनुष्टुग्यदेतयर्चा दीक्षयति वाचैवैनꣳ सर्वया दीक्षयति ।**

என்பது.

உரை.

அநுஷ்டுப்ச் சந்தம் வாக்கானதால், அச் சந்தமுள்ள இருக்கால் தீட்சை செய்தது வாக்குக்களால் தீட்சை செய்யப்பெற்றதாகின்றது என்பது.

---

குறியைக் காரணமாய்க்கொண்டு மந்திரத்தைத் துதிக்கின்றது.

பிராமணம்—17

**विश्वे देवस्य नेतुरित्याह सावित्र्येतेन मर्तो वृणीत सख्यमित्याह पितृदेवत्यैतेन विश्वे राय इषुध्यसीत्याह वैश्वदेव्येतेन द्युम्नं वृणीत पुष्यस इत्याह पौष्ण्येतेन सा वा एषर्क्सर्वदेवत्या यदेतयर्चा दीक्षयति सर्वाभिरेवैनं देवताभिर्दीक्षयति ।**

என்பது.

உரை.

இம்மந்திரத்தில் விசுவேதேவர் என்பது முதலியதால் சாவித்திரியா லும், 'மர்த்தஃவிருணீத' என்பது முதலியதால் பிதிருக்களாலும், 'விஸ்வே ராய' என்பதால் வைசுவதேவராலும் 'த்யும்நம்' என்பது முதலியதால் பூஷ ணாலும் தீட்சை செய்யப்பெற்றவனுகின்றான். இதனால், இம்மந்திரத்தால் தீட்சை பண்ணிக்கொண்ட தாகும் என்பது.

---

இம்மந்திரத்தின் எழுத்துக்களுடைய எண்ணிக்கைகளைக் காரணமாய்க்கொண்டு துதிக்கின்றது.

பிராமணம்—18

**सप्ताक्षरं प्रथमं पदमष्टाक्षराणि त्रीणि यानि त्रीणि तान्यष्टावुपयन्ति यानि चत्वारि तान्यष्टौ यदष्टाक्षरा तेन गायत्री यदेकादशाक्षरा तेन त्रिष्टुग्य-द्द्वादशाक्षरा तेन जगती सा वा एषर्क्सर्वाणि छन्दाꣳसि यदेतयर्चा दीक्षयति सर्वैभिरेवैनं छन्दोभिर्दीक्षयति ।**

என்பது.

உரை.

முதல் பதத்தில் ஏழெழுத்துக்களும், இரண்டாவது, மூன்றாவது, நான் காவது பாதங்களில் எவ்வெட்டு எழுத்துக்களும் இருக்கின்றன. இவற்றுள், முதற்பாதத்தை இரண்டாக்கி, மூன்றெழுத்துக்களை மூன்றும்பாதத்திற் சேர்க்கில் திரிஷ்டுப் ஆகின்றது, இரண்டாம்பாதி நான்கெழுத்துக்களை நான் காம்பாதத்திற் சேர்க்கில் சகதிச் சந்தமாகின்றது. மற்றும், இரண்டாம் பாதத் திலும் 'சகியம்' என்றுகொண்டு எட்டாக்கிக்கொள்க. இவ்வாறு, காயத் திரி, திரிஷ்டுப், சகதி, என்னும் மூன்று சந்தங்களும் மூன்று சவனங்களி லும் முக்கியங்களாதலின் சந்தங்களனைத்தாலும் தீட்சை செய்யப்பெற்ற திதாகின்றது என்பது.

---

ஏழு என்னும் எண்ணிக்கையைக் காரணமாய்க்கொண்டு புகழ்கின்றது.

பிராமணம்—19

**सप्ताक्षरं प्रथमं पदꣳ सप्तपदा शक्वरी पशवश्शक्वरी पशूनेवाव रुन्धे ।**

என்பது.

ஆகுதிகள்)

உரை.

'விஸ்வே தேவஸ்ய் நேது: என்பதில் ஏழெழுத்துக்கள். ப்ரோக்ஷவஸ்மை என்பது முதலிய இருக்கில் ஏழு பாதங்கள், சக்வரி என்னுஞ் சந்தமும் ஏழு பதங்களையுடையது. சக்வரிச்சந்தம் பசுக்களைக் கொடுத்தலின் பசுவாம். இதனால் பசுக்களை யடைகின்றான் என்பது.

---

உலக விவகாரங்களனைத்திற்கும் ஒப்பாந் தன்மையால் மந்திரத்தைத் துதிக்கின்றது.

பிராமணம்—20

**एकस्मादक्षरादनाप्तं प्रथमं पदं तस्माद्यद्वाचोऽनाप्तं तन्मनुष्या उपजीवन्ति पूर्णया जुहोति पूर्ण इव हि प्रजापतिः प्रजापतेराप्त्यै न्यूनया जुहोति न्यूनाद्धि प्रजापतिः प्रजा असृजत प्रजानाᳫं सृष्ट्यै ॥**

என்பது.

உரை.

முதற் பாதத்தில் ஒரு எழுத்துக் குறைவாயிருத்தலால் மனிதர்கள், சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என்னும் நான்குவகை வாக்குக்களுள் ஒன்று குறைவுடையராய் வாழ்க்கின்றார்கள். ஏனைய மூன்று பாதங்களும் நிறையவிருத்தலின், நிறைவையுடைய பிரமனுக்குச் சமமாய்ப் படைப்பிற்குக் காரணமாகவும், முதற்பாதத்தில் ஒரு எழுத்துச் சூனியமானது பிரளயத்தைக் குறிப்பிடுவதால்பிரசை யுற்பத்தியையும் உடைய தாகின்றது என்பது.

இரண்டாவது அநுவாகம்

முற்றிற்று.

---

## ஆறாங்காண்டம் முதற்பிரபாடகம்

### மூன்றாவது அநுவாகம்

மான்தோல் முதலானவைகளால் தீட்சை செய்துக்கொள்வதைக்கூறும் பிராமணங்கள்.

ஏழு பஞ்சாதிக்குமேல் நாற்பது பதங்களைக்கொண்டது.

**ऋक्सामे वै देवेभ्यो यज्ञायाऽतिष्ठमाने कृष्णो रूपं कृत्वाऽप-क्रम्यातिष्ठतां तेऽमन्यन्त यं वा इमे उपावर्त्स्यतस्स इदं भविष्य-**

तीति ते उपामन्त्रयन्त ते अहोरात्रयोर्महिमानमपनिधाय देवानु-पावर्तेतामेष वा ऋचो वर्णो यच्छुक्लं कृष्णाजिनस्यैष साम्नो यत्कृष्णमृक्सामयोश्शिल्पे स्थ इत्याहर्क्सामे एवाव रुन्ध एषः [१६] वा अह्नो वर्णो यच्छुक्लं कृष्णाजिनस्यैष रात्रिया यत्कृष्णं यदेवैनयोस्तत्र न्यक्तं तदेवाव रुन्धे कृष्णाजिनेन दीक्षयति ब्रह्मणो वा एतद्रूपं यत्कृष्णाजिनं ब्रह्मणैवैनं दीक्षयतीमां धियꣳ शिक्ष-माणस्य देवेत्याह यथायजुरेवैतद्गर्भो वा एष यद्दीक्षित उल्बं वासः प्रोर्णुते तस्मात् [१७] गर्भाः प्रावृता जायन्ते न पुरा सोमस्य क्रयादपोर्ण्वीत यत्पुरा सोमस्य क्रयादपोर्ण्वीत गर्भाः प्रजानां परापातुकास्स्युः क्रीते सोमेऽपोर्णुते जायत एव तदथो यथा वसीयाꣳसं प्रत्यपोर्णुते तादृगेव तदङ्गिरसस्सुवर्गं लोकं यन्त ऊर्जं व्यभजन्त ततो यदत्यशिष्यत ते शरा अभवन्नूर्ग्वै शरा यच्छर-मयी [१८] मेखला भवत्यूर्जमेवाव रुन्धे मध्यतस्सं नह्यति मध्यत एवास्मा ऊर्जं दधाति तस्मान्मध्यत ऊर्जा भुञ्जत ऊर्ध्वं वै पुरुषस्य नाभ्यै मेध्यमवाचीनममेध्यं यन्मध्यतस्संनह्यति मेध्यं चैवास्यामेध्यं च व्यावर्तयतीन्द्रो वृत्राय वज्रं प्राहरत्स त्रेधा व्यभवत्स्फ्यस्तृतीयꣳ रथस्तृतीयं यूपस्तृतीयम् [१९] येऽन्तश्शरा अशीर्यन्त ते शरा अभवन्तच्छराणाꣳ शरत्वं वज्रो वै शराः क्षुत्खलु वै मनुष्यस्य भ्रातृव्यो यच्छरमयी मेखला भवति वज्रेणैव साक्षात्क्षुधं भ्रातृव्यं मध्यतोऽप हते त्रिवृद्भवति त्रिवृद्वै प्राणस्त्रि-वृतमेव प्राणं मध्यतो यजमाने दधाति पृथ्वी भवति रज्जूनां

व्यावृत्त्यै मेखलया यजमानं दीक्षयति योक्त्रेण पत्नीं मिथुनत्वाय [२०] यज्ञो दक्षिणामभ्यध्यायत्ता᳸ं समभवत्तदिन्द्रोऽचायत्सोऽमन्यत यो वा इतो जनिष्यते स इदं भविष्यतीति तां प्राविशत्तस्या इन्द्र एवाजायत सोऽमन्यत यो वै मदितोऽपरो जनिष्यते स इदं भविष्यतीति तस्या अनुमृश्य योनिमाऽच्छिनत्सा सूतवशाऽभवत्तत्सूतवशायै जन्म [२१] ता᳸ं हस्ते न्यवेष्टयत तां मृगेषु न्यदधात्सा कृष्णविषाणाऽभवदिन्द्रस्य योनिरसि मा मा हि᳸ंसीरिति कृष्णविषाणां प्रयच्छति सयोनिमेव यज्ञं करोति सयोनिं दक्षिणा᳸ं सयोनिमिन्द्र᳸ं सयोनित्वाय कृष्यै त्वा सुसस्याया इत्याह तस्मादकृष्टपच्या ओषधयः पच्यन्ते सुपिप्पलाभ्यस्त्वौषधीभ्य इत्याह तस्मादोषधयः फलं गृह्णन्ति यद्धस्तेन [२२] कण्डूयेत पामनंभावुकाः प्रजास्स्युर्यत्स्मयेत नग्नंभावुकाः कृष्णविषाणया कण्डूयतेऽपिगृह्य स्मयते प्रजानां गोपीथाय न पुरा दक्षिणाभ्यो नेतोः कृष्णविषाणामव चृतेद्यत्पुरा दक्षिणाभ्यो नेतोः कृष्णविषाणामवचृतेद्योनिः प्रजानां परापातुका स्यान्नीतासु दक्षिणासु चात्वाले कृष्णविषाणां प्रास्यति योनिर्वै यज्ञस्य चात्वालं योनिः कृष्णविषाणा योनावेव योनिं दधाति यज्ञस्य सयोनित्वाय [२३] ॥

रुन्ध एष तस्माच्छरमयी यूपस्तृतीयं मिथुनत्वाय जन्म हस्तेनाष्टाचत्वारि᳸ंशच्च ॥ ३ ॥

*இதில், மான்தோல் முதலியவைகளாற் செய்யப்படும் தீட்சை கூறப்படுகின்றது.*

---

'இருக்சாமயோஃ' என்பது முதலிய மந்திரத்தை எடுத்துக்கொண்டு ஒரு கதையைக்கூறி சிற்ப்பத்தன் (சித்திரத்தன்)மையை விளக்குகின்றது.

பிராமணம்—1

**ऋक्सामे वै देवेभ्यो यज्ञायाऽतिष्ठमाने कृष्णो रूपं कृत्वापक्रम्यातिष्ठतां तेऽमन्यन्त यं वा इमे उपावर्त्स्यतस्स इदं भविष्यतीति ते उपामन्त्रयन्त ते अहोरात्रयोर्महिमानमपनिधाय देवानुपावर्तेतामेष वा ऋचो वर्णो यच्छुक्लं कृष्णाजिनस्यैष साम्नो यत्कृष्णम् ।**

என்பது.

உரை.

இருக்கு சாமம் என்னும் இரண்டு தேவதைகளும், ஒரு நிமித்தம்பற்றி தேவர்களுடைய எக்ஞத்திற்குத் தமது வடிவத்தை மறைக்க எண்ணி மான் வடிவெடுத்துக்கொண்டு தேவர்களைவிட்டு நீங்கி மறைவிடத்திலிருந்தன. அப்போது தேவர்கள், எவ்வெக்ஞபுருடனை இருக்கும் சாமமும் அடைகின்றதோ, அவ்வெக்ஞபுருடன் பயனை அடைவன் என்று எண்ணிக்கொண்டிருந்தனர். அப்போது, இருக்குஞ் சாமமும், பகலையும் இரவையும் தனதுடம்பில் வெண்புள்ளியும் கரும்புள்ளியுமாகத் தரித்துக்கொண்டு தேவர்களிடம் வந்தன. ஆதலின், மான்தோலினுள்ள இருவகைச் சித்திரப் புள்ளிகளும் இருக்கும் சாமமுமாம் என்பது.

---

மான்தோலின் சித்திரத்தைக் கூறிவிட்டு மந்திரத்திற்கு உரை கூறுகின்றது.

பிராமணம்—2

**ऋक्सामयोश्शिल्पे स्थ इत्याहर्क्सामे एवाव रुन्धे ।**

என்பது.

உரை.

'இருக் சாமயோஃ சில் பேஸ்த்தஃ' என்றது, இதனால் இருக்குச் சாமங்களை யடைகின்றான் என்பதாம்.

---

இருக்குச் சாமங்களை அடைவதுடன் பகலிரவுகளின் சாரத்தையு மடைவான் என்கின்றது.

பிராமணம்—3

**एष वा अह्नो वर्णो यच्छुक्लं कृष्णाजिनस्यैष रात्रिया यत्कृष्णं यदेवैनयोस्तत्र न्यक्तं तदेवाव रुन्धे ।**

என்பது

உரை.

பகலிரவுகளின் சம்பந்தமாகிய, இருக்குச் சாமங்கட்கு வேறாகிய இரகசியங்களையு மடைகின்றான் என்பது.

---

அதை விதிக்கின்றது.

பிராமணம்—4

**कृष्णाजिनेन दीक्षयति ब्रह्मणो वा एतद्रूपं यत्कृष्णाजिनं ब्रह्मणैवैनं दीक्षयति ।**

என்பது.

உரை.

பிரமம் என்பது வேதம். அவ்வடிவமானது மான்தோல். இருக்குஞ் சாமமும் சித்திரப்புள்ளிக ளானதால் இது பொருந்துமா றுணர்க. ஆதலின், மான்தோலால் தீட்சைசெய்தல் வேதத்தால் தீட்சை செய்யப்பெற்றதாகின்றது என்பது.

---

மான் தோலின்மேல் ஏறும் மந்திரத்தின் வெளிப்படையான பொருளைக் கூறுகின்றது.

பிராமணம்—5

**इमां धियं शिक्षमाणस्य देवेत्याह यथायजुरेवैतत् ।**

என்பது

உரை.

'இமாம் தியம்' என்பது முதலியது, எசுரிற்கூறிய வெளிப்டையான பொருளையே என்பதையே (ஏறுதல்) கொண்டது என்பது.

---

ஆடையை உத்தரீயமாய்ப்போட்டு மறைத்துக்கொள்ளல் வேண்டுமென்னும் விதி.

பிராமணம்—6

**गर्भो वा एष यद्दीक्षित उल्बं वासः प्रोर्णुते तस्माद् गर्भाः प्रावृता जायन्ते ।**

என்பது.

உரை.

*தீட்சை செய்துகொள்ளுகின்றவனுக்கு உடம்பின்மேல் ஆடையால் மறைத்துக்கொள்ளல், கருப்பையால் குழந்தையை மறைத்ததுபோலாம். இது பற்றியே, குழந்தை ஒருவகைத் தோற்பையால் மறைக்கப்பட்டுப் பிறக்கின்றது என்பது. இது இருக்குப் பிராமணத்திலுங் கூறப்பட்டுள்ளது.*

---

இன்றேனில் கேடேன்பதுடன் அவ்வாடையை அவிழ்க்குங்காலத்தை விதிக்கின்றது.

பிராமணம் —7

**न पुरा सोमस्य क्रयादपोर्ण्वीत यत्पुरा सोमस्य क्रयादपोर्ण्वीत गर्भाः प्रजानां परापातुकास्स्युः क्रीते सोमेऽपोर्णुते जायत एव तदथो यथा वसीयाꣳसं प्रत्यपोर्णुते तादृगेव तत् ।**

என்பது.

உரை.

*சோமத்தை விலைக்குவாங்கியபிறகே அவ்வேஷ்டியை அவிழ்த்தல் வேண்டும். அதற்குமுன் அவிழ்க்கில் கருப்பம் நழுவியதுபோலாகும். சோமத்தை விலைக்கு வாங்கிய பிறகே இவன் பிறந்தவனாகின்றான். மற்றும், அரசன் சபையில் பலரும் பார்த்தற்பொருட்டுத் திரையை எடுப்பதுபோல் சோமராசனை முன்னிட்டு இவ்வாடையை எடுத்தல் வேண்டும் என்பது.*

---

'ஊர்கஸ்யாங்கிரஸீ' என்பது முதலிய மந்திரப்பொருளை கதையால் விளக்கிவிட்டு தருப்பைக் கயிற்றைக்கட்டிக்கோள்வதை விதிக்கின்றது.

பிராமணம் —8

**अङ्गिरसस्सुवर्गं लोकं यन्त ऊर्जं व्यभजन्त ततो यदत्यशिष्यत ते शरा अभवन्नूर्ग्वै शरा यच्छरमयी मेखला भवत्यूर्जमेवाव रुन्धे ।**

என்பது.

உரை.

*அங்கிரசர் என்னும் இருடிகள் சுவர்க்கலோகம் போகும்போது அன்னரசத்தைப் பங்கிட்டுக்கொண்டனர்; அப்போது மீந்த ரசம் நாணலாயிற்று. ஆதலின், நாணற்கயிற்றை அணிந்து கொள்ளில் அன்னங்களின் இரசத்தை அடைகின்றான் என்பது.*

---

நாணற்கயிற்றைக் கட்டிக்கொள்ளவேண்டிய இடத்தை விதிக்கின்றது

பிராமணம்—9

**मध्यतस्सं नह्यति मध्यत एवास्मा ऊर्जं दधाति तस्मान्मध्यत ऊर्जा भुञ्जते ।**

என்பது.

உரை.

உடம்பின் நடுவில் மேகலையாக அந் நாணற்கயிற்றைக் கட்டிக்கொள்கின்ருன். ஆதலால், நடுவில் இரசந் தங்குகின்றது. இதுபற்றியே அனைவரும் உடம்பின் நடுவில் அன்னரசத்தைத் தாங்குகின்ருர்கள் என்பது.

---

மற்ருெரு வகையால் உடம்பின் நடுப் பாகத்தைத் துதிக்கின்றது.

பிராமணம்—10

**ऊर्ध्वं वै पुरुषस्य नाभ्यै मेध्यमवाचीनममेध्यं यन्मध्यतस्संनह्यति मेध्यं चैवास्यामेध्यं च व्यावर्तयति ।**

என்பது.

உரை.

நாபிக்குங்கீழ் அசுத்தமானதாம், அதன் மேல் சுத்தமானதாம். ஆதலின், அசுத்தமான உடம்பின் பாகத்தை விளக்குகின்றதே நாணற்கயிற்றை இடுப்பிற் கட்டிக்கொள்ளுதலின் குறிப்பு என்பது.

---

அக்கயிறு, நாணலாயிருக்குந் தன்மையைப் புகழ்கின்றது.

பிராமணம்—11

**इन्द्रो वृत्राय वज्रं प्राहरत्स त्रेधा व्यभवत्स्फ्यस्तृतीयं रथस्तृतीयं यूपस्तृतीयं येऽन्तश्शरा अशीर्यन्त ते शरा अभवन्तच्छराणां शरत्वं वज्रो वै शराः क्षुत्खलु वै मनुष्यस्य भ्रातृव्यो यच्छरमयी मेखला भवति वज्रेणैव साक्षात्क्षुधं भ्रातृव्यं मध्यतोऽप हते ।**

என்பது.

உரை.

இந்திரன் வச்சிரத்தால் விருத்திரனைக் கொன்றபோது அவ்வச்சிரம், ஸ்ப்யம் என்னுமரக்கத்தி, இரதம், யூபம் என மூவகையாயிற்று. அவ்வச்சிரத்தின் நுண்ணிய அவயவங்கள் நாணல் (சரம்) ஆயிற்று. ஆதலின், நாணலின்

கயிறு வச்சிராயுதம்போல் மனிதர்களின் உடம்பின் நடுவிலுள்ள பசிப்பகைகளைச் சொல்லுகின்றது என்றது.

---

குணத்தை (பிரிகளை) விதிக்கின்றது

பிராமணம்—12

**त्रिवृद्भवति त्रिवृद्धि प्राणस्त्रिवृतमेव प्राणं मध्यतो यजमाने दधाति ।**

என்பது.

உரை.

அக்கயிறு முப்பிரிகளையுடைமையின், பிராணன், அபானன், வியானன் என்னும் மூன்று விருத்திகளை யுடைய பிராணனை உடம்பின் நடுவில் தாங்குகின்முன் என்பது.

---

மற்றொரு குணத்தை விதிக்கின்றது.

பிராமணம்—13

**पृथ्वी भवति रज्जूनां व्यावृत्त्यै ।**

என்பது.

உரை.

முப்புரிசேர்ந்து பருமனுயித்தலின், கட்டில் முதலியவைகளிலுள்ள கயிறுகளுக்குப் பேதத்தை குறிக்கின்றது என்பது.

---

மேகலை, (வேள்வித்தலைவன் இடுப்பிற் கட்டுங்கயிறு) யோக்த்ரம், (பத்தினியின் இடுப்பிற்கட்டுங்கயிறு) என்னு மிரண்டையும் பாகுபாடு செய்கின்றது.

பிராமணம்—14

**मेखलया यजमानं दीक्षयति योक्त्रेण पत्नीं मिथुनत्वाय ।**

என்பது.

உரை.

வேள்வித்தலைவனுக்கு மேகலை என்னும் முப்பிரிக் கயிற்றைக்கட்டுவதாலும். பத்தினிக்கு யோக்த்ரம் என்னும் பின்னல்போன்ற கயிற்றைக் கட்டுவதாலும் இவ்விரண்டும் மிதுனங்களாயிற்று என்பது.

---

தீட்சை)

மான்கொம்பு இந்திரனுடைய யோனி என்பதை ஒரு கதைவாயிலாக விதிக்கின்றது.

பிராமணம்—15

**यज्ञो दक्षिणामभ्यध्यायत्ताꣳ समभवत्तदिन्द्रोऽचायत्सोऽमन्यत यो वा इतो जनिष्यते स इदं भविष्यतीति तां प्राविशत्तस्या इन्द्र एवाजायत सोऽमन्यत यो वै मदितोऽपरो जनिष्यते स इदं भविष्यतीति तस्या अनुमृश्य योनिमाऽच्छिनत्सा सूतवशाऽभवत्तत्सूतवशायै जन्म ताꣳ हस्ते न्यवेष्टयत तां मृगेषु न्यदधात्सा कृष्णविषाणाऽभवदिन्द्रस्य योनिरसि मा मा हिꣳसीरिति कृष्णविषाणां प्रयच्छति सयोनिमेव यज्ञं करोति सयोनिं दक्षिणाꣳ सयोनिमिन्द्रꣳ सयोनित्वाय ।**

என்பது.

உரை.

இந்திரன், எக்ஞதேவனுடைய மனைவியாகிய தக்ஷிணையின் வயிற்றிற் பிறக்கில் எல்லா ஐசுவரியத்தையும் அடையலா மென்னும் எண்ணத்தால் தக்ஷிணையின் வயிற்றிற் புகுந்து பிறகு குழந்தையாய்ப் பிறந்தனன். பிறந்தவன், இனி மற்றொருமைந் தன் பிறப்பானேல், அவன் எல்லா ஐசுவரியத்தையும் அடைந்துவிடுவான் என்னுங்கருத்தால் தக்ஷிணையாகிய தனது மாதாவின் யோனியை அறுத்துவிட்டனன். யோனியின்றி அவள் அதனால் மலடாயினள். இதுபற்றியே ஒருகுழந்தை பிறந்தபின் கருவின்றி மலடாகின்றார்கள். பிறகு, அந்தயோனியை தனது கையில் சுற்றிக்கொண்டிருந்து பின்னர் மானிடத்தில் வைத்தனன்; அது மானுக்குக் கொம்பாயிற்று. இதை யசமானன் கட்டியிருக்கில், எக்ஞபுருடனுக்குப் போகந்தரும் யோனியாகவும், தட்சிணையின் அவயவமாகிற யோனிகவும், இந்திரனுடைய காரணமாகிற யோனியாகவும் இருக்கின்றது என்பது.

---

மான்கொம்பால் மண்கேல்லும் மந்திரவலியை விளக்குகின்றது.

பிராமணம்—16

**कृष्यै त्वा सुसस्याया इत्याह तस्मादकृष्टपच्या ओषधयः पच्यन्ते ।**

என்பது.

உரை.

'கிருஷ்யைத்வா சு சஸ்யாயை' என்றது, இதனால், உழாமலே சிலபயிர்கள் விளைக்கின்றன என்பதாம்.

---

மான்கொம்பால் தலையைச் சொறியும் மந்திரத்திலுள்ள, பிப்பலா என்னுஞ் சொல்லாற் குறிப்பிட்டதைக் கூறுகின்றது.

பிராமணம்—17

**सुपिप्पलाभ्यस्त्वौषधीभ्य इत्याह तस्मादोषधयः फलं गृह्णन्ति ।**

என்பது.

உரை.

*மான் கொம்பால் தலையைச் சொறிந்து விடலால் பயிர்கள் விளைகின்றன என்பதாம்.*

---

மாறுபடில் கேடென்பதுடன் இரண்டை விதிக்கின்றது.

பிராமணம்—18

**यद्धस्तेन कण्डूयेत पामनं भावुकाः प्रजास्स्युर्यत्स्मयेत नग्नं भावुकाः कृष्णविषाणया कण्डूयतेऽपिगृह्य स्मयते प्रजानां गोपीथाय ।**

என்பது.

உரை.

*கையாற் சொறிந்து கொள்ளில் சொறிவியாதி முதலியவைகளுடன் கூட வறுமையால் சுற்றத்துணியும் இன்றிய குழந்தைகள் பிறக்கும். மான் கொம்பாற் சொறியில் இவைகளின்றி புத்திரர்கள் பாதுகாக்கப் படுவார்கள் என்பது.*

---

மாறுபடில் தீமையென்பதுடன் மான்கொம்பை அவிழ்த்துவிடல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—19

**न पुरा दक्षिणाभ्यो नेतोः कृष्णविषाणामव चृतेद्यत्पुरा दक्षिणाभ्यो नेतोः कृष्णविषाणामवचृतेद्योनिः प्रजानां परापातुका स्यान्नीतासु दक्षिणासु चात्वाले कृष्णविषाणां प्रास्यति योनिर्वै यज्ञस्य चात्वालं योनिः कृष्णविषाणा योनावेव योनिं दधाति यज्ञस्य सयोनित्वाय ॥**

என்பது.

உரை.

*வேள்விச் செயலாளர்கள் கோக்(தட்சிணை)களை ஓட்டிக்கொண்டு போவதற்குமுன் மான்கொம்பை அவிழ்த்துவிடில் புத்திரப்பேறு கெடும். ஆதலின்*

அத்திமரக் கொம்பைக் கொள்ளல்)

அவைகளை ஒட்டிக்கொண்டுபோன பிறகு, எக்ஞத்திற்குக் காரணமாகிய மண்ணெடுக்கும் குழியி(சாத்வாலத்தி)ற் போட்டுவிடல் வேண்டும். இதனால், வேள்விக் காரணத்தோடு காரணத்தைச் சேர்த்துவிட்டதாகின்றது என்பது.

மூன்றுவது அநுவாகம்
முற்றிற்று.

---

## ஆறுங்காண்டம் முதற்பிரபாடகம்

### நான்காவது அநுவாகம்

அத்திமரத்தின் தடியைக்கொடுத்தல் முதலானவற்றைக் கூறும் பிராமணங்கள்.

எட்டுப் பஞ்சாதிக்குமேல் முப்பத்துமூன்று பதங்களைக் கொண்டது.

वाग्वै देवेभ्योऽपाक्रामद्यज्ञायातिष्ठमाना सा वनस्पतीन्प्राविश-त्सैषा वाग्वनस्पतिषु वदति या दुन्दुभौ या तूणवे या वीणायां यद्दीक्षितदण्डं प्रयच्छति वाचमेवाव रुन्ध औदुम्बरो भवत्यूर्ग्वा उदुम्बर ऊर्जमेवाव रुन्धे मुखेन संमितो भवति मुखत एवास्मा ऊर्जं दधाति तस्मान्मुखत ऊर्जा भुञ्जते [२४] क्रीते सोमे मैत्रा-वरुणाय दण्डं प्रयच्छति मैत्रावरुणो हि पुरस्तादृत्विग्भ्यो वाचं विभजति तामृत्विजो यजमाने प्रतिष्ठापयन्ति स्वाहा यज्ञं मन-सेत्याह मनसा हि पुरुषो यज्ञमभिगच्छति स्वाहा द्यावापृथिवी-भ्यामित्याह द्यावापृथिव्योर्हि यज्ञस्स्वाहोरोरन्तरिक्षादित्याहान्त-रिक्षे हि यज्ञस्स्वाहा यज्ञं वातादा रभ इत्याहायम् [२५] वाव यः पवते स यज्ञस्तमेव साक्षादा रभते मुष्टी करोति वाचं यच्छति यज्ञस्य धृत्या अदीक्षिष्टायं ब्राह्मण इति त्रिरुपांश्वाह देवेभ्य एवैनं प्राऽऽह त्रिरुच्चैरुभयेभ्य एवैनं देवमनुष्येभ्यः प्राऽऽह न पुरा

नक्षत्रेभ्यो वाचं वि सृजेद्यत्पुरा नक्षत्रेभ्यो वाचं विसृजेद्यज्ञं विच्छिन्द्यात् [२६] उदितेषु नक्षत्रेषु व्रतं कृणुतेति वाचं वि सृजति यज्ञव्रतो वै दीक्षितो यज्ञमेवाभि वाचं वि सृजति यदि विसृजेद्वैष्णवीमृचमनु ब्रूयाद्यज्ञो वै विष्णुर्यज्ञेनैव यज्ञꣳ सं तनोति दैवीं धियं मनामह इत्याह यज्ञमेव तन्म्रदयति सुपारा नो अस-द्वश इत्याह व्युष्टिमेवाव रुन्धे [२७] ब्रह्मवादिनो वदन्ति होतव्यं दीक्षितस्य गृहा ३ इ न होतव्या ३ मिति हविर्वै दीक्षितो यज्जु-हुयाद्यजमानस्यावदाय जुहुयाद्यन्न जुहुयाद्यज्ञपरुरन्तरियाद्ये देवा मनोजाता मनोयुज इत्याह प्राणा वै देवा मनोजाता मनोयुजस्ते-ष्वेव परोक्षं जुहोति तन्नेव हुतं नेवाहुतꣳ स्वपन्तं वै दीक्षितꣳ-रक्षाꣳसि जिघाꣳसन्त्यग्निः [२८] खलु वै रक्षोहाऽग्ने त्वꣳ सु जागृहि वयꣳ सु मन्दिषीमहीत्याहाग्निमेवाधिपां कृत्वा स्वपिति रक्षसामपहत्या अव्रत्यमिववा एष करोति यो दीक्षितस्स्वपिति त्वमग्ने व्रतपा असीत्याहाग्निर्वै देवानां व्रतपतिस्स एवैनं व्रतमा लम्भयति देव आ मर्त्येष्वेत्याह देवः [२९] ह्येष सन्मर्त्येषु त्वं यज्ञेष्वीड्य इत्याहैतꣳ हि यज्ञेष्वीडतेऽप वै दीक्षितात्सुषुपुष इन्द्रियं देवताः क्रामन्ति विश्वे देवा अभि मामाऽववृत्रन्नित्याहेन्द्रियेणैवैनं देवताभिस्सं नयति यदेतद्यजुर्न ब्रूयाद्यावत एव पशूनभि दीक्षेत तावन्तोऽस्य पशवस्स्यू रास्वेयत् [३०] सोमाऽऽभूयो भरेत्याहा-परिमितानेव पशूनव रुन्धे चन्द्रमसि मम भोगाय भवेत्याह यथा-देवतमेवैनाः प्रति गृह्णाति वायवे त्वा वरुणाय त्वेति यदेवमेता

नानुदिशेदयथादेवतं दक्षिणा गमयेदा देवताभ्यो वृश्च्येत यदेव मेता अनुदिशति यथादेवतमेव दक्षिणा गमयति न देवताभ्य आ [३१] वृश्च्यते देवीरापो अपां नपादित्याह यद्वो मेध्यं यज्ञियꣳ सदेवं तद्वो माऽव क्रमिषमिति वावैतदाहाच्छिन्नं तन्तुं पृथिव्या अनु गेषमित्याह सेतुमेव कृत्वाऽत्येति [३२] ॥ भुञ्जतेऽयं छिन्द्याद्रुन्धेऽग्निराह देव इयद्देवताभ्य आ त्रयस्त्रिꣳशच्च ॥ ४ ॥

இதில், அத்திமரத்தின் தடியைக் கொடுத்தல் முதலிய அநுட்டான நியமங்கள் கூறப்படுகின்றன.

---

எசமானனுக்கு ஒரு அத்திமரத் தடியைக் கொடுத்தல் வேண்டுமேன்று விதிக்கின்றது.

பிராமணம்—1

वाग्वै देवेभ्योऽपाक्रामद्यज्ञायातिष्ठमाना सा वनस्पतीन्प्राविशत्सैषा वाग्वनस्पतिषु वदति या दुन्दुभौ या तूणवे या वीणायां यद्दीक्षितदण्डं प्रयच्छति वाचमेवाव रुन्धे ।

என்பது.

உரை.

வாக்கானது, எக்ஞத்திலில்லாமல் தேவர்களிடத்தி லிருந்து நீங்கி கொடி செடிகளிற் புகுந்துகொண்டது. அவ்வாக்கே, துந்துபி, வீணை, வேணு முதலிய வநஸ்பதிகளி லிருக்கின்றது. எசமானனுக்கு வநஸ்பதியாகிய தடியைக் கொடுக்கில் வாக்கை அடைகின்றான் என்பது.

---

முறையாய் இரண்டு குணங்களை விதிக்கின்றது.

பிராமணம்—2

औदुम्बरो भवत्यूर्ग्वा उदुम्बर ऊर्जमेवाव रुन्धे मुखेन संमितो भवति मुखत एवास्मा ऊर्जं दधाति तस्मान्मुखत ऊर्जा भुञ्जते ।

என்பது.

உரை.

அக்கொம்பு அத்திமரமாயிருத்தல் வேண்டும். இது, அத்திமரம் இரச மாதலினென்க. மற்றும், அது, அவனுடைய வாயின் உயரம் இருத்தல் வேண்டும் இதனால் வாயால் இரசத்தை அருந்துகின்றான் என்பது.

---

எசமானன் அவ் வத்திமரத்தடியை விட்டுவிடல்வேண்டு மென்று விதிக்கின்றது.

பிராமணம்—3

**क्रीते सोमे मैत्रावरुणाय दण्डं प्रयच्छति मैत्रावरुणो हि पुरस्तादृत्विग्भ्यो वाचं विभजति तामृत्विजो यजमाने प्रतिष्ठापयन्ति ।**

என்பது.

உரை.

மைத்திராவருணன் அங்கங்கு வேள்விச் செயலாளர்கட்கு ஏவல்சொற்களை பகுக்கின்றவன். ஆதலின், அவனே முதலில் வாக்கைப் பகுக்கின்றவன் ஆகையால், வாக்குவடிவமாகிய தடியை எசமானன், சோமத்தை விலைக்கு வாங்கியவுடன் மைத்திரா வருணனிடத்தில் கொடுத்துவிடல் வேண்டுமென்பது பொருந்தும் என்பது.

---

கை விரல்களை மடக்கும் மந்திரத்திலுள்ள 'ஸ்வாஹா' என்னுஞ் சொல் லாற் கொள்ளப்படும் உபலக்ஷணப் பொருளை விளக்குகின்றது.

பிராமணம்—4

**स्वाहा यज्ञं मनसेत्याह मनसा हि पुरुषो यज्ञमभिगच्छति स्वाहा द्यावापृथिवीभ्यामित्याह द्यावापृथिव्योर्हि यज्ञस्स्वाहोरोरन्तरिक्षादित्याहान्तरिक्षे हि यज्ञस्स्वाहा यज्ञं वातादा रभ इत्याहायं वाव यः पवते स यज्ञस्तमेव साक्षादा रभते ।**

என்பது.

உரை.

'ஸ்வாஹாயக்ஞம் மானஸ:' என்றது, மனதால் எக்ஞம் அடையப் படுகின்றது என்கின்றது. 'ஸ்வாஹா த்யாபிருத்திவீப்யாம்' என்றது வானிலும் மண்ணிலும் எக்ஞம் இருக்கின்றது என்கின்றது. 'அந்தரிட்சாத்' என்பது அந்தரிக்ஷத்திலும் எக்ஞம் இருக்கின்றது என்கின்றது. 'ஸ்வாஹா யக்ஞம் வாதாதாரபே' என்றது எக்ஞவடிவாகிய காற்றின் கிருபையால் எக்

கைக்கோள்ளும் முதலியன)

ஞத்தைத்தொடங்குகிறேன் என்பது உபலக்ஷணமாம் என்கின்றது. ஈண்டு, காற்று எக்ஞக் கிரியைகட்குக் காரணமாதலின் எக்ஞமாம் என்பதையுணர்க.

---

கை விரல்களை மடக்கல் வாக்கு நியமம் என்னும் இரண்டையும் விதிக்கின்றது.

பிராமணம்—5

**मुष्टी करोति वाचं यच्छति यज्ञस्य धृत्यै ।**

என்பது.

உரை.

இவ்விரண்டு நியமங்களும் எக்ஞ உறுதிப்பாட்டின் பொருட்டாம் என்பது.

---

அத்துவரியுவிற்கு ஒரு மந்திரத்தைக் கற்பித்து அதை விநியோகிக்கின்றது.

பிராமணம்—6

**अदीक्षिष्टायं ब्राह्मण इति त्रिरुपांꣳश्वाह देवेभ्य एवैनं प्राऽऽह त्रिरुच्चैरुभयेभ्य एवैनं देवमनुष्येभ्यः प्राऽऽह ।**

என்பது.

உரை.

'இவ்வந்தணன் தீட்சை செய்துகொள்ளப் பெற்றனன்' என்று மும்முறை மெல்லக்கூறில் இதைத் தேவர்கட்குக் கூறியதாகும். அவ்வாறே இரைந்து மும்முறை ஓதில் மனிதர்கட்கு இதைக் கூறியதாகும் என்பது.

---

நக்ஷத்திரம் உதிக்குமுன் வாக்கு நியமத்தை விடுதல் கூடாதென்கின்றது.

பிராமணம்—7

**न पुरा नक्षत्रेभ्यो वाचं विसृजेद्यत्पुरा नक्षत्रेभ्यो वाचं विसृजेद्यज्ञं विच्छिन्द्यात् ।**

என்பது.

உரை.

நக்ஷத்திரம் உதிக்குமுன் வாக்கு நியமத்தை விட்டுவிடில் எக்ஞங் கெட்டுவிடும் என்பது.

---

ஒரு காலவிசேடத்தில் வாக்கு நியமத்தை விடல்வேண்டும் அப்போது ஒரு பிரேஷை மந்திரத்தைக் கற்பிக்கின்றது.

பிராமணம்—8

**उदितेषु नक्षत्रेषु व्रतं कृणुतेति वाचं विसृजति यज्ञव्रतो वै दीक्षितो यज्ञमेवाभि वाचं विसृजति ।**

என்பது.

உரை.

நக்ஷத்திரம் உதிக்கும்போது விரதப் பொருளை (பாலை)க் கொண்டுவரும்படி கூறி வாக்குநியமத்தை விடில், அதுவும் வேள்வியின் பொருட்டாமாதலின் குற்றப்படாது என்பது.

---

நக்ஷத்திரம் உதிக்குமுன் வாக்குநியமத்தை விட்டுவிடில் (அதாவது உலகவார்த்தையைப் பேசில்) பிராயச் சித்தத்தை விதிக்கின்றது.

பிராமணம்—9

**यदि विसृजेद्वैष्णवीमृचमनु ब्रूयाद्यज्ञो वै विष्णुर्यज्ञेनैव यज्ञꣳ सं तनोति ।**

என்பது.

உரை.

தவறி வாக்குநியமத்தை விட்டுவிடில் விஷ்ணு மந்திரத்தை ஓதில் எக்ஞம் விஷ்ணுவானதால் எக்ஞத்தால் எக்ஞம் வளர்கின்றது என்பது. ஈண்டு விஷ்ணுமந்திரம் 'விஷ்ணோத்வம் நோ அந்தமः' என்னு மந்திரமென்பார் சிலர். பிறரோ, 'இதம் விஷ்ணுः' என்பது முதலிய மந்திரமென்பர்.

---

கை யலம்பும் மந்திரத்திலுள்ள, 'சுருடீகாம்' என்னுஞ் சொல்லின் கருத்தை விளக்குகின்றது.

பிராமணம்—10

**दैवीं धियं मनामह इत्याह यज्ञमेव तन्म्रदयति ।**

என்பது.

உரை.

'தைவீம் தியம் மனமஹே' என்பது, எக்ஞத்தை நடத்தும்புத்தி என்னும் பொருளுடையதால், எக்ஞத்தை எளிய காரியமாகச் செய்து கொள்கின்றான் என்பது.

---

கைக்கொள்ளல் முதலியன)

சுபாரா என்னுஞ் சொல்லாற் குறிப்பிட்டதை விளக்குக்கின்றது.

பிராமணம்—11

**सुपारा नो असद्वश इत्याह व्युष्टिमेवाव रुन्धे ।**

என்பது.

உரை.

'சுபாரோ நோ அசத்வசே' என்பது இதனால் எக்ஞமுழுதின் விளக்கத்தை யடைகின்றான் என்பது.

---

விசாரஞ் செய்வதுடன் விரதத்தை விதிக்கின்றது.

பிராமணம்—12

**ब्रह्मवादिनो वदन्ति होतव्यं दीक्षितस्य गृहा३ इ न होतव्या३ मिति हविर्वै दीक्षितो यज्जुहुयाद्यजमानस्यावदाय जुहुयाद्यन्न जुहुयाद्यज्ञपरुरन्तरियाद्ये देवा मनोजाता मनोयुज इत्याह प्राणा वै देवा मनोजाता मनोयुजस्तेष्वेव परोक्षं जुहोति तन्नेव हुतं नेवाहुतम् ।**

என்பது.

உரை.

தீட்சை செய்துகொண்டவன் தனது வீட்டில் ஹோமஞ்செய்பவனாமா? அல்லது செய்யக்கூடாதா? ஹோமஞ் செய்யில் எசமானனைக் கொன்று ஹோமஞ் செய்ததுபோலாகும், செய்யாவிடிலோ எக்ஞத்தொடர்ச்சி கெட்டு விடும். ஆதலின், என்ன செய்தல்வேண்டு மென்று பிரமவாதிகள் விசாரஞ் செய்தனர். பிறகு, யேதேவா மனோஜாதாஃ என்பது முதலிய மந்திரத்தால் எசமானன் விரதமாகிய பாலை அருந்தில் அது தேவர்கட்குப் பரோக்ஷமாக ஓமஞ் செய்ததாகிறது. ஆதலின், ஆகவனீயாக்கினியில் ஹோமஞ் செய்யும் மந்திரத்தாற் செய்யாமையின் பிரத்தியட்சமாகிய ஓமமும் இல்லை. இதனால், ஓமஞ்செய்துஞ் செய்யாமையின் முற்கூறிய குற்றம் இல்லை என்று முடிவு செய்தனர். ஆதலின், 'யேதேவாஃ' என்பது முதலிய மந்திரத்தால் விரதஞ் செய்த(பாலருந்த)ல் வேண்டும் என்பது.

---

பயம் உண்டாவதற்கு இடமுண்டென்று காட்டிவிட்டு படுக்கும்போது சேபிக்கும் மந்திரத்திற்கு உரை கூறுகின்றது.

பிராமணம்—13

**स्वपन्तं वै दीक्षितꣳ रक्षाꣳसि जिघाꣳसन्त्यग्निः खलु वै रक्षोहाऽग्ने त्वꣳ सु जागृहि वयꣳ सु मन्दिषीमहीत्याहाग्निमेवाधिपां कृत्वा स्वपिति रक्षसामपहत्यै।**

என்பது.

உரை.

தீட்சை பண்ணிக்கொண்டவன் தூங்கும்போது இராக்கதர்கள் கொன்றுவிடுவார்கள். ஆதலின், 'அக்னியே! நீ விழித்துக்கொண்டிருப்பாயாக. யாம் துயில் கின்றோம்' என்று கூறுவது, அக்கினியையே தலைவனாகச் செய்துவிட்டுத் தூங்குதலாம். ஏனெனின்? இராக்கதர்களை விலக்குதற்பொருட்டு என்பது.

---

விரதங்கெடுதல் கூடும் என்பதைக்காட்டி, முதற்பாதத்திற்கு உரை கூறுகின்றது.

பிராமணம்—14

**अव्रत्यमिववा एष करोति यो दीक्षितस्स्वपिति त्वमग्ने व्रतपा असीत्याहा-ग्निर्वै देवानां व्रतपतिस्स एवैनं व्रतमा लम्भयति ।**

என்பது.

உரை

தீட்சை பண்ணிக்கொண்டவன் தூங்கில் விரதம் கெட்டு விடுகின்றது. ஆதலின், 'த்வமக்னே விரதபா அஸி' என்பது, அக்கினி, தேவர்கட்கு விரதபதியாம் (விரதத்தைப் பாதுகாப்பவன்) ஆதலின், இவனுடைய விரதத்தையுங் கெடாமற் பாதுகாத்துக் கொள்ளுகின்றது என்பது.

---

மனிதர்களுள் விடுபட்டவிரதம் மனித அவதாரத்தாற்றான் பாதுகாக்கப் படும் என்னும் ஆசங்கையை நீக்கி, இரண்டாம் பாதத்திற்கு உரை கூறுகின்றது.

பிராமணம்—15

**देव आ मर्त्येष्वेत्याह देवो ह्येष सन्मर्त्येषु ।**

என்பது.

உரை.

'தேவ ஆமர்த்யேழு' என்றது, இவ்வக்கினி தேவனாயிருந்தும் மனிதர்களுள் வாழ்கின்றது. ஆதலின், இதனால் விரதத்தைப் பாதுகாக்க முடியும் என்பதாம்.

---

கைக்கோள்ளுதல் முதலியன)

'அக்கினி மூர்த்தா' என்பது முதலிய யாஜ்யா புரோநுவாக்கிய முதலான மந்திரங்களில் அக்கினியே துதிக்கப்பெறுகின்றது என்னுங்கருத்தை மூன்றும் பாதத்தில் தானே விளக்குகின்றது.

பிராமணம்--16

**त्वं यज्ञेष्वीड्य इत्याहैतꣳ हि यज्ञेष्वीडते ।**

என்பது.

உரை.

'த்வம் யக்ஞேஷு ஈட்ய:' என்றது, இவ்வக்கினியை எக்ஞங்களில் துதிக்கின்றார்கள் என்கின்றது என்பதாம்.

---

'விழித்தெழுந்தவன் செபித்தல்வேண்டும்' என்பதற்கு உரை கூறுகின்றது.

பிராமணம்—17

**अप वै दीक्षितात्सुषुपुष इन्द्रियं देवताः क्रामन्ति विश्वे देवा अभि मामाऽववृत्रन्नित्याहेन्द्रियेणैवैनं देवताभिस्सं नयति ।**

என்பது.

உரை.

தீட்சை பண்ணிக்கொண்டு தூங்குகின்றவனுடைய இந்திரியங்களை சுழுத்தியினின்று தேவர்கள் கொண்டுபோய் விடுவார்கள். ஆதலின், 'விஸ்வே தேவா: அபி மா மா அவவ்ருத்திரன்' என்னு மந்திரத்தைச் செபித்தல் வேண்டுமென்கின்றது. இம்மந்திரம் இவனை அத்தேவர்களுடன் சேர்த்து வைக்கின்றது என்பது.

---

மாறுபடில் கேடென்பதுடன், 'ஆபூயோ பர' என்னும் மந்திரபாகத்திற்கு உரை கூறுகின்றது.

பிராமணம்—18

**यदेतद्यजुर्न ब्रूयाद्यावत एव पशूनभि दीक्षेत तावन्तोऽस्य पशवस्स्यू रास्वेयत्सोमाऽऽभूयो भरेत्याहापरिमितानेव पशूनवरुन्धे ।**

என்பது.

உரை.

இம் மந்திரத்தை ஓதாவிடில், தீட்சை பண்ணிக்கொண்ட காலத்தில் வாங்கின பசுக்களின் அளவே பரவுலகில் இவனுக்குப் பசுக்கள் உண்டாகும்

இம்மந்திரத்தை ஒதிலோ, எண்ணில்லாத பசுக்களேயும், பசுக்களால் உப லக்ஷிதங்களான ஏனைய சம்பத்துக்க ளனைத்தையும் அடைவான் என்ப தாம்.

---

அவ்வம் மந்திரத்தால் அவ்வப் பொருளபிமானி தேவதைகள் இன்புறுகின்றது என்கின்றது.

பிராமணம் —19

**चन्द्रमसि मम भोगाय भवेत्याह यथादेवतमेवैनाः प्रति गृह्णाति ।**

என்பது.

உரை.

'சந்திரமஸி மம போகாய பவ' என்றது, தேவதைகளின் முறை யாகவே பொன் முதலிய தட்சிணைகளேப் பெற்றுக்கொள்கின்றான் என்பது.

---

வேறுபக்ஷத்தைப் பழிப்பதும், தனது பக்ஷத்தைத் துதிப்பதுங் காட்டப்படு கின்றன.

பிராமணம்—20

**वायवे त्वा वरुणाय त्वेति यदेवमेता नानुदिशेदयथादेवतं दक्षिणा गमयेदा देवताभ्यो वृश्चयेत यदेवमेता अनुदिशति यथादेवतमेव दक्षिणा गमयति न देवताभ्य आ वृश्चयते ।**

என்பது.

உரை.

வாயு வருணன் முதலான தேவதைகளால் கெட்டுப்போன வேள்விப் பொருள்களே அவ்வத்தேவதைகட்கு அர்ப்பணமாக்கித் தெரிவிக்காவிடில் அவ்வத்தேவதைகளால் பொருளே யடையமாட்டான். தேவதைகளினின்று நீக்கப்பட்டவனு மாகின்றான்; ஆதலின், அவ்வத் தேவதைகட்கு அறிவித்து விடில் அவ்வத் தேவதைகளால் தட்சிணையை யடைகின்றான். தேவதைகளி லிருந்து நீங்கவுமாட்டான் என்பது.

---

கைக்கோள்ளுதல் முதலியன)

நதியைத் தாண்டும் மந்திரத்திலுள்ள, 'ஹவிஷ்யம்' என்னுஞ் சொல்லுக்குக் கருத்தைக் கூறுகின்றது.

பிராமணம்—21

**देवीरापो अपां नपादित्याह यद्वो मेध्यं यज्ञियꣳ सदेवं तद्वो माऽव क्रमिषमिति वावैतदाह ।**

என்பது.

உரை.

'தேவீராபோ அபாம் நபாத்' என்றது, இவ்வாற்று நீர் புனிதமும், வேள்விக்குரியதுமாம். ஆதலின், இதைத் தாண்டமாட்டேன் என்பது.

---

அம்மந்திரத்திலுள்ள தந்து, என்பதன்கருத்தை விளக்கின்றது.

பிராமணம்—22

**अच्छिन्नं तन्तुं पृथिव्या अनु गेषमित्याह सेतुमेव कृत्वाऽत्येति ।**

என்பது.

உரை.

'அச்சின்னம் தந்தும் பிருதிவ்யா அநுகேஷம், என்பதால் மண்ணாங்கட்டியை எடுத்துப்போடும் வாயிலாக ஆற்றிற்குப் பாலங்கட்டிக்கொண்டு அதன்மீது தாண்டிச் செல்கின்றேன் என்பது.

நான்காம் அநுவாகம்

முற்றிற்று.

---

ஆறுங்காண்டம் முதற்பிரபாடகம்

ஐந்தாவது அநுவாகம்

பிராயணீயேஷ்டியைக் கூறும் பிராமணங்கள்.

ஐந்து பஞ்சாதிக்குமேல் எட்டுப் பதங்களைக் கொண்டது.

देवा वै देवयजनमध्यवसाय दिशो न प्राजानन्ते१ऽन्योन्यमुपाधावन्त्वया प्रजानाम त्वयेति तेऽदित्याꣳ समध्रियन्त त्वया प्रजानामेति साऽब्रवीद्वरं वृणै मत्प्रायणा एव वो यज्ञा मदुदयना असन्निति तस्मादादित्यः प्रायणीयो यज्ञानामादित्य उदयनीयः

पञ्च देवता यजति पञ्च दिशो दिशां प्रज्ञात्यै [३३] अथो पञ्चा क्षरा पङ्क्तिः पाङ्क्तो यज्ञो यज्ञमेवाव रुन्धे पथ्यां स्वस्तिमयजन्प्राचीमेव तया दिशं प्राजानन्नग्निना दक्षिणा सोमेन प्रतीचीं सवित्रोदीचीमदित्योर्ध्वां पथ्यां स्वस्तिं यजति प्राचीमेव तया दिशं प्रजानाति पथ्यां स्वस्तिमिष्ट्वाऽग्नीषोमौ यजति चक्षुषी वा एते यज्ञस्य यदग्नीषोमौ ताभ्यामेवानु पश्यति [३४] अग्नीषोमाविष्ट्वा सवितारं यजति सवितृप्रसूत एवानु पश्यति सवितारमिष्ट्वाऽदितिं यजतीयं वा अदितिरस्यामेव प्रतिष्ठायानु पश्यत्यदितिमिष्ट्वा मारुतीमृचमन्वाह मरुतो वै देवानां विशो देवविशं खलु वै कल्पमानं मनुष्यविशमनु कल्पते यन्मारुतीमृचमन्वाह विशां कॢप्त्यै ब्रह्मवादिनो वदन्ति प्रयाजवदननूयाजं प्रायणीयं कार्यमनूयाजवत् [३५] अप्रयाजमुदयनीयमितीमे वै प्रयाजा अमी अनूयाजास्सैव सा यज्ञस्य संततिस्तत्तथा न कार्यमात्मा वै प्रयाजाः प्रजाऽनूयाजा यत्प्रयाजानन्तरियादात्मानमन्तरियाद्यदनूयाजानन्तरियात्प्रजामन्तरियाद्यतः खलु वै यज्ञस्य विततस्य न क्रियते तदनु यज्ञः परा भवति यज्ञं पराभवन्तं यजमानोऽनु [३६] परा भवति प्रयाजवदेवानूयाजवत्प्रायणीयं कार्यं प्रयाजवदनूयाजवदुदयनीयं नाऽऽत्मानमन्तरेति न प्रजां न यज्ञः पराभवति न यजमानः प्रायणीयस्य निष्कास उदयनीयमभि निर्वपति सैव सा यज्ञस्य संततिर्याः प्रायणीयस्य याज्या यत्ता उदयनीयस्य याज्याः कुर्यात्पराङमुं लोकमा रोहेत्प्रमायुकस्स्याद्याः प्रायणीयस्य पुरोनु-

பிராயணீய இஷ்டி)

वाक्यांस्ता उदयनीयस्य याज्याः करोत्यस्मिन्नेव लोके प्रति तिष्ठति ॥ [२७] प्रज्ञात्यै पश्यत्यनूयाजवद्यजमानोऽनु पुरोनुवाक्यांस्ता अष्टौ च ॥ ५ ॥

இதில், பிராயணீயேஷ்டி கூறப்படுகின்றது.

---

பிராயணீயேஷ்டியைத் துதிக்கின்றது.

பிராமணம்—1

देवा वै देवयजनमध्यवसाय दिशो न प्राजानन्तेऽन्योन्यमुपाधावन्त्वया प्रजानाम त्वयेति तेऽदित्याः समध्रियन्त त्वया प्रजानामेति साऽब्रवीद्वरं वृणै मत्प्रायणा एव वो यज्ञा मदुदयना असन्निति तस्मादादित्यः प्रायणीयो यज्ञानामादित्य उदयनीयः ।

என்பது.

உரை.

தேவர்களைப் பூசிப்பதற்கு இது நல்லவிடம் இது நல்லவிடமன்று என்று உறுதிப்படுத்துவதற்கு முடியாமல் திக்பிரமைகொண்டு பிராசீனவமிச முதலியவைகள் செய்வதற்கு முடியாதவர்களாய், இன்னதிக்கு இது என்று கூறும் வல்லுநர் அதிதி தேவியாரே என்று உறுதிப் பாடடைந்து அதிதி தேவியாரைக் கேட்கும்போது அவ்வம்மையார் சோமயாகத்தின் தொடக்கத்திலும் முடிவிலும் நானே தேவதையாக இருத்தல்வேண்டும் என்று இரந்தனர். ஆதலின், சோமயாகத் தொடக்கத்திற் செய்யும் பிராணீயா இஷ்டியையும் முடிவிற்செய்யும் உதயனீயா இஷ்டியையுஞ் செய்தல்வேண்டும் என்பது. பிராயணீயா = தொடங்குதற்குக் காரணமானது. உதயனீயா = முடிவிற்குக் காரணமானது.

---

அதிதிதேவதை ஒன்றே முக்கியமானது. ஏனையதேவதைகள் நான்கும் அங்கங்கள் என்னுங் கருத்துக்கொண்டு தேவதைகளின் எண் விதிக்கப்படுகின்றது.

பிராமணம்—2

पञ्च देवता यजति पञ्च दिशो दिशां प्रज्ञात्या अथो पञ्चाक्षरा पङ्क्तिः पाङ्क्तो यज्ञो यज्ञमेवाव रुन्धे ।

என்பது.

உரை.

திசைகள் ஐந்தாமாதலின் ஐந்து தேவதைகட்கு யாகஞ் செய்யப்படுகின்றது. இது திசைகளை அறிவுறுத்தற் பொருட்டாம். இதனால், ஐந்தெழுத்துக்களைக்கொண்ட பந்திச்சந்த வடிவாகிய வேள்வியை யடைகின்றான் என்பதாம்.

---

ஒவ்வொரு திக்கிற்கும் ஒவ்வொரு தேவதையை விதித்தற் பொருட்டுத் தொடங்கிக் கூறுகின்றது.

பிராமணம்—3

**पथ्याँ स्वस्तिमयजन्प्राचीमेव तया दिशं प्राजानन्नग्निना दक्षिणा सोमेन प्रतीचीँ सवित्रोदीचीमदित्योर्ध्वां ।**

என்பது.

உரை.

கிழக்கில் பத்யா சுவஸ்தி என்னுந் தேவதையை ஆராதித்து அத்தேவதையால் கிழக்குத் திசையை யுணர்ந்தனர். அங்ஙனமே, அக்கினியால் தென் சிசையையும், சோமத்தால் மேற்குத் திசையையும், சவிதாவால் வடதிசையையும், அதிதியால் மேற்குத் திசையையும் அறிந்துகொண்டனர் என்பதாம்.

---

இது இன்ன திக்கென்று உணர்த்தும் மார்க்க விசேடத்தில் நன்மைகளை விதிக்கின்றது.

பிராமணம்—4

**पथ्याँ स्वस्तिं यजति प्राचीमेव तया दिशं प्रजानाति पथ्याँ स्वस्तिमिष्ट्वाऽग्नीषोमौ यजति चक्षुषी वा एते यज्ञस्य यदग्नीषोमौ ताभ्यामेवानु पश्यत्यग्नीषोमाविष्ट्वा सवितारं यजति सवितृप्रसूत एवानु पश्यति सवितारमिष्ट्वाऽदितिं यजतीयं वा अदितिरस्यामेव प्रतिष्ठायाऽनु पश्यति ।**

என்பது.

உரை.

கிழக்குத் திசையில் பத்யாஸ்வஸ்தி தேவதையைப் பூசிக்கின்றவன் அதனால் அத்திசையை அறிகின்றான். அதைப் பூசித்துவிட்டு அக்கினி சோமனைப் பூசித்து, வேள்விக்குக் கண்கள்போன்ற அவ்விரண்டாலும் பிறகு

பார்க்கின்றான். அவ்விரண்டையும் பூசித்துவிட்டு, சவிதாவைப் பூசித்து, சவிதாவாற் செலுத்தப்பட்டவனைப் பின்னர்ப் பார்க்கின்றான். சவிதாவைப் பூசித்துவிட்டு அதிதியைப் பூசித்து அதிதியின்மீது பிரதிட்டையுடையவனைப் பார்க்கின்றான் என்பது.

---

அத்துவர்யு பின்தொடர்ந்து சொல்லவேண்டிய இருக்கு மந்திரத்தை விதிக்கின்றது.

பிராமணம்—5

**अदितिमिष्ट्वा मारुतीमृचमन्वाह मरुतो वै देवानां विशो देवविशं खलु वै कल्पमानं मनुष्यविशमनु कल्पते यन्मारुतीमृचमन्वाह विशां क्लृप्त्यै ।**

என்பது.

உரை.

'அதிதியைப் பூசித்துவிட்டு மாருதி இருக்கை ஓதல் வேண்டும்' என்றது, மனிதர்கட்கு வணிகர் இருப்பதுபோன்று, தேவர்கட்குப் பொருளைத் தேடுகின்ற பிரசைகளானவர்கள் நாற்பத்தொன்பது மருத்துக்களாவர். இம் மந்திரத்தைப் படிப்பதால் தேவர்களுடைய வணிகக் கூட்டத்தார் தத்தமது வியாபாரத்தில் துணிவுடையராகின்றனர். அதைப்பற்றியே மனிதர்களுடைய பிரசைகள் கற்பிக்கப் படுகின்றன. இம் மந்திரத்தை ஓதுதல் பிரசைகளின் உறுதியின் பொருட்டென்பது.

---

பூர்வபக்ஷமாக, விதிவாக்கியத்தால் வந்த சில அங்கத்தை விலக்குகின்றது.

பிராமணம்—6

**ब्रह्मवादिनो वदन्ति प्रयाजवदननूयाजं प्रायणीयं कार्यमनूयाजवदप्रयाजमुदयनीयमितीमे वै प्रयाजा अमी अनूयाजास्सैव सा यज्ञस्य संततिः ।**

என்பது.

உரை.

தொடக்கத்திற்செய்யும் ஐந்து பிரயாஜா யாகங்களும் முடிவிற்செய்யும் மூன்று அநுயாஜாயாகங்களும், பிராணீயேஷ்டி உதயனீயேஷ்டி இரண்டிலும் விதிவாக்கியத்தால் வந்து சேர்ந்தன. அவற்றுள், அநுயாஜத்தை, பிராயணீயேஷ்டியிற் செய்யில் யாகம் முடிவாய்விடும், அவ்வாறே உதயனீயேஷ்டியில் பிரயாஜத்தைச் செய்யில் மற்றொரு யாகந் தொடங்கப்படுகின்ற

தாகும். அங்ஙனமாயிலோ, சோமயாகம் நடுவில் விட்டுப்போய்விடும். இன்றெனிலோ, சோமயாகத் தொடக்கமாகிய பிராயணீயேஷ்டியில் இப்போது செய்யப்படும் பிரயாஜையும், முடிவாகிய உதயனீயேஷ்டியில் அநுஷ்டிக்கப்படும் பரோக்ஷமாகிய அநுயாஜைகளும் இருத்தலின் தரிசயாகத்திலுள்ள தொடர்ச்சி இதற்கும் வந்துவிடும். ஆதலால், பிராயணீயேஷ்டியில், பிரயாஜ அநுயாஜங்கள் செய்யவேண்டுவன அன்று என்று பிரமவாதிகள் கூறுகின்றனர் என்பது.

---

மேற்கூறிய பூர்வபக்ஷத்தைப் பழிக்கின்றது.

பிராமணம்—7

**तत्तथा न कार्यमात्मा वै प्रयाजाः प्रजाऽनूयाजा यत्प्रयाजानन्तरियादात्मानमन्तरियाद्यदनूयाजानन्तरियाद्यतः खलु वै यज्ञस्य विततस्य न क्रियते तदनु यज्ञः परा भवति यज्ञं पराभवन्तं यजमानोऽनु परा भवति ।**

என்பது.

உரை.

பிரயாஜையாகம் ஆன்மாவாம், அநூயாஜையாகம் பிரசையாம், பிரயாணீயேஷ்டியில் பிரயாஜையைச் செய்யாவிடில் தனக்குக்கேடாம். அநுயாஜையைச் செய்யாவிடில் பிரசைக்குக் கேடாம். எக்ஞமுறையைச் செய்யாவிடில் எக்ஞங்கெடும்; கெடவே, எசமானன் கேடடைவன் இவ்விரண்டும் பொறுத்துக்கொள்ளத் தக்கதன்று வேள்விக்கு அங்கமாதலின் என்பது.

---

இனி, சித்தாந்தத்தைக் கூறுகின்றது.

பிராமணம்—8

**प्रयाजवदेवानूयाजवत्प्रायणीयं कार्यं प्रयाजवदनूयाजवदुदयनीयं नाऽऽत्मानमन्तरेति न प्रजां न यज्ञः पराभवति न यजमानः ।**

என்பது.

உரை.

ஆதலின் பிராயணீயேஷ்டி, உதயனீயேஷ்டிகளில் பிரயாஜ அநுயாஜைகளைச் செய்தல்வேண்டும். செய்யில், தான், யக்ஞம், பிரசை என்பவைகட்குக் கெடுதியில்லை என்பது.

---

இடையில் விட்டுப்போய்விடும் என்பதற்கு நிவிருத்தியை விதிக்கின்றது.

பிராமணம்—9

**प्रायणीयस्य निष्कास उदयनीयमभिनिर्वपति सैव सा यज्ञस्य संततिः ।**

என்பது.

உரை.

*பிராயணீயயாகத்தின் பொங்கல் பாத்திரத்தைக் கழுவாமல், அவ் வன்னப் பற்றுடன் உதயனீயேஷ்டிக்கும் அவி செய்யில் அன்னத் தொடர்ச்சியிருத்தலின் இடையில் விடுபடுதல் என்னும் குற்றம்வராது; இதுவே சோம யாகத்தின் தொடர்ச்சியாம் என்பது.*

---

பிராயணீயேஷ்டிகட்கு தேவதை ஒன்றேயாமாதலின், யாஜ்யையும் ஒன்றேயாம் என வந்தவிடத்து அதன் வேறுபாட்டை விதிக்கின்றது.

பிராமணம்—10

**याः प्रायणीयस्य याज्या यत्ता उदयनीयस्य याज्याः कुर्यात्पराङमुं लोकमारोहेत्प्रमायुकस्स्याद्याः प्रायणीयस्य पुरोनुवाक्यास्ता उदयनीयस्य याज्याः करोत्यस्मिन्नेव लोके प्रतितिष्ठति ॥**

என்பது.

உரை.

*பிராணீயேஷ்டிக்குள்ள யாஜ்யா வாக்கியத்தையே உதயனீயேஷ்டிக்கும் யாஜ்யா வாக்கியமாகக்கொள்ளில் எசமானன் இறப்பன். ஆதலின், பிராயணீயேஷ்டிக்குள்ள புரோநுவாக்கியத்தை உதயனீயேஷ்டிக்கு யாஜ்யா வாக்கியமாகவும், பிராயணீயேஷ்டியில் யாஜ்யையாக உள்ள வாக்கியத்தை உதயனீயேஷ்டிக்கு புரோநு வாக்கியமாவும் ஓதல்வேண்டும் என்பது.*

ஐந்தாம் அநுவாகம்

*முற்றிற்று.*

---

## ஆறுங்காண்டம் முதற்பிரபாடகம்

### ஆறுவது அநுவாகம்

*பசுக்கடாரியைக் கொடுத்துச் சோமத்தை விலைக்கு வாங்குவதைக் கூறும் பிராமணங்கள்.*

ஏழு பஞ்சாதிக்குமேல் பத்துப் பதங்களைக் கொண்டது.

कद्रूश्च वै सुपर्णी चाऽऽत्मरूपयोरस्पर्धेतां॒ सा कद्रूस्सुपर्णीम॑जयत्साऽब्रवीत्तृतीयस्यामितो दिवि सोमस्तमा ह॑र तेनाऽऽत्मानं निष्क्रीणीष्वेतीयं वै कद्रूरसौ सुपर्णी छन्दा॑ꣳसि सौपर्णेयास्साऽब्रवीदस्मै वै पितरौ पुत्रान्बिभृतस्तृतीयस्यामितो दिवि सोमस्तमा ह॑र तेनाऽऽत्मानं निष्क्रीणीष्व [३८] इति मा कद्रूरवोचदिति जगत्युदपतच्चतुर्दशाक्षरा सती साऽप्राप्य न्यवर्तत तस्यै द्वे अक्षरे अमीयेतां॒ सा पशुभिश्च दीक्षया चाऽगच्छत्तस्माज्जगती छन्दसां पशव्यतमा तस्मात्पशुमन्तं दीक्षोप नमति त्रिष्टुगुदपतत्त्रयोदशाक्षरा सती साऽप्राप्य न्यवर्तत तस्यै द्वे अक्षरे अमीयेतां॒ सा दक्षिणाभिश्च [३९] तपसा चाऽगच्छत्तस्मात्त्रिष्टुभो लोके माध्यंदिने सवने दक्षिणा नीयन्त एतत्खलु वाव तप इत्याहुर्यस्स्वं ददातीति गायत्र्युदपतच्चतुरक्षरा सत्यजया ज्योतिषा तमस्या अजाऽभ्यरुन्ध तदजाया अजत्वं॒ सा सोमं चाऽहरच्चत्वारि चाक्षराणि साऽष्टाक्षरा समपद्यत ब्रह्मवादिनो वदन्ति [४०] कस्मात्सत्याद्गायत्री कनिष्ठा छन्दसां॒ सती यज्ञमुखं परीयायेति यदेवादस्सोममाऽहरत्तस्माद्यज्ञमुखं पर्यैत्तस्मात्तेजस्विनीतमा पद्भ्यां द्वे सवने समगृह्णान्मुखेनैकं यन्मुखेन समगृह्णात्तदधयत्तस्माद्द्वे सवने

விலைக்கு வாங்குதல்)

शुक्रवती प्रातस्सवनं च माध्यंदिनं च तस्मात्तृतीयसवन ऋजीष-
मभि षुण्वन्ति धीतमिव हि मन्यन्ते [४१] आशिरमव नयति
सशुक्रत्वायाऽथो सं भरत्येवैनत्त॰ सोममाह्रियमाणं गन्धर्वो विश्वा
वसुः पर्यमुष्णात्स तिस्रो रात्रीः परिमुषितोऽवसत्तस्मात्तिस्रो रात्रीः
क्रीतस्सोमो वसति ते देवा अब्रुवन्स्त्रीकामा वै गन्धर्वास्स्त्रिया
निष्क्रीणामेति ते वाच॰ स्त्रियमेकहायनीं कृत्वा तया निरक्री
णन्त्सा रोहिद्रूपं कृत्वा गन्धर्वेभ्यः [४२] अपक्रम्यातिष्ठत्तद्रोहितो
जन्म ते देवा अब्रुवन्नप युष्मदक्रमीन्नास्मानुपावर्तते वि ह्वयामहा
इति ब्रह्म गन्धर्वा अवदन्नगायन्देवास्सा देवान्गायत उपावर्तत
तस्माद्गायन्त॰ स्त्रियः कामयन्ते कामुका एन॰ स्त्रियो भवन्ति
य एवं वेदाथो य एवं विद्वानपि जन्येषु भवति तेभ्य एव ददत्युत
यद्बहुतयाः [४३] भवन्त्येकहायन्या क्रीणाति वाचैवैन॰ सर्वया
क्रीणाति तस्मादेकहायना मनुष्या वाचं वदन्त्यकूटयाऽकर्णयाऽ-
काणयाऽश्लोणयाऽसप्तशफया क्रीणाति सर्वयैवैनं क्रीणाति यच्छ्वे-
तया क्रीणीयाद्दुश्चर्मा यजमानस्स्याद्यत्कृष्णयाऽनुस्तरणी स्यात्प्र-
मायुको यजमानस्स्याद्यद्द्विरूपया वार्त्रघ्नी स्यात्स वाऽन्यं
जिनीयात्तं वाऽन्यो जिनीयादरुणया पिङ्गाक्ष्या क्रीणात्येतद्वै
सोमस्य रूप॰ स्वयैवैनं देवतया क्रीणाति [४४] ॥ निष्क्रीणीष्व
दक्षिणाभिश्च वदन्ति मन्यन्ते गन्धर्वेभ्यो बहुतयाः पिङ्गाक्ष्या
दश च ॥ ६ ॥

இதில், சிவப்பு நிறமுடைய ஒருவருடத்துப் பசுக்கடாரியைக் கொடுத்துச் சோமத்தை விலைக்கு வாங்குதல் கூறப்படுகின்றது.

---

இவ்வாறு, பிராயணீயேஷ்டியை முடித்துக்கொண்டு சோமத்தின் விலையைக் கூறுதற்பொருட்டு ஒரு கதையுடன் சோமங் கொண்டுவந்ததைக் கூறுகின்றது.

பிராமணம்—1

**कद्रूश्च वै सुपर्णी चाऽऽत्मरूपयोरस्पर्धेताꣳ सा कद्रूस्सुपर्णीमजयत्साऽब्रवीत्तृतीयस्यामितो दिवि सोमस्तमा हर तेनाऽऽत्मानं निष्क्रीणीष्वेति ।**

என்பது.

உரை.

கத்துரு சுபர்ணி என்னும் இரு மாதர்கள், நானே மிக அழகுடையவள் நானே மிக அழகுடையவள் என்று தம்முள் வாதாடி இதில் தோல்வியுற்றவள் மற்றொருத்திக்கு அடியாளாதல்வேண்டுமென்று உடன்பட்டுக் கொண்டார்கள். மத்தியஸ்தர்கள் இதில், கத்துருவே வெற்றியுடையவள் என்று கூறிவிட்டனர். சபதப்படி, சுபர்ணி என்பவள் கத்துருவிற்கு அடியாளாயினள். பிறகு, கத்துரு, சுபர்ணியை நோக்கி, இதிலிருந்து மூன்றுவது உலகாகிய சுவர்க்கத்தில் சோமம் இருக்கின்றது அதைக் கொண்டுவந்து கொடுட்பையேல் உன்னை விட்டுவிடுகின்றேன் என்றனள் என்பது.

---

சோமத்தைக் கொண்டுவருதல் கூடும் என்பதற்குச் சுருதியைக் கூறுகின்றது.

பிராமணம்—2

**इयं वै कद्रूरसौ सुपर्णी छन्दाꣳसि सौपर्णेयाः ।**

என்பது.

உரை.

'கத்துரு' என்னுமிவள் இப்பூமிவடிவினள் ஆதலின் சோமத்தைக் கொண்டுவரமாட்டாள். 'சுபர்ணி' என்பவளோ, சுவர்க்கலோக வடிவினள் ஆதலானும், மேலே செல்லும் வன்மையுடைய காயத்திரி முதலிய புதல்வர்களை யுடையவளாதலானும் சோமத்தைக் கொண்டுவரும் ஆற்றலுடையவள் என்பது.

---

'விலைக்கு வாங்குதல்)

இனி, அச் சுபர்ணி என்பவள் தனது புதல்வர்களான காயத்திரி முத லான வர்களின் முன்னிலையில் தனது வரலாற்றை வெளிப்படுத்துகின்ருள் என்கின்றது.

பிராமணம் — 3

**साऽब्रवीदसौ वै पितरौ पुत्रान्बिभृतस्तृतीयस्यामितो दिवि सोमस्तमा हर तेनाऽऽत्मानं निष्क्रीणीष्वेति मा कद्रूरवोचदिति ।**

என்பது.

உரை.

அன்னையும் பிதாவும் புதல்வரை வளர்த்தது இத்தகைய துன்பத்தி லிருந்து எம்மை விடுவிப்பதற்கல்லவா? இதனாலன்றோ, 'புத்' என்னும் நரகத்தால் உபலக்ஷிதமான எல்லாத்துன்பத்திலிருந்தும் பாதுகாப்பவன் புத்திரன் எனப்படுதலுமாம்; ஆதலின், காயத்திரி முதலிய புதல்வர்காள்? நீவிர் மூன்ருவது உலகாகிய சுவர்க்கத்தில் சோமமிருக்கின்றது அதைக் கொண்டுவருவீர்களாக. அதனால், எம்மை விடுவிப்பீர்களாக என்று தனது சந்தமாகிய புதல்வர்களிடத்தில் சுபர்ணி சொல்லினள் என்பது.

---

அவைகளுள் சகதிச்சந்தம் வலியுடையதாமாதலின் முதலில் அது முயன்றது என்கின்றது.

பிராமணம் —4

**जगत्युदपतच्चतुर्दशाक्षरा सती साऽप्राप्य न्यवर्तत तस्यै द्वे अक्षरे अमीयेताᳫँ सा पशुभिश्च दीक्षया चाऽगच्छत्तस्माज्जगती छन्दसां पशव्यतमा तस्मात्पशुमन्तं दीक्षोप नमति ।**

என்பது.

உரை.

முதலில், பதினன்கு எழுத்துக்களைக்கொண்ட 'சகதி' என்னும் ஒரு வடமொழிச் சந்தமானது சுவர்க்கலோகஞ் சென்று, சுவான ப்ராஜ முத லான சோமப் பாதுகாப்பாளர்களுடன் போரிட்டுஞ் சோமங் கிடைக்காமல், அக்னிஷோமீயம், சவனீயம் அநுபந்தீயம் என்னும் பசுக்களையும் இஷ்டி யால் முடியுந் தீட்சையையுங் கவர்ந்துகொண்டு தனது எழுத்துக்களுள் இரண்டெழுத்தை, சுவான முதலானோர் பறித்துக்கொள்ளுமாறு தோல்வி யுற்றுத் திரும்பிவந்தது. ஆதலின், சகதிச் சந்தம் பசுக்களைக் கொண்டுவந்த தால் மிகுந்தப் பசுக்களைக் கொடுப்பதாம். பசுக்களுடன் தீட்சையைக்

கொண்டுவந்தால் தனக்குச் சம்பத்து இருக்கும்போது தீட்சை செய்து கொள்ள முயல்கின்றனர் என்பது.

---

அவ்வாறே, திரிஷ்டுப் என்னுஞ்சந்தம் போரிட்டதைக் கூறுகின்றது.

பிராமணம்—5

**त्रिष्टुगुदपतत्त्रयोदशाक्षरा सती साऽप्राप्य न्यवर्तत तस्यै द्वे अक्षरे अमी-येताᳪ सा दक्षिणाभिश्च तपसा चाऽगच्छत् ।**

என்பது.

உரை.

பதின்மூன்று எழுத்துக்களைக்கொண்ட 'திரிஷ்டுப்' என்னுஞ் சந்தம் மேலேபோய் போராடியுஞ் சோமங்கிடைக்காமல் தனக்குள்ள இரண்டு எழுத்தைப் பறிகொடுத்துவிட்டு, தட்சிணை, தவம் என்னும் இரண்டையுங் கொண்டுவந்தது. குதிரை பசு முதலியவைகள் தட்சிணை. உண்ணுமை, கை விரல்களை மடக்கல், வாக்கையடக்கல், மாதரைப் புணராமை, வெண்ணை தேய்த்தல் போர்த்தல் முதலானவைகளைப் பொறுத்துக்கொள்ளுதலும். உயிர்போல் பிரியமிகுந்த, கோ, குதிரை முதலியவைகளை தானஞ்செய்தலும் மிகுந்த தவமாம் என்பது.

---

திரிஷ்டுப்ச் சந்தத்தால் தட்சிணை முதலியவற்றைக் கொண்டுவரப் பெற்றதைப் பொருந்துமாறு கூறுகின்றது.

பிராமணம்—6

**तस्मात्त्रिष्टुभो लोके माध्यंदिने सवने दक्षिणा नीयन्त एतत्खलु वाव तप इत्याहुर्यस्स्वं ददातीति ।**

என்பது.

உரை.

திரிஷ்டுப் அபிமானி தேவதையைக்கொண்ட உச்சிப்போது சோமரசம் பிழியும்போது (சவனத்தில்) தட்சிணை கொடுக்கப்படுகின்றது. இது, உடம்பின் துன்பினும் பொருளழிதலால் வரும் மனத்துன்பம் மிகுதியாமாதலானும், பொருளால் பிறர் பிழைப்பதாலும் பெருந்தவமென்பது பெரியார்களின் சம்மதம் என்பது.

---

விலைக்கு வாங்குதல்)

போரில், காயத்திரி வெற்றிபெற்ற தென்பதை விளக்குகின்றது.

பிராமணம்—7

**गायत्र्युदपतच्चतुरक्षरा सत्यजया ज्योतिषा तमस्या अजाऽभ्यरुन्ध तद-जाया अजत्वँ सा सोमं चाऽहरच्चत्वारि चाक्षराणि साऽष्टाक्षरा समपद्यत ।**

என்பது.

உரை.

உதவியின்றியதால் முன்னர் இருவர் தோல்வியுற்றதைக் கண்டு, ஒரு வெள்ளாட்டுடன் நான்கு எழுத்துக்களைக் கொண்ட காயத்திரி மேலே போயிற்று, அவ்வாடு, காயத்திரியின் பொருட்டு தனது ஒளியால் சோமத்தை நாற்புறமுந் தடுத்துவிட்டது. இதுவே, அஜம் என்னும் பகுதியின் பரியாயப் பொருளாம். இவ்வாற்றால், சோமத்தையும் முன் இருவரும் பறிகொடுத்த நான்கெழுத்துக்களையும் பெற்று கொண்டு எட்டு எழுத்துக்களையுடையதாயிற்று என்பது.

---

கடாவிடைகளால் காயத்திரியைப் புகழ்கின்றது.

பிராமணம்—8

**ब्रह्मवादिनो वदन्ति कस्मात्सत्याद्गायत्री कनिष्ठा छन्दसाँ सती यज्ञमुखं परीयायेति यदेवादस्सोममाऽहरत्तस्माद्यज्ञमुखं पर्यैत्तस्मात्तेजस्विनी-तमा ।**

என்பது.

உரை.

காயத்திரியானது எழுத்துக்களால் குறைவுடையதாயிருந்தும், வேள்வியின் தொடக்கத்தில், அதாவது காலைச் சவனத்திற் செய்யும் பவமானதுதியில் எவ்வாறு கொள்ளப்படுகின்றது? என்று பிரமவாதிகள் வினவினர். அதற்கு, பரவுலகிலிருந்து சோமத்தைக் கொண்டுவந்ததால் இது முதலாவதாகக் கொள்ளப்படுகின்றது. இதுபற்றியே, இது மிகுந்த ஒளியுடையதாகின்றது என்பது.

---

சோமத்தைக் கொண்டுவந்த முறையை விளக்குகின்றது.

பிராமணம்—9

**पद्भ्यां द्वे सवने समगृह्णान्मुखेनैकं यन्मुखेन समगृह्णात्तदधयत्तस्माद्द्वे सवने शुक्रवती प्रातस्सवनं च माध्यंदिनं च तस्मात्तृतीयसवन ऋजीषमभिषुण्वन्ति धीतमिव हि मन्यन्ते ।**

என்பது.

உரை.

பறவை வடிவாகிய காயத்திரி, இரண்டு சவனங்கட்கு வேண்டிய சோமத்தைக் கால்களினும், மூன்ருவது சவனத்திற்கு வேண்டியதை வாயினுமாக கொண்டுவந்தது. அப்போது வாயில்வைத்திருந்த சோமத்தின் இரசத்தைக் குடித்துவிட்டது. ஆதலின், காலைச் சவனம், மத்தியான சவனங்களில் சோமரசம் இருக்கின்றது. மூன்ருஞ் சவனத்தில் சோமரசம் இல்லாத சக்கையாகின்றது என்பது.

---

மூன்ருஞ் சவனத்தின் சோமரசத்தைக் குடித்துவிட்டதால், சக்கையை இடித்துப் பிழியவேண்டுமென்று சில விஷயத்தைக் கூறிவிட்டு, அதில், மற்ருெரு விசேடத்தை விதிக்கின்றது.

பிராமணம்—10

**आशिरमव नयति सशुक्रत्वायाथो सं भरत्येवैनत् ।**

என்பது.

உரை.

இரசத்தின் பொருட்டு சோமச் சக்கையில் தயிராகாத பால் தெளிக்கப்படுகின்றது; அதனுல், சோமரச அவி வளர்க்கப்படுகின்றது என்பது.

---

மீண்டும், மற்ருென்றை விதிக்கின்றது.

பிராமணம்—11

**तꣳ सोममाह्रियमाणं गन्धर्वो विश्वावसुः पर्यमुष्णात्स तिस्रो रात्रीः परिमुषितोऽवसत्तस्मात्तिस्रो रात्रीः क्रीतस्सोमो वसति ।**

என்பது.

உரை.

சோமத்தைக் கொண்டுவரும்போது, 'விசுவாவசு' என்னுங் கந்தருவன் அச்சோமத்தைக் கவர்ந்துகொண்டுபோய் மூன்றிரவு தன்பால் வைத்திருந்த

விலைக்கு வாங்குதல்)

னன். ஆதலின், விலைக்குவாங்கிய சோமத்தை, பிழியாமல் மூன்று இரவு வைத்திருத்தல்வேண்டும் என்பது.

---

இவ்வாறு சோமங் கொண்டுவந்ததைக் கூறிவிட்டு, சோமவிலையைக் கூறத் தொடங்குகின்றது.

பிராமணம்—12

**ते देवा अब्रुवन्त्स्त्रीकामा वै गन्धर्वास्स्त्रिया निष्क्रीणामेति ते वाचꣳ स्त्रिय-मेकहायनीं कृत्वा तया निरक्रीणन् ।**

என்பது.

உரை.

கந்தருவர்கள் காமிகளாதலின் ஒரு பெண்ணைக் கொடுத்துவிட்டுச் சோமத்தை வாங்கிக்கொள்ளலாமென்று கருதி, வாக்குத் தேவியை ஒரு வயதுப் பெண்ணாக்கிக் கொடுத்துவிட்டுச் சோமத்தை வாங்கிவிட்டனர் என்பது.

---

அப் பெண், கந்தருவரிடத்தில் பிரியமில்லாதவளாய் சிவந்தப் பசுக் கடாரிவடிவெடுத்தனள் என்கின்றது.

பிராமணம்—13

**सा रोहिद्रूपं कृत्वा गन्धर्वेभ्योऽपक्रम्यातिष्ठत्तद्रोहितो जन्म ।**

என்பது.

உரை.

அவள் சிவப்புநிறமுடைய பசுக்கடாரியாய் கந்தருவரிடத்திலிருந்து வந்துவிட்டனள். இதுபற்றியே சிவப்புநிறமுடைய கோக்களுண்டாயின என்பது.

---

தேவர்களிடத்தில் விருப்புடைய அவள் மீண்டும் தேவதையை யடைந்ததை விளக்குகின்றது.

பிராமணம்—14

**ते देवा अब्रुवन्नप युष्मदक्रमीन्नास्मानुपावर्तते वि ह्वयामहा इति ब्रह्म गन्धर्वा अवदन्नगायन्देवास्सा देवान्गायत उपावर्तत तस्माद्गायन्तꣳ-स्त्रियः कामयन्ते ।**

என்பது.

உரை

தேவர்கள், அவளைச் சேர்த்துக்கொள்ளமாட்டோம் என்று கூறிவிட்டுச் சங்கீதம் பாடினார்கள்; அதைக்கேட்ட அவள் தேவர்களின்மேல் மோகங் கொண்டாள். இதுபற்றியே, உலகிலும் பாடுகின்றவர்களை மாதர்கள் மோகிக்கின்றனர் என்பது.

---

இவ்வரலாற்றை யுணர்ந்தவனைப் புகழ்கின்றது.

பிராமணம்—15

कामुका एनꣳ स्त्रियो भवन्ति य एवं वेदाथो य एवं विद्वानपि जन्येषु भवति तेभ्य एव ददत्युत यद्बहुतया भवन्ति ।

என்பது.

உரை.

இவ்விருத்தாந்தத்தை யுணர்ந்தவனை மாதர்கள் இச்சிக்கின்றனர். மற்றும், சுற்றத்தார்களுள் இதை யுணர்ந்தவர்கள் தம் மகனுக்கு பெண்கேட்கும் போது பெருமையுடைய ஏனையோர் பெண்ணைக் கேட்கினும் அவர்களுக்குக் கொடுக்காமல் இவர்களுடைய புதல்வர் முதலானோர்கட்கே பெண் வீட்டார்கள் கன்னியைக் கொடுக்கின்றார்கள் என்பது.

---

சோமவிலைப் பொருளாகிய பசுக் கடாரியின் குணங்களை விதிக்கின்றது.

பிராமணம்—16

एकहायन्या क्रीणाति वाचैवैनꣳ सर्वया क्रीणाति तस्मादेकहायना मनुष्या वाचं वदन्ति ।

என்பது

உரை.

ஒருவருடப் பசுக்கடாரியால், அதாவது வாக்குத்தேவதையால் சோமத்தை விலைக்கு வாங்குகின்றது முழுதும் வாக்காலேயே விலைக்கு வாங்கியதாயிற்று. இதுபற்றியே, ஒருவருடமானவுடன் மனிதர்களின் குழந்தைகள் பேசத்தொடங்குகின்றன என்பது.

---

விலைக்கு வாங்குதல்)

வேண்டாத குற்றங்களை விதிக்கின்றது.

பிராமணம்—17

**अकूटयाऽकर्णयाऽकाणयाऽश्लोणयाऽसप्तशफया क्रीणाति ।**

என்பது.

உரை.

கோணலாகிய கொம்புகள், அறுபட்டகாது, ஒருகண் பொட்டை, குட்டம் முதலிய நோய், ஏழு கொளும்புகள், அங்கப்பழுது என்னுமிவைகள் இன்றிய பசுங்கன்றால் சோமத்தை வாங்கல்வேண்டும் என்பது.

---

கொள்ளவேண்டிய குணங்களை விதிக்கின்றது.

பிராமணம்—18

**सर्वयैवैनं क्रीणाति ।**

என்பது.

உரை.

நிறைந்த அயவயங்களையுடைய பசுக்கடாரியைக் கொடுத்துச் சோமத்தை வாங்கல் வேண்டு மென்பதாம்.

---

மாறுபடில் கேடேன்பதுடன் தனது பக்ஷத்தை விதிக்கின்றது.

பிராமணம்—19

**यच्छ्वेतया क्रीणीयाद्दुश्चर्मा यजमानस्स्याद्यत्कृष्णयाऽनुस्तरणी स्यात्प्रमायुको यजमानस्स्याद्यद्द्विरूपया वार्त्रघ्नी स्यात्स वाऽन्यं जिनीयात्तं वाऽन्यो जिनीयादरुणया पिङ्गाक्ष्या क्रीणात्येतद्वै सोमस्य रूपꣳ स्वयैवैनं देवतया क्रीणाति ।**

என்பது.

உரை.

வெள்ளை நிறமுடையதால் வாங்கில் எசமானனுக்கு உடம்பில் கெட்ட தோல் உண்டாகின்றது. கறுப்பு நிறமுடையதால் வாங்கில் எசமானன் இறப்பன். இரண்டு நிறமுடையதால் வாங்கில் எசமானனும் பிறருக்குப் பகைவனாதலின் தீமைவரினும் வரும். இதை யாரால் உணரமுடியும்? ஆகையால், பூனைக் கண்ணுடையதும் ஒருவருட வயதுடையதுமாகிய சிவப்புநிறமுடைய பசுக்கடாரியால் சோமத்தை விலைக்குவாங்கல்வேண்டும். இதுவே சோமத்

தின் வடிவாம். ஆதலின், சோமத்தை விலைக்குவாங்குவதற்கு இது ஒத்த தாம் என்பது.

ஆறுவது அநுவாகம்
முற்றிற்று.

---

## ஆறுங்காண்டம் முதற்பிரபாடகம்

### ஏழாவது அநுவாகம்

*சோமத்தை விலைக்கு வாங்கும் வகையைக் கூறும் பிராமணங்கள்.*

எட்டுப் பஞ்சாதிகளை யுடையது.

तद्धिरण्यमभवत्तस्मादद्भ्योहिरण्यं पुनन्ति ब्रह्मवादिनो वदन्ति कस्मात्सत्यादनस्थिकेन प्रजाः प्रवीयन्तेऽस्थन्वतीर्जायन्त इति यद्धिरण्यं घृतेऽवधाय जुहोति तस्मादनस्थिकेन प्रजाः प्रवीयन्तेऽस्थन्वतीर्जायन्त एतद्वा अग्नेः प्रियं धाम यद्घृतं तेजो हिरण्यमियं ते शुक्र तनूरिदं वर्च इत्याह सतेजसमेवैनꣳ सतनुं [४६] करोत्यथो सं भरत्येवैनं यदबद्धमवदध्याद्गर्भाः प्रजानां परापातुकास्स्युर्बद्धमव दधाति गर्भाणां धृत्यै निष्टक्यं बध्नाति प्रजानां प्रजननाय वाग्वा एषा यत्सोमक्रयणी जूरसीत्याह यद्धि मनसा जवते तद्वाचा वदति धृता मनसेत्याह मनसा हि वाग्धृता जुष्टा विष्णव इत्याह [४७] यज्ञो वै विष्णुर्यज्ञायैवैनां जुष्टां करोति तस्यास्ते सत्यसवसः प्रसव इत्याह सवितृप्रसूतामेव वाचमव रुन्धे काण्डेकाण्डे वै क्रियमाणे यज्ञꣳ रक्षाꣳसि जिघाꣳसन्त्येष खलु वा अरक्षोहतः पन्था योऽग्नेश्च सूर्यस्य च सूर्यस्य चक्षुराऽरुहमग्नेरक्ष्णः कनीनिकामित्याह य एवारक्षोहतः पन्थास्तꣳ समारो-

इति [४८] वाग्वा एषा यत्सोमक्रयणी चिदसि मनाऽसीत्याह शास्त्येवैनामेतत्तस्माच्छिष्टाः प्रजा जायन्ते चिदसीत्याह यद्धि मनसा चेतयते तद्वाचा वदति मनाऽसीत्याह यद्धि मनसाऽभिगच्छति तत्करोति धीरसीत्याह यद्धि मनसा ध्यायति तद्वाचा [४९] वदति दक्षिणाऽसीत्याह दक्षिणा ह्येषा यज्ञियाऽसीत्याह यज्ञियामेवैनां करोति क्षत्रियाऽसीत्याह क्षत्रिया ह्येषाऽदितिरस्युभयतश्शीर्ष्णीत्याह यदेवाऽऽदित्यः प्रायणीयो यज्ञानामादित्य उदयनीयस्तस्मादेवमाह यदबद्धा स्यादयता स्याद्यत्पदिबद्धाऽनुस्तरणी स्यात्प्रमायुको यजमानस्स्यात् [५०] यत्कर्णगृहीता वार्त्रघ्नी स्यात्स वाऽन्यं जिनीयात्तं वाऽन्यो जिनीयान्मित्रस्त्वा पदि बध्नात्वित्याह मित्रो वै शिवो देवानां तेनैवैनां पदि बध्नाति पूषाऽध्वनः पात्वित्याहेयं वै पूषेमामेवास्या अधिपामकस्समष्ट्या इन्द्रायाध्यक्षायेत्याहेन्द्रमेवास्या अध्यक्षं करोति [५१] अनु त्वा माता मन्यतामनु पितेत्याहानुमतयैवैनया क्रीणाति सा देवि देवमच्छेहीत्याह देवी ह्येषा देवस्सोम इन्द्राय सोममित्याहेन्द्राय हि सोम आह्रियते यदेतद्यजुर्न ब्रूयात्पराच्येव सोमक्रयणीस्याद्रुद्रस्त्वाऽऽवर्तयत्वित्याह रुद्रो वै क्रूरः [५२] देवानां तमेवास्यै परस्ताद्दधात्यावृत्त्यै क्रूरमिव वा एतत्करोति यद्रुद्रस्य कीर्तयति मित्रस्य पथेत्याह शान्त्यै वाचा वा एष वि क्रीणीते यस्सोमक्रयण्या स्वस्ति सोमसखा पुनरेहि सह रय्येत्याह वाचैव विक्रीय पुनरा-

त्मन्वाचं धत्तेऽनुपदासुकाऽस्य वाग्भवति य एवं वेद [५३] ॥
सतनुं विष्णव इत्याह समारोहति ध्यायति तद्वाचा यजमानस्या-
त्करोति क्रूरो वेद ॥ ७ ॥

இதில், சோமத்தை விலைக்கு வாங்கும் முறை கூறப்படுகின்றது.

---

ஆதானப் பிராமணத்திற்கூய பொன்மகிமையை, அதிலுள்ள
மூன்று சொற்களைக்கூறி அறிவுறுத்திப் புகழ்கின்றது.

பிராமணம்—1

**तद्धिरण्यमभवत्तस्मादद्भ्योहिरण्यं पुनन्ति ।**

என்பது.

உரை.

அது, அதாவது அக்கினியின் வீரியம் பொன்னுயிற்று. ஆதலின், தண்ணீரால் பொன் புநிதமாக்கப் படுகின்றது என்பது.

ஈண்டு இதனுல், இயற்கையிலேயே மிகப்புநிதமாகிய பொன்னும், மாதவிடாய் முதலியதைத் தொடில் புநிதப் படுத்தவேண்டுமெனின், தண்ணீர் மாத்திரத்தாலே புநிதஞ் செய்யப்படுகின்றது. ஈயம் முதலியவைகளைப் போல் சாம்பர் முதலியவைகள் வேண்டப்படுவதில்லை என்பதை யுணர்க.

---

சுருவில் பொன்னைப் போட்டுச்செய்யும் சிறப்புடைய ஒரு ஹோமத்தை
விதிக்கின்றது.

பிராமணம்—2

**ब्रह्मवादिनो वदन्ति कस्मात्सत्यादनस्थिकेन प्रजाः प्रवीयन्तेऽस्थन्वतीर्जायन्त इति यद्धिरण्यं घृतेऽवधाय जुहोति तस्मादनस्थिकेन प्रजाः प्रवीयन्तेऽस्थन्वतीर्जायन्ते ।**

என்பது.

உரை.

எலும்பில்லாத தனிச் சுக்கிலத்தால் கருப்பந்தரிக்கின்றது, பிறக்கும் போதிலோ, எலும்புடன் பிறக்கின்றது அது எதனுல்? என்று பிரமவாதிகள் வினவினர். அதற்கு, சுக்கிலம் போன்றது நெய்யாம், எலும்பு போன்றது பொன்னும் இதைப் பொருத்தமாக்குவதற்கு இறைவன் எலும்பைப் படைத்தனன் என்பது.

---

முறையை)

அக்கினியின் போதத்தை மேற்கொண்டதென்று மந்திரத்திற்கு
உரை கூறுகின்றது.

பிராமணம்—3

**एतद्वा अग्नेः प्रियं धाम यद्घृतं तेजो हिरण्यमियं ते शुक्र तनूरिदं वर्च इत्याह सतेजसमेवैनꣳ सतनुं करोत्यथो सं भरत्येवैनम् ।**

என்பது.

உரை.

இந் நெய் அக்கினிக்கு பிரியமாகிய இடமாம். அக்கினியின் ஒளி பொன்னும். அக்கினியே, தனது உடம்பு இவ்வொளி என்றது, ஒளியுடைய தாகவே உடம்புடையதாகச் செய்யப்படுகின்றது. ஆதலின், அக்கினி நன் ருய் வளர்க்கப்படுகின்றது என்பது.

---

பொன்னை, நூலிற் கட்டிக்கொள்ளல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—4

**यदबद्धमवदध्याद्गर्भाः प्रजानां परापातुकास्स्युर्बद्धमव दधाति गर्भाणां धृत्यै ।**

என்பது.

உரை.

பொன்னை, கட்டாமற் போட்டால் மக்களின் கருப்பங்கள் நழுகிவிடும். ஆதலின், கட்டிப்போடில் கருப்பம் உறுதிப்படும் என்பது.

---

நூலின், நுனியைப்பிடித்திழுக்கில் அவிழ்ந்துபோமாறு கட்டுதல்
வேண்டும் என்னும் ஒரு விசேடத்தை விதிக்கின்றது.

பிராமணம்—5

**निष्टर्क्यं बध्नाति प्रजानां प्रजननाय ।**

என்பது.

உரை.

நுனியை இழுக்கில் நூல்முழுதும் அவிழ்க்கப்பட்டுவரும்படி முடிந்து போடல்வேண்டும் என்பதாம்.

---

ஹோமமந்திரப் பொருளை விளக்குகின்றது.

பிராமணம்—6

**वाग्वा एषा यत्सोमक्रयणी जूरसीत्याह यद्धि मनसा जवते तद्वाचा वदति धृता मनसेत्याह मनसा हि वाग्धृता जुष्टा विष्णव इत्याह यज्ञो वै विष्णुर्यज्ञायैवैनां जुष्टां करोति तस्यास्ते सत्यसवसः प्रसव इत्याह सवितृप्रसूतामेव वाचमव रुन्धे ।**

என்பது.

உரை.

*'வாக்வா' என்றது முதலியது, மனதால் உறுதிப்பட எண்ணுவதே வாக்கால் கூறப்படுகின்றது. 'த்ருதா மனஸா' என்றது, மனதால் வாக்குக்கு உறுதி யுண்டாகின்றது. 'சுஷ்டா விஷ்ணவே' என்றது, விஷ்ணு என்பது எக்ஞமாம். ஆதலின், எக்ஞத்தின் பொருட்டு இவனை வழிபாடு உடையவனுகச் செய்கின்றது. தஸ்யாஸ்தே ஸத்யசவ'ஸஃ என்றது, சவிதாவினுல் ஏவப்பெற்ற வாக்கையே அடைகின்றுன் என்பது.*

---

சூரியனைப்போற்றும் மந்திரத்தின் கருத்தை விளக்குகின்றது.

பிராமணம்—7

**काण्डेकाण्डे वै क्रियमाणे यज्ञꣳ रक्षाꣳसि जिघाꣳसन्त्येष खलु वा अरक्षोहतः पन्था योऽग्नेश्च सूर्यस्य च सूर्यस्य चक्षुराऽरुहमग्नेरक्ष्णः कनीनिकामित्याह य एवारक्षोहतः पन्थास्तꣳ समारोहति ।**

என்பது.

உரை.

*ஒவ்வொரு எக்ஞந் தொடங்கும்போதும் இராக்கதர்கள் துன்புறுத்துவார்கள். சூரியன், அக்கினி என்னும் இருவருடைய வழியே அத்தகைய துன்பிலாததாம். ஆதலின், சூரியனைப் போற்றுகின்றுன். இதனுல் இராக்கதர்களின்றிய வழியில் ஏறுகின்றுன் என்பது.*

---

பசுக்கடாரிக் கன்றைப்போற்றும் மந்திரப்பொருளை விளக்குகின்றது.

பிராமணம்—8

**वाग्वा एषा यत्सोमक्रयणी चिदसि मनाऽसीत्याह शास्त्येवैनामेतत्तस्माच्छिष्टाः प्रजा जायन्ते ।**

என்பது.

முறைமை)

உரை.

சோமத்திற்கு விலையாகும் இப்பசுக்கடாரி வாக்குத்தேவதையாம். 'சிதஸி மநாஸி' என்றது, அப்பசுக்கடாரிக்குப் போதிக்கின்றதாம். இத னுலே உலகிலும் போதிக்கத்தக்க பிரஜை யுண்டாகின்றது என்பது.

---

முழுமந்திரத்தின் கருத்தைக் கூறிவிட்டு, ஒவ்வொரு வாக்கியத்திற்கும் உரை கூறுகின்றது.

பிராமணம்—9

चिदसीत्याह यद्धि मनसा चेतयते तद्वाचा वदति मनाऽसीत्याह यद्धि मनसाऽभिगच्छति तत्करोति धीरसीत्याह यद्धि मनसा ध्यायति तद्वाचा वदति दक्षिणाऽसीत्याह दक्षिणा ह्येषा यज्ञियाऽसीत्याह यज्ञियामेवैनां करोति क्षत्रियाऽसीत्याह क्षत्रिया ह्येषाऽदितिरस्युभयतश्शीर्ष्णीत्याह यदेवाऽऽदित्यः प्रायणीयो यज्ञानामादित्य उदयनीयस्तस्मादेवमाह ।

என்பது.

உரை.

'சிதஸி' என்றது, மனதில் எண்ணியதே வாக்கில் வருகின்றது என் கின்றது. 'மனு அஸி' என்றது, மனதில் எண்ணியதையே செய்கின்றுன் என்கின்றது. 'தீரஸி' என்றது, புத்தியால் உறுதிப்பட்டதையே வாக்குக் கூறுகின்றது என்கின்றது. 'தட்சிணுஸி' என்றது இதுவே தட்சிணையாம் என்கின்றது. 'யக்ஞியா அஸி' என்றது, இவளை 'யக்ஞத்திற்கு உரிய ளுக்குகின்றது என்கின்றது. 'க்ஷத்திரியா அஸி' என்றது, இப்பசுக்கடாரி க்ஷத்திரியளும் என்கின்றது. 'அதிதிரஸி' என்றது, முதலிலும் முடிவிலுஞ் செய்யப்படும் பிராயணீயேஷ்டி உதயனீயேஷ்டிகட்கு அதிதியே தேவதை யாமாதலின் இவ்வாறு கூறுகின்றது என்பது.

---

கடாரிக்கன்றைக் கிழக்குமுகமாய்த் திருப்பும் மந்திரத்திற்கு முரணுன மூன்று பக்ஷங்களை நீக்கிவிட்டு, மந்திரத்திற்கு உரை கூறுகின்றது.

பிராமணம்—10

यदबद्धा स्यादयता स्याद्यत्पदिबद्धाऽनुस्तरणी स्यात्प्रमायुको यजमानस्यायत्कर्णगृहीता वार्त्रघ्नी स्यात्स वाऽन्यं जिनीयान्मित्रस्त्वा पदि बध्नात्वित्याह मित्रो वै शिवो देवानां तेनैवैनां पदि बध्नाति ।

என்பது.

உரை.

பசுக் கடாரியைத் திருப்பிக் கிழக்கு முகமாய் நிறுத்தும்போது காலைக் கட்டாவிடில் எசமானன் நியமமில்லாதவனுவன், காலைக் கட்டிலோ, ஆயுள் நீடியாமல் இறப்பன். காதுகளைப் பிடித்துக்கொள்ளில், பிறரை வெல்வன். ஈண்டுப் பிறன் என்பது இவனுமாவன், ஏனெனின்? மற்றொருவனை நோக்க இவன் வேறுபகைவனுதலின் என்க. ஆதலின், இவன் பிறனை வெல்வானே, அல்லது, பிறன் இவனை வெல்வானே, யாருக்குத் தெரியும்? ஆதலின், 'மித்ரஸ்த்வா।।தி பத்னது' அதாவது மித்திரதேவதை உன்னைக் காலில் கட்டுவானுக என்றது, மித்திரன் தேவர்கட்கு நலஞ் செய்வோனுதலின் இதன் காலைக் கட்டிவைப்பன் என்பது.

---

மந்திரத்தின் பகுதிகட்கு முறையாய்த் தனித்தனி உரை கூறுகின்றது.

பிராமணம் — 11

**पूषाऽध्वनः पात्वित्याहेयं वै पूषेमामेवास्या अधिपामकस्समष्ट्या इन्द्राया-ध्यक्षायेत्याहेन्द्रमेवास्या अध्यक्षं करोत्यनु त्वा माता मन्यतामनु पितेत्याहानुमतयैवेनया क्रीणाति सा देवि देवमच्छेहीत्याह देवी ह्येषा देवस्सोम इन्द्राय सोममित्याहेन्द्राय हि सोम आह्रियते यदेतद्यजुर्न ब्रूयात्पराच्येव सोमक्रयणीयाद्रुद्रस्त्वाऽऽवर्तयत्वित्याह रुद्रो वै क्रूरो देवानां तमेवास्यै परस्ताद्दधात्यावृत्त्यै क्रूरमिव वा एतत्करोति यद्रुद्रस्य कीर्तयति मित्रस्य पथेत्याह शान्त्यै वाचा वा एष वि क्रीणीते यस्सोमक्रयण्या स्वस्ति सोमसखा पुनरेहि सह रय्येत्याह वाचैव विक्रीय पुनरात्मन्वाचं धत्तेऽनुपदासुकाऽस्य वाग्भवति य एवं वेद ।**

- என்பது.

உரை.

'பூஷா அத்வனః பாது' என்றது, பூஷாவை இதன் பாதுகாப்பாளனுகச் கின்றது. 'சமஷ்டியை இந்திராய அத்யட்சாய' என்றது, இதற்கு இந்திரனேயே தலைவனுகச் செய்கின்றது. 'அநுத்வா மாதாமந்யதாம் அநு பிதா மன்யதாம்' என்றது, அநுமதி பெற்றதனுல் இக்கடாரியால் சோமம் வாங்கப்படுகின்றது என்கின்றது. 'சா தேவி தேவமச்ச' என்றது, இப்பசுக் கடாரியாகிய தேவி, சோமமாகிய தேவனைத் தொடர்ந்து செல்க என்கின்றது. 'இந்திராய சோமம்' என்றது இந்திரன் பொருட்டே சோமம் கொண்டுவரப் படுகின்றது என்கின்றது. இவ் வெசுர்மந்திரத்தை ஓதாவிடில் பசுக் கடாரி வெளிப்பட்டுப்போகும் என்க. 'ருத்ரஸ்த்வா ஆவர்த்தயது' என்

றது, உருத்திரன் தேவர்களுள் கோரமுடையவன், அவன் இதை மடக்கும்படி செய்கின்றது என்கின்றது. உருத்திரன் என்னுஞ்சொல்லை ஓதில் இதுவாம் என்க. 'மித்திரஸ்ய பதா' என்பது, சாந்தியின் பொருட்டென்கின்றது. வாக்கால் விலைபேசியவுடன், 'சோம சகா புநரேஹி சஹரய்யா' என்றது, வாக்கைக்கொடுத்து வாங்கியாயிற்று. ஆதலின், மீண்டும், தன்னிடத்தில் வாக்கை நிறுவுகின்றது என்கின்றது என்பதாம்.

ஏழாவது அநுவாகம்
*முற்றிற்று.*

---

## ஆறுங்காண்டம் முதற்பிரபாடகம்

### எட்டாவது அநுவாகம்

*காலடி மண் எடுத்துக்கொள்வதைக் கூறும் பிராமணங்கள்.*

ஐந்து பஞ்சாதிக்குமேல் இருபத்துநான்கு பதங்களைக் கொண்டது.

षट्पदान्यनुनिक्रामति षडहं वाङ्नाति वदत्युत संवत्सरस्यायने यावत्येव वाक्तामव रुन्धे सप्तमे पदे जुहोति सप्तपदा शक्वरी पशवश्शक्वरी पशूनेवाव रुन्धे सप्त ग्राम्याः पशवस्सप्ताऽऽरण्याः सप्त छन्दाꣳस्युभयस्यावरुद्ध्यै वस्व्यसि रुद्राऽसीत्याह रूपमेवास्या एतन्महिमानम् [५४] व्याचष्टे बृहस्पतिस्त्वा सुम्ने रण्वत्वित्याह ब्रह्म वै देवानां बृहस्पतिर्ब्रह्मणैवास्मै पशूनव रुन्धे रुद्रो वसुभिरा चिकेत्वित्याहाऽऽवृत्त्यै पृथिव्यास्त्वा मूर्धन्नाजिघर्मि देवयजन इत्याह पृथिव्या ह्येष मूर्धा यद्देवयजनमिडायाः पद इत्याहेडायै ह्येतत्पदं यत्सोमक्रयण्यै घृतवति स्वाहा [५५] इत्याह यदेवास्यै पदाद्घृतमपीड्यत तस्मादेवमाह यदध्वर्युरनग्नावाहुतिं जुहुयादन्धोऽध्वर्युस्स्याद्रक्षाꣳसि यज्ञꣳ हन्युर्हिरण्यमुपास्य जुहोत्यग्निवत्येव जुहोति नान्धोऽध्वर्युर्भवति न यज्ञꣳ रक्षाꣳसि घ्नन्ति काण्डे-

काण्डे वै क्रियमाणे यज्ञꣳ रक्षाꣳसि जिघाꣳसन्ति परिलिखितꣳ रक्षः परिलिखिता अरातय इत्याह रक्षसामपहत्यै [५६] इदमहꣳ रक्षसो ग्रीवा अपि कृन्तामि योऽस्मान्द्वेष्टि यं च वयं द्विष्म इत्याह द्वौ वाव पुरुषौ यं चैव द्वेष्टि यश्चैनं द्वेष्टि तयोरेवानन्तरायं ग्रीवाः कृन्तति पशवो वै सोमक्रयण्यै पदं यावत्मूतꣳ सं वपति पशूनेवाव रुन्धेऽस्मे राय इति सं वपत्यात्मानमेवाध्वर्युः [५७] पशुभ्यो नान्तरेति त्वे राय इति यजमानाय प्रयच्छति यजमान एव रयिं दधाति तोते राय इति पत्निया अर्धो वा एष आत्मनो यत्पत्नी यथा गृहेषु निधत्ते तादृगेव तत्त्वष्टीमती ते सपेयेत्याह त्वष्टा वै पशूनां मिथुनानाꣳ रूपकृद्रूपमेव पशुषु दधात्यस्मै वै लोकाय गार्हपत्य आ धीयतेऽमुष्मा आहवनीयो यद्गार्हपत्य उपवपेदस्मिँल्लोके पशुमान्स्याद्यदाहवनीयेऽमुष्मिँल्लोके पशुमान्त्स्या-दुभयोरुप वपत्युभयोरेवैनं लोकयोः पशुमन्तं करोति [५८] ॥ महिमानꣳ स्वाहाऽपहत्या अध्वर्युर्धीयते चतुर्विꣳशतिश्च ॥ ८ ॥

இதில், விற்கப்படும் இடத்திற்குச் செல்லும் பசுக்கடாரியின் அடிமண்ணை எடுத்துக்கொள்ளல் கூறப்படுகின்றது.

---

மந்திரத்திற்கு உரை கூறுதற்பொருட்டு முதலில் அநுட்டானத்தை விதிக்கின்றது.

பிராமணம்—1

षट्पदान्यनुनिक्रामति षडहं वाङ्नाति वदत्युत संवत्सरस्यायने यावत्येव वाक्तामवरुन्धे ।

என்பது.

காலடி மண்ணை எடுத்தல்)

உரை.

'பிருஷ்ட்யஷ்ஷடஹம்' என்னும் சோமரசம் பிழியும் ஆறு நாள்களை உடைய யாகம் ஒன்றுண்டு; அதில், பிருகத் ரதந்தரம், வைரூபம், வைராஜம், சாகவாம், ரைவதம் என்னும் ஆறு துதிகளையும் நாளுக்கொன்றாகப் பாடுகின்றனர். ஏழாவது நாளில் பாடும் பிருஷ்டியஸ்துதி ஒன்றேனும் இல்லை. ஆதலின், முக்கியமாகிய பிருஷ்டியஸ்துதி வடிவ வாக்தேவதை, ஆறு நாள் என்னும் அளவைக்கடந்து எங்குங் கூறப்படுவதில்லை. அஃதன்றியும் வருடகாலஞ் செய்யும் கவாமயனம் என்னும் யாகத்திலும் அதிகமாகிய பிருஷ்டியஸ்துதி இல்லை. ஆதலின், சோமத்திற்கு விலையாகும் பசுக்கடாரி ஆறடியெடுத்துவைத்தல் மிகப் பொருத்தமாம் என்பது.

---

விதிக்கின்றது.

பிராமணம்—2

**सप्तमे पदे जुहोति सप्तपदा शक्वरी पशवश्शक्वरी पशूनेवावरुन्धे सप्त ग्राम्याः पशवस्सप्ताऽऽरण्यास्सप्त छन्दाꣳस्युभयस्यावरुद्ध्यै ।**

என்பது.

உரை.

ஏழாவது அடியில் ஹோமஞ் செய்கின்றான். ஏழு பாதங்களை யுடையது சாக்வரி என்னுஞ் சந்தம்; அந்தச் சந்தம் பசுக்களாம். அதனால், பசுக்களை யடைகின்றான். கிராமத்திலுள்ள கோ முதலியன ஏழு. மான் முதலியன வனத்திலுள்ள ஏழுவகைப் பசுக்கள், ஏழு சந்தங்கள் என்னும் எண்வகையால் இவ்விருவகைகளின் சித்தியின் பொருட்டாம் என்பது.

---

முதல் மந்திரத்திலுள்ள சொல்லாலேயே சோமவிலையாகிய பசுக்கடாரியின் மகிமையைக் கூறுகின்றது.

பிராமணம்—3

**वस्व्यसि रुद्राऽसीत्याह रूपमेवास्या एतन्महिमानं व्याचष्टे ।**

என்பது.

உரை.

'வஸ்வியஸி, ருத்ராஸி' என்றது, இதனுடைய வடிவமே மகிமையை வெளியாக்குகின்றது என்கின்றது.

---

இரண்டா மந்திரத்திலுள்ள பிருகஸ்பதி ' ஆசிகேது '
என்னுஞ் சொற்களை விரித்துக் கூறுகின்றது.

பிராமணம்—4

**बृहस्पतिस्त्वा सुम्ने रण्वत्वित्याह ब्रह्म वै देवानां बृहस्पतिर्ब्रह्मणैवास्मै पशूनवरुन्धे रुद्रो वसुभिरा चिकेत्वित्याहाऽऽवृत्यै ।**

என்பது.

உரை.

' பிருகஸ்பதிஸ்த்வா ஸும்நே ரணவது ' என்றது, பிருகஸ்பதி தேவர்கட்குள் பிரமமாதலால் இவனுக்கு அவரால் பசுக்கள் கிடைக்கும் என்கின்றது. 'ருத்ரோ வசுபிராசிகேது' என்றது, இது திரும்புவதன்பொருட்டு என்கின்றது.

---

மூன்று மந்திரத்தின்பொருள் வெளிப்படை என்பதை விளக்குகின்றது.

பிராமணம்—5

**पृथिव्यास्त्वा मूर्धन्नाजिघर्मि देवयजन इत्याह पृथिव्या ह्येष मूर्धा यद्देवयजनमिडायाः पद इत्याहेडायै ह्येतत्पदं यत्सोमक्रयण्यै घृतवति स्वाहेत्याह यदेवास्यै पदाद्घृतमपीड्यत तस्मादेवमाह ।**

என்பது.

உரை.

' பிருதிவ்யாஸ்த்வா ' என்றது முதலியன, இப் பசுக்கடாரியின் அடிமண் பிருதிவிக்குத் தலையாம். இடாவிற்கு வேட்குமிடமாம் என்கின்றது. ' சோமக்ரயண்யை ' என்றது முதலியன, இதன் அடியில் நெய்விட்டதால் இவ்வாறு கூறுகின்றது என்கின்றது.

---

பசுக்கடாரியின் அடியி(மண்ணி)ல் பொன்வைத்தல்வேண்டு மென்று விதிக்கின்றது.

பிராமணம்—6

**यदध्वर्युरनग्नावाहुतिं जुहुयादन्धोऽध्वर्युस्स्याद्रक्षांसि यज्ञं हन्युर्हिरण्यमुपास्य जुहोत्यग्निवत्येव जुहोति नान्धोऽध्वर्युर्भवति न यज्ञं रक्षांसि घ्नन्ति ।**

என்பது.

காலடி மண்ணை எடுத்தல்)

உரை.

வேட்போன், அக்கினி யின்றியவிடத்து ஹோமஞ் செய்வானேல், குருடனுவன். இராக்கதர் வேள்வியைக் கெடுப்பர். பொன்னை வைத்து ஹோமஞ்செய்யில் அக்கினியில் ஹோமஞ் செய்ததுபோலாகின்றது. இத ஞல் குற்றங்கள் வரமாட்டா என்பது.

---

முற்கூறிய இராக்கதர் வந்து கெடுப்பர் என்பதை நினைப்பூட்டி மந்திரத்திற்கு உரை கூறுகின்றது.

பிராமணம்—7

**काण्डे काण्डे वै क्रियमाणे यज्ञꣳ रक्षाꣳसि जिघाꣳसन्ति परिलिखितꣳ रक्षः परिलिखिता अरातय इत्याह रक्षसामपहत्या इदमहꣳ रक्षसो ग्रीवा अपि कृन्तामि योऽस्मान्द्वेष्टि यं च वयं द्विष्म इत्याह द्वौ वाव पुरुषौ यं चैव द्वेष्टि यश्चैनं द्वेष्टि तयोरेवानन्तरायं ग्रीवाः कृन्तति ।**

என்பது.

உரை.

ஒவ்வொரு வேள்வித்தொடக்கத்திலும் இராக்கதர்கள்வந்து வேள்வி யைக்கெடுக்கின்றனர்; அவர்கள் பரிலிகிதம் என்றது முதலியதாற் சொல் லப்படுவதால் யான் அவர்களுடைய கழுத்தையும் அறுக்கின்றேன் என் கின்றது. 'யோ அஸ்மாந்' என்றது முதலியன, எம்மை வெறுப்பவர், எம் மால் வெறுக்கப்படுவர் என இருவகைப்படுவர் பகைவர்; அவர்களுடைய கழுத்தையும் இடையில் தடைவாராதிருக்கும்படி அறுக்கின்றேன் என்பது.

---

அநுட்டான விதியுடன்கூட மந்திரங்கட்கு உரை கூறுகின்றது.

பிராமணம்—8

**पशवो वै सोमक्रयण्यै पदं यावत्मूतꣳ संवपति पशूनेवावरुन्धेऽस्मे राय इति संवपत्यात्मानमेवाध्वर्युः पशुभ्यो नान्तरेति त्वे राय इति यजमानाय प्रयच्छति यजमान एव रयिं दधाति तोते राय इति पत्निया अर्धो वा एष आत्मनो यत्पत्नी यथा गृहेषु निधत्ते तादृगेव तत् ।**

என்பது.

உரை.

பசுக்கடாரியின் ஏழாவது அடிமண் முழுதையும் நெய்யால் நனைத்து எடுப்பதால் பசுக்களை யடைகின்றான். 'அஸ்மேராயஃ' என்றது,

எடுத்துவைக்கும் வேட்போன் பசுக்கட்குத் தடையிலாதவனுகின்ருன் என் கின்றது. 'த்வேராய:' என்றது எசமானனிடத்தில் தனத்தைக் கொடுக்கின் ருன் என்கின்றது. 'தோதோராய:' என்றது, பத்தினி ஆன்மாவிற் பாதிப் பாக முடையவளாதலின் அவள்வீட்டில் வைக்கின்றபடியே அது வாகின் றது என்கின்றது.

---

'துவஷ்டீ மதீ' என்னுஞ் சொல்லின் கருத்தை விளக்குகின்றது.

பிராமணம்—9

**त्वष्टीमती ते सपेयेत्याह त्वष्टा वै पशूनां मिथुनानाꣳ रूपकृद्रूपमेव पशुषु दधाति ।**

என்பது

உரை.

'த்வஷ்டீமதீ தேசபேய என்றது' துவஷ்டா புணரும் பசுக்களின் வடி வத்தைச் செய்வதாமாதலின், அத்தகைய உருவத்தை பசுக்களிடத்தில் இருக்கும்படி செய்கின்றது என்பது.

---

இப்பசுக்கடாரியின் அடிமண்ணின் மூன்ருவதுபங்கைக் காருகபத்தியத் திலும், மற்ருெருபங்கை ஆகவனீயத்திலும் போடல்வேண்டுமேன்று விதிக் கின்றது.

பிராமணம்—10

**असौ वै लोकाय गार्हपत्य आ धीयतेऽमुष्मा आहवनीयो यद्गार्हपत्य उप-वपेदस्मिँल्लोके पशुमान्स्याद्यदाहवनीयेऽमुष्मिँल्लोके पशुमान्स्यादुभयोरुप वपत्युभयोरेवैनं लोकयोः पशुमन्तं करोति ।**

என்பது

உரை.

காருகபத்தியத்தில் அம்மண்ணைப் போடுவதால் இவ்வுலகில் பசுக்களை யடைகின்ருன். ஆகவனீயத்திற் போடுவதால் பரவுலகில் பசுக்களை யடை கின்ருன் என்கின்றது. இதனுல் இரண்டுலகிலும் பசுக்களை யுடைவனுகின் ருன் என்பதாம்.

எட்டாம் அநுவாகம்
முற்றிற்று.

---

## ஆறுங்காண்டம் முதற்பிரபாடகம்

### ஒன்பதாவது அநுவாகம்

*சோமத்தை அளவுப்படுத்தலைக் கூறும் பிராமணங்கள்.*

ஆறு பஞ்சாதிக்குமேல் முப்பத்துமூன்று பதங்களைக் கொண்டது.

ब्रह्मवादिनो वदन्ति विचित्यस्सोमा३ न विचित्या३ इति सोमो वा ओषधीनाꣳ राजा तस्मिन् यदापन्नं ग्रसितमेवास्य तद्य-द्विचिनुयाद्यथाऽऽस्याद्ग्रसितं निष्खिदति तादृगेव तद्यन्न विचिनु-याद्यथाऽक्षन्नापन्नं विधावति तादृगेव तत्क्षोधुकोऽध्वर्युस्स्यात्क्षो-धुको यजमानस्सोमविक्रयिन्त्सोमꣳ शोधयेत्येव ब्रूयाद्यदीतरम् [५९] यदीतरमुभयेनैव सोमविक्रयिणमर्पयति तस्मात्सोमविक्रयी क्षोधुकोऽरुणो ह स्माऽऽहौपवेशिस्सोमक्रयण एवाहं तृतीयसवनमव रुन्ध इति पशूनां चर्मन्मिमीते पशूनेवाव रुन्धे पशवो हि तृतीयꣳ-सवनं यं कामयेतापशुस्स्यादित्यृक्षतस्तस्यमितीतर्क्ष्णं वा अपशव्यम-पशुरेव भवति यं कामयेत पशुमान्त्स्यात् [६०] इति लोमतस्तस्य मिमीतैतद्वै पशूनाꣳ रूपꣳ रूपेणैवास्मै पशूनव रुन्धे पशुमानेव भवत्यपामन्ते क्रीणाति सरसमेवैनं क्रीणात्यमात्योऽसीत्याहामैवैनं कुरुते शुक्रस्ते ग्रह इत्याह शुक्रो ह्यस्य ग्रहो न साऽच्छ याति महिमानमेवास्याच्छ यात्यनसा [६१] अच्छ याति तस्मादनो-वाह्यꣳ समे जीवनं यत्र खलु वा एतꣳ शीर्ष्णा हरन्ति तस्माच्छी-र्षहार्यं गिरौ जीवनमभि त्यं देवꣳ सवितारमित्यतिच्छन्दसर्चा मिमीतेऽतिच्छन्दा वै सर्वाणि छन्दाꣳसि सर्वैभिरेवैनं छन्दोभि-र्मिमीते वर्ष्म वा एषा छन्दसां यदतिच्छन्दा यदतिच्छन्दसर्चा

मिमीते वर्ष्मैवैनꣳ समानानां करोत्येकयैकयोत्सर्गम् [६२] मिमीतेऽयातयाम्नियायातयाम्नियैवैनं मिमीते तस्मान्नानावीर्या अङ्गुलयस्सर्वास्वङ्गुष्ठमुप निगृह्णाति तस्मात्समावद्वीर्योऽन्याभिरङ्गुलिभिस्तस्मात्सर्वा अनु सं चरति यत्सह सर्वाभिर्मिमीत सꣳश्लिष्टा अङ्गुलयो जायेरन्नेकयैकयोत्सर्गं मिमीते तस्माद्विभक्ता जायन्ते पञ्च कृत्वो यजुषा मिमीते पञ्चाक्षरा पङ्क्तिः पाङ्क्तो यज्ञो यज्ञमेवाव रुन्धे पञ्च कृत्वस्तूष्णीम् [६३] दश सं पद्यन्ते दशाक्षरा विराडन्नं विराड्विराजैवान्नाद्यमव रुन्धे यद्यजुषा मिमीते भूतमेवाव रुन्धे यत्तूष्णीं भविष्यद्यद्वै तावानेव सोमस्स्याद्यावन्तं मिमीते यजमानस्यैव स्यान्नापि सदस्यानां प्रजाभ्यस्त्वेत्युप समूहति सदस्यानेवान्वाभजति वाससोपनह्यति सर्वदेवत्यं वै [६४] वासस्सर्वाभिरेवैनं देवताभिस्समर्धयति पशवो वै सोमः प्राणाय त्वेत्युप नह्यति प्राणमेव पशुषु दधाति व्यानाय त्वेत्यनु श्रन्थति व्यानमेव पशुषु दधाति तस्मात्स्वपन्तं प्राणा न जहति [६५] ॥ इतरं पशुमान्त्स्याद्यात्यनसोत्सर्गं तूष्णीꣳ सर्वदेवत्यं वै त्रयस्त्रिꣳशच्च ॥ ९ ॥

*இதில், சோமத்தை அளவுப்படுத்தல் கூறப்படுகின்றது.*

---

அளக்க விரும்பியதாய் முதலில், வேட்போனுக்குச் சோமத்தை வாங்குகின்றவனுடைய பிரேஷை மந்திரத்தை யுண்டாக்குகின்றது.

பிராமணம்—1

ब्रह्मवादिनो वदन्ति विचित्यस्सोमा३ न विचित्या३ इति सोमो वा ओषधीनाꣳ राजा तस्मिन् यदापन्नं ग्रसितमेवास्य तद्यद्विचिनुयाद्यथाऽऽस्याद्

சோம அளவு)

सितं निष्खिदति तादृगेव तद्यन्न विचिनुयाद्यथाऽक्षन्नापन्नं विधावति तादृगेव तत्क्षोधुकोऽध्वर्युस्स्यात्क्षोधुको यजमानस्सोमविक्रयिन्त्सोमꣳ शोधयेत्येव ब्रूयाद्यदीतरं यदीतरमुभयेनैव सोमविक्रयिणमर्पयति तस्मात्सोमविक्रयी क्षोधुकः ।

என்பது.

உரை.

சோமக்கொடிகளுட்கிடக்கும் புல் முதலிய தூசுகளைப்பொறுக்கியெடுத்து விடல் வேண்டுமா? அல்லது, வேண்டாமா? கொடி செடிகட்கு அரசனாகிய சோமத்துக்குட் கிடக்கும் புல் அதனால் விழுங்கப்பட்டதாம். அதை எடுத்துவிடில் வாந்திய பண்ணியதுபோலாகும். எடுக்காவிடில் உள்ளிருந்து கொண்டு வயிற்றில் பீடை யுண்டாக்குவதுபோல் பீடையை யுண்டாக்கும். ஆதலின், இருவகையானுங்குற்றமாம். இதை நீக்குதற்பொருட்டு, வேட்போன் 'சோமத்தைவிற்றோய்! சோமத்தை ஆய்வாயாக' என்று கூப்பிடுவானாக. இதனால், சோமத்தை விற்றவனே பீடை யுறுகின்றான். குற்றங்களும் இல்லை என்பதாம்

---

கூறிய கருமத்தின் முறையை விதிக்கின்றது.

பிராமணம்—2

अरुणो हस्माऽऽहौपवेशिस्सोमक्रयण एवाहं तृतीयसवनमव रुन्ध इति पशूनां चर्मन्मिमीते पशूनेवाव रुन्धे पशवो हि तृतीयꣳ सवनम् ।

என்பது.

உரை.

உபவேசருடைய புத்திரராகிய அருணர் என்பவர் பசுவின் தோலில் சோமத்தை அளந்துவைத்தனர். இதனால் பசுக்களை யடைகின்றான். சவநீய பசு. அநுபந்திய பசுக்கள் மூன்றாஞ் சவனத்திலிருத்தலின் மூன்றாவது சவனம் பசுவாம். இதனால், இங்கு யானும் மூன்றாஞ் சவனத்தைத் தேடுவேன் என்பதாம், பசுவின் தோலால் சோமம் அளந்திருத்தல் பெறப்படுதலின் பசுவின் தோலின்மீது சோமம் அளத்தல்வேண்டுமென்பதும் பெறப்பட்டமை காண்க.

---

தோலை, மயிருள்ள பக்கமாய் விரித்தல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம் — 3

**यं कामयेताऽपशुस्स्यादित्यृक्षतस्तस्यमिमीतर्क्षं वा अपशव्यमपशुरेव भवति यं कामयेत पशुमान्त्स्यादिति लोमतस्तस्य मिमीतैतद्वै पशूनाꣳ रूपꣳ रूपेणैवास्मै पशूनव रुन्धे पशुमानेव भवति ।**

என்பது.

உரை.

பசுக்களின்மையை விரும்பில், மயிரில்லாதபுறம் திருப்பி விரிப்பானாகை. பின்புறத்தால் பசுவே இன்றியதாம். பசுக்களை யுடையவனாக விரும்பில், மயிருள்ள பக்கத்தை மேலேவரும்படி விரிப்பானாகை. இதுவே பசுவின் வடிவமாம் இது இவனுக்குப் பசுக்களைக் கொடுக்கின்றது. இதனால் இவன் பசுக்களை யுடையவனாகின்றான் என்பது.

---

அதற்கு, நீர் நிறைந்த குடத்தை விதிக்கின்றது.

பிராமணம்—4

**अपामन्ते क्रीणाति सरसमेवैनं क्रीणाति ।**

என்பது.

உரை.

தண்ணீர்க்கருகில் சோமத்தை விலைக்குவாங்கில் இரசத்துடன் சோமத்தை விலைக்கு வாங்கியதாகும் என்பது.

---

மந்திரத்திலுள்ள அறிய முடியாத பகுதிக்கு உரை கூறுகின்றது.

பிராமணம்—5

**अमात्योऽसीत्याहामैवैनं कुरुते शुक्रस्ते ग्रह इत्याह शुक्रो ह्यस्य ग्रहः ।**

என்பது.

உரை.

'அமாத்யோஸி' என்றது, கூடவே இருக்கின்றாய் என்கின்றது. இதனால், கூட இருக்கின்றவனாக்குகின்றான் என்பது பெற்றாம். 'சுக்ரஸ்தே க்ரஹ:' என்றது, பொன்னால் சோமத்தை விலைக்கு வாங்குதல் முடியும் என்கின்றது.

---

சோமத்தைக் கொண்டுவருவதற்கு வண்டியுடன் போதல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—6

**अनसाऽच्छ याति महिमानमेवास्याच्छ याति ।**

என்பது.

உரை.

*வண்டியைக் கொண்டுபோகும் பகுமானத்தால் சோமத்தின் மகிமை விளக்கப்பட்டதாயிற்று என்பது. பகுமானம்=ஆதரவு.*

---

அவ்விதியையே மீண்டும் எடுத்துக்கொண்டு புகழ்கின்றது.

பிராமணம்—7

**अनसाऽच्छ याति तस्मादनोवाह्यँ समे जीवनम् ।**

என்பது.

உரை.

*பிழைத்தற்குச் சாதனமாகிய நெல் முதலிய தான்யம் சமமாகிய விடத்தில் வண்டியால் இழுக்கப்படுவதுபோல் சமமாகிய விடத்தில் சோமத்தை வண்டியில் வைத்துக்கொண்டு வரல்வேண்டு மென்பதாம்.*

---

மேடுபள்ள முள்ளவிடத்தில் தலையிற் சுமத்தல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—8

**यत्र खलु वा एतँ शीर्ष्णा हरन्ति तस्माच्छीर्षहार्यं गिरौ जीवनम् ।**

என்பது.

உரை.

*சோமம் உண்டாகும் மலையில் சோமத்தை விலைக்குவாங்கில், தலையிற் கொண்டுவரல் வேண்டுமென்பது.*

---

இவ் விருக்கு மந்திரத்தின் சந்தத்தைப் புகழ்கின்றது.

பிராமணம்—9

**अभि त्यं देवँ सवितारमित्यतिच्छन्दसर्चा मिमीतेऽतिच्छन्दा वै सर्वाणि छन्दाँसि सर्वैभिरेवैनं छन्दोभिर्मिमीते वर्ष्म वा एषा छन्दसां यदतिच्छन्दा यदतिच्छन्दसर्चा मिमीते वर्ष्मैवैनँ समानानां करोति ।**

என்பது.

உரை.

எழுத்துக்களின் தொகையில் காயத்திரி முதலிய சந்தங்களைக் கடந்திருத்தலின் இது அதிச் சந்தமாம். இதனால் அளந்ததால் எல்லாச் சந்தங்களாலும் அளந்ததாகின்றது. இச்சந்தம் எல்லாச் சந்தங்கட்கும் உடம்பு போன்றதாமாதலின் இவ்வெசமானனைப் போன்றவர்கட்கெல்லாம் இவன் ஒரு உடம்புபோல் இருக்கின்றான். அதாவது பாராட்டப் படுபடுகின்றான் என்பது.

---

விரல்களினால் எடுக்கும் முறைமை விசேடத்தை விதிக்கின்றது.

பிராமணம்—10

**एकयैकयोत्सर्गम्मिमीतेऽयातयाम्नियायातयाम्नियैवैनं मिमीते तस्मान्नाना-वीर्या अङ्गुलयः ।**

உரை.

ஒவ்வொருமுறை எடுக்கும்போதும் ஒவ்வெரு விரலை விடுத்து மற்றொரு விரலைச் சேர்த்துச் சேர்த்து எடுப்பதாம் ஒருமுறை எடுத்தவிரல் மற்றொரு முறையும் எடுக்காததால் சாரமின்மையும் இல்லை. முறை முறையாக எடுப்பதால் விரலுடன் சேர்ப்பதற்கு தனித்தனி வன்மை அர்ப்பிக்கப்பட்டது என்பது.

---

விரல் முறை இல்லை என்பதை விதிக்கின்றது.

பிராமணம்—11

**सर्वास्वङ्गुष्ठमुप निगृह्णाति तस्मात्समावद्वीर्योऽन्याभिरङ्गुलिभिस्तस्मात्सर्वा अनु सं चरति ।**

என்பது.

உரை.

சுண்டுவிரல் முதலிய விரல்கள் எல்லாவற்றிலும் தனித்தனி ஒவ்வொன்றிலும் பெருவிரலைச் சேர்த்தல்வேண்டும். ஒத்தவன்மை யுடையது ஆதலின், உலகிலும் ஒவ்வொரு செயலிலும் எல்லா விரல்களுஞ் செல்கின்றன. இதனால், விரல்களில் முறை இல்லையென்பது பெற்றாம் என்பது.

---

மாறுபடில் கேடென்பதுடன் முற்கூறிய தனது பக்ஷத்தை முடிக்கின்றது.

பிராமணம்—12

**यत्सह सर्वाभिर्मिमीत सꣳश्लिष्टा अङ्गुलयो जायेरन्नेकयैकयोत्सर्गं मिमीते तस्माद्विभक्ता जायन्ते ।**

என்பது.

உரை.

எல்லாவிரல்களாலும் சோமத்தை அளக்கில் விரல்கள் ஒன்று சேர்ந்த தாகும். ஒன்றுல் அளந்ததாகாது இதனுல் வெவ்வேறுய்விடும் என்பது.

---

மந்திரத்துடனும், மந்திரமின்றியும் அளந்தெடுப்பதில் எண் இத்தனை என விதிக்கின்றது.

பிராமணம்—13

**पञ्च कृत्वो यजुषा मिमीते पञ्चाक्षरा पङ्क्तिः पाङ्क्तो यज्ञो यज्ञमेवाव रुन्धे पञ्च कृत्वस्तूष्णीन्दश सं पद्यन्ते दशाक्षरा विराडन्नं विराड्विराजैवा-न्नाद्यमव रुन्धे यद्यजुषा मिमीते भूतमेवाव रुन्धे यत्तूष्णीं भविष्यत् ।**

என்பது.

உரை.

எசுர்மந்திரத்தால் ஐந்து முறை அளத்தல்வேண்டும் ஐந்தெழுத்துக்கள் கொண்டது பந்திச் சந்தம் எக்ஞம் பந்திசம்பந்தப்பட்டதாம் இதனுல் எக்ஞம் அடையப்படுகின்றது. மந்திரமின்றி ஐந்துமுறை அளத்தலாம் ஆகப்பத்து முறை அளத்தலாம். பத்து எழுத்துக்களைக் கொண்டது விராட்ச்சந்தம். விராட்டால் அன்னம் முதலியன அடையப்படுகின்றன. மந்திரத்துடன் அளப்பதால் இறந்தகாலத்தது அடையப்படுகின்றது. மந்திரமின்றி அளப்பதால் வருங்காலத்தது அடையப்படுகின்றது.

ஈண்டு, 'எசுரால் அளக்கப்படுகின்றது' என்று கூறுதல் பொருத்த முடையதன்று. ஏனெனின்? 'அதிச் சந்தஸாரிசா' என்றதாலும், பதப் பொருளின் இலக்கண மிருத்தலாலும் இம்மந்திரம் இருக்கேயாம். ஆனாலும் இதைப் பிரயோகித்தலால். உபசாரமாய் இதுவும் எசுர் எனப்பட்டது என்பதை யுணர்க.

---

சோமம் மீதமாகில் கேடென்று, கூறியவாறே அதைச் சேர்த்துக் கூட்டிவைத்தலை விதிக்கின்றது.

பிராமணம்—14

**यद्वै तावानेव सोमस्स्याद्यावन्तं मिमीते यजमानस्यैव स्याद्मापि सदस्यानां प्रजाभ्यस्त्वेत्युप समूहति सदस्यानेवान्वाभजति वाससोपनह्यति सर्व-देवत्यं वै वासस्सर्वाभिरेवैनं देवताभिस्समर्धयति पशवो वै सोमः प्राणाय त्वेत्युप नह्यति प्राणमेव पशुषु दधाति व्यानाय त्वेत्यनु शृन्थति व्यानमेव पशुषु दधाति तस्मात्स्वपन्तं प्राणा न जहति ।**

என்பது.

உரை.

பத்துமுறை அளந்தெடுத்துக்கொண்ட அளவே சோமமாகில் எசமானனுக்குமாத்திரம் போதுமானதாம். சபையிலுள்ளவர்கட்கும் பிரசைகட்கும் சோமம் இன்று. ஆதலின், அவர்களின் பொருட்டு மீதப்படுத்தி அச் சோமத்தை ஆடையாற்கட்டி வைத்தல்வேண்டும். ஆடை எல்லாத் தேவதைகளின் சம்பந்த முடையதாமாதலின் எல்லாத் தேவர்கட்கும் அதைச் சமர்ப்பித்ததாகும். சோமம் பசுவாம் ஆதலின், 'பிராணயத்வா' என்று கட்டுதலால் பசுக்களுள் பிராணனை நிலைக்கவைக்கின்றது. 'வ்யானயத்வா' என்றது பரப்பி வைக்கின்றது. இதனல் பசுக்களிடத்து வியானனை நிலைப்படுத்துகின்றது. ஆதலின், தூங்கும்போது பிராணனை விடுவதில்லை. அதாவது இறப்பதில்லை என்பது.

ஒன்பதாம் அநுவாகம்
முற்றிற்று.

---

## ஆறுங்காண்டம் முதற்பிரபாடகம்

### பத்தாவது அநுவாகம்

சோமத்தை விலைக்கு வாங்குவதைக் கூறும் பிராமணங்கள்.

நான்கு பஞ்சாதிக்குமேல் நாற்பத்துநான்கு பதங்களைக் கொண்டது.

**यत्कलया ते शफेन ते क्रीणानीति पणेतागो अर्घꣳ सोमं कुर्यादगोअर्घं यजमानमगोअर्घमध्वर्युं गोस्तु महिमानं नाव तिरे-द्गवा ते क्रीणानीत्येव ब्रूयाद्गोअर्घमेव सोमं करोति गोअर्घं यज-मानं गोअर्घमध्वर्युं न गोर्महिमानमव तिरत्यजया क्रीणाति सत-**

पसमेवैनं क्रीणाति हिरण्येन क्रीणाति सशुक्रमेव [६६] एनं क्रीणाति धेन्वा क्रीणाति साशिरमेवैनं क्रीणात्यृषभेण क्रीणाति सेन्द्रमेवैनं क्रीणात्यनडुहा क्रीणाति वह्निर्वा अनड्वान्वह्निनैव वह्नि यज्ञस्य क्रीणाति मिथुनाभ्यां क्रीणाति मिथुनस्यावरुद्ध्यै वाससा क्रीणाति सर्वदेवत्यं वै वासस्सर्वाभ्य एवैनं देवताभ्यः क्रीणाति दश सं पद्यन्ते दशाक्षरा विराडन्नं विराड्विराजैवान्ना-द्यमव रुन्धे [६७] तपसस्तनूरसि प्रजापतेर्वर्ण इत्याह पशुभ्य एव तदध्वर्युर्नि ह्नुत आत्मनोऽनाव्रस्काय गच्छति श्रियं प्रपशू-नाप्नोति य एवं वेद शुक्रं ते शुक्रेण क्रीणामीत्याह यथायजुरे-वैतद्देवा वै येन हिरण्येन सोममक्रीणन्तदभीषहा पुनराऽददत को हि तेजसा विक्रेष्यत इति येन हिरण्येन [६८] सोमं क्रीणीया-त्तदभीषहा पुनरा ददीत तेज एवाऽऽत्मन्धत्तेऽस्मे ज्योतिस्सोम-विक्रयिणि तम इत्याह ज्योतिरेव यजमाने दधाति तमसा सोम-विक्रयिणमर्पयति यदनुपग्रथ्य हन्याद्दन्दशूकास्ताꣳ समाꣳ सर्पा-स्स्युरिदमहꣳसर्पाणां दन्दशूकानां ग्रीवा उप ग्रथ्नामीत्याहादन्द-शूकास्ताꣳ समाꣳ सर्पा भवन्ति तमसा सोमविक्रयिणं विध्यति स्वान [६९] भ्राजेत्याहैते वा अमुष्मिँल्लोके सोममरक्षन्तेभ्योऽधि सोममाऽहरन् यदेतेभ्यस्सोमक्रयणान्नानुदिशेदक्रीतोऽस्य सोमस्स्या-न्नास्यैतेऽमुष्मिँल्लोके सोमꣳ रक्षेयुर्यदेतेभ्यस्सोमक्रयणाननुदिशति क्रीतोऽस्य सोमो भवत्येतेऽस्यामुष्मिँल्लोके सोमꣳ रक्षन्ति [७०] ॥

सशुक्रमेव रुन्ध इति येन हिरण्येन स्वान चतुश्चत्वारिꣳशच्च ॥१०॥

இதில், பிறபொருள்களைக்கொடுத்து சோமத்தை விலைக்குவாங்குதல் கூறப்படுகின்றன.

---

மந்திரத்திற்கு உரை கூறும் விருப்புடையதாய் உடன்பாடிலாததை மறுத்துவிட்டு, தனக்கிஷ்டமாகியவிலைக்கு மந்திரத்தை யுண்டாக்கி விநியோகிக்கின்றது.

பிராமணம்—1

**यत्कलया ते शफेन ते क्रीणानीति पणेतागो अर्घꣳ सोमं कुर्यादगोअर्घं यजमानमगोअर्घमध्वर्युं गोस्तु महिमानं नाव तिरेद्गवा ते क्रीणानीत्येव ब्रूयाद्गोअर्घमेव सोमं करोति गोअर्घं यजमानं गोअर्घमध्वर्युं न गोमहिमानमव तिरति ।**

என்பது.

உரை.

*கலையால், (ஏகதேச மாமிசத்தால்) அல்லது சபத்தால், (குளம்பால்) சோமத்தை விலைக்குவாங்கில், கோவடிவ சோமம் விலைக்கு விற்கத்தகாததும் கொடுக்கத்தகாததுமாம், அத்வரியுவுங் கொடுக்கும்படி செய்வதற்குரியானலன் என்னும் முக்குற்றங்களும் வருகின்றன. ஆதலின், சோமமே! உன்னை, 'கோ(பசு)வால் விலைக்கு வாங்குகின்றேன்' என்று கூறில், முக்குற்றங்களும் இல்லை. கோவின் மகிமையை மறைத்துவிட்டதும் ஆகாது என்பது.*

---

பசுக்கடாரி, சோமத்திற்கு விலையானதுபோல், மற்றும், ஒன்பது பொருள்கள் விலைக்கு வாங்குவதற்கு உதவியானவைகளை முறையாய் விதிக்கின்றது.

பிராமணம்—2

**अजया क्रीणाति सतपसमेवैनं क्रीणाति सशुक्रमेवैनं क्रीणाति धेन्वा क्रीणाति साशिरमेवैनं क्रीणात्यृषभेण क्रीणाति सेन्द्रमेवैनं क्रीणात्यनडुहा क्रीणाति वह्निर्वा अनड्वान्वह्निनैव वह्नि यज्ञस्य क्रीणाति मिथुनाभ्यां क्रीणाति मिथुनस्यावरुद्ध्यै वाससा क्रीणाति सर्वदेवत्यं वै वासस्सर्वाभ्य एवैनं देवताभ्यः क्रीणाति दश सं पद्यन्ते दशाक्षरा विराडन्नं विराड्विराजैवान्नाद्यमव रुन्धे ।**

என்பது.

உரை.

*ஆட்டை விலையாகக்கொடுத்து வாங்குவதால் ஆடு தவத்தின் உடம்பு என்றதால் தவத்துடன் விலைக்கு வாங்கியதாகும். பொன்னால் வாங்குவதால் தேச*

சுடன் வாங்கியதாகும். பாற்பசுவால் விலைக்கு வாங்குவதால் தயிர் முதலிய கோவின் இரசத்துடன் விலைக்குவாங்கியதாம். காளையால் வாங்குவதால் இந்திரிய வளர்ச்சியுடன் வாங்கியதாகும். பொலி எருதால் வாங்குவதால் எக்ஞ நிர்வாகத்துடன் வாங்கியதாகும். பசுக்கடாரி காளைக்கன்று என்னும் இரண்டாலும் வாங்குவதால் புணர்ச்சி யடையப்படும், வேஷ்டியால் வாங்குவதால் எல்லாத் தேவதைகளாலும் வாங்கியதாகும் இவ்வாறு பத்துப் பொருளைக் கொடுத்து வாங்கியதால் பத்தெழுத்துக்களைக்கொண்ட விராட்டாகிறது. விராட் அன்னமாம் இதனால் அன்ன முதலியவைகள் அடையப்படுகின்றன என்பது.

---

மூன்று மந்திரங்களும் வெளிப்பளிப் பொருளுடையவைகள் என்று விடுத்துவிட்டு, நான்காவது மந்திரத்தின் கருத்தை விளக்குகின்றது.

பிராமணம்—3

**तपसस्तनूरसि प्रजापतेर्वर्ण इत्याह पशुभ्य एव तदध्वर्युर्नि ह्नुत आत्मनोऽनाव्रस्काय ।**

என்பது.

உரை.

அம் மந்திரத்தை ஓதுவதால் ஆடு முதலியவைகள் பெருமைப்படுத்தப் படுகின்றன. உள்ளவாறே, ஆடு தவத்தின் வடிவமாகா, பிரசாபதியின் நிறமுமாகா, ஆனாலும் இதுவென உபசரிக்கப் படுகின்றது. அவ் வுபசாரம் தனது பிழையை நீக்குதற்பொருட்டுச் செய்யப்படுகின்றது என்பது.

---

பசுவை உபசாரஞ்செய்வதை யுணர்கின்றவனைப் புகழ்கின்றது.

பிராமணம்—4

**गच्छति श्रियं प्रपशूनाप्नोति य एवं वेद ।**

என்பது.

உரை.

இத்தன்மையை யுணர்ந்தவன், செல்வத்தையும், பசுக்களையு மடைகின்றான் என்பது.

---

கொடுத்த பொன்னை மீண்டும் வாங்குவதை விதிக்க விரும்பியதாய், பொன்னை விளக்கும் இரண்டா மந்திரப்பொருள் வெளிப்படையாயிருந்தது பற்றி மீண்டும் அநுசந்தானஞ் செய்கின்றது.

பிராமணம்—5

**शुक्रं ते शुक्रेण क्रीणामीत्याह यथायजुरेवैतत् ।**

என்பது.

உரை.

*தேவர்கள் பொன்னால் விலைக்குவாங்கிவிட்டு அப்பொன்னை பலாத்காரமாய்க் கவர்ந்துகொண்டனர், யார் தேவர்களின் கருத்தை யுணர்வார்? பொன்னால் சோமத்தை விலைக்குவாங்கியவன் மீண்டும் அதை வலியாற் பறித்துக்கொள்ளல்வேண்டும். இது, ஆன்மாவில் ஒளியை நிலைக்கவைகின்றது என்பது.*

---

மீண்டும் பறித்துக்கொள்வதை விதிக்கின்றது.

பிராமணம்—6

**देवा वै येन हिरण्येन सोममक्रीणन्तदभीषहा पुनराऽददत कोहि तेजसा विक्रेष्यत इति येन हिरण्येन सोमं क्रीणीयात्तदभीषहा पुनरा ददीत तेज एवाऽऽत्मन्धत्ते ।**

என்பது.

உரை.

*தேவர்கள் பொன்னால் சோமத்தை விலைக்கி வாங்கிவிட்டு அப்பொன்னை மீண்டும் பலாத்காரமாக பறித்துக்கொண்டனர். ஆதலின், விலையாகக் கொடுத்த பொன்னை மீண்டும் எடுத்துக்கொள்ளல்வேண்டும் என்பது*

---

வெண்மைக் கம்பளத்தைக்கொடுத்து கருமைக்கம்பளத்தால் அடிகொடுக்கும் மந்திரமிரண்டிற்கும் உரை கூறுகின்றது.

பிராமணம்—7

**अस्मे ज्योतिस्सोमविक्रयिणि तम इत्याह ज्योतिरेव यजमाने दधाति तमसा सोमविक्रयिणमर्पयति ।**

என்பது.

உரை.

'அஸ்மேஜ்யோதிஃ சோம விக்ரயிணிதமஃ' என்றது, எசமானனிடத்தில் ஒளியை நிறுத்துகின்றது என்கின்றது. இது தமத்தா(கறுப்பா)ல் சோமத்தை விற்றவனை அருப்பணஞ் செய்கின்றது என்பது.

---

மாறுபடில் கேடேன்பதுடன் கம்பளியை முடியும் மந்திரத்தைக் கற்பிக்கின்றது.

பிராமணம்—8

**यदनुपग्रथ्य हन्याद्दन्दशूकास्ता॒ᳶ समा॒ᳶ सर्पास्स्युरिदमह॒ᳶसर्पाणां दन्दशूकानां ग्रीवा उप ग्रश्नामीत्याहादन्दशूकास्ता॒ᳶ समा॒ᳶ सर्पा भवन्ति तमसा सोमविक्रयिणं विध्यति ।**

என்பது.

உரை.

கறுப்புக் கம்பளத்தில் முடிச்சுப் போடாமல் அடித்தால் ஒரு வருடம் வரை பாம்புகள் உண்டாகின்றன. ஆதலின், 'இதமஹம்' என்பது முதலிய மந்திரத்தால் முடிச்சுப் போட்டு அதனல் சோமம் விற்றவனை அடிக்கில் பாம்புகள் உண்டாகா என்பது.

---

சோமத்தைப் பாதுகாப்போர்கட்கு அறிவுறுத்தும் மந்திரத்திற்கு உரை கூறுகின்றது.

பிராமணம்—9

**स्वान भ्राजेत्याहैते वा अमुष्मिँल्लोके सोममरक्षन्तेभ्योऽधि सोममाऽहरन् ।**

என்பது.

உரை.

'சுவானன்' என்பவன் முதலானோர்கள் அவ்வுலகிலும் சோமத்தைப் பாதுகாக்கின்றவர்கள்; அவர்களிடத்திலிருந்து சோமத்தை மிகுதியாகக் கொண்டுவந்தோம். ஆதலின் இதைப் பாதுகாப்பீர்களாக என்பது.

---

பரபக்ஷம் சுவபக்ஷங்களின் குற்றம் அதைப் போக்கல் என்பதை விளக்குகின்றது

பிராமணம்—10

यदेतेभ्यस्सोमक्रयणान्नानुदिशेदक्रीतोऽस्य सोमस्स्यान्नास्यैतेऽमुष्मिँल्लोके सोमꣳ रक्षेयुर्यदेतेभ्यस्सोमक्रयणाननुदिशति क्रीतोऽस्य सोमो भवत्यैतेऽस्यामुष्मिँल्लोके सोमꣳ रक्षन्ति ॥

என்பது

**உரை.**

இச்சோமப் பாதுகாப்பாளரிடத்திற் சொல்லாவிடில் சோமம் விலைக்கு வாங்கியதாகாது. அவர்கள், இவ்வுலகில் இச்சோமத்தைப் பாதுகாக்க மாட்டார்கள். அவர்களிடத்திற் சொல்லிவிடில் சோமம் விலைக்கு வாங்கியதாகும். இவ்வுலகில் இவர்களால் சோமமும் பாதுகாப்பாற்றப்படும் என்பது. சோமம்=சோமயாக பயன்.

பத்தாவது அநுவாகம்
*முற்றிற்று.*

---

## ஆறுங்காண்டம் முதற்பிரபாடகம்

### பதினோராவது அநுவாகம்

விலைக்குவாங்கிய சோமத்தை வண்டியி லேற்றிக்கொண்டு போதலைக் கூறும் பிராமணங்கள்.

ஆறு பஞ்சாதிக்குமேல் இருபத்தேழு பதங்களைக் கொண்டது.

वारुणो वै क्रीतस्सोम उपनद्धो मित्रो न एहि सुमित्रधा इत्याह शान्त्या इन्द्रस्योरुमा विश दक्षिणमित्याह देवा वै यꣳ सोममक्रीणन्तमिन्द्रस्योरौ दक्षिण आऽसादयन्नेष खलु वा एतर्हीन्द्रो यो यजते तस्मादेवमाहोदायुषा स्वायुषेत्याह देवता एवान्वारभ्योत् [७१] तिष्ठत्युर्वन्तरिक्षमन्विहीत्याहान्तरिक्षदेवत्यो१ ह्येतर्हि सोमोऽदित्यास्सदोऽस्यदित्यास्सद आ सीदेत्याह यथायजुरेवैतद्वि वा एनमेतदर्धयति यद्वारुणꣳ सन्तं मैत्रं करोति वारुण्यर्चाऽऽसादयति

स्वयैवैनं देवतया समर्धयति वाससा पर्यानह्यति सर्वदेवत्यं वै वासस्सर्वाभिरेव [७२] एनं देवताभिस्समर्धयत्यथो रक्षसामपहत्यै वनेषु व्यन्तरिक्षं ततानेत्याह वनेषु हि व्यन्तरिक्षं ततान वाज-मर्वत्स्वित्याह वाजꣳ ह्यर्वत्सु पयो अघ्नियास्वित्याह पयो ह्यघ्नि-यासु हृत्सु क्रतुं वरुणो विक्ष्वग्निमित्याह वरुणो हि विक्ष्वग्निं दिवि सूर्यम् [७३] इत्याह दिवि हि सूर्यꣳ सोममद्रावित्य ह ग्रावाणो वा अद्रयस्तेषु वा एष सोमं दधाति यो यजते तस्मा-देवमाहोदु त्यं जातवेदसमिति सौर्यर्चा कृष्णाजिनं प्रत्यानह्यति रक्षसामपहत्या उस्रावेतं धूर्षाहावित्याह यथायजुरेवैतत्प्र च्यवस्व भुवस्पत इत्याह भूतानाꣳ हि [७४] एष पतिर्विश्वान्यभि धामा-नीत्याह विश्वानि ह्ये१षोऽभि धामानि प्रच्यवते मा त्वा परिपरी विददित्याह यदेवादस्सोममाह्रियमाणं गन्धर्वो विश्वावसुः पर्य-मुष्णात्तस्मादेवमाहापरिमोषाय यजमानस्य स्वस्त्ययन्यसीत्याह यजमानस्यैवैष यज्ञस्यान्वारम्भोऽनवच्छित्त्यै वरुणो वा एष यज-मानमभ्यैति यत् [७५] क्रीतस्सोम उपनद्धो नमो मित्रस्य वरु-णस्य चक्षस इत्याह शान्त्या आ सोमं वहन्त्यग्निना प्रति तिष्ठते तौ संभवन्तौ यजमानमभि संभवतः पुरा खलु वावैष मेधायाऽऽ-त्मानमारभ्य चरति यो दीक्षितो यदग्नीषोमीयं पशुमालभत आत्मनिष्क्रयण एवास्य स तस्मात्तस्य नाऽऽश्यं पुरुषनिष्क्रयण इव

ह्यथो खल्वाहुरग्नीषोमाभ्यां वा इन्द्रो वृत्रमहन्निति यदग्नीषोमीयं पशुमालभते वार्त्रघ्न एवास्य स तस्माद्वाश्यं वारुण्यर्चा परि चरति स्वयैवैनं देवतया परि चरति [७६] ॥ अन्वारभ्योत्सर्वाभिरेव सूर्थं भूतानाः ह्येति यदाहुस्सप्तविंःशतिश्च ॥ ११ ॥

*அநுவாகங்களின் எண்களைக் காட்டுந்தலைப்புச் சொற்கள்:—*

प्राचीनवःशं यावन्त ऋक्सामे वाग्वै देवेभ्यो देवा वै देवयजनं कद्रूश्च तद्धिरण्यः षट्पदानि ब्रह्मवादिनो विचित्यो यत्कलया ते वारुणो वै क्रीतस्सोम एकादश ॥ ११ ॥

*இப் பிரபாடகத்தின் பஞ்சாதிகளின் தொகையைக் காட்டுந்தலைப்புச் சொற்கள்:—*

प्राचीनवःशः स्वाहेत्याह येऽन्तश्शरा ह्येष संतपसा च यत्कर्णगृहीतेति लोमतो वारुणष्षट्सप्ततिः ॥ ७६ ॥

*இதில், விலைக்குவாங்கிய சோமத்தை வண்டியிலேற்றிக்கொண்டுபோதல் கூறப்படுகின்றது.*

---

சோமத்தை ஏற்றுக்கொள்ளல் விரைவில் ஆகவேண்டியதாமாதலின்
அம் மந்திரத்திற்கு உரை கூறுகின்றது.

பிராமணம்—1

वारुणो वै क्रीतस्सोम उपनद्धो मित्रो न एहि सुमित्रधा इत्याह शान्त्यै ।

*என்பது.*

*உரை.*

*'வாருணః' என்றது முதலியன, கட்டுதல் வருணனுடைய பாசவடிவாமாதலின் சோமம் வாருணம் எனப்பட்டது. ஆதலின், வருணனைப்போல் கோரத்தைத் தருமாதலின் அதைச் சாந்தப் படுத்துகின்றது. அதாவது மித்திரத்தன்மையை எடுத்துக் கூறுகின்றது என்பது.*

---

வண்டியிலேற்றுதல்)

தொடையில்வைத்தல் பழைய ஒழுக்கத்தால் வந்தது என்கின்றது.

பிராமணம்—2

इन्द्रस्योरुमा विश दक्षिणमित्याह देवा वै यं सोममक्रीणन्तमिन्द्रस्योरौ दक्षिण आऽसादयन्नेष खलु वा एतर्हीन्द्रो यो यजते तस्मादेवमाह ।

என்பது.

உரை.

'இந்திரஸ்ய ஊருமாவிஶ தட்சிணம்' என்றது, தேவர்கள் சோமத்தை விலைக்குவாங்கி இந்திரனுடைய வலது தொடைமீது வைத்தனர் என்கின்றது. இது, இந்திரன் யாகஞ் செய்ததாற் சொல்லப்படுகின்றது என்பது.

---

எழுந்திருக்கும் மந்திரத்திலுள்ள, உத், (மேல்) அநு என்னும் இரண்டு சொற்களின் பொருளைக் கூறுகின்றது.

பிராமணம்—3

उदायुषा स्वायुषेत्याह देवता एवान्वारभ्योत्तिष्ठति ।

என்பது.

உரை.

'உதாயுஷா ஸ்வாயுஷா' என்றது, தேவர்களைப் பின்பற்றிக்கொண்டு எழுந்திருக்கின்றான் என்கின்றது.

---

எழும்பினது முதல், மீண்டும் பூமியில் வைக்கும்வரை, சோமம், அந்தரிட்சத்தை ஆதாரமாகக் கொண்டுள்ளது என்னுங் கருத்தை விளக்குகின்றது.

பிராமணம்—4

उर्वन्तरिक्षमन्विहीत्याहान्तरिक्षदेवत्यो१ह्येतर्हि सोमः ।

என்பது

உரை.

'உர்வந்தரிக்ஷ மன்விஹி' என்பது, இச் சோமம் அந்தரிக்ஷ தேவதையை அடைந்திருக்கின்றது என்கின்றது.

---

'அதித்யாஃ ஸதோஸி' என்பது முதலிய மான்தோலில் வைத்தலாகிய இரண்டு மந்திரங்களின் பொருளை வெளிப்படையென விளக்குகின்றது.

பிராமணம்—5

**अदित्यास्सदोऽस्यदित्यास्सद आ सीदेत्याह यथायजुरेवैतत् ।**

என்பது.

உரை.

*'அதித்யாஃ ஸதோஸி' என்றது முதலியன, அந்த எசுரிலுள்ள பொருளையே உடையது என்பது.*

---

இரண்டாவது மந்திரத்தால் வைப்பதையே மூன்றுவது மந்திரத்தாலுஞ் செய்தல்வேண்டும் என்னும் பொருளை, காரணத்துடன் விதிக்கின்றது.

பிராமணம்—6

**विवा एनमेतदर्धयति यद्वारुणꣳ सन्तं मैत्रं करोति वारुण्यर्चाऽऽसादयति स्वयैवैनं देवतया समर्धयति ।**

என்பது.

உரை.

*கட்டிவைத்த சோமம், என்னும் விஷயத்தில் 'மித்ரோ ந ஏஹி' என்பது முதலிய மந்திரத்தை ஓதி மைத்திரத் தன்மையைச் செய்கின்றது. வாருண இருக்கால் மிகுந்த சம்பத்துடையதாகச் செய்கின்றது. அதாவது தானே தேவதையால் சம்பத்தை யுண்டாக்குகின்றது என்பது.*

---

'வநேஷு' என்னும் இம் மந்திரத்தாற் செய்யவேண்டியதை விதிக்கின்றது.

பிராமணம்—7

**वाससा पर्यानह्यति सर्वदेवत्यं वै वासस्सर्वाभिरेवैनं देवताभिस्समर्धयत्यथो रक्षसामपहत्यै ।**

என்பது.

உரை.

*ஒரு வேஷ்டியால் வண்டியுடன் சேர்த்துக் கட்டுகின்றுன். இதனுல் எல்லாத் தேவதைகளாலும் சம்பத்தைத் தேடுகின்றுன் என்க. இது, இராக்கதர்களை நீக்குதற் பொருட்டாம் என்பது.*

---

கொண்டுபோதல்)

மந்திரப்பொருள் உலகில் வெளிப்படையாம் என்கின்றது.

பிராமணம்—8

वनेषुव्यन्तरिक्षं ततानेत्याह वनेषु हि व्यन्तरिक्षं ततान वाजमर्वत्स्वित्याह वाजꣳ ह्यर्वत्सु पयो अघ्नियास्वित्याह पयो ह्यघ्नियासु हृत्सु क्रतुं वरुणो विक्ष्वग्निमित्याह वरुणो हि विक्ष्वग्निं दिवि सूर्यमित्याह दिवि हि सूर्यꣳ-सोममद्रावित्याह ग्रावाणो वा अद्रयस्तेषु वा एष सोमं दधाति यो यजते तस्मादेवमाह ।

என்பது.

உரை.

வநேஷு என்றது, வனங்களில் வெளிகளைப் பரப்பினது என்கின்றது. 'வாஜம் அர்வத்ஸு' என்றது, குதிரைகளுள் வேகம் வைக்கப்பட்டிருக்கிறது என்கின்றது. 'பயோ அக்நியாஸு' என்றது பசுக்களில் பாலை வைத்திருக்கின்றது என்கின்றது, 'ஹ்ருத்ஸு க்ரதும்' என்றது, மனதில் நினைவையும், 'விக்ஷு அக்னிம்' என்றது மக்களுள் தீயையும், 'திவிசூர்யம்' என்றது வானில் இரவியையும், 'சோமம் அத்ரௌ' என்றது மலையில் சோமத்தையும் வைத்தல் என்னும் பொருள்களைக் கூறுகின்றது அல்லது, இடிக்குங் கற்களும் மலையைச் சேர்ந்ததால் அவைகளின் மீது வைத்தலாம். ஈண்டுக் கற்கள் என்பதால் கற்கள் மிகுந்துள்ள மலை கொள்ளற் பாலது என்பது.

---

'உதுத்யம்' என்னும் சூரியனுடைய மந்திரத்தால் இராக்கதர்களை நீக்குகின்றான் என்கின்றது.

பிராமணம்—9

उदुत्यं जातवेदसमिति सौर्यर्चा कृष्णाजिनं प्रत्यानह्यति रक्षसामपहत्यै ।

என்பது.

உரை.

'உதுத்யம்' என்பது முதலிய மந்திரத்தால் மான் தோலின் தலைப்புறத்தை மேலேதூக்கிக் கட்டுதல், இராக்கதர்களை நீக்குதற்பொருட்டாம் என்பது.

---

எருதுக்களைக் கொண்டுவரும் மந்திரப்பொருள் வெளிப்படை என்கின்றது.

பிராமணம்—10

उस्रावेतं धूर्षाहावित्याह यथायजुरेवैतत् ।

என்பது.

உரை.

*'உஸ்ராவேதம்' இது என்பது முதலியது, இது எசுரில் உள்ள பொருளேயே உடையது என்கின்றது.*

---

வண்டியைச் செலுத்தும் மந்திரத்தில் கூறியவாறே அப்பொருள் வெளிப்படையென்று விளக்குகின்றது.

பிராமணம்—11

**प्रच्यवस्वभुवस्पत इत्याह भूतानाꣳह्येष पतिर्विश्वान्यभि धामानीत्याह विश्वानि ह्येषोऽभि धामानि प्रच्यवते मा त्वा परिपरी विददित्याह यदेवादस्सोममाह्रियमाणं गन्धर्वो विश्वावसुः पर्यमुष्णात्तस्मादेवमाहाऽपरिमोषाय ।**

என்பது.

உரை.

*'புவஸ்பதே' என்பது, இச் சோமம் பூதங்கட்கு தலைமையானது என்கின்றது. 'விஶ்வாங்யபி தாமாநி' என்றது, இதுவே எல்லா விடங்கட்குஞ் செல்கின்றது என்கின்றது. 'மாத்வா பரிபரீ விதத்' என்றது, முன்னர் ஒரு கந்தருவன் திருடியதால் திருடர்கள் உளர் அவர்களால் கவரப்படாமையின் பொருட்டாம் என்கின்றது.*

---

இரண்டாவது மந்திரத்திலுள்ள 'ஸ்வஸ்தி அயனீ' என்னுஞ் சொல்லினால் 'எக்ஞத்தின் பிராப்தி' சொல்ல விருப்பு என்கின்றது.

பிராமணம்—12

**यजमानस्य स्वस्त्ययन्यसीत्याह यजमानस्यैवैष यज्ञस्यान्वारम्भोऽनवच्छित्त्यै ।**

என்பது.

உரை.

*'எசமானஸ்ய ஸ்வஸ்தி அயனீ அஸி' என்றது, எசமானனுக்கே இவ் வெக்ஞங் கிடைக்கின்றது என்கின்றது. இது தொடர்ச்சியின் பொருட்டு என்கின்றது.*

---

கொண்டுபோதல்)

சோமத்தைப் போற்று மந்திரத்திலுள்ள, 'வருணன்' என்னுஞ் சொல்லின் கருத்தைக் கூறுகின்றது.

பிராமணம்—13

**वरुणो वा एष यजमानमभ्यैति यत्क्रीतस्सोम उपनद्धो नमो मित्रस्य वरुणस्य चक्षस इत्याह शान्त्यै ।**

என்பது

உரை.

'வருணோ வா' என்றது முதலியது, கட்டுப்பட்ட சோமம் வருண வடிவாய் எசமானனை நோக்கிவருகின்றது ; ஆதலின் வருண வடிவாய்ப் போற்றுதலால் உள்ளவாறு துன்பந்தணியும் என்பது.

---

அக்கினிஷோமீய பசுவின் அநுட்டான சமயம் இதுவன்று, அங்ஙன மாயினுந் தொடர்புபற்றி அப்பசுவை விதிக்க விருப்புற்றதாய் தொடர்பை முதலில் விளக்குகின்றது.

பிராமணம்—14

**आसोमं वहन्त्यग्निना प्रति तिष्ठते तौ संभवन्तौ यजमानमभि संभवतः पुरा खलु वावैष मेधायाऽऽत्मानमारभ्य चरति यो दीक्षितः ।**

என்பது.

உரை.

வேள்விச் செயலாளர்கள் பிராசீன வமிசத்திலு(கொட்டகையிலு)ள்ள ஆவகவனீயத்திற்கு அருகில் சோமத்தைக் கொண்டுவருகின்றனர். அச் சோமம் அக்கினியால் வரவேற்கப்பெற்றுப் பெருமையை அடைதல் வேண்டும். அவ்விரண்டுங் கூடும்போது எசமானனைக் குறித்து ஒன்று சொல் வேண்டும். அதை யுணர்ந்து முன் தீட்சை செய்துகொண்ட எசமானன் எக்ஞத்தின் பொருட்டு தனதான்மாவைக் கொன்று பசுவாக வேள்வி நடத் தல்வேண்டு மென்பது பிரசங்கமாம் என்பதாம்.

---

இப்போது அதை விதிக்கின்றது.

பிராமணம்—15

**यदग्नीषोमीयं पशुमालभत आत्मनिष्क्रयण एवास्य सः ।**

என்பது.

(வண்டியிலேற்றித்

உரை.

அக்கினிஷோமீய பசுவைக் கொல்லுதலால் விலைக்கு வாங்குகின்றான். அதாவது, பசுவை விலையாக அக்கினி சோமர்கட்குக் கொடுத்துவிட்டு அத னால் அவர்களிடத்திலிருந்து தானாகிய ஆன்மாவை மீட்டுக்கொள்கின்றான் என்பது.

---

இதில், மீந்த அவியை அருந்துவதைப் பூர்வபக்ஷமாக நீக்குகின்றது.

பிராமணம்—16

**तस्मात्तस्य नाऽऽश्यं पुरुषनिष्क्रयण इवहि ।**

என்பது,

உரை.

இப்பசு, புருடனுடைய விலைபோன்றதா மாதலின், இப்பசுவினால் ஆகிய அவியை அருந்தில், கொடுத்த விலை கெட்டுப்போனதாகும் என்பது.

---

சித்தாந்தத்தைக் கூறுகின்றது.

பிராமணம்—17

**अथो खल्वाहुरग्नीषोमाभ्यां वा इन्द्रो वृत्रमहन्निति यदग्नीषोमीयं पशुमालभते वार्त्रघ्न एवास्य स तस्माद्वाश्यम् ।**

என்பது.

உரை.

இரண்டாங்காண்டம் ஐந்தாம் பிரபாடகத்தில் 'த்வஷ்டா ஹத புத்ர' என்னும் அநுவாகத்தில், 'இந்திரன் அக்கினி சோமங்களின் விருத்திரனைக் கொன்றனன்' என்று கூறியிருத்தலின், அக்கினி ஷோமீய பசுவைக் கொல்லுதல் எசமானனுடைய பகைவனைக் கொல்வதாம். ஆதலின், இந்த அவியை அருந்தத் தக்கதேயாம் என்பது.

---

தொடர்புபற்றி எடுத்துக்கொண்டதை முடித்துவிட்டு எடுத்துக்கொண்ட 'நமோ மித்ரஸ்ய' என்னும் மந்திரத்தை விநியோகிக்கின்றது.

பிராமணம்—18

**वारुण्यर्चा परि चरति स्वयैवैनं देवतया परि चरति ॥**

என்பது.

கொண்டுபோதல்)

உரை.

கட்டியுள்ள சோமனுக்கு வருணன் தேவதையாமாதலின் வருண மந்திரத்தால் அதை யநுட்டித்தல் பொருத்தமாம். ஆதலின், பிராக்வம்ச மென்னுங் கொட்டகையில் நாற்காலியின்மீது சோமத்தை வைத்துவிட்டு அப்போது, 'ஏவா வந்தஸ்வ' என்பது முதலியதால், அல்லது வருணனுடைய மந்திரத்தால் அதற்கு வணக்கம் முதலான உபசாரஞ் செய்தல்வேண்டும் என்பதாம்.

பதினோராவது அநுவாகம்

முற்றிற்று.

---

முதலாம் பிரபாடகம்

முடிந்தது.

---

## இரண்டாம் பிரபாடக

### விடயச் சுருக்கம்.

प्रपाठके द्वितीयेऽत्रानुवाकार्थान्क्रमाद् ब्रुवे ।
आतिथ्येष्टिरिहाऽऽद्ये स्यात्तानूनप्त्रं द्वितीयके ॥ १ ॥

तथावान्तरदीक्षा च तृतीयेतूपसद्भवेत् ।
वेदिरुक्ताचतुर्थेऽथ पञ्चमे व्रतनिर्णयः ॥ २ ॥

षष्ठे काम्या यागभूमिस्सप्तमे वेदिरुत्तरा ।
व्याघारणस्त्वष्टमे स्याद्धविर्धान मनन्तरे ॥ ३ ॥

दशमेतु सदः प्रोक्तं प्रोक्ता उपरवाः परे ।
प्रपाठकेऽनुवाकार्थाद्वितीयेऽस्मिन्नुदीरिताः ॥ ४ ॥

இப் பிரபாடகத்திலும் பதினொரு அநுவாகங்களிருக்கின்றன. அவற்றுள் முதலாவதில் ஆதித்யேஷ்டியும், இரண்டாவதில் தாநூநப்த்ரமும், மூன்றாவதில் உபசத்தும், நான்காவதில் மகாவேதியும், ஐந்தாவதில் விரத நிர்ணயமும், ஆறாவதில் வேள்விக்குரிய பூமியும், ஏழாவதில் உத்திரவேதியும், எட்டாவதில் வியாகாரஹோமமும், ஒன்பதாவதில் ஹவிர்தான மண்டபமும், பத்தாவதில் ஸதசும், பதினொன்றாவதில் உபரவங்களும் கூறப்படுகின்றன என்பது.

---

## ஆறாங்காண்டம் இரண்டாம் பிரபாடகம்

### முதலா மநுவாகம்

ஆதித்யேஷ்டியைக் கூறும் பிராமணங்கள்.

ஆறு பஞ்சாதிக்குமேல் நாற்பத்தொரு பதங்களைக் கொண்டது.

यदुभौ विमुच्याऽऽतिथ्यं गृह्णीयाद्यज्ञं विच्छिन्द्याद्यदुभावविमुच्य यथाऽऽनागतायाऽऽतिथ्यं क्रियते तादृगेव तद्विमुक्तोऽन्योऽनड्वा-भवत्यविमुक्तोऽन्योऽथाऽऽतिथ्यं गृह्णाति यज्ञस्य संतत्यै पत्न्य-न्वारभते पत्नीहि पारीणह्यस्येशे पत्नियैवानुमतं निर्वपति यद्वै पत्नी यज्ञस्य करोति मिथुनं तदथो पत्निया एव [१] एष यज्ञ-

ஆதித்யேஷ்)

स्यान्वारम्भोऽनवच्छित्त्यै यावद्भिर्वै राजाऽनुचरैरागच्छति सर्वेभ्यो वै तेभ्य आतिथ्यं क्रियते छन्दाꣳसि खलु वै सोमस्य राज्ञोऽनुचराण्यग्नेरातिथ्यमसि विष्णवे त्वेत्याह गायत्रिया एवैतेन करोति सोमस्याऽऽतिथ्यमसि विष्णवे त्वेत्याह त्रिष्टुभ एवैतेन करोत्यतिथेरातिथ्यमसि विष्णवे त्वेत्याह जगत्यै [२] एवैतेन करोत्यग्नये त्वा रायस्पोषदाव्न्ने विष्णवे त्वेत्याहानुष्टुभ एवैतेन करोति श्येनाय त्वा सोमभृते विष्णवे त्वेत्याह गायत्रिया एवैतेन करोति पञ्च कृत्वो गृह्णाति पञ्चाक्षरा पङ्क्तिः पाङ्क्तो यज्ञो यज्ञमेवाव रुन्धे ब्रह्मवादिनो वदन्ति कस्मात्सत्याद्गायत्रिया उभयत आतिथ्यस्य क्रियत इति यदेवादस्सोममा [३] अहरत्तस्माद्गायत्रिया उभयत आतिथ्यस्य क्रियते पुरस्ताच्चोपरिष्टाच्च शिरो वा एतद्यज्ञस्य यदातिथ्यं नवकपालः पुरोडाशो भवति तस्मान्नवधा शिरो विष्यूतं नवकपालः पुरोडाशो भवति ते त्रयस्त्रिकपालास्त्रिवृता स्तोमेन संमितास्तेजस्त्रिवृत्तेज एव यज्ञस्य शीर्षन्दधाति नवकपालः पुरोडाशो भवति ते त्रयस्त्रिकपालास्त्रिवृता प्राणेन संमितास्त्रिवृद्वै [४] प्राणस्त्रिवृतमेव प्राणमभिपूर्वं यज्ञस्य शीर्षन्दधाति प्रजापतेर्वा एतानि पक्ष्माणि यदश्ववाला ऐक्षवी तिरश्ची यदाश्ववालः प्रस्तरो भवत्यैक्षवी तिरश्ची प्रजापतेरेव तच्चक्षुस्संभरति देवा वै या आहुतीरजुहवुस्ता असुरा निष्कावमादन्ते देवाः कार्ष्मर्यमपश्यन्कर्मण्यो वै कर्मैनेन कुर्वीतेति ते कार्ष्मर्यमयान्परिधीन् [५] अकुर्वत तैर्वै ते रक्षाꣳस्यपाघ्नत यत्कार्ष्मर्यमयाः

परिधयो भवन्ति रक्षसामपहत्यै सं स्पर्शयति रक्षसामनन्ववचाराय न पुरस्तात्परि दधात्यादित्यो ह्येवोद्यन्पुरस्ताद्रक्षाꣳस्यपहन्त्यूर्ध्वे समिधावा दधात्युपरिष्टादेव रक्षाꣳस्यप हन्ति यजुषाऽन्यां तूष्णीमन्यां मिथुनत्वाय द्वे आ दधाति द्विपाद्यजमानः प्रतिष्ठित्यै ब्रह्मवादिनो वदन्ति [६] अग्निश्च वा एतौ सोमश्च कथा सोमायाऽऽतिथ्यं क्रियते नाग्नय इति यदग्नावग्निं मथित्वा प्रहरति तेनैवाग्नय आतिथ्यं क्रियतेऽथो खल्वाहुरग्निस्सर्वा देवता इति यद्धविरासाद्याग्निं मन्थति हव्यायैवाऽऽसन्नाय सर्वा देवता जनयति [७] ॥ पत्निया एव जगत्या आ त्रिवृद्वै परिधीन्वदन्त्येकचत्वारिꣳशच्च ॥ १ ॥

இதில், அருகில்வந்த அதிதிவடிவாகிய சோமத்தின் பூசை, அதாவது ஆதித்யேஷ்டி கூறப்படுகின்றது.

---

மந்திரங்கட்கு உரை கூறவிரும்பியதாய் காலவிசேடத்துடன் ஆதித்யம் (அதிதிக்குச் செய்யுஞ் செயலை) விதிக்கின்றது.

பிராமணம்—1

यदुभौ विमुच्याऽऽतिथ्यं गृह्णीयाद्यज्ञं विच्छिन्द्याद्यदुभावविमुच्य यथाऽऽनागतायाऽऽतिथ्यं क्रियते तादृगेव तद्विमुक्तोऽन्योऽनड्वाभवत्यविमुक्तोऽन्योऽथाऽऽतिथ्यं गृह्णाति यज्ञस्य संतत्यै ।

என்பது.

உரை.

சோமவண்டியிற்கட்டிய எருதுகளிரண்டையும் அவிழ்த்து விட்டுவிட்டு இவ்வாதித்ய கருமத்தைச் செய்யிலோ, எக்ஞம் விடுபட்டுப்போகும், அதாவது சோமத்தைக் கொண்டுவருதல் நிறுத்திவிட்டதாம். இது அதிதியின் கருமந் தொடங்கப்பட்டதால் என்க. இரண்டெருதுகளையும் அவிழ்த்துவிடாமல் ஆதித்யேஷ்டியைச் செய்யிலோ, வண்டிவருதல் முடியாமையின் வந்து

(இஷ்டி)

சோராத சோமத்திற்கு அதிதிபூசை செய்ததாகும். ஆதலின் ஒன்றை அவிழ்த்துவிடில் வண்டி செல்வது முடிந்ததும் ஒன்றை அவிழ்க்காமையின் முன் கர்மமும் விடப்படாததுமாகிறது. ஆதலின், அக்காலத்தில் அவியெடுத்தன் முதலியவைகளைச் செய்யில் எக்ஞந் தொடர்ந்துவந்ததாகும் என்பதாம்.

---

அவிக்கு நெல்லெடுக்கும்போது பத்தினி வண்டியைத் தொட்டுக் கொண்டிருத்தல் வேண்டும் என்று விதிக்கின்றது.

பிராமணம்—2

**पत्न्यन्वारभते पत्नीहि पारीणह्यस्येशे पत्नियैवानुमतं निर्वपति यद्वै पत्नी यज्ञस्य करोति मिथुनं तदथो पत्निया एवैष यज्ञस्यान्वारम्भोऽनव-च्छित्त्यै ।**

என்பது.

உரை.

இது பத்தினியைப் பின்பற்றிக்கொண்டு தொடங்கப்படுகின்றது. பத்தினி, வீட்டிலுள்ள நெல் முதலிய தானியங்கட்கு தலைவியாவள். ஆதலின், பத்தினியைக் கேட்டுக்கொண்டு நெல்லெடுக்கின்றான். பத்தினியுஞ் சேர்ந்து எக்ஞந் தொடங்கப்படுதலின் பத்தினி எக்ஞத்திற்கு அங்கமாகிய வண்டியைத் தொட்டுக்கொண்டு நிற்கில் எக்ஞந் தொடர்ந்து செய்யப்படுவதாகும் என்பது.

---

மந்திரங்கட்கு உரை கூறுகின்றது.

பிராமணம்—3

**यावद्भिर्वै राजाऽनुचरैरागच्छति सर्वेभ्यो वै तेभ्य आतिथ्यं क्रियते छन्दाꣳसि खलु वै सोमस्य राज्ञोऽनुचराण्यग्नेरातिथ्यमसि विष्णवे त्वेत्याह गायत्रिया एवैतेन करोति सोमस्याऽऽतिथ्यमसि. विष्णवे त्वेत्याह त्रिष्टुभ एवैतेन करोत्यतिथेरातिथ्यमसि विष्णवे त्वेत्याह जगत्या एवैतेन करोत्यग्नये त्वा रायस्पोषदाव्न्ने विष्णवे त्वेत्याहानुष्टुभ एवैतेन करोति श्येनाय त्वा सोमभृते विष्णवे त्वेत्याह गायत्रिया एवैतेन करोति ।**

என்பது.

உரை.

அரசனைப் பின்பற்றியவர்களனைவருக்கும் அதிதிபூசை செய்யப்படுகின்றது. சந்தங்கள், சோமராசனுடைய அநுசரர்களாகின்றன. ஆதலின் 'அக்னே

ராதித்யமஸி விஷ்ணவேத்வா' என்றது, காயத்திரியின் பொருட்டுச் செய்யப்படுகின்றது. 'சோமஸ்ய ஆதித்யமஸி' என்றது, திருஷ்டுப்ச் சந்தத்தின் பொருட்டுச் செய்யப்படுகின்றது. 'அதிதேராதித்யமஸி' என்றது, சகதிச் சந்தத்தின் பொருட்டுச் செய்ததாகின்றது. 'அக்னயேத்வா' என்றது முதலியது, அநுஷ்டுப்ச் சந்தத்தின் பொருட்டுச் செய்யப்படுகின்றது. 'ஶ்யேனாய' என்றது முதலியது, காயத்திரியின் பொருட்டுச் செய்யப்படுகின்றது என்பது.

ஈண்டு, சோமராசனுடைய ஏவலாளர்களான அக்கினி முதலியோர்களால் உபலக்ஷியங்களாகக் கொள்ளப்பட்ட காயத்திரி முதலியவைகட்கு உள்ள சம்பந்த விசேடத்திற்கும் இப் பிராமணமே பிரமாணம் என்பதை யுணர்க.

---

நெல்லெடுத்தலின் ஆவிருத்திகளின் எண் விதிக்கப்படுகின்றது.

பிராமணம்—4

**पञ्च कृत्वो गृह्णाति पञ्चाक्षरा पङ्क्तिः पाङ्क्तो यज्ञो यज्ञमेवावरुन्धे ।**

என்பது.

உரை.

ஐந்துமுறை எடுத்தலால் ஐந்தெழுத்துக்களைக் கொண்ட பந்திச் சந்தத்தின் சம்பந்தமுடைய எக்ஞத்தை யடைகின்றான் என்பது.

---

காயத்திரிச் சந்தத்திற்கு இருபுறத்திலும் செய்வதை கடாவிடைகளாற் கூறுகின்றது.

பிராமணம்—5

**ब्रह्मवादिनो वदन्ति कस्मात्सत्याद्गायत्रिया उभयत आतिथ्यस्य क्रियत इति यदेवादस्सोममाऽहरत्तस्माद्गायत्रिया उभयत आतिथ्यस्य क्रियते पुरस्ताच्चोपरिष्टाच्च ।**

என்பது.

உரை.

காயத்திரிக்கு எக் காரணத்தால் முதலிலும் முடிவிலும் ஆதித்யஞ் செய்யப்படுகிறதென்று? பிரமவாதிகள் கேட்டனர். அதற்கு சில அறிஞர்கள் காயத்திரி, சோமத்தைக் கொண்டுவந்ததால் என்றார்கள் என்பது.

---

எடுத்த அரிசியை ஒன்பது கபாலப் புரோடாசஞ் செய்தல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—6

**शिरो वा एतद्यज्ञस्य यदातिथ्यं नवकपालः पुरोडाशो भवति तस्मान्नवधा शिरोविष्यूतम् ।**

என்பது.

உரை.

ஆதித்யேஷ்டியானது சத்காரபூசையாதலின் தலைபோன்றதாம். தலை ஒன்பது மண்டை ஓடுகளால் அமைக்கப்பட்டிருத்தலின் ஒன்பது கபாலங்களில் புரோடாசஞ் செய்தல்வேண்டு மென்பதாம்.

---

கூறியவிதியை எடுத்துக்கொண்டு புகழ்கின்றது.

பிராமணம்—7

**नवकपालः पुरोडाशो भवति ते त्रयस्त्रिकपालास्त्रिवृता स्तोमेन संमितास्तेजस्त्रिवृत्तेज एव यज्ञस्य शीर्षन्दधाति ।**

என்பது.

உரை.

'திரிவிருத்' என்னும் துதிப்பாடலில் மூன்று சூக்தம் இருக்கின்றது. சூக்தம்=துதிமஞ்சரி. அவற்றுள்ளும் ஒவ்வொன்றிலும் மும்மூன்று இருக்குக்கள் உள்ளன. இதனால் எண் ஒப்பாதலின் ஒன்பது கபாலங்களும் திரிவிருத் வடிவாம். அது பிரசாபதியின் முகத்திலிருந்து அக்கினியுடன் தோன்றியதால் ஒளிவடிவுடையது. ஆதலின், எக்ஞத்தின் தலையாகிற ஆதித்யேஷ்டியால் ஒளியை நிறுவியதாகின்றது என்பதாம்.

---

மீண்டும் அவ்விதியையே எடுத்துக்கொண்டுப் புகழ்கின்றது.

பிராமணம்—8

**नवकपालः पुरोडाशो भवति ते त्रयस्त्रिकपालास्त्रिवृता प्राणेन संमितास्त्रिवृद्वै प्राणस्त्रिवृतमेव प्राणमभिपूर्वं यज्ञस्य शीर्षन्दधाति ।**

என்பது.

உரை.

மூன்று கபாலங்களாற் புநிதமாகிய புரோடாசங்கள் மூன்றும், ஒன்பது எண்ணைப்பிரிக்கில் மூன்றும் இவ்வாறு மும்மூன்றும். இதனால், கபாலங்களும், புரோடாசங்களும் மூன்றாயின. அதைப்போல், பிராணனும், மேல், நடு, கடை என்னு மூன்றிடங்களிலும் மூவகைப் பட்டிருக்கின்றது. அல்லது, தலையிலுள்ள ஒன்பது துளைகளிலும் பிராணன்கள் உள்ளன. அவைகளை மூன்றாய்ப் பிரிக்கிலும் மூன்றாகிறது. இவ்வகைப் பிராணன்களை, எக்ஞத்தின் தலையாகிய ஆதித்யேஷ்டியால் நிறுவுகின்றதாம் என்பது.

---

இவ்வாதித்யேஷ்டியில் பிரகிருதியைப்போல், பிரஸ்தரமும் விதிருதியும் குசையால் வேண்டும் என்று வருவதை மறுத்துவிடுவதற்கு வேறுபொருளை விதிக்கின்றது.

பிராமணம்—9

**प्रजापतेर्वा एतानि पक्ष्माणि यदश्ववाला ऐक्षवी तिरश्ची यदाश्ववालः प्रस्तरो भवत्यैक्षवी तिरश्ची प्रजापतेरेव तच्चक्षुस्संभरति ।**

என்பது.

உரை.

பிரசாபதியின் கண்மயிர்கள் குதிரைவால் (அஸ்வவால்) புல்லாயிற்று. கண் வட்டத்தோல் கரும்பின் தோகையாயிற்று. ஆதலின், குதிரைவால் புல் பிரஸ்தரமும், கரும்பின் தோகை விதிருதியுமாகச் செய்யில் பிரசாபதிக்குக் கண்ணைத் தேடியதாகும் என்பது.

---

பருதிக(விறகுக)ள் கார்மர்ஷ்ய மரமாயிருத்தல் வேண்டுமேன்று விதிக்கின்றது.

பிராமணம்—10

**देवा वै या आहुतीरजुहवुस्ता असुरा निष्कावमादन्ते देवाः कार्ष्मर्यमपश्यन्कर्मण्यो वै कर्मैनेन कुर्वीतेति ते कार्ष्मर्यमयान्परिधीनकुर्वत तैर्वै ते रक्षाꣳस्यपाघ्नत यत्कार्ष्मर्यमयाः परिधयो भवन्ति रक्षसामपहत्यै ।**

என்பது.

உரை.

தேவர்கள் ஆகுதிகள் செய்தனர். அவைகளை, தேவர்கட்குத்தெரியாமல் மெதுவாய் அசுரர்கள் அருந்திவிட்டனர். பிறகு, கார்ஷமர்ய மரத்தைக் கண்டுபிடித்து அவற்றின் பரிதிகளைக்கொண்டு செய்தனர். அவை

இராக்கதர்களைக் கொன்றுவிட்டன. ஆதலின், இராக்கதர்களை நீக்குதற் பொருட்டு கார்ஷமர்ய மரப்பரிதிகள் வேண்டும் என்பது. கார்ஷ்மர்யம் = குமிழை.

---

நடுவிலுள்ள பகுதி, வடக்குத் தெற்கிலிருக்கின்ற பரிதிகளுடன் சம்பந்தத்தை விதிக்கின்றது.

பிராமணம் — 11

**सꣳस्पर्शयति रक्षसामनन्ववचाराय ।**

என்பது.

உரை.

அவ்வாறு பரிதிகள் ஒன்றையொன்று தொட்டுக்கொண்டிருக்காமல் நடுவில் இடைவெளியிருக்கில் அதன்வழியாக இராக்கதர்கள் உள்ளே வந்துவிடுவார்கள் என்பது.

---

கிழக்குத்திக்கில் அசுரரை நீக்குதற்குப் பரிதிகள் போடல்வேண்டுமென்பதை மறுக்கின்றது.

பிராமணம் — 12

**न पुरस्तात्परि दधात्यादित्यो ह्येवोद्यन्पुरस्ताद्रक्षाꣳस्यपहन्ति ।**

என்பது.

உரை.

கிழக்கில் ஆதித்தன் எழுந்து இராக்கதர்களை விலக்குகின்றான். ஆதலின், அங்கு வேண்டியதில்லை என்பது.

---

ஆகார சமித்துக்களிரண்டையும் கிழக்குப் பக்கத்தில் ஊன்றிவைத்தல் வேண்டும் என்பதை விதிக்கின்றது.

பிராமணம் — 13

**ऊर्ध्वे समिधावादधात्युपरिष्टादेव रक्षाꣳस्यपहन्ति ।**

என்பது.

உரை.

மேல்திக்கில் பருதிகளை வைத்தல், மேலே அசுரர்களை விலக்குகின்றதாம் என்பது.

ஈண்டு, மேலேயுள்ள இராக்கதரை விலக்குதற்கு மேல் வெளியில் பரிதிகளை நாட்டமுடியாமையின், கிழக்குப் பக்கத்தில் ஊன்றுதல் என்க.

---

அதில் ஒரு விசேடத்தை விதிக்கின்றது.

பிராமணம் —14

**यजुषाऽन्यां तूष्णीमन्यां मिथुनत्वाय ।**

என்பது.

உரை.

'வீதிஹோத்ரம்' என்பது முதலிய மந்திரத்தால் தெற்கு ஆகார சமித்தையும், மந்திரமின்றி வடக்கு ஆகார சமித்தையும் வைத்தல்வேண்டும். இது ஆண் பெண் புணர்ச்சியாம் என்பது.

---

சமித்து இத்தனை யென்பதை விதிக்கின்றது.

பிராமணம்—15

**द्वे आ दधाति द्विपाद्यजमानः प्रतिष्ठित्यै ।**

என்பது.

உரை.

இரண்டு சமித்துக்கள் வைக்கப்படுகின்றன. இது, இரண்டு பாதங்களையுடைய எசமானனுக்கு நிலையை உண்டாக்குகின்றது என்பது.

---

ஆதித்யேஷ்டி செய்வதற்கிடையில் தீக் கடைதலுடன் ஆகவனீயத்தில் கடைந்த தீயை வைத்தலையும் விதிக்கின்றது.

பிராமணம் —16

**ब्रह्मवादिनो वदन्त्यग्निश्च वा एतौ सोमश्च कथा सोमायाऽऽतिथ्यं क्रियते नाग्नय इति यदग्नावग्निं मथित्वा प्रहरति तेनैवाग्नय आतिथ्यं क्रियते ।**

என்பது.

உரை.

அக்கினியும் சோமமும் யாகத்தை நடத்துந் தேவதைகள். அவ்விரண்டும் ஒத்தவைகளாயிருக்க எவ்வாறு அக்கினிக்கு ஆதித்யம் இல்லை? என்பது பிரமவாதிகளின் வினா, அதற்கு, அக்கினியைக் கடைந்து அக்கினியிற் போடுதலே அக்கினிக்கு அதிதி பூசையாம் என்பது விடை என்பதாம்.

---

தீக்கடையுங் காலத்தை விதிக்கின்றது.

பிராமணம்—17

**अथो खल्वाहुरग्निस्सर्वा देवता इति यद्धविरासाद्याग्निं मन्थति हव्यायैवाऽऽसन्नाय सर्वा देवता जनयति ॥**

என்பது

உரை.

மற்றும், பிரமவாதிகள் காலத்தைக்கூற விருப்புடையராய் உபோற்காதமாக அக்கினி எல்லாத் தேவதைகளின் வடிவாகக் கூறுகின்றனர். ஆதித்ய புரோடாசத்தை வேதியில் வைத்துவிட்டு தீக்கடையும்போது கடையும் அக்கினிக்குள்ளிருக்கும் எல்லாத் தேவதைகளையும் அவியுண்ணுவதற்கு உண்டாக்கியதாகும் அக்காலமே பொருத்தமுடையதாம் என்பது.

முதலா மநுவாகம்

முற்றிற்று.

---

ஆறுங்காண்டம் இரண்டாம் பிரபாடகம்

இரண்டாவது அநுவாகம்

தாநூநப்த்ரத்தைக் கூறும் பிராமணங்கள்.

ஏழு பஞ்சாதிக்குமேல் பதினெரு பதங்களைக் கொண்டது.

देवासुरास्संयत्ता आसन्ते देवा मिथो विप्रिया आसन्ते१ऽन्योऽन्यस्मै ज्यैष्ठ्यायातिष्ठमानाः पञ्चधा व्यक्रामन्नग्निर्वसुभिस्सोमो रुद्रैरिन्द्रो मरुद्भिर्वरुण आदित्यैर्बृहस्पतिर्विश्वैर्देवैस्तेऽमन्यन्तासुरेभ्यो वा इदं भ्रातृव्येभ्यो रध्यामो यन्मिथो विप्रियास्स्मो या न इमाः प्रियास्तनुवस्तास्समवद्यामहै ताभ्यस्स निर्ऋच्छाद्यः [८] नः प्रथमो१ऽन्योन्यस्मै द्रुह्यादिति तस्माद्यस्सतानूनप्त्रिणां प्रथमो द्रुह्यति स आर्तिमार्च्छति यत्तानूनप्त्रं समवद्यति भ्रातृव्याभिभूत्यै भवत्यात्मना पराऽस्य भ्रातृव्यो भवति पञ्च कृत्वोऽव

द्यति पञ्चधा हि ते तत्समवाद्यन्ताथो पञ्चाक्षरा पङ्क्तिः पाङ्क्तो यज्ञो यज्ञमेवाव रुन्ध आपतये त्वा गृह्णामीत्याह प्राणो वै [९] आपतिः प्राणमेव प्रीणाति परिपतय इत्याह मनो वै परिपतिर्मन एव प्रीणाति तनूनप्त्र इत्याह तनुवो हि ते तास्समवाद्यन्त शाक्करायेत्याह शक्त्यै हि ते तास्समवाद्यन्त शक्मन्नोजिष्ठायेत्याहौजिष्ठꣳ हि ते तदात्मनस्समवाद्यन्तानाधृष्टमस्यनाधृष्यमित्याहानाधृष्टꣳ ह्येतदनाधृष्यं देवानामोजः [१०] इत्याह देवानाꣳ ह्येतदोजोऽभिशस्तिपा अनभिशस्तेन्यमित्याहाभिशस्तिपा ह्येतदनभिशस्तेन्यमनु मे दीक्षां दीक्षापतिर्मन्यतामित्याह यथायजुरेवैतद्घृतं वै देवा वज्रं कृत्वा सोममघ्नन्नन्तिकमिव खलु वा अस्यैतच्चरन्ति यत्तानूनप्त्रेण प्रचरन्त्यꣳशुरꣳशुस्ते देव सोमाऽऽप्यायतामित्याह यत् [११] एवास्यापुवायते यन्मीयते तदेवास्यैतेनाऽऽप्याययत्या तुभ्यमिन्द्रः प्यायतामा त्वमिन्द्राय प्यायस्वेत्याहोभावेवेन्द्रं च सोमं चाऽऽप्याययत्या प्यायय सखीन्त्सन्या मेधयेत्याहर्त्विजो वा अस्य सखायस्तानेवाऽऽप्याययति स्वस्ति ते देव सोम सुत्यामशीय [१२] इत्याहाऽऽशिषमेवैतामा शास्तेप्र वा एतेऽस्माल्लोकाच्च्यवन्ते ये सोममाप्याययन्त्यन्तरिक्षदेवत्यो हि सोम आप्यायित एष्टा रायः प्रेषे भगायेत्याह द्यावापृथिवीभ्यामेव नमस्कृत्यास्मिँल्लोके प्रतितिष्ठन्ति देवासुरास्संयत्ता आसन्ते देवा बिभ्य-

நெய்யை எடுத்தல்)

तोऽग्निं प्राविशन्तस्मादाहुरग्निस्सर्वा देवता इति ते [१३] अग्निमेव वरूथं कृत्वाऽसुरानभ्यभवन्नग्निमिव खलु वा एष प्रविशति योऽवान्तरदीक्षामुपैति भ्रातृव्याभिभूत्यै भवत्यात्मना परास्य भ्रातृव्यो भवत्यात्मानमेव दीक्षया पाति प्रजामवान्तरदीक्षया संतरां मेखलाꣳ समायच्छते प्रजा ह्यात्मनोऽन्तरतरा तप्तव्रतो भवति मदन्तीभिर्मार्जयते निर्ह्यग्निश्शीतेन वायति समिद्ध्यै या ते अग्ने रुद्रिया तनूरित्याह स्वयैवैनद्देवतया व्रतयति सयोनित्वाय शान्त्यै [१४] यो वा ओजं आह यदशीयेति तेऽग्न एकादश च ॥ २ ॥

இதில், தாநூ நப்த்ரம் என்னும் நெய் ஓமம் (நெய்யெடுத்தல்) விதிக்கப் படுகின்றது.

---

'தநூ நப்த்ரம்' என்னும் சாடராக்கினி விஷயமாகிய சப்தத்திற்குக் காரணமாகிய தாநூ நப்த்ரம் என்னும் நெய்யை யெடுப்பதை விதிப்பதற்கு முன்னுரை கூறப்படுகின்றது.

பிராமணம்—1

देवासुरास्संयत्ता आसन्ते देवा मिथो विप्रिया आसन्तेऽन्योऽन्यस्मै ज्यैष्ठ्यायातिष्ठमानाः पञ्चधा व्यक्रामन्नग्निर्वसुभिस्सोमो रुद्रैरिन्द्रो मरुद्भिर्वरुण आदित्यैर्बृहस्पतिर्विश्वैर्देवैस्तेऽमन्यन्तासुरेभ्यो वा इदं भ्रातृव्येभ्यो रध्यामो यन्मिथो विप्रियास्स्मो या न इमाः प्रियास्तनुवस्तास्समवद्यामहै ताभ्यस्स निरृच्छाद्यो नः प्रथमोऽन्योऽन्यस्मै द्रुह्यादिति तस्माद्यस्सतानूनप्त्रिणां प्रथमो द्रुह्यति स आर्तिमार्च्छति ।

என்பது.

உரை.

போரிடுவதற்கு ஒன்றுகூடிய தேவர்களனைவரும் தம்மிலும் மேம்பட்டார் இலர் தம்மிலும் மேம்பட்டார் ஒருவரும் இலர் என்று எண்ணிக்கொண்டு ஐந்து கூட்டங்களாகப் பிரிந்தனர். அக்கூட்டங்களுள் அக்கினி முதலிய ஐந்து தேவர்கள், சேனைகள் வசு முதலியோர்கள் இவ்வாறு ஒருவர்க் கொருவர்

பகைவர்களாகவே சிறிதுகாலம் இருந்தபிறகு நாம் இவ்வாறு தம்முள் பகையுடன் இருக்கில் அசுரர்களுடைய வெற்றியை நாமே செய்தவர்களாவோம் என்று ஆராய்ச்சிசெய்து, எமதுமனைவி, புத்திரன், நளன் முதலானோர்களுடைய தநுக்களை ஒன்றுகூட்டி, 'எம்முள் முதலில் யாவன் ஒன்றுசேராமல் மாறுபடுகின்றானோ அவன் இக் கூட்டத்திலிருந்து நீக்கப்பட்டவனாகின்றான்' என்று சபதஞ் செய்துகொண்டு ஒற்றுமையாயினர். தேவர்களுள் இவ்வாறாயினமையின் மனிதர்களுக்குள்ளும், இவ்வாறு சபதஞ் செய்தவர்களுள் எவன் முதலில் மாறுபடுகின்றானோ, அவன் கெடுகின்றான் என்பது.

---

இப்போது அதை விதிக்கின்றது.

பிராமணம்—2

यत्तानूनप्त्रं समवद्यति भ्रातृव्याभिभूत्यै भवत्यात्मना पराऽस्य भ्रातृव्यो भवति ।

என்பது.

உரை.

தானூநப்த்ரம் என்னும் நெய்யை எல்லாரும் ஒன்றுகூடி எடுக்கில் பகைவன் தாழ்ந்துபோகின்றான், தான் ஐசுவரிய முடையவனாகின்றான் என்பது.

---

நெய்யெடுக்கும் தொகையை விதிக்கின்றது.

பிராமணம்—3

पञ्च कृत्वोऽवद्यति पञ्चधा हि ते तत्समवाद्यन्ताथो पञ्चाक्षरा पङ्क्तिः पाङ्क्तो यज्ञो यज्ञमेवावरुन्धे ।

என்பது.

உரை.

ஐந்துமுறை எடுத்தல்வேண்டும். ஐவகையாய்ப் பிரிந்த தேவர்கள் பிறகு ஒன்றுபட்டு பிரியதநூக்களை நிறுவினர். ஐந்து எழுத்துக்களைக் கொண்டது பந்திச்சந்தம் பந்தி சம்பந்தமுடையது வேள்வி. இதனால் வேள்வியை யடைகின்றான் என்பது.

---

நெய்யை எடுத்தல்)

மந்திரங்கட்கு உரை கூறுகின்றது.

பிராமணம்—4

आपतये त्वा गृह्णामीत्याह प्राणो वा आपतिः प्राणमेव प्रीणाति परिपतय इत्याह मनो वै परिपतिर्मन एव प्रीणाति तनूनप्त्र इत्याह तनुवो हि ते तास्समवाद्यन्त शाक्वरायेत्याह शक्त्यै हि ते तास्समवाद्यन्त शक्मन्नोजिष्ठायेत्याहौजिष्ठꣳ हि ते तदात्मनस्समवाद्यन्त ।

என்பது.

உரை.

'ஆபதயேத்வா க்ருண்ஹாமி' என்றது, ஆபதியாகிய பிராணனைப் பிரியப் படுத்துகின்றது. 'பரிபதயே' என்றது; மனம் பரிபதியாம் அதைப் பிரியப் படுத்துகின்றது. 'தநூ நப்த்ரே' என்றது தநுக்களை ஒன்றுபடுத்தும் சாடராக்கினியைப் பிரியப் படுத்துகின்றது. 'சாக்வராய' என்றது, சத்தியின் பொருட்டாம்; ஏனெனின்? வலியின் பொருட்டே ஒன்றுகூடுதலின் என்க 'ஒசிஷ்டாய' என்றது, அப்போது தேவர்கள், புத்திரன் முதலானோர்களின் சாரத்தை யடைந்துள்ளார்கள் என்கின்றது.

ஈண்டு, ஆபதி, பரிபதி, தநூ நப்த்ர, சாக்வர, சக்மந்நோஜிஷ்ட என்னுஞ் சொற்கள் தேவர்களின் ஏதோ ஒரு விருத்தாந்தத்தைக் குறிப்பிக்கின்றன என்பதை யுணர்க.

---

மந்திரத்தின்பொருள் உள்ளவாறு வெளிப்படை என்கின்றது.

பிராமணம்—5

अनाधृष्टमस्यनाधृष्यमित्याहानधृष्टꣳ ह्येतदनाधृष्यं देवानामोजः इत्याह देवानाꣳ ह्येतदोजोऽभिशस्तिपा अनभिशस्तेन्यमित्याहाभिशस्तिपा ह्येतदनभिशस्तेन्यम् ।

என்பது.

உரை.

'அநாதிருஷ்டம்' என்றது முதலியன, என்றும் பழிப்பிலாததும், தேவர்களின் வன்மையாயும், பகைவாராமற் பாதுகாப்பதுமாக இருக்கின்றது இந் நெய் என்கின்றது என்பது

---

எசமானன் நெய்யைத் தொடுவதற்கு ஓதும் மந்திரப்பொருள் வெளிப்படை என்கின்றது.

பிராமணம்—6

'अनुमे दीक्षां दीक्षापतिर्मन्यतामित्याह यथायजुरेवैतत् ।

என்பது.

உரை.

இவ்வெசுரில் கூறியபொருள் அவ்வாறேபாம் என்பது.

---

சோமத்தின்மீது நீர்தெளிக்கும் மந்திரத்திற்கு உரை கூறுதற்பொருட்டு முன்னுரை கூறுகின்றது.

பிராமணம்—7

घृतं वै देवा वज्रं कृत्वा सोममघ्नन्नन्तिकमिव खलु वा अस्यैतच्चरन्ति यत्तानूनप्त्रेण प्रचरन्ति ।

என்பது.

உரை.

முன்னர், தேவர்கள் நெய்யை வச்சிராயுதமாகச் செய்து சோமத்தை அடித்ததால், இப்போது, வேள்விச் செயலாளர்கள் சோமத்திற்கு நெய்யாற் கிரியை செய்வதாலும், அருகில் சோமமிருத்தலானும் சோமத்திற்குப் பயமுண்டாதல் கூடும்; அதைப்போக்க நீரால் நனைத்துவிடல்வேண்டு மென்பதாம்.

---

அம் மந்திரத்திற்கு உரை கூறுகின்றது.

பிராமணம்—8

अꣳशुरꣳशुस्ते देव सोमाऽऽप्यायतामित्याह यदेवास्यापुवायते यन्मीयते तदेवास्यैतेनाऽऽप्याययत्या तुभ्यमिन्द्रः प्यायतामा त्वमिन्द्राय प्यायस्वेत्याहोभावेवेन्द्रं च सोमं चाऽऽप्याययत्या प्यायय सखीन्त्सन्या मेधयेत्याहर्त्विजो वा अस्य सखायस्तानेवाऽऽप्याययति स्वस्ति ते देव सोम सुत्यामशीयेत्याहाऽऽशिषमेवैतामा शास्ते ।

என்பது.

உரை.

'அம்சுః' என்பது முதலியன, யாம் நீர்தெளித்ததால் உனது அவயவங்கள் வளருக. உன்னால் இந்திரன் களிப்படைவானாக. உனது நண்பர்களான

நெய்யை எடுத்தல்)

வேட்போர்கள் களிப்படைவார்களாக. யாமும் உனது இரசத்தைப் பிழிந்தெடுக்கும் வழியை நன்கு உணர்வோமாக என்று ஆசீர்வாதங் கூறலாம் என்பது.

---

'ஏஷ்டாராயஃ' என்பதாற் செய்யப்படும் வணக்கம் சமயம் அல்லாததன்று, மற்றோ, அதற்கு நிமித்தமுண்டு 'என்கின்றது.

பிராமணம்—9

**प्रवा एतेऽस्माल्लोकाच्च्यवन्ते ये सोममाप्याययन्त्यन्तरिक्षदेवत्यो हि सोम आप्यायित एष्टा रायः प्रेषे भगायेत्याह द्यावापृथिवीभ्यामेव नमस्कृत्या-स्मिँल्लोके प्रतितिष्ठन्ति ।**

என்பது.

உரை.

சோமத்திற்கு நீர் தடவி உபசாரஞ் செய்கின்றவர்கள். இவ் வுலகிலிருந்து நீங்கிவிடுகின்றனர். சோமமும் நாற்காலியின்மீது வைக்கப்படுதலின் அந்தரிக்க வுலகிலிருக்கின்றதாம், ஆதலின், இம் மந்திரத்தால் பூமிக்கும் அந்தரிக்ஷத்திற்கும் வணக்கங்கூறில் இவ்வுலகில் நிலையை யடைகின்றன என்பது.

---

'அக்னேவ்ரதபதே' என்னு மந்திரப்பொருள் வெளிப்படையாம் என்னுங் கருத்துக்கொண்டு அவாந்தர தீட்சையின் தொடக்கத்தை விதிக்கின்றது.

பிராமணம்—10

**देवासुरास्संयत्ता आसन्ते देवा बिभ्यतोऽग्निं प्राविशन्तस्मादाहुरग्निस्सर्वा देवता इति तेऽग्निमेव वरूथं कृत्वाऽसुरानभ्यभवन्नग्निमिव खलु वा एष प्रविशति योऽवान्तरदीक्षामुपैति भ्रातृव्याभिभूत्यै भवत्यात्मना पराऽस्य भ्रातृव्यो भवति ।**

என்பது.

உரை.

தேவாசுரர்கட்கு போர்தொடங்கியபோது தேவர்கள் பயந்துகொண்டு அக்கினியின் திருமேனியிற் புகுந்தனர். ஆதலின், அக்கினி எல்லாத் தேவர்களுமாம். அவ்வாறு புகுந்து அக்கினியைக் கவசமாய்க்கொண்டு அசுரர்களை வென்றனர். அதுபோல் இவ் வவாந்தர தீட்சைசெய்து கொள்கின்றவர் இது தவ வடிவாமாதலின் அக்கினி யென்பதையே யடைகின்றார்கள். இதனால், தனக்கு வெற்றியும் பகைவருக்கு தோல்வியும் உண்டாகின்றது என்பது.

---

முற்கூறிய தீட்சை இப்போது கூறவேண்டுதலின் அவாந்தர தீட்சையைப் புகழ்கின்றது.

பிராமணம்—11

**आत्मानमेव दीक्षया पाति प्रजामवान्तरदीक्षया ।**

என்பது.

உரை.

*தீட்சையால் தனதான்மாவைப் பாதுகாத்துக்கொள்கின்முன். அவாந்தரதீட்சையால் பிரசைகளைப் பாதுகாக்கின்முன் என்பதாம்.*

---

அவாந்தர தீட்சையின் நியமங்களை விதிக்கின்றது

பிராமணம்—12

**संतरां मेखलाँ समायच्छते प्रजा ह्यात्मनोऽन्तरतरा तप्तव्रतो भवति मदन्तीभिर्मार्जयते निर्ह्यग्निश्शीतेन वायति समिद्ध्यै ।**

என்பது.

உரை.

*இடுப்பிற் கட்டியுள்ள தருப்பைக்கயிறு பிரசையாமாதலின் மிகுந்த நெருக்கமுடையது அதை உள்ளவாறு சுருக்கிக் கட்டிக்கொள்ளல் வேண்டும். இனி, வெந்நீர் அருந்தி, வெந்நீராலேயே கைகால் முதலியவைகளையுங் கழுவிக்கொள்ளல் வேண்டும். தண்ணீராற் செய்துகொள்ளில் அக்கினி அணையும். இவ்வாறு செய்தல் தவவடிவ அக்கினிவளர்தற் பொருட்டென்பது.*

---

விரத மந்திரத்திலுள்ள 'ருத்ரியா' என்னுஞ் சொல்லின் கருத்தைக் கூறுகின்றது.

பிராமணம்—13

**या ते अग्ने रुद्रिया तनूरित्याह स्वयैवैनद्देवतया व्रतयति सयोनित्वाय शान्त्यै ॥**

என்பது.

உரை.

*'யாதே' என்பது முதலியன, உதராக்கினியின் மற்றொருவடிவாம் உருத்திரத்திருமேனியாகிய அதனுல் பாலைச் சூடாக்கி யருந்தில் தனக்குக் காரணமாகிய அக்கினியுடன் அருந்தியதாயிற்று. இதனுல், உக்கிரமாகிய அக்கினி சாந்தமடையும் என்பதாம்.*

இரண்டாவது அநுவாகம்

*முற்றிற்று.*

---

## ஆறுங்காண்டம் இரண்டாம் பிரபாடகம்

### மூன்றுவது அநுவாகம்

உபசத் யாகத்தைக் கூறும் பிராமணங்கள்.

ஐந்து பஞ்சாதிக்குமேல் பதினுறு பதங்களைக் கொண்டது.

तेषामसुराणां तिस्रः पुर आसन्नयस्मय्यवमाऽथ रजताऽथ हरिणी ता देवा जेतुं नाशक्नुवन्ता उपसदैवाजिगीषन्तस्मादाहुर्यश्चैवं वेद यश्च नोपसदा वै महापुरं जयन्तीति त इषुꣳ समस्कुर्वताग्निमनीकꣳ सोमꣳ शल्यं विष्णुं तेजनं तेऽब्रुवन्क इमामसिष्यतीति [१५] रुद्र इत्यब्रुवरुन्द्रो वै क्रूरस्सोऽस्यत्विति सोऽब्रवीद्वरं वृणा अहमेव पशूनामधिपतिरसानीति तस्माद्रुद्रः पशूनामधिपतिस्ताꣳ रुद्रोऽवासृजत्स तिस्रः पुरो भित्त्वैभ्यो लोकेभ्योऽसुरान्प्राणुदत यदुपसद उपसद्यन्ते भ्रातृव्यपराणुत्त्यै नान्यामाहुतिं पुरस्ताज्जुहुयाद्यदन्यामाहुतिं पुरस्ताज्जुहुयात् [१६] अन्यन्मुखं कुर्यात्स्रुवेणाऽऽघारमा घारयति यज्ञस्य प्रज्ञात्यै पराङतिक्रम्य जुहोति पराच एवैभ्यो लोकेभ्यो यजमानो भ्रातृव्यान्प्र णुदते पुनरत्याक्रम्योपसदं जुहोति प्रणुद्यैवैभ्यो लोकेभ्यो भ्रातृव्याञ्जित्वा भ्रातृव्यलोकमभ्यारोहति देवा वै याः प्रातरुपसद उपासीदन्नह्नस्ताभिरसुरान्प्राणुदन्त यास्सायꣳ रात्रियै ताभिर्यत्सायंप्रातरुपसदः [१७] उपसद्यन्तेऽहोरात्राभ्यामेव तद्यजमानो भ्रातृव्यान्प्र णुदते याः प्रातर्याज्यास्स्युस्तास्सायं पुरोनुवाक्याः कुर्यादयातयामत्वाय तिस्र उपसद उपैति त्रय इमे लोका इमा

नेव लोकान्प्रीणाति षट्सं पद्यन्ते षड्वा ऋतव ऋतूनेव प्रीणाति द्वादशाहीने सोम उपैति द्वादश मासास्संवत्सरस्संवत्सरमेव प्रीणाति चतुर्विꣳशतिस्सम् [१८] पद्यन्ते चतुर्विꣳशतिरर्धमासा अर्धमासानेव प्रीणात्याराग्रामवान्तरदीक्षामुपेयाद्यः कामयेतास्मिन्मे लोकेऽर्धुकꣳ स्यादित्येकमग्रेऽथ द्वावथ त्रीनथ चतुर एषा वा आराग्राऽवान्तरदीक्षाऽस्मिन्नेवास्मै लोकेऽर्धुकं भवति परोवरीयसीमवान्तरदीक्षामुपेयाद्यः कामयेतामुष्मिन्मे लोकेऽर्धुकꣳ स्यादिति चतुरोऽग्रेऽथ त्रीनथ द्वावथैकमेषा वै परोवरीयस्यवान्तरदीक्षाऽमुष्मिन्नेवास्म लोकेऽर्धुकं भवति [१९] ॥ असिष्यतीति जुहुयात्सायंप्रातरुपसदश्चतुर्विꣳशतिस्सं चतुरोऽग्रे षोडश च ॥ ३ ॥

இதில், அசுரர்களைக் கொல்வதன் பொருட்டு உபசத் என்னும் (இரைச்சலில்லாமற் செய்யும்) ஒரு வகை யாகங் கூறப்படுகின்றது.

---

மூன்று 'உபசத்' ஹோமங்கள் செய்வதன்பொருட்டு முன்னுரை கூறப்படுகின்றது.

பிராமணம்—1

तेषामसुराणां तिस्रः पुर आसन्नयस्मय्यवमाऽथ रजताऽथ हरिणी ता देवा जेतुं नाशक्नुवन्ता उपसदैवाजिगीषन्तस्मादाहुर्यश्चैवं वेद यश्च नोपसदा वै महापुरं जयन्तीति त इषुꣳ समस्कुर्वतानिमनीकꣳ सोमꣳ शल्यं विष्णुं तेजनं तेऽब्रुवन्क इमामसिष्यतीति रुद्र इत्यब्रुवन्रुद्रो वै क्रूरस्सोऽस्यत्विति सोऽब्रवीद्वरं वृणा अहमेव पशूनामधिपतिरसानीति तस्माद्रुद्रः पशूनामधिपतिस्ताꣳ रुद्रोऽवासृजत्स तिस्रः पुरो भित्त्वैभ्यो लोकेभ्योऽसुरान्प्राणुदत ।

என்பது.

யாகம்)

உரை.

அக்கினியாகிய கவசத்தால் தோல்வியுற்ற அசுரர்கட்கு, பூவுலகில் இரும்புமயமாகிய அரணும், அந்தரிக்ஷத்தில் வெள்ளிமயமாகிய அரணும், சுவர்க்கத்தில் பொன்மயமாகிய அரணும் உள்ளன. அவைகள், அக்கினி யாகிய கவசத்தாலும் வெல்ல முடியாதவைகளாதலின் போரை நிறுத்தி விட்டு, தேவர்கள், உபசத்யாகத்தால் அவைகளை வெல்லவிரும்பி அம் மூன்று அரண்களுக் கருகிற்சென்று சூழ்ந்துகொண்டு வசித்தனர். அவ் வாறு நெடுநாள் வசித்தமையின் அவ் வரண்களுக்குள்ளிருந்த அசுரர்கட்கு உணவு முதலியவைகள் கிட்டாமலோ, அல்லது உட்பயத்தாலோ, வெற்றி யுண்டு என்று எண்ணினர். இதுபற்றியே, அந்தணர் முதலானோரை, போரிட்டு வெல்ல முடியாது உபசத்தால் வெல்லலாம் என்று பேசுகின்றது உலகமும். பிறகு, தேவர்கள் விரைந்து, ஆராய்ந்து போரிட்டே வெல்ல வேண்டுமென்று உறுதிகொண்டு, அக்கினி, சோமம், விஷ்ணு என்னு மூவரை யும் ஒரு அம்பாகச் செய்துகொண்டு அசுரரை அடியோடு கொல்லும், மூன்று தேவதைகள் வடிவாகிய இதை விடுபவர் யாரென? ஆராய்ந்து பசுக் கட்குப் பதியாயும் உக்கிரமுடையவருமாகிய உருத்திரரே இதற்கு உரி யாரெனக் கண்டு, உருத்திரற்கு வரமளித்தனர். உருத்திரர் அவ்வம்பால் மூன்று அரண்களையும் உடைத்து அசுரர்களையுந் தொலைத்தனர் என்பது.

---

அதை விதிக்கின்றது.

பிராமணம்—2

**यदुपसद उपसद्यन्ते भ्रातृव्यपराणुत्त्यै ।**

என்பது.

உரை.

பகைவனுடைய அரண்களை முற்றுகை போட்டுக்கொண்டிருந்து விரோ திகளைத் தொலைத்ததால் இது உபசத் எனப்படும். அதாவது இரைச்சலற்றுச் செய்வது என வழங்கப்படுகின்றது. இது, பகைவரைத் தொலைத்தற் பொருட்டுச் செய்யப்படுவதாம் என்பது.

---

உபசத் யாகத்திற்கு நெய் அவியாமாதலின், உபாம்சு யாகம்போல் பிர யாசை ஆச்யபாக முதலிய ஆகுதிகளுஞ் செய்தல் வேண்டுமென வந்த போது அதை விலக்குகின்றது.

பிராமணம்—3

**नान्यामाहुतिं पुरस्ताज्जुहुयाद्यदन्यामाहुतिं पुरस्ताज्जुहुयादन्यन्मुखं कुर्यात् ।**

என்பது.

உரை.

முன்னர் ஒரு ஆகுதியுஞ் செய்தல்கூடாது; செய்யில், அக்கினியே முதலில் போற்றத்தக்கது என்பது விடுபட்டுப்போம் என்பது.

---

ஏனைய ஆகுதிகள் முழுதும் விலக்கப்பட்டபோது ஒரு ஆகுதி செய்யத்தக்கதென விதிக்கின்றது.

பிராமணம்—4

**स्रुवेणाऽऽघारमा घारयति यज्ञस्य प्रज्ञात्यै ।**

என்பது.

உரை.

தரிசபூரணமாதயாகங்கள் ஆகார ஹோமத்தை யுடையவைகளாதலின் உபசத் யாகமும் எக்ஞமாந்தன்மையுடையது என்று அறிவுறுத்துவதற்கு ஆகார ஹோமத்தை யுடையதாம். அதாவது, உபசத் யாகத்தில் ஆகார ஹோமஞ் செய்தல்வேண்டு மென்பதாம்.

---

மூன்று உபசத் யாகங்களின் ஹோமமுறையை விதிக்கின்றது.

பிராமணம்—5

**पराङतिक्रम्य जुहोति पराच एवैभ्यो लोकेभ्यो यजमानो भ्रातृव्यान्प्रणुदते ।**

என்பது.

உரை.

வேதிக்கும் ஆகவனீயத்திற்கும் நடுவாய்த் தாண்டிக்கொண்டு தெற்கில் போய் மீண்டும் வராதபடியே அங்கேயே வடக்குமுகமாய் நின்றுகொண்டு, அக்கினி, சோமன், விஷ்ணு என்னும் மூவருக்கும் மூன்று ஹோமங்களைச் செய்தல் வேண்டும். இதனால், மூன்றுலகங்களி னின்றும் மீண்டும் வாராதபடி பகைவன் விலக்கப்பட்டவனுகின்முன் என்பது.

---

நான்காம் ஆகுதிமுறையை விதிக்கின்றது.

பிராமணம்—6

**पुनरत्याक्रम्योपसदं जुहोति प्रणुद्यैवैभ्यो लोकेभ्यो भ्रातृव्याञ्जित्वा भ्रातृव्यलोकमभ्यारोहति ।**

என்பது.

யாகம்)

உரை.

வேதியைத் தாண்டி வடக்கில் உட்கார்ந்துகொண்டு நான்காவது உபசத் ஹோமத்தைச் செய்தல்வேண்டும். இதனால், பகைவர்களை விலக்கிவிட்டு அவர்களுடைய மூன்று அரண்களிலும் இருந்துகொண்டதாகும் என்பது.

---

இரண்டு வேளையிலும் அதை அநுஷ்டிக்கவேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—7

**देवा वै याः प्रातरुपसद उपासीदन्नहस्ताभिरसुरान्प्राणुदन्त यास्सायꣳ-रात्रियै ताभिर्यत्सायं प्रातरुपसद उपसद्यन्तेऽहोरात्राभ्यामेव तद्यज-मानो भ्रातृव्यान्प्रणुदते ।**

என்பது.

உரை.

தேவர்கள், காலையில் உபசத் யாகஞ்செய்து பகலில்வரும் அசுரர்களைப் போக்கினர். மாலையில்செய்த உபசத் யாகத்தால் இராத்திரியில்வரும் அசுரர்களைப் போக்கினர். அதுபோல் காலை மாலைகளில் உபசத் யாகஞ்செய்யும் எசமானன் பகைவனைத் தொலைத்துவிடுகின்றான் என்பது.

---

இரண்டு வேளைகளிலும் யாஜ்யா புரோநுவாக்கியங்கள் மாறுபடுகின்றன என்பதை விதிக்கின்றது.

பிராமணம்—8

**याः प्रातर्याज्यास्स्युस्तास्सायं पुरोनुवाक्याः कुर्यादयातयामत्वाय ।**

என்பது.

உரை.

காலையில் எது யாஜ்யாவாக்கியமோ, அது, மாலையில் புரோநுவாக்கியமாகின்றது. ஏனெனின்? இது நேரஞ்செல்லாமலும் இரசங்கெடாமலும் இருத்தற் பொருட்டென்க என்பது.

---

மூன்றுநாள் இதை அநுட்டிக்க வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—9

**तिस्र उपसद उपैति त्रय इमे लोका इमानेव लोकान्प्रीणाति ।**

என்பது.

உரை.

மூன்று நாள் உபசத் யாகஞ்செய்வதால் மூன்றுலகத்தையும் பிரியப் படுத்துகின்றான் என்பது.

---

மூன்று நாட்களிலும் இரண்டுவேளை செய்தல்வேண்டு மென்பதைப் புகழ்கின்றது.

பிராமணம்—10

**षट्सं पद्यन्ते षड्वा ऋतव ऋतूनेव प्रीणाति ।**

என்பது.

உரை.

மூன்று நாட்களிலும் ஆறு வேளைகள் செய்வதால் இருதுக்கள் ஆறை யும் பிரியப்படுத்துகின்றான் என்பது.

---

பிரசங்கம்பற்றி, அகீனமாகிய இரண்டு சுத்யாகசு முதலிய யாகங்களிலும் உபசத் நாளை விதிக்கின்றது.

பிராமணம்—11

**द्वादशाहीने साम उपैति द्वादश मासास्संवत्सरस्संवत्सरमेव प्रीणाति ।**

என்பது.

உரை.

இரண்டு சுத்தியாகசுமுதல் பன்னிரு சுத்தியாகசு வரையுடைய அஹீன சோமயாகங்களில் பன்னிரண்டு நாட்களிற்செய்யும் உபசத் யாகங் களால் மாதங்களைப் பிரியப்படுத்துகின்றான் என்பது. சத்திரயாகத்திலும் இவ்வாறேயாம் என்பதையுமுணர்க.

---

பன்னிரண்டு நாட்களிலும் இரண்டு வேளையுஞ் செய்தல்வேண்டு மென்பதைப் புகழ்கின்றது.

பிராமணம்—12

**चतुर्विंशतिस्सम्पद्यन्ते चतुर्विंशतिरर्धमासा अर्धमासानेव प्रीणाति ।**

என்பது.

யாகம்)

உரை.

பன்னிரண்டு நாட்களிலும் இருபத்துநான்கு உபசத் யாகங்கள் ஆகின்றன. இது, ஒருவருடத்தினுடைய பாதிமாதம் ஆகிறது. இதனால், பாதி மாதம் பிரியப்படுத்தப் படுத்தப்பெறுகின்றது என்பது.

---

மேற்கூறிய இந்த உபசத் யாகதினங்களில் அவாந்தர தீட்சையில் விரதம் (பால்) அருந்துவதில் பசுவின் முலையின் எண் விதிக்கப்படுகின்றது.

பிராமணம்—13

**आराग्रामवान्तरदीक्षामुपेयाद्यः कामयेतास्मिन्मे लोकेऽर्धुकः स्यादित्येकमग्रेऽथ द्वावथ त्रीनथ चतुर एषा वा आराग्राऽवान्तरदीक्षाऽस्मिन्नेवास्मै लोकेऽर्धुकं भवति ।**

என்பது

உரை.

அவாந்தர தீட்சையில் இவ்வுலகில் நிறைந்த சம்பத்தை யடையவிரும்பில், சோமத்தை விலைக்கு வாங்குந்தினம் மாலையில் ஒரு முலைப்பால், மறுநாட்காலை இரண்டு முலைப்பால், மாலை மூன்று முலைப்பால், மறுநாள் நான்கு முலைப்பால் அருந்தல்வேண்டும். இது, இவ்வுலகில் இவனுக்கு நிறைந்த சம்பத்தை அளிக்கின்றது என்பது.

---

பரலோக சம்பத்தை விரும்பில் கூறியதில் மாறுபாடென்பதை விதிக்கின்றது.

பிராமணம்—14

**परोवरीयसीमवान्तरदीक्षामुपेयाद्यः कामयेतामुष्मिन्मे लोकेऽर्धुकः स्यादिति चतुरोऽग्रेऽथ त्रीनथ द्वावथैकमेषा वै परोवरीयस्यवान्तरदीक्षाऽमुष्मिन्नेवास्मै लोकेऽर्धुकं भवति ।**

என்பது.

உரை.

பரலோக சம்பத்தை விரும்புகின்றவன் தொடக்கத்தில் மிகுதியாயுள்ள அவாந்தர தீட்சையை யடைகின்றான். இதனால், பரவுலகில் நிறைந்த சம்பத்தை யடைகின்றான். அதாவது, சோமத்தை விலைக்குவாங்கும் நாள்

காலை நான்கு முலைப்பால், மாலை மூன்று முலைப்பால், மறுநாட்காலை இரண்டு முலைப்பால், மறுநாள் ஒரு முலைப்பால் அருந்தல்வேண்டும் என்பது.

மூன்றுவது அநுவாகம்

*முற்றிற்று.*

---

## ஆறுங்காண்டம் இரண்டாம் பிரபாடகம்

### நான்காவது அநுவாகம்

*மகாவேதியைக் கூறும் பிராமணங்கள்.*

ஐந்து பஞ்சாதிக்குமேல் இருபத்தைந்து பதங்களைக் கொண்டது.

सुवर्गं वा एते लोकं यन्ति य उपसद उपयन्ति तेषां य उन्न-
यते हीयत एव स नोदनेषीति सून्नीयमिव यो वै स्वार्थेतां यताꣳ-
श्रान्तो हीयत उत स निष्टयाय सह वसति तस्मात्सकृदुन्नीय
नापरमुन्नयेत दध्नोन्नयेतैतद्वै पशूनाꣳ रूप रूपेणैव पशूनव रुन्धे
[२०] यज्ञो देवेभ्यो निलायत विष्णू रूपं कृत्वा स पृथिवीं प्रावि-
शत्तन्देवा हस्तान्त्सꣳरभ्यैच्छन्तमिन्द्र उपर्युपर्यत्यक्रामत्सोऽब्र-
वीत्को माऽयमुपर्युपर्यत्यक्रमीदित्यहं दुर्गे हन्तेत्यथ कस्त्वमित्यहं
दुर्गादाहर्तेति सोऽब्रवीद्दुर्गे वै हन्ताऽवोचथा वराहोऽयं वाममोषः
[२१] सप्तानां गिरीणां परस्ताद्वित्तं वेद्यमसुराणां बिभर्ति तं
जहि यदि दुर्गे हन्ताऽसीति स दर्भपुञ्जीलमुद्वृह्य सप्त गिरीन्भित्त्वा
तमहन्त्सोऽब्रवीद्दुर्गाद्वा आहर्ताऽवोचथा एतमा हरेति तमेभ्यो
यज्ञ एव यज्ञमाऽहरद्यत्तद्वित्तं वेद्यमसुराणामविन्दन्त तदेकं वेद्यै
वेदित्वमसुराणाम् [२२] वा इयमग्र आसीद्यावदासीनः पराप-
श्यति तावद्देवानां ते देवा अब्रुवन्नस्त्वेव नोऽस्यामपीति कियद्वो

மகாவேதிகை)

दास्याम इति यावदियꣳ सलावृकी त्रिः परिक्रामति तावन्नो दत्तेति स इन्द्रस्सलावृकी रूपं कृत्वेमां त्रिस्सर्वतः पर्यक्रामत्तदिमामविन्दन्त यदिमामविन्दन्त तद्वेद्यै वेदित्वम् [२३] 'सा वा इयꣳ सर्वैव वेदिरियति शक्ष्यामीति त्वा अवमाय यजन्ते त्रिꣳशत्पदानि पश्चात्तिरश्ची भवति षट्त्रिꣳशत्प्राची चतुर्विꣳशतिः पुरस्तात्तिरश्ची दशदश सं पद्यन्ते दशाक्षरा विराडन्नं विराड्विराजैवान्नाद्यमव रुन्ध उद्धन्ति यदेवास्या अमेध्यं तदप हन्त्युद्धन्ति तस्मादोषधयः परा भवन्ति बर्हिस्स्तृणाति तस्मादोषधयः पुनरा भवन्त्युत्तरं बर्हिष उत्तरबर्हिस्स्तृणाति प्रजा वै बर्हिर्यजमान उत्तरबर्हिर्यजमानमेवायजमानादुत्तरं करोति तस्माद्यजमानोऽयजमानातुत्तरः [२४] ॥ रुन्धे वाममोषो वेदित्वमसुराणां वेदित्वं भवन्ति पञ्चविꣳशतिश्च ॥ ४ ॥

*இதில், மகாவேதிகையைச் செய்யும் முறை விதிக்கப்படுகின்றது.*

---

முதலில், முடியாதவனுக்கு விரதத்திற்குப் பிறகு சிறிது அருந்தும் உணவிற்கு அநுக்ஞை கொடுக்கின்றது.

பிராமணம்—1

**सुवर्गं वा एते लोकं यन्ति य उपसद उपयन्ति तेषां य उन्नयते हीयत एव स नोदनेषीति सून्नीयमिव ।**

*என்பது.*

உரை.

*உபசத் யாகங்களால் சுவர்க்கம் அடையப்படுதலின் சவனத்துடன் அதை அநுட்டித்தல்வேண்டும். மன உறுதியில்லாதவன் விரதத்திற்குப் பிறகு உணவருந்துவானாகில் சுவர்க்த்தை யடையமாட்டான். ஆதலின், முடியாதவன்கூட 'விரதத்திற்குப் பிறகு ஒன்றும் அருந்தமாட்டேன்' என்று*

கொள்வானேல், வேறுவாக்கியத்திற் கூறியபடி, அந்தணனுக்கு பால், அரசனுக்கு யவாகு, (அரிசிக்கஞ்சி) வணிகனுக்கு முறிந்த பால்மாத்திரம் விரதங்களாம். முடியாதவனுக்கோ, முறையே, அன்னம், அரிசிப்பொரி, அரிசிமா சிறிதளவு அருந்தல்கூடும் இதன் விரிவை கூழ்மாண்ட ஹோமப் பிரகரணத்திற் காண்க என்பது

---

விரதத்தைப் பின்பற்றிக் கொண்டிருப்பவனுக்கும் பயன் இல்லாமற்போகாது என்பதில் உவமையைக் கூறுகின்றது.

பிராமணம்—2

**यो वै स्वार्थेतां यताꣳ श्रान्तो हीयत उत स निष्ट्याय सह वसति ।**

என்பது.

உரை.

தனதுபயனைக் கருதிச் செல்கின்றவன், முயற்சிக்கின்றவன் என்னும் இருவருடனும், அதாவது தைமாதத்தில் பிரயாகையில் நீராடுவதற்குச் செல்கின்றவனைக் கண்டு அன்று செல்லமுடியாத மற்றொருவன் மறுநாட் சென்று அத்தீர்த்த வாசியுடன் எஞ்சியநாள் வசிக்கின்றவனுக்கு பயன் கிடைப்பதுபோல், விரதமநுட்டிப்பவன் சிறிது பசிதணிப்பவனுடனிருந்து நியமங்களை அநுட்டிக்கினும் அவனுக்கு பயன் உண்டு என்பதாம்.

---

அதை நியமிக்கின்றது.

பிராமணம்—3

**तस्मात्सकृदुन्नीय नापरमुन्नयेत ।**

என்பது.

உரை.

விரதப்பாலைத் தவிர்த்து மற்றவைகளை ஒரு முறைதான் அருந்திக் கொள்ளல் வேண்டும் இரண்டாம்முறை கூடாது என்பது.

---

ஒரு முறை எடுத்துக்கொள்வதற்கு பொருள்களை விதிக்கின்றது

பிராமணம்—4

**दध्नोन्नयेतैतद्वै पशूनाꣳ रूपꣳ रूपेणैव पशूनव रुन्धे ।**

என்பது

உரை.

பசுக்களின் வடிவாகிய தயிரை சமசத்தில் எடுத்து அருந்தல் வேண்டும்; இதனால், பசுக்களை யடைகின்றான் என்பது. சமசம்=பாலருந்தும் பாத்திரம்.

---

இனி, சோமயாக வேதிகை போடுவதற்கு முன்னுரை கூறுகின்றது.

பிராமணம்—5

**यज्ञो देवेभ्यो निलायत. विष्णू रूपं कृत्वा स पृथिवीं प्राविशत्तं देवा हस्ता-न्त्सꣳरभ्यैच्छन्तमिन्द्र उपर्युपर्यत्यक्रामत्सोऽब्रवीत्को माऽयमुपर्युपर्यत्य-क्रमीदित्यहं दुर्गे हन्तेत्यथ कस्त्वमित्यहं दुर्गादाहर्तेति सोऽब्रवीद्दुर्गे वै हन्ताऽवोचथा वराहोऽयं वाममोषस्सप्तानां गिरीणां परस्ताद्वित्तं वेद्यमसुराणां बिभर्ति तं जहि यदि दुर्गे हन्ताऽसीति स दर्भपुञ्जीलमु-द्वृह्य सप्त गिरीन्भित्त्वा तमहन्त्सोऽब्रवीद्दुर्गाद्वा आहर्ताऽवोचथा एतमा हरेति तमेभ्यो यज्ञ एव यज्ञमाऽहरद्यत्तद्वित्तं वेद्यमसुराणामविन्दन्त तदेकं वेद्यै वेदित्वम् ।**

என்பது.

உரை.

சுவர்க்கத்திலுள்ள எக்ஞபுருடன் மறைந்துகொள்வதற் பொருட்டு முழு வைஷ்ணவத்தை எடுத்துக்கொண்டு தேவர்களிடத்திலிருந்து ஓடிவந்து பூமியை அடைந்து தேவர்கள் பின்னாலேயேவந்து எக்ஞபுருடனை விடாமல் கையால் தடுத்தனன். இந்திரனோ, எக்ஞபுருடன் போகுமிடம் எல்லாம் போய் முன்னால் மறித்துக்கொண்டு நின்றனன். அப்போது, எக்ஞபுருடன் இந்திரனை நோக்கி, நீயார்? என்று வினவியதற்கு, யான், ஒருவருஞ் செல்ல முடியாத மடுவிலிருக்கும் பகைவனையும் அங்குச் சென்றுகொல்லும் ஆற்றலுடையவன் என்றனன். இந்திரனும் எக்ஞபுருடனை நோக்கி, நீ யார்? என வினவியதற்கு, யான், மிகுந்த மடுவிலுள்ள பகைவனையுங் கொண்டுவருவேன், என்று தனது விருத்தாந்த மனைத்தையுங் கூறினன். அதாவது:— முன்னொருகால் அசுரர்கள் மிகுதியானதை நோக்கி எனக்கு அங்கங்களான, நால்வகைத் தீட்சைகள், மூன்று உபசத்துக்கள் ஒரு சுத்தியாகசு எனப் படும் எட்டுநாளிற் செய்யப்படுங் கருமங்கள் சுவர்க்கத்திலிருந்து மண்ணுலகை யடைந்தன. அவற்றுள் தீட்சை நான்கும், உபசத் மூன்றும் ஏழு மலைகளாயின. சுத்தியாபிமானி தேவதை, சோமயாகவேதி, சோமரச பாத்திரங்

கள், சமசம் முதலியவைகளைத் திருடுவதாகி அவற்றைத் திருடிக்கொண்டு போய் அசுரர்கட்குக் கொடுத்துவிட்டு பன்றி வடிவையடைந்து ஏழு மலைக்கும் அப்பால் அசுரர்களுடைய பொருளைப் பாதுகாக்கின்றது; அத்தகைய தேவர்களின் பொருள் தேவர்கட்குக் கிடைத்தல்வேண்டும். இந்திர! நீ மடுவிலுள்ள பகைவனைக் கொல்லும் ஆற்றலுடையோனெனின் அப்பன்றியைக் கொல்வாயாக என்றனன்; அதைக்கேட்ட இந்திரன் தருப்பைக் கொம்பால் ஏழுமலைகளையும் பிளந்துவிட்டு அப் பன்றியையுங் கொன்றனன். அதன் பிறகு இந்திரன், அற்றேல், மடுவிலுள்ள பகைவனைக் கொண்டு வரும் ஆற்றலுடையாய் எனின்? பகையாகிய பன்றியைக் கொண்டு வருவாயாக என்றனன். அதைக்கேட்ட எக்ஞ புருடன் வேதிவடிவாகிய பன்றி, சோம ரச பாத்திரங்கள். அம்சங்கள் முதலான தேவர்களின் பொருள்களைக் கொண்டுவந்து தேவர்கட்குக் கொடுத்தனன். இது பற்றியே, மீண்டும் அடையப்பட்டது வேதி என்னுங் காரணப் பெயரும் வந்தது என்பது. வைஷ்ணவம்=வேள்வியங்கமான கருமங்கள்.

---

மற்றொரு வகையாலும் வேதி இன்னதென்பதை விளக்குகின்றது.

பிராமணம்—6

**असुराणां वा इयमग्र आसीद्यावदासीनः परापश्यति तावद्देवानां ते देवा अब्रुवन्नस्त्वेव नोऽस्यामपीति कियद्वो दास्याम इति यावदियँ सलावृकी त्रिः परिक्रामति तावन्नोदत्तेति स इन्द्रस्सलावृकी रूपं कृत्वेमां त्रिस्सर्वतः पर्यक्रामत्तदिमामविन्दन्त यदिमामविन्दन्त तद्वेद्यै वेदित्वम् ।**

என்பது.

உரை.

இப் பூமி, முன்னர் அசுரர்களுடைய இடமாக இருந்தது தேவர்கட்கு வேறிடம் இல்லாததால் எமக்கும் இதில் இடந்தரல் வேண்டுமென்றனர். அதைக்கேட்ட அசுரர், உங்கட்கு எவ்வளவு இடங்கொடுக்கவேண்டும்? என்று வினவினர். அதற்கு தேவர்கள், செந்நாய் மும்முறை வலம் வரும் அளவு இடம் என்றனர். அதைக்கேட்டு, இந்திரன் செந்நாய் வடிவங்கொண்டு மும்முறை வலம் வந்தனன் வந்த அதுவரை தேவர்கள் அடைந்தனர். ஆதலின் வேதி எனப்பட்டது. வேதி=அடைதல் என்பது.

ஈண்டு, முற்கூறிய வகையில் பூமி முழுதும் வேதியாம். இதிலோ, 'வஸவஸ்த்வா' என்பது முதலிய மந்திரத்தால் எவ்வளவு இடம் வாங்கப் பெற்றதோ, அதுவரையே வேதியாம் என்பதுவே இவற்றுள் வேறுபாடு என்பதை யுணர்க.

---

மகாவேதிகை)

பூமி முழுதும் வேதியாயிருப்பினும் வேள்வி செய்யும்வரை தனித்துப் பிரித்துவிடல் வேண்டும் என்பதை விதிக்கின்றது.

பிராமணம்—7

**सा वा इयं सर्वैव वेदिरियति शक्ष्यामीति त्वा अवमाय यजन्ते ।**

என்பது.

உரை.

பூமி முழுதும் வேதியாயிருப்பினும் யாதேனும் ஓரிடத்தில் வேள்வி செய்தல் கூடாது, மற்றோ, இவ்வளவிடத்தில், "சபை அவிர்த்தானம் முதலான இடங்களைச் செய்வேன்'' என்று உறுதிசெய்துகொண்டு அவ்வளவிடத்தை யடைந்து அளந்து அங்கு யாகஞ்செய்தல் வேண்டும் என்பது.

---

வேதிகை எத்தனை அடிகள் அளவுடையது? என்பதை விதிக்கின்றது.

பிராமணம்—8

**त्रिंशत्पदानि पश्चात्तिरश्ची भवति षट्त्रिंशत्प्राची चतुर्विंशतिः पुरस्तात्तिरश्ची दशदश सं पद्यन्ते दशाक्षरा विराडन्नं विराड्विराजैवान्नाद्यमव रुन्धे ।**

என்பது.

உரை.

பிரவர்க்கியம் உபசத் என்பவைகட்கிடையில், ஆகவனீயத்திற்குக் கிழக்கில் மூன்று அடிகளைத் தள்ளி, அதிலிருந்து கிழக்கில் முப்பத்தாறு அடி அளந்து அதை நீளமாகவும், முப்பது அடி மேல் பக்கத்தில் அகலமாகவும், இருபத்து நான்கு அடி கிழக்குப் பக்கத்தில் அகலமாகவும், வேதிகை செய்தல் வேண்டும். இவ்வெண்ணில், ஒன்பது பத்துக்கள் இருத்தலின், பத்தெழுத்துக்களைக் கொண்ட விராட்சந்தமாகிய உணவுப் பொருள்களை யடைகின்றான் என்பது.

---

மேற்கூறிய அளவுள்ள விடத்தின் மேல் மண்ணை எடுத்துவிடல் வேண்டுமென விதிக்கின்றது.

பிராமணம்—9

**उद्धन्ति यदेवास्या अमेध्यं तदप हन्ति ।**

என்பது.

உரை.

மண்ணைக் கெல்லி எடுத்தலால் எச்சியுமிழ்ந்திருத்தல் முதலிய அசுத்தம் நீக்கப்படுகின்றது என்பது.

---

அவ் விதியையே எடுத்துக்கொண்டு புகழ்கின்றது.

பிராமணம்—10

उद्धन्ति तस्मादोषधयः परा भवन्ति बर्हिस्स्तृणाति तस्मादोषधयः पुनरा भवन्ति ।

என்பது.

உரை.

அவ்விடத்தில் முளைத்திருந்த கொடி செடிகள், முன் மண்ணைக்கெல்லியதால் போய்விட்டன. ஆதலின், வேதிகையில் தருப்பையைப் பரப்புதலால் மீண்டும் கொடி செடிகள் உண்டாகும் என்பது.

---

விரித்த தருப்பையின் மீது மீண்டும் அக்கினி சோமர்களுடைய பசுவின் பொருட்டு உத்தரவேதியில் தருப்பையைப் பரப்பல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—11

उत्तरं बर्हिष उत्तरबर्हिस्स्तृणाति प्रजा वै बर्हिर्यजमान उत्तरबर्हिर्यजमानमेवायजमानादुत्तरं करोति तस्माद्यजमानोऽयजमानादुत्तरः ।

என்பது.

உரை.

பிரசை தருப்பை யாம். எசமானன் உத்தரவேதியிற் பரப்புந் தருப்பை யாம்; ஆதலின், உத்தரவேதிகையில் தருப்பையைப் பரப்புகின்றவன், எசமானன் ஆகாதவர்களினின்றும் இவனை எசமானனாகச் செய்கின்றான். அதாவது அவர்களிலிருந்துஞ் சிறப்புடையவனாக்குகின்றான் என்பது.

நான்காவது அநுவாகம்

முற்றிற்று.

---

## ஆறுங்காண்டம் இரண்டாம் பிரபாடகம்

ஐந்தாவது அநுவாகம்.

*விரதத்தைக் கூறும் பிராமணங்கள்.*

ஐந்து பஞ்சாதிக்குமேல் பதின்மூன்று பதங்களைக் கொண்டது.

यद्वा अनीशानो भारमादत्ते वि वै स लिशते यद्द्वादश साह्न-स्योपसदस्स्युस्तिस्रोऽहीनस्य यज्ञस्य विलोम क्रियेत तिस्र एव साह्नस्योपसदो द्वादशाहीनस्य यज्ञस्य सवीर्यत्वायाथो सलोम क्रियते वत्सस्यैकस्स्तनो भागी हि सोऽथैकꣳ स्तनं व्रतमुपैत्यथ द्वावथ त्रीनथ चतुर एतद्वै [२५] क्षुरपवि नाम व्रतं येन प्रजा-तान्भ्रातृव्यान्नुदते प्रति जनिष्यमाणानथो कनीयसैव भूय उपैति चतुरोऽग्रे स्तनान्व्रतमुपैत्यथ त्रीनथ द्वावथैकमेतद्वै सुजघनं नाम व्रतं तपस्यꣳ सुवर्ग्यमथो प्रैव जायते प्रजया पशुभिर्यवागू राज-न्यस्य व्रतं क्रूरेव वै यवागूः क्रूर इव [२६] राजन्यो वज्रस्य रूपꣳ समृद्ध्या आमिक्षा वैश्यस्य पाकयज्ञस्य रूपं पुष्ट्यै पयो ब्राह्मणस्य तेजो वै ब्राह्मणस्तेजः पयस्तेजसैव तेजः पय आत्म-न्धत्तेऽथो पयसा वै गर्भा वर्धन्ते गर्भ इव खलु वा एष यद्दीक्षितो यदस्य पयो व्रतं भवत्यात्मानमेव तद्वर्धयति त्रिव्रतो वै मनुरा-सीद्द्विव्रता असुरा एकव्रताः [२७] देवाः प्रातर्मध्यंदिने सायं तन्मनोर्व्रतमासीत्पाकयज्ञस्य रूपं पुष्ट्यै प्रातश्च सायं चासुराणां निर्मध्यं क्षुधो रूपं ततस्ते पराऽभवन्मध्यंदिने मध्यरात्रे देवानां ततस्तेऽभवन्त्सुवर्गं लोकमायन् यदस्य मध्यंदिने मध्यरात्रे व्रतं भवति मध्यतो वा अन्नेन भुञ्जते मध्यत एव तदूर्जं धत्ते भ्रातृ-

व्यामिभूत्यै भवत्यात्मना [२८] पराऽस्य भ्रातृव्यो भवति गर्भो वा एष यदीक्षितो योनिर्दीक्षितविमितं यदीक्षितो दीक्षितविमितात्प्रवसेद्यथा योनेर्गर्भस्स्कन्दति तादृगेव तन्न प्रवस्तव्यमात्मनो गोपीथायैष वै व्याघ्रः कुलगोपो यदग्निस्तस्माद्यदीक्षितः प्रवसेत्स एनमीश्वरोऽनूत्थाय हन्तोर्न प्रवस्तव्यमात्मनो गुप्त्यै दक्षिणतश्शय एतद्वै यजमानस्याऽऽयतनꣳ स्व एवाऽऽयतने शयेऽग्निमभ्यावृत्य शये देवता एव यज्ञमभ्यावृत्य शये [२९] ॥ एतद्वै क्रूर इवैकव्रता आत्मना यजमानस्य त्रयोदश च ॥ ५ ॥

இதில், விரதம் நிரூபிக்கப்படுகின்றது.

---

ஒருநாட் சோமயாகத்தில் மூன்று உபசத்துக்களையும், அஹீனத்தில் பன்னிரண்டு உபசத்துக்களையுஞ் செய்தல்வேண்டும் என்று முற்கூறியதில், தனது பக்ஷத்திலும், பிறர் பக்ஷத்திலும் உள்ள கேடு கேடிலாமைகளைக் கூறுகின்றது

பிராமணம்—1

यद्वा अनीशानो भारमादत्ते वि वै स लिशते यद्द्वादश साह्नस्योपसदस्स्युस्तिस्रोऽहीनस्य यज्ञस्य विलोम क्रियेत तिस्र एव साह्नस्योपसदो द्वादशाहीनस्य यज्ञस्य सवीर्यत्वायाथो सलोमक्रियते ।

என்பது.

உரை.

முடியாத ஒருவன் பெருஞ் சுமையையெடுக்கில், சுமக்க முடியாததுடன் கீழே விழுந்துவிடுகின்றான். அதைப்போல், ஒருநாட் சோமயாகத்தில் பன்னிரண்டானாலும் இரண்டுநாள் முதல்கொண்ட அஹீனமுதலியவைகளில் மூன்றானாலும் யாகத்தின் வீரியங்கெடும். இது வேறுசாகையிலுள்ள பட்சம். தனது பட்சப்படி ஒருநாட் சோமயாகத்தில் மூன்று உபத்துகளும் அகீனசோமயாகங்களில் பன்னிரண்டு உபசத்து யாகங்களையுஞ் செல்தல்வேண்டும். இதனால், வீரியங் கெடாது. இது, தன்னுடைய பட்சம் என்பது.

---

விரதம்)

அவாந்தர தீட்சையை யடைகின்றான் என்று முற்கூறிய அதையே புகழ்கின்றது.

பிராமணம்—2

**वत्सस्यैकस्स्तनो भागी हि सोऽथैकꣳ स्तनं व्रतमुपैत्यथ द्वावथ त्रीनथ चतुर एतद्वै क्षुरपवि नाम व्रतं येन प्रजातान्भ्रातृव्यान्नुदते प्रति जनिष्यमाणानथो कनीयसैव भूय उपैति ।**

என்பது.

உரை

கன்றின் பாகமாகிய ஒரு முலைப்பலிலும் எசமானன் சிறிதளவே நான்காம் முறை அருந்துகின்றான். இதுமிக நுண்ணியது ஆதலின் கத்திபோல் கூரானதாம். ஆதலின் இது ஆராக்ரவிரத மெனப்படுகின்றது. இதனால், முன் தோன்றியபகைவரும், தோன்றப்போகும் பகைவரும் நாசமாகின்றனர். சிறிய கருமத்தால் பெரும்பயன் அடைகின்றான், எதுபோலெனின்? சிறிய விதையில் பெரியமரம் முளைத்தெழுவதுபோ லென்பதாம்.

---

மேலே நுண்ணியது (பரோவரீயஸீ) என்னும் அவாந்தர தீட்சையை யடைகின்றான் என்று முற்கூறியதைப் புகழ்கின்றது.

பிராமணம்—3

**चतुरोऽग्रे स्तनान्व्रतमुपैत्यथ त्रीनथ द्वावथैकमेतद्वै सुजघनं नाम व्रतं तपस्यꣳ सुवर्ग्यमथो प्रैव जायते प्रजया पशुभिः ।**

என்பது

உரை.

கீழே தொடைகள் பெருத்தும் அதன்மேல் இடுப்புச் சிறுத்துமுள்ள பெண்போல், விரதத்தின் கீழ்ப்பாகம் நான்கு முலைப்பால் மேல்பாகம் ஒரு முலைப்பால் ஆதலின் 'சுசகனம்' என்னும் விரதமாம். இது சுவர்க்கத்திற்குச் சாதனமாம். மற்றும், இது பிரசைகளையும் பசுக்களையும் உண்டாக்குகின்றது என்பது.

---

மூவருணத்தார்களுள் அரசனுக்கு இன்னபொருள் என விதிக்கின்றது.

பிராமணம்—4

**यवागू राजन्यस्य व्रतं क्रूरेव वै यवागूः क्रूर इव राजन्यो वज्रस्य रूपꣳ-समृद्ध्यै ।**

என்பது.

உரை.

அரிசிக்கஞ்சி நெல்லன்னம்போல் பசியைப் போக்காததால் கோரமாம், அரசனும், தீயோரைத் தண்டித்தலால் கோரமுடையவனவன். இவ்விரண்டுஞ் சேர்ந்து வச்சிரம்போலாகின்றது. இது, தீயவைகளைப் போக்குவதால் சம்பத்தின் பொருட்டாம் என்பது.

---

வணிகனுக்கு விதிக்கின்றது.

பிராமணம்—5

**आमिक्षा वैश्यस्य पाकयज्ञस्य रूपं पुष्ट्यै ।**

என்பது.

உரை.

காய்ச்சிய சூட்டுப்பாலில் தயிரைவிடில் அது முறிந்துபோய்க் கட்டிப்பட்டிருப்பதாகிய ஆமிக்ஷை வணிகனுக்காம். பக்குவமாகிய புரோடாச முதலியவைகளாற் செய்யப்படும் பாகம் பாகயக்ஞமாம். ஆமிக்ஷையும் பக்குவமாகிய பாலிலிருந்து உண்டானதால் பாக எக்ஞவடிவமாம் இது புஷ்டியின் பொருட்டாம் என்பது.

---

அந்தணனுக்கு விதிக்கின்றது.

பிராமணம்—6

**पयो ब्राह्मणस्य तेजो वै ब्राह्मणस्तेजः पयस्तेजसैव तेजः पय आत्मन्धत्तेऽथो पयसा वै गर्भा वर्धन्ते गर्भ इव खलु वा एष यद्दीक्षितो यदस्य पयो व्रतं भवत्यात्मानमेव तद्वर्धयति ।**

என்பது.

உரை.

அந்தணனுக்குப் பாலாம். அந்தணன் ஒளியுடையவன்; பாலும் அழுக்கிலாத்தன்மையால் ஒளியுடையதாம். பாலருந்துவதால் தனது ஒளியுடன்

விரதம்)

பாலொளியையும் ஆன்மாவில் நிலைக்கவைத்ததாகின்றது. மற்றும், தீட்சை பண்ணிக்கொண்டவன் கருப்பவடிவனதலின் பாலால் அது வளர்வது பொருத்தமேயாம் என்பது.

---

உச்சிப்பகல் நடு இரவு என்னும் இவ்விரண்டும் விரதத்திற்குரிய காலங்கள் என்று விதிப்பதற்கு முன்னுரை கூறுகின்றது.

பிராமண —7

त्रिव्रतो वै मनुरासीद्द्विव्रता असुरा एकव्रता देवाः प्रातर्मध्यंदिने सायं तन्मनोर्व्रतमासीत्पाकयज्ञस्य रूपं पुष्ट्यै प्रातश्च सायं चासुराणां निर्मध्यं क्षुधो रूपं ततस्ते पराऽभवन्मध्यंदिने मध्यरात्रे देवानां ततस्तेऽभवन्त्सुवर्गं लोकमायन् ।

என்பது

உரை

ஒரு நாளின் மூன்று வேளைகளில் மநுவும், இரண்டுவேளைகளில் இராக்கதர்களும். ஒரு வேளையில் தேவர்களுமாக விரதமிருந்தனர். பசியெழுஞ் சமயம் உச்சிப்போதும் நடு இரவுமாம். அப்பொழுது விரதமிருந்து அசுரரை தேவர்கள் வென்றனர். சுவர்க்கத்தையு மடைந்தனர். அவ் விரண்டுவேளையைத் விர்த்து ஏனையவேளைகளில், அதாவது பசியெழாதபோது விரதமிருந்து அசுரர்கள் தோல்வியுற்றனர். ஆதலின், உச்சிப்போதே விரதத்திற்கு மிகச் சிறந்தபோதாம் என்பது.

---

அதை விதிக்கின்றது.

பிராமணம்—8

यदस्य मध्यंदिने मध्यरात्रे व्रतं भवति मध्यतो वा अन्नेन भुञ्जते मध्यत एव तदूर्जं धत्ते भ्रातृव्याभिभूत्यै भवत्यात्मना पराऽस्य भ्रातृव्यो भवति ।

என்பது

உரை.

வாய்நடுவில் அன்ன மருந்தப்படுகின்றது. வயிற்றின் நடுவில் அன்னந் தங்குகின்றது. ஆதலின், பகலின் நடுவிலும் இரவின் நடுவிலும் விரதம் அநுட்டிக்கவேண்டும் என்பதாம்.

---

தீட்சை பண்ணிக்கொண்டவனுக்கு தான் வசிக்குமிடத்தைத் தவிர்த்து வேறிடங்கூடாதென மறுக்கின்றது.

பிராமணம்—9

**गर्भो वा एष यद्दीक्षितो योनिर्दीक्षितविमितं यद्दीक्षितोदीक्षितविमितात्प्रवसेद्यथा योनेर्गर्भस्स्कन्दति तादृगेव तन्न प्रवस्तव्यमात्मनो गोपीथाय ।**

என்பது.

உரை.

வேள்விச் சாலையில் தீட்சிதனுக்குக் குறிப்பிட்ட இடம் யோனியைப் போன்றதாம். அதிலிருந்து வேறிடஞ் செல்வானேல், கருப்பமாகிய இவன் யோனியிலிருந்து நழுகிவிட்டவனவன். ஆதலின், தன்னைப் பாதுகாத்தற் பொருட்டு தீட்சை பெற்றுகொண்ட இடத்திலேயே இருத்தல்வேண்டும் என்பதாம்.

---

வேறோரிடஞ் செல்வது கூடாதென்பதையே மற்றோர்வகையாய்ப் புகழ்கின்றது.

பிராமணம்—10

**एष वै व्याघ्रः कुलगोपो यदग्निस्तस्माद्यद्दीक्षितः प्रवसेत्स एनमीश्वरोऽनूत्थाय हन्तोर्न प्रवस्तव्यमात्मनो गुप्त्यै ।**

என்பது.

உரை.

ஆகவனீயாக்கினி புலியாம். ஆதலின், தீட்சை பண்ணிக்கொண்டவன் வேறிடத்திற்கு எழுந்துபோவானேல் இப் புலியாகிய அக்கினியும் பின்றொடர்ந்துபோய்க் கொல்லினுங் கொன்றுவிடும். ஆகையால், தன்னைப் பாதுகாத்துக் கொள்ளுதற் பொருட்டு வேறிடஞ் செல்லக்கூடாது என்பது.

---

ஆகவனீயத்திற்குத் தெற்கில் அவன் படுக்குமிடமென விதிக்கின்றது.

பிராமணம்—11

**दक्षिणतश्शय एतद्वै यजमानस्याऽऽयतनꣳ स्व एवाऽऽयतने शये ।**

என்பது.

உரை.

ஆகவனீயத்திற்குத் தெற்கு எசமானனுடைய இடமாம். ஆதலின், அங்கு அவன் தூங்கல்வேண்டும் என்பது.

---

ஆகவனீயத்திற்குத் நேர் முகமாய்த் தூங்கல்வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—12

अग्निमभ्यावृत्य शये देवता एव यज्ञमभ्यावृत्य शये ।

என்பது.

உரை.

*அக்கினிக்கு நேர்முகமாகத் தூங்குகின்றவன் தேவதை யாகின்றான். ஆதலின், ஆகவனீயத்திற்கு நேர்முகமாய்த் தூங்கல்வேண்டு மென்பதாம்.*

ஐந்தாவது அநுவாகம்
*முற்றிற்று.*

---

## ஆறுங்காண்டம் இரண்டாம்பிரபாடகம்

### ஆறுவது அநுவாகம்

*காமிய யாகபூமியைப்பற்றிக் கூறும் பிராமணங்கள்.*

நான்கு பஞ்சாதிக்குமேல் பதினெட்டுப் பதங்களைக் கொண்டது.

पुरोहविषि देवयजने याजयेद्यं कामयेतोपैनमुत्तरो यज्ञो नमे-
दभि सुवर्गं लोकं जयेदित्येतद्वै पुरोहविर्देवयजनं यस्य होता प्रात-
रनुवाकमनुब्रुवन्नग्निमप आदित्यमभि विपश्यत्युपैनमुत्तरो यज्ञो
नमत्यभि सुवर्गं लोकं जयत्याप्ते देवयजने याजयेद्भ्रातृव्यवन्तं
पन्थां वाऽधिस्पर्शयेत्कर्तं वा यावन्नानसे यातवै [३०] न रथायै-
तद्वा आप्तं देवयजनमाप्नोत्येव भ्रातृव्यं नैनं भ्रातृव्य आप्नोत्येको-
न्नते देवयजने याजयेत्पशुकाममेकोन्नताद्वै देवयजनादङ्गिरसः
पशूनसृजन्तान्तरा सदोहविर्धाने उन्नतꣳ स्यादेतद्वा एकोन्नतं
देवयजनं पशुमानेव भवति त्र्युन्नते देवयजने याजयेत्सुवर्गकामं
त्र्युन्नताद्वै देवयजनादङ्गिरसस्सुवर्गं लोकमायन्नन्तराऽऽहवनीयं
च हविर्धानं च [३१] उन्नतꣳ स्यादन्तरा हविर्धानं च सदश्चा-

न्तरा सदश्च गार्हपत्यं चैतद्वै व्युन्नतं देवयजनꣳ सुवर्गमेव लोकमेति प्रतिष्ठिते देवयजने याजयेत्प्रतिष्ठाकाममेतद्वै प्रतिष्ठितं देवयजनं यत्सर्वतस्समं प्रत्येव तिष्ठति यत्रान्याअन्या ओषधयो व्यतिषक्तास्स्युस्तद्याजयेत्पशुकाममेतद्वै पशूनाꣳ रूपꣳ रूपेणैवास्मै पशून् [३२] अव रुन्धे पशुमानेव भवति निर्ऋतिगृहीते देवयजने याजयेद्यं कामयेत निर्ऋत्याऽस्य यज्ञं ग्राहयेयमित्येतद्वै निर्ऋतिगृहीतं देवयजनं यत्सदृश्यै सत्या ऋक्षं निर्ऋत्यैवास्य यज्ञं ग्राहयति व्यावृत्ते देवयजने याजयेद्व्यावृत्कामं यं पात्रे वा तल्पे वा मीमाꣳसेरन्प्राचीनमाहवनीयात्प्रवणꣳ स्यात्प्रतीचीनं गार्हपत्यादेतद्वै व्यावृत्तं देवयजनं वि पाप्मना भ्रातृव्येणाऽऽवर्तते नैनं पात्रे न तल्पे मीमाꣳसन्ते कार्ये देवयजने याजयेद्भूतिकामं कार्यो वै पुरुषो भवत्येव [३३] ॥ यातवै हविर्धानं च पशून्पाप्मनाऽष्टादश च ॥ ६ ॥

இனி, காமியங்களான வேள்விசெய்யுமிடங்கள் கூறப்படுகின்றன.

---

அவற்றுள், 'புரோஹவிஷி' என்பது முதலிய விசேடப் பெயர்களைக் கொண்ட 'உக்த்யம், ஷோடசீ' அதிராத்திரம் முதலிய உத்தர வேள்விகள் சுவர்க்கத்தை விரும்பியவனுக்கு விதிக்கப்படுகின்றன.

பிராமணம்—1

**पुरोहविषि देवयजने याजयेद्यं कामयेतोपैनमुत्तरो यज्ञो नमेदभि सुवर्गं लोकं जयेदिति ।**

என்பது.

உரை.

எசமானன் சுவர்க்கலோகத்தை யடையவேண்டுமென்று விரும்பில், 'புரோஹவிஷி' என்னும் இலக்கணத்துடன்கூடிய இடத்தில் யாகஞ் செய்வாளுக என்பது.

---

அதன் இலக்கணத்தைக் கூறுகின்றது.

பிராமணம்—2

**एतद्वै पुरोहविर्देवयजनं यस्य होता प्रातरनुवाकमनुब्रुवन्नग्निमप आदित्य मभि विपश्यति ।**

என்பது.

உரை.

எவ்வேள்விப் பூமியில், ஹோதா என்பவன் அவிர்த்தான மண்டபத்தில் கிழக்குமுகமாயிருந்து பிராதரநுவாகம் என்னும் ஒருவகைச் சஸ்திரத்தை ஓதிக்கொண்டு கிழக்கிலிருக்கின்ற ஆகவனீயாக்கினியையும், அதன் முன் ஆறு குளம் முதலிடவைகளிலுள்ள நீரையும், அதற்குமேல் கிழக்கிலுதிக்கின்ற இரவியையும் ஒரேமுறையாய் நேராய்ப் பார்க்கின்றானே, அது, 'புரோஹவி' என்னும் யாகபூமியாம் என்பது.

---

விரும்பிய பயன் கைகூடுமென்பது விளக்கப்படுகின்றது.

பிராமணம்—3

**उपैनमुत्तरो यज्ञो नमत्यभि सुवर्गं लोकं जयति ।**

என்பது.

உரை.

கிழக்குமுகமாய் வணங்குகின்றவன், இதற்குமேல் செய்யத்தக்க யாகத்தையும் சுவர்க்க லோகத்தையு மடைகின்றான் என்பது.

---

மற்றொரு இச்சையின் பொருட்டு விதிக்கின்றது.

பிராமணம்—4

**आप्ते देवयजने याजयेद्भ्रातृव्यवन्तम् ।**

என்பது.

உரை.

பகையுடையவன் 'ஆப்தம்' என்னும் வேள்விப்பூமியில் யாகஞ் செய்வானுக என்பது.

---

அதன் இலக்கணத்தைக் கூறுகின்றது.

பிராமணம்—5

**पन्थां वाऽधिस्पर्शयेत्कर्तं वा यावन्नानसे यातवै न २थायैतद्वा आप्तं देव-यजनम् ।**

என்பது.

உரை.

பெரிய இராசமார்க்கத்தை அல்லது, பெரும்பள்ளத்தைப் பார்த்து பெரும்பாலும் அதைத் தொட்டுக்கொண் டிருக்கும்படி வேள்விப்பூமியை அமைத்தல்வேண்டும். ஆனுல், அப் பள்ளத்திற்கும் வேள்விப் பூமிக்கும் இடையில், வண்டி, அல்லது, தேர் ஓடுவதற்குத் தடைப்படத் தக்க இடம் இருத்தல்வேண்டும். இதுவே அதைத் தொட்டுக்கொண்டிருப்பதாம். இதை ஆப்தம் என்னும் பெயர் வழங்குகின்றனர் என்பது.

---

விரும்பியபயன் சித்திக்குமேன்பதை விளக்குகின்றது.

பிராமணம்—6

**आप्नोत्येव भ्रातृव्यं नैनं भ्रातृव्य आप्नोति ।**

என்பது.

உரை.

இதனுல், இவன் பகைவரை வெல்கின்றுன். இவனைப் பகைவன் வெல்லமாட்டான் என்பது.

---

மற்றென்றை விதிக்கின்றது.

பிராமணம்—7

**एकोन्नते देवयजने याजयेत्पशुकामम् ।**

என்பது.

யாகபூமி)

உரை.

பசுவை விரும்பியவன் ஏகோன்னதம் என்னும் வேள்விச் சாலையில் யாகஞ் செய்தல் வேண்டும் என்பது.

---

அதைப் புகழ்கின்றது.

பிராமணம்—8

**एकोन्नताद्वै देवयजनादङ्गिरसः पशूनसृजन्त ।**

என்பது.

உரை.

'ஏகோன்னத' வேள்விச் சாலையில் யாகஞ் செய்தலால் ஆங்கிரசர்கள் பசுக்களைப் படைத்தனர் என்பது.

---

அதனுடைய இலக்கணத்தைக் கூறுகின்றது.

பிராமணம்—9

**अन्तरा सदोहविर्धाने उन्नतꣳ स्यादेतद्वा एकोन्नतं देवयजनम् ।**

என்பது.

உரை.

பிராசீனவம்சம் என்னுங் கொட்டகைக்கு முன்னுள்ள சபாமண்டபத்திற்கும், உத்தரவேதிக்கு மேற்கிலுள்ள அவிர்த்தான மண்டபத்திற்கும் நடுவில் உன்னதமாய் (உயரமாய்)ச் செய்வது ஏகோன்னதம் என்னும் வேள்விச் சாலையாம் என்பது.

---

பயனைக் கூறுகின்றது.

பிராமணம்—10

**पशुमानेव भवति ।**

என்பது

உரை.

இதனால் பசுக்களை யுடையவனாகின்றான் என்பது.

---

மற்றொன்றை விதிக்கின்றது.

பிராமணம்—11

**त्र्युन्नते देवयजने याजयेत्सुवर्गकामम् ।**

என்பது.

உரை.

சுவர்க்கத்தை விரும்பியவன் 'திரியுன்னதம்' என்னும் யாகசாலையில் வேள்வி செய்விப்பனாக என்பது.

---

அதைப் புகழ்கின்றது.

பிராமணம்—12

**त्र्युन्नताद्वै देवयजनादङ्गिरसस्सुवर्गं लोकमायन् ।**

என்பது.

உரை.

'திரியுன்னதம்' என்னும் யாகசாலையில் யாகஞ்செய்து ஆங்கிரசர்கள் சுவர்க்கத்தை யடைந்தார்கள் என்பது.

---

அதன் இலக்கணத்தைக் கூறுகின்றது.

பிராமணம்—13

**अन्तराऽऽहवनीयं च हविर्धानं चोन्नतꣳ स्यादन्तरा हविर्धानं च सदश्चा-न्तरा सदश्च गार्हपत्यं चैतद्वै त्र्युन्नतं देवयजनम् ।**

என்பது.

உரை.

ஆகவனீயம், அவிர்த்தானம், சபை, காருகபத்தியம் என்னும் நான்கிற்கும் இடையிலுள்ள மூன்று இடங்களும் உயர்ந்திருப்பது திரியுன்னதம் என்னும் வேள்விச் சாலையாம் என்பது.

---

பயனைக் கூறுகின்றது.

பிராமணம்—14

**सुवर्गमेव लोकमेति ।**

என்பது.

உரை.

இதனால் சுவர்க்கலோகத்தையே அடைகின்றான் என்பது.

---

மற்றொன்றை விதிக்கின்றது.

பிராமணம்—15

**प्रतिष्ठिते देवयजने याजयेत्प्रतिष्ठाकामम् ।**

என்பது.

உரை.

பெருமையை விரும்பியவன் 'பிரதிட்டை' என்னும் வேள்விச் சாலையில் யாகஞ் செய்வானாக என்பது.

---

அதன் இலக்கணத்தைக் கூறுகின்றது.

பிராமணம்—16

**एतद्वै प्रतिष्ठितं देवयजनं यत्सर्वतस्समम् ।**

என்பது.

உரை.

எங்குஞ் சமமாயிருப்பது பிரதிஷ்டிதம் என்னுந் தேவயசனமாம். அதாவது யாகசாலையாம் என்பது.

---

பயனைக் கூறுகின்றது.

பிராமணம்—17

**प्रत्येव तिष्ठति ।**

என்பது.

உரை.

இதனால் பிரதிஷ்டை (பெருமை)யை அடைகின்றான் என்பது.

---

பெயர் விசேடங்களைக் கூறிவிட்டு இலக்கணத்துடன் யாகபூமி விசேடங்களை விதிக்கின்றது.

பிராமணம்—18

**यत्रान्याअन्या ओषधयो व्यतिषक्तास्स्युस्तद्याजयेत्पशुत्कामम् ।**

என்பது.

உரை.

பசுக்களை விரும்பியவன் ஒன்றற் கொன்று மாறுபட்ட கோதுமை, தினை முதலான கொடி செடிகள் ஒன்றாய்ச் சேர்ந்து முளைத்திருக்கும் இடத்தில் யாகஞ் செய்வானாக என்பது.

---

அதைப் புகழ்கின்றது.

பிராமணம்—19

**एतद्वै पशूनाꣳ रूपꣳ रूपेणैवास्मै पशूनव रुन्धे पशुमानेव भवति ।**

என்பது.

உரை.

இது பசுக்களின் உருவமாம்; ஆதலின் உருவத்தாலேயே இவனுக்குப் பசுக்கள் கிடைக்கின்றன என்பது.

---

மற்றொன்றை விதிக்கின்றது.

பிராமணம்—20

**निर्ऋतिगृहीते देवयजने याजयेद्यं कामयेत निर्ऋत्याऽस्य यज्ञं ग्राहयेयमिति ।**

என்பது.

உரை.

இவ் வேள்வி யக்ஞத்தைக் கெடுக்கும் இராக்கதரால் இது கவர்ந்து கொள்ளத் தக்கது என்னும் விருப்புடையவன் 'நிருதிக்கிருஹீதம்' என்னும் வேள்விப் பூமியில், யாகஞ் செய்தல்வேண்டும் என்பது.

---

அதன் இலக்கணத்தைக் கூறுகின்றது.

பிராமணம்—21

**एतद्वै निर्ऋतिगृहीतं देवयजनं यत्सदृश्यै सत्या ऋक्षम् ।**

என்பது.

உரை.

மேடு பள்ளங்களின்றி ஒப்புரவாயிருப்பதுடன் புல் முதலியவைகளின்றிய விடம் 'நிருதிக்கிருஹீதம்' என்னும் வேள்விப் பூமியாம் என்பது.

---

யாகபூமி)

விரும்பியபயன் கைகூடு மென்கின்றது.

பிராமணம்—22

**निर्ऋत्यैवास्य यज्ञं ग्राहयति ।**

என்பது.

உரை.

இதனால், எக்ஞத்தை நிருதி தேவதை பிடித்துக்கொள்ளும்படி செய்கின்றான் என்பது.

---

மற்றொன்றை விதிக்கின்றது

பிராமணம்—23

**व्यावृत्ते देवयजने याजयेद्व्यावृत्कामं यं पात्रे वा तल्पे वा मीमाꣳसेरन् ।**

என்பது.

உரை.

ஒன்றாய்க் கூடியிருந்து உண்ணலில், அல்லது, விவாகத்தில் இவன் பந்தியிலிருந்து உண்ணத் தக்கவனா? என்று எவனை விசாரிக்கின்றார்களோ, அவன், அக்குற்றத்தைப் போக்குவதற்கு 'வியாவிருத்தி' என்னும் வேள்விப் பூமியில் யாகஞ் செய்வானாக என்பது.

---

அதன் இலக்கணத்தைக் கூறுகின்றது.

பிராமணம்—24

**प्राचीनमाहवनीयात्प्रवणꣳ स्यात्प्रतीचीनं गार्हपत्यादेतद्वै व्यावृत्तं देवयजनम् ।**

என்பது.

உரை.

ஆகவனீயத்திற்குக் கிழக்கும், காருகபத்தியத்திற்கு மேற்கும் தாழ்ந்திருப்பது வியாவிருத்தம் என்னும் யாகபூமியாம் என்பது.

---

பயன் கூடுமெனல்.

பிராமணம்—25

**वि पाप्मना भ्रातृव्येणाऽऽवर्तते नैनं पात्रे न तल्पे मीमाꣳसन्ते ।**

என்பது.

உரை.

பாவமாகிய சத்துருவிலிருந்து நீங்கிவிடுகின்றான். பிறகு, அவனிடத்து சந்தேகித்தல் இல்லை என்பதாம்.

---

மற்றொன்றை விதிக்கின்றது.

பிராமணம் — 26

**कार्ये देवयजने याजयेद्भूतिकामम् ।**

என்பது.

உரை.

ஐசுவரியத்தை விரும்பியவன், மண், கல் முதலியவைகளால் மேடாக்கத் தக்க விடத்தில் யாகஞ் செய்தல்வேண்டும் என்பது.

---

அதைப் புகழ்கின்றது.

பிராமணம் — 27

**कार्यो वै पुरुषः ।**

என்பது.

உரை.

பூணூற்போடல் முதலியவைகளால் உயர்த்த வேண்டியவனுக்கு இது உரியது என்பது.

---

பயன் கைகூடுமென்பதை விளக்குகின்றது.

பிராமணம் — 28

**भवत्येव ।**

என்பது.

உரை.

இதனால் ஐசுவரியத்தையே அடைகின்றான் என்பது.

ஈண்டு, இவ் வெல்லாவேள்விப் பூமிகளையும், 'யாதே அக்னே ரஜாஸயா' என்னும் மந்திரத்தாற் செய்யப்படும் காலை மாலைஉபசத்துக்களுக்கு இடைப் போதிற் செய்தல்வேண்டும் என்பதை யுணர்க.

ஆறுவது அநுவாகம்

*முற்றிற்று.*

---

ஆறுங்காண்டம் இரண்டாம் பிரபாடகம்

ஏழாவது அநுவாகம்

*உத்தரவேதியைக் கூறும் பிராமணங்கள்.*

ஐந்து பஞ்சாதிக்குமேல் மூன்று பதங்களைக் கொண்டது.

तेभ्य उत्तरवेदिस्सिꣳ ही रूपं कृत्वोभयानन्तराऽपक्रम्यातिष्ठत्ते देवा अमन्यन्त यतरान् वा इयमुपावर्त्स्यति त इदं भविष्यन्तीति तामुपामन्त्रयन्त साऽब्रवीद्वरं वृणै सर्वान्मया कामान्व्यश्नवथ पूर्वां तु माऽग्नेराहुतिरश्नवता इति तस्मादुत्तरवेदिं पूर्वामग्नेर्व्याघारयन्ति वारेवृतꣳ ह्यस्यै शम्यया परि मिमीते [२४] मात्रैवास्यै साऽथो युक्तेनैव युक्तमव रुन्धे वित्तायनी मेऽसीत्याह वित्ता ह्येनानावत्तिक्तायनी मेऽसीत्याह तिक्तान् ह्येनानावदवतान्मा नाथितमित्याह नाथितान् ह्येनानावदवतान्मा व्यथितमित्याह व्यथितान् ह्येनानावद्विदेरग्निर्नभो नाम [२५] अग्ने अङ्गिर इति त्रिर्हरति य एवैषु लोकेष्वग्नयस्तानेवाव रुन्धे तूष्णीं चतुर्थꣳ हरत्यनिरुक्तमेवाव रुन्धे सिꣳहीरसि महिषीरसीत्याह सिꣳहीर्ह्येषा रूपं कृत्वोभयानन्तराऽपक्रम्यातिष्ठदुरु प्रथस्वोरु ते यज्ञपतिः प्रथतामित्याह यजमानमेव प्रजया पशुभिः प्रथयति ध्रुवा [२६] असीति सꣳ हन्ति धृत्यै देवेभ्यश्शुन्धस्व देवेभ्यश्शुम्भस्वेत्यवचोक्षति प्र च किरति शुद्ध्या इन्द्रघोषस्त्वा वसुभिः पुरस्तात्पात्वित्याह दिग्भ्य एवैनां प्रोक्षति देवाꣳश्चेदुत्तरवेदिरुपावर्तीहैव विजयामहा इत्यसुरा वज्रमुद्यत्य देवानभ्यायन्त तानिन्द्रघोषो वसुभिः पुरस्तादप [२७] अनुदत मनोजवाः पितृभिर्दक्षिणतः प्रचेता रुद्रैः पश्चाद्वि-

श्वकर्माऽऽदित्यैरुत्तरतो यदेवमुत्तरवेदिं प्रोक्षति दिग्भ्य एव तद्य-
जमानो भ्रातृव्यान्प्र णुदत इन्द्रो यतीन्त्सालावृकेभ्यः प्रायच्छ-
त्तान्दक्षिणत उत्तरवेद्या आदन् यत्प्रोक्षणीनामुच्छिष्येत तद्दक्षिणत
उत्तरवेद्यै निनयेद्यदेव तत्र क्रूरं तत्तेन शमयतियं द्विष्यात्तं ध्याये-
च्छुचैवैनमर्पयति [३८] ॥ मिमीते नाम ध्रुवाऽपं शुचा त्रीणि
च ॥ ७ ॥

*இதில், உத்தரவேதிகையைச் செய்யும் முறை கூறப்படுகின்றது.*

---

மந்திரங்கட்கு உரை கூறவிருப்புடையதாய், சம்யை என்னும் மரத்தடியால் வேதிகையை அளவுப்படுத்தல் வேண்டுமேன்று விதிப்பதற்கு, ஒரு சரிதையை எடுத்துக்கூறி அதன் தொடர்புபற்றி வியாகார ஹோமத்தைக் கூறுகின்றது.

பிராமணம்—1

तेभ्य उत्तरवेदिस्सिंहीं रूपं कृत्वोभयानन्तराऽपक्रम्यातिष्ठत्ते देवा अम-
न्यन्तयतरान् वा इयमुपावर्त्स्यति त इदं भविष्यन्तीति तामुपामन्त्रयन्त
साऽब्रवीद्वरं वृणै सर्वान्मया कामान्व्यश्नवथ पूर्वां तु माऽग्नेराहुतिरश्न-
वता इति तस्मादुत्तरवेदिं पूर्वामग्नेर्व्याघारयन्ति वारेवृतं ह्यस्यै ।

என்பது.

உரை.

*உத்தரவேதியானது சிம்மவடிவெடுத்துக்கொண்டு தேவாசுரர்கட்கிடையில்வந்து நின்றது. அப்போது, தேவர்கள் யார் இதை அடைந்திருக்கின்ருர்களோ, அவர்கட்கு இது முடியும் என்றெண்ணி அச்சிங்கத்தைப் போற்றினர். அப்போது அச்சிங்கம், 'முதலில் எனக்கு ஆகுதி செய்தல் வேண்டும் அதனுல் விரும்பியபயன் கிடைக்கும்' என்று வரங்கேட்டது அதற்கு ஆம் என்றனர். ஆதலின், பிரணயனம் பண்ணுவதற்குமுன் உத்தரவேதி போட்டபிறகு உத்திரவேதியில் வியாகார ஹோமஞ் செய்தல்வேண்டும். அதைச் செய்யுமுறையோ, 'சிம்ஹீரஸி' 'மஹிஷீரஸி' என்றது முதலிய மந்திரங்கட்கு உரை கூறும்போது கூறப்படும் என்பது.*

---

உத்தரவேதி)

அதை விதிக்கின்றது.

பிராமணம்—2

**शम्यया परि मिमीते मात्रैवास्यै साथो युक्तेनैव युक्तमवरुन्धे ।**

என்பது

உரை.

தண்டாயுத நீளம் ஒருகை நீளம் உள்ள ஒருதடி சம்யை எனப்படும் அதனால் உத்தரவேதிகையை நாற்புறமும் அளத்தல்வேண்டும். இவ் வுத்தர வேதிகை இதனால் அளந்த அளவிற்குக் குறைதல் கூடாது. சோமரசப் பாத்திரம் சமச முதலானவைகளாற் கிரியைகள் செய்யப்படுதலின் அதற் குப் போதுமானதாம். மிகுதியுங் கூடாது கிரியைகள் செய்யவேண்டிய பாகத்தைத் தவிர்த்து வேறிடம் இல்லாமையின். மற்றிதனால், உரிய அள வால் உரிய பயன்கிடைக்கின்றது என்பதாம்.

---

மந்திரங்கட்கு உரை கூறுகின்றது.

பிராமணம்—3

**वित्तायनी मेऽसीत्याह वित्ता ह्येनानावत्तिक्तायनी मेऽसीत्याह तिक्तान् ह्येनानावदवतान्मा नाथितमित्याह नाथितान् ह्येनानावदततान्मा व्यथितमित्याह व्यथितान् ह्येनानावत् ।**

என்பது.

உரை.

'வித்தாயனீ மே அஸி' என்றது, இவ் வுத்தரவேதி அக்கினியை யடை வதால் இவ் வேள்வித்தலைவனைப் பாதுகாக்க வேண்டும் என்கின்றது. 'திக்தா யனீ மே அஸி' என்றது அக்கினி, சுவாலையால் அதை விரும்பிய எசமான னைப் பாதுகாக்க வேண்டும் என்கின்றது. அங்ஙனமே, 'நாதிதம், வ்யதிதம்' என்பவைகள்; அக்கினியைப் பெறுமல் துன்புறுகின்றவனும், அக்கினியை விரும்புகின்றவனுமாகிய இவ் வேள்வித்தலைவனைப் பாதுகாக்க வேண்டும் என்கின்றது என்பது.

---

அதை விதிக்கின்றது.

பிராமணம்—4

**विदेरग्निर्नभो नामाग्ने अङ्गिर इति त्रिर्हरति य एवैषु लोकेष्वग्नयस्तानेवाव रुन्धे तूष्णीं चतुर्थं हरत्यनिरुक्तमेवावरुन्धे ।**

என்பது.

உரை.

'விதேரக்கினிர் நபோநாம' என்பது முதலிய மூன்று மந்திரங்களாலும் மும்முறை மண் கொண்டுவரல்வேண்டும் என்றது, மூன்றுலகங்களிலுமுள்ள அக்கினிகளை யடைதற் பொருட்டு என்க. அவைகள் இவைகள்தானென்று உறுதியாய்க் கூறமுடியாமையின் பொதுவாய் அக்கினியை யடைதற் பொருட்டு மந்திரமின்றி நான்காம் முறை மண் கொண்டுவருதல் வேண்டும் என்பது.

---

வேதிகை, சிங்கவடிவ மேன்பதை விளக்குகின்றது.

பிராமணம்—5

**सिꣳहीरसि महिषीरसीत्याह सिꣳहीर्ह्येषा रूपं कृत्वोभयानन्तराऽपक्रम्याऽतिष्ठत् ।**

என்பது.

உரை.

'சிங்கமாயிருக்கின்றாய் மகிஷியாயிருக்கின்றாய்' என்றது, இவ் வுத்தர வேதிகையானது சிங்க வடிவெடுத்துக்கொண்டு தேவாசுரர்கட்கு நடுவில் நின்றது என்கின்றது.

ஈண்டு, 'மகிஷீ' என்றது மகத்தாம். அல்லது, எருமைச் சாதி என் பதுமாம்.

---

முறையே மந்திரங்களிலுள்ள சொற்களுக்கு உரை கூறுகின்றது.

பிராமணம்—6

**उरुप्रथस्वोरु ते यज्ञपतिः प्रथतामित्याह यजमानमेव प्रजया पशुभिः प्रथयति ध्रुवासीति सꣳ हन्ति धृत्यै देवेभ्यश्शुन्धस्व देवेभ्यश्शुम्भस्वेत्यवचोक्षति प्रचकिरति शुद्ध्यै ।**

என்பது.

உரை.

'உருப்பிரதஸ்வ' என்பது முதலியன, எசமானனை, பசுக்களாலும் பிரசைகளாலும் பெருகச் செய்கின்றது 'துருவா அஸி' என்பது முதலி யன, கெட்டிப்படுத்தி அழகுசெய்து சுத்திப்படுத்துகின்றது என்பது.

---

புரஸ்தாத் (கிழக்கு) என்பது முதலிய திக்குவாசகங்களால் திக்குத் தேவதைகட்குக் களிப்புண்டாம்படி தண்ணீர் தெளித்தலாம் என்கின்றது.

பிராமணம்—7

**इन्द्रघोषस्त्वा वसुभिः पुरस्तात्पात्वित्याह दिग्भ्य एवैनां प्रोक्षति ।**

என்பது.

உரை.

'இந்திரகோஷ:' என்பது முதலியன, திக்குத் தேவதைகளினுடைய இவ் வேதிகையை நீரால் தெளித்தல் என்கின்றது.

---

நீர்தெளிப்பதை விதித்தற் பொருட்டு முன்னுரை கூறுகின்றது.

பிராமணம்—8

**देवाꣳश्चेदुत्तरवेदिरुपाववर्तीहैव विजयामहा इत्यसुरा वज्रमुद्यत्य देवानभ्यायन्त तानिन्द्रघोषो वसुभिः पुरस्तादपानुदत मनोजवाः पितृभिर्दक्षिणतः प्रचेता रुद्रैः पश्चाद्विश्वकर्माऽऽदित्यैरुत्तरतः ।**

என்பது.

உரை.

உத்தரவேதி சிங்கவடிவந்தாங்கி தேவாசுரர்கட்கிடையில் நின்றபோது தேவர்கள் அதைப் போற்றில் அவர்கட்கு வெற்றியாம் என்றெண்ணி, அவர்கள் போற்றிவழிபடுமுன், தேவர்களை வெல்லக்கருதி வச்சிரத்தை எடுத்து தேவர்கள்மீது விட்டுக்கொல்லவந்தனர் வந்த அசுரர்களை, இந்திர கோஷம் என்பது முதலிய திக்குக்கள் வசுக்களுடன் கிழக்கில் அவர்களை விலக்கின. மற்றும், பிதிர்க்களுடன் மனோசவமும், உருத்திரர்களுடன் பிரசேதாவும், ஆதித்தர்களுடன் விசுவகருமாவும், தெற்கு, மேற்கு, வடக்கு என்னுந் திக்குக்களில் அசுரரை விலக்கினர் என்பது.

---

அதை விதிக்கின்றது.

பிராமணம்—9

**यदेवमुत्तरवेदिं प्रोक्षति दिग्भ्य एव तद्यजमानो भ्रातृव्यान्प्रणुदते ।**

என்பது

உரை.

இவ்வாறு உத்தரவேதிகையில் நீரைத்தெளிக்கின்ற எசமானன் திக்குக்களிலிருந்து பகைவரைத் தொலைக்கின்றான் என்பது.

---

தெளித்து மீந்த நீரைக் கொட்டுவதை விதிக்கின்றது.

பிராமணம்—10

**इन्द्रो यतीन्त्सालावृकेभ्यः प्रायच्छत्तान्दक्षिणत उत्तरवेद्या आदन् यत्प्रोक्षणीनामुच्छिष्येत तद्दक्षिणत उत्तरवेद्यै निनयेद्यदेव तत्र क्रूरं तत्तेन शमयति ।**

என்பது.

உரை.

*தேவர்களைக் கொல்வதற்கு மறைவாய் துறவிகள் வேடங்கொண்டு முயன்ற அசுரர்களைக் கொன்று இந்திரன் செந்நாய்களுக்குக் கொடுத்தனன். அக்கோபம் தணிவதற்கு, மீந்த நீரை உத்தரவேதிக்குத் தெற்கில் கொட்டிவிடல் வேண்டும் என்பது.*

---

அந் நீரை ஊற்றும்போது செய்யும் தியானத்தை விதிக்கின்றது.

பிராமணம்—11

**यं द्विष्यात्तं ध्यायेच्छुचैवैनमर्पयति ।**

என்பது.

உரை.

*பகையுடையவனை அப்போது நினைத்தல்வேண்டும். நினைக்கில், அவனைத் துன்புறுத்துகின்றது என்பதாம்.*

ஏழாவது அநுவாகம்
*முற்றிற்று.*

---

## ஆறுங்காண்டம் இரண்டாம் பிரபாடகம்

### எட்டாவது அநுவாகம்

*ஆகார ஹோமத்தைக் கூறும் பிராமணங்கள்.*

ஐந்து பஞ்சாதிக்குமேல் நாற்பத்துநான்கு பதங்களைக் கொண்டது.

**सोत्तरवेदिरब्रवीत्सर्वान्मया कामान्व्यश्नवथेति ते देवा अकामयन्तासुरान्भ्रातृव्यानभि भवामेति तेऽजुहवुस्सिꣳहीरसि सपत्नसाही स्वाहेति तेऽसुरान्भ्रातृव्यानभ्यभवन्तेऽसुरान्भ्रातृव्यानभि-**

भूयाकामयन्त प्रजां विन्देमहीति तेऽजुहवुस्सिꣳहीरसि सुप्रजावनिस्स्वाहेति ते प्रजामविन्दन्त ते प्रजां वित्त्वा [३९] अकामयन्त पशून्विन्देमहीति तेऽजुहवुस्सिꣳहीरसि रायस्पोषवनिस्स्वाहेति ते पशूनविन्दन्त ते पशून्वित्त्वाऽकामयन्त प्रतिष्ठां विन्देमहीति तेऽजुहवुस्सिꣳहीरस्यादित्यवनिस्स्वाहेति त इमां प्रतिष्ठामविन्दन्त त इमां प्रतिष्ठां वित्त्वाऽकामयन्त देवता आशिष उपयामेति तेऽजुहवुस्सिꣳहीरस्या वह देवान्देवयते [४०] यजमानाय स्वाहेति ते देवता आशिष उपाऽऽयन्पञ्च कृत्वो व्याघारयति पञ्चाक्षरा पङ्क्तिः पाङ्क्तो यज्ञो यज्ञमेवाव रुन्धेऽक्ष्णया व्याघारयति तस्मादक्ष्णया पशवोऽङ्गानि प्रहरन्ति प्रतिष्ठित्यै भूतेभ्यस्त्वेति स्रुचमुद्गृह्णाति य एव देवा भूतास्तेषां तद्भागधेयं तानेव तेन प्रीणाति पौतुद्रवान्परिधीन्परि दधात्येषाम् [४१] लोकानां विधृत्या अग्नेस्त्रयो ज्यायाꣳसो भ्रातर आसन्ते देवेभ्यो हव्यं वहन्तः प्रामीयन्त सोऽग्निरबिभेदित्थं वावस्य आर्तिमाऽरिष्यतीति स निलायत स यां वनस्पतिष्ववसत्तां पूतुद्रौ यामोषधीषु ताꣳ सुगन्धितेजने यां पशुषु तां पेत्वस्यान्तरा शृङ्गे तं देवताः प्रैषमैच्छन्तमन्वविन्दन्तमब्रुवन् [४२] उप न आवर्तस्व हव्यं नो वहेति सोऽब्रवीद्वरं वृणै यदेव गृहीतस्याहुतस्य बहिः परिधि स्कन्दात्तन्मे भ्रातृणां भागधेयमसदिति तस्माद्यद्गृहीतस्याहुतस्य बहिः परिधि स्कन्दति तेषां तद्भागधेयं तानेव तेन

प्रीणाति सोऽमन्यतास्थन्वन्तो मे पूर्वे भ्रातरः प्रामेषतास्थानि शातया इति स यानि [४३] अस्थान्यशातयत तत्पूतुद्रवभवद्य न्माꣳसमुपमृतं तद्गुल्गुलु यदेतान्त्संभारान्त्सं भरत्यग्निमेव तत्सं भरत्यग्नेः पुरीषमसीत्याहाग्नेर्ह्येतत्पुरीषं यत्संभारा अथो खल्वाहु- रेते वावैनं ते भ्रातरः परि शेरे यत्पौतुद्रवाः परिधय इति [४४] ॥ विन्त्वा देवयत एषामब्रुवन् यानि चतुश्चत्वारिꣳशच्च ॥ ८ ॥

*இதில் ஆகார ஹோமங்கள் கூறப்படுகின்றன.*

---

உத்தரவேதியின் வரத்தைப் பின்பற்றி ஒவ்வொரு ஆகுதியால் ஒவ்வொரு விருப்பங்கிடைத்ததென்று மந்திரங் குறிப்பிட்ட பொருளை விளக்குகின்றது.

பிராமணம்—1

सोत्तरवेदिरब्रवीत्सर्वान्मया कामान्व्यश्नवथेति ते देवा अकामयन्तासुरान्भ्रातृव्यानभि भवामेति तेऽजुहवुस्सिꣳहीरसि सपत्नसाही स्वाहेति तेऽसुरान्भ्रातृव्यानभ्यभवन्तेऽसुरान्भ्रातृव्यानभिभूयाकामयन्त प्रजां विन्देमहीति तेऽजुहवुस्सिꣳहीरसि सुप्रजावनिस्स्वाहेति ते प्रजामविन्दन्त ते प्रजां वित्त्वाऽकामयन्त पशून्विन्देमहीति तेऽजुहवुस्सिꣳहीरसि रायस्पोषवनिस्स्वाहेति ते पशूनविन्दन्त ते पशून्वित्त्वाऽकामयन्त प्रतिष्ठां विन्देमहीति तेऽजुहवुस्सिꣳहीरस्यादित्यवनिस्स्वाहेति त इमां प्रतिष्ठामविन्दन्त त इमां प्रतिष्ठां वित्त्वाऽकामयन्त देवता आशिष उपेयामेति तेऽजुहवुस्सिꣳहीरस्या वह देवान्देवयते यजमानायस्वाहेति ते देवता आशिष उपाऽऽयन् ।

என்பது.

உரை.

*உத்தரவேதியானது, தேவர்காள்! நீவிர் விரும்பியவனைத்தையு மடைவீர்கள் என்றது, அங்ஙனமே, அசுரர்கள் கெடவேண்டுமென்று விரும்பி முதலாவது ஹோமஞ் செய்தனர். அவற்றால் அதையடைந்தபின், குழந்தை ஏவலாள் முதலிய பிரசைகளை யடையவிரும்பி இரண்டாவது ஹோமஞ்*

செய்தனர். அதனால், அவற்றை யடைந்தபின், பசுக்கள் முதலிய தனங்களை விரும்பி மூன்றாவது ஹோமஞ் செய்தனர். அதனால், அதை யடைந்தபிறகு பெருமையை யடையவிரும்பி நான்காம் ஹோமஞ் செய்தனர். அதனால், அதை அடைந்தபிறகு, ஆசிர்வாதஞ் செய்யும் அவியை ஏற்றுக்கொள்ளுந் தேவதையை அடைவோமாக என்று விரும்பி ஐந்தாவது ஹோமத்தைச் செய்தனர். அதனால், அதை யடைந்தனர் என்பது.

---

ஆகுதிகளின் எண்ணை விதிக்கின்றது.

பிராமணம்—2

**पञ्चकृत्वो व्याघारयति पञ्चाक्षरा पङ्क्तिः पाङ्क्तो यज्ञो यज्ञमेवाव रुन्धे ।**

என்பது.

உரை.

ஐந்து ஆகார ஹோமங்கள் செய்யப்படுகின்றன. ஐந்தெழுத்துக்களைக் கொண்டது பந்திச்சந்தம் பந்திச்சந்தமாகிய எக்ஞத்தை யடைகின்றான் என்பது.

---

அதன் குணத்தை விதிக்கின்றது.

பிராமணம்—3

**अक्ष्णया व्याघारयति तस्मादक्ष्णया पशवोऽङ्गानि प्रहरन्ति प्रतिष्ठित्यै ।**

என்பது.

உரை.

மூலையாக மாறிமாறி ஹோமஞ் செய்தல்வேண்டும். இது நிலைக்கும் பொருட்டாம். இதுபற்றியே, பசுக்கள் மாறிமாறி கால்வைத்துப் படுக்கின்றன நடக்கின்றன என்பதாம்.

---

சுருவை மேலேதூக்கல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—4

**भूतेभ्यस्त्वेति स्रुचमुद्गृह्णाति य एव देवा भूतास्तेषां तद्भागधेयं तानेव तेन प्रीणाति ।**

என்பது.

உரை.

அது அவர்களுடைய பாகமாதலால் அவர்களைக் குறித்து சுருக்கை மேலேதூக்கில் அத்தேவர்கள் பிரியமடைகின்றனர் என்பது. சுருக்கு= அகப்பை விசேடம்.

---

பக்கங்களில் விறகுகளை வைத்தல்வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—5

**पौतुद्रवान्परिधीन्परि दधात्येषां लोकानां विधृत्यै ।**

என்பது.

உரை.

தேவதாரு விறகுகளை மூன்று பக்கங்களிலும் வைப்பதால் மூன்றுலகங்களும் நிலை நிறுத்தப்பட்டவைகளாகின்றன என்பது.

---

சம்பாரங் (உபகரணங்)களை விதிப்பதற்கு முன்னுரை கூறுகின்றது.

பிராமணம்—6

**अग्नेस्त्रयो ज्यायाꣳसो भ्रातर आसन्ते देवेभ्यो हव्यं वहन्तः प्रामीयन्त सोऽग्निरबिभेदित्थं वावस्य आर्तिमाऽरिष्यतीति स निलायत स यां वनस्पतिष्ववसत्तां पूतुद्रौ यामोषधीषु ताꣳ सुगन्धितेजने यां पशुषु तां पेत्वस्यान्तरा शृङ्गे तं देवताः प्रैषमैच्छन्तमन्वविन्दन्तमब्रुवन्नुप न आवर्तस्व हव्यं नो वहेति सोऽब्रवीद्वरं वृणै यदेव गृहीतस्याहुतस्य बहिः-परिधि स्कन्दात्तन्मे भ्रातृणां भागधेयमसदिति तस्माद्यद्गृहीतस्याहुतस्य बहिःपरिधिस्कन्दति तेषां तद्भागधेयं तानेव तेन प्रीणाति सोऽमन्यता-स्थन्वन्तो मे पूर्वे भ्रातरः प्रामेषतास्थानि शातया इति स यान्यस्थान्य-शातयत तत्पूतुद्र्वभवद्यन्माꣳसमुपमृतं तद्गुल्गुलु ।**

என்பது.

உரை.

அக்கினியின் சகோதரர்கள் மூவரும் அவிகொண்டுசெல்லும் வருத்தத்தால் இறந்துவிட்டார்கள்; அவ்வாறே யாமும் இறந்துவிடுவோம் என்று அக்கினி பயந்துகொண்டு தேவதாரு மரத்திலும், நறுமணமுடைய புற்களிலும், செம்மறி ஆட்டுக் கொம்புகட்கிடையிலும்போய் ஒளித்துக்கொண்டது. அதைக் கண்டுபிடித்து தேவர்கள் எமக்கு அவி கொண்டுபோவதற்கு வருவாயாக என்றழைத்தனர். அதைக்கேட்ட அக்கினி, எனது சகோதரர்களுக்கு ஹோமஞ் செய்யும்போது சிதறிவிழுந்ததுளிகளை அர்ப்பணஞ் செய்வீராகில் வருவேன் என்றது; அவ்வாறே, பருதியிற் சிதறிவிழும் துளிகள்

ஆகார ஹோமம்)

அக்கினியின் சகோதரர்களுடைய பாகமாதலால் அதையேற்று அவர்கள் களிப்படைகின்றனர். எனது சகோதரர்கள் இறந்தார்களன்றோ, அவர்களுடைய எலும்பு தேவதாருமரமாயிற்று. அவர்களுடைய மாமிசம் குல்குல் மரமாயிற்று என்பது.

---

அவற்றை விதிக்கின்றது.

பிராமணம்—7

**यदेतान्त्संभारान्त्सं भरत्यग्निमेव तत्सं भरति ।**

என்பது.

உரை.

அக்கினியின் உபகரணங்களைத் (சமித்துக்களை) தேடுகின்றவன் அக்கினியையே தேடுகின்றான் என்பது.

---

மந்திரத்திலுள்ள, 'புரீஷம்' என்னுஞ் சொல்லால் உபகரணமாகிய தீப்பற்றுஞ் சேத்தை முதலியவைகள் குறிப்பிடப்படுகின்றன என்கின்றது.

பிராமணம்—8

**अग्नेः पुरीषमसीत्याहाग्नेर्ह्येतत्पुरीषं यत्संभाराः ।**

என்பது.

உரை.

வெள்ளைக் குங்கிலியம் நறு மணமுள்ள புல்லுகள், வெள்ளைக் கம்பளம் முதலியவைகள் அக்கினியினுடைய ஸம்பாரங்கள்; இவைகளே இங்கு உபகரணங்களாம் என்பது.

---

மற்றும், தேவதாரு மரத்தின்விறகாகிய அக்கினியால், அக்கினியின் சகோதரர்கள் இவ்வக்கினியை யடைகின்றார்கள் என்கின்றது.

பிராமணம்—9

**अथो खल्वाहुरेते वावैनं ते भ्रातरः परि शेरे यत्पौतुद्रवाः परिधय इति ॥**

என்பது.

உரை.

தேவதாரு மரத்தின் விறகுகளை அக்கினியின் பக்கங்களில் வைத்தலால் அக்கினியின் சகோதரர்கள் அக்கினியுடன் நெருங்கியிருக்கின்றனர் என்று கூறுகின்றார்கள் பெரியோர்கள் என்பது.

எட்டாவது அநுவாகம்

முற்றிற்று.

---

## ஆறுங்காண்டம் இரண்டாம் பிரபாடகம்

### ஒன்பதாவது அநுவாகம்

*வியாகார ஹோமங்களைக் கூறும் பிராமணங்கள்.*

நான்கு பஞ்சாதிக்குமேல் இருபத்தாறு பதங்களைக் கொண்டது.

बद्धमव स्यति वरुणपाशादेवैनं मुञ्चति प्रणेनेक्ति मेध्यं एवैनं करोति सावित्रियर्चा हुत्वा हविर्धाने प्रवर्तयति सवितृप्रसूत एवैने प्रवर्तयति वरुणो वा एष दुर्वागुभयतो बद्धो यदक्षस्स यदुत्सर्जेद्यजमानस्य गृहानभ्युत्सर्जेत्सुवाग्देव दुर्या॑ आवदेत्याह गृहा वै दुर्याश्शान्त्यै पत्नी [४५] उपानक्ति पत्नी हि सर्वस्य मित्रं मित्रत्वाय यद्वै पत्नी यज्ञस्य करोति मिथुनं तदथो पत्निया एवैष यज्ञस्यान्वारम्भोऽनवच्छित्त्यै वर्त्मना वा अन्वित्य यज्ञ॑ रक्षा॑सि जिघा॑सन्ति वैष्णवीभ्यामृग्भ्यां वर्त्मनोर्जुहोति यज्ञो वै विष्णुर्यज्ञादेव रक्षा॑स्यप हन्ति यदध्वर्युरनग्नावाहुतिं जुहुयादन्धोऽध्वर्युस्स्याद्रक्षा॑सि यज्ञ॑ हन्युः [४६] हिरण्यमुपास्य जुहोत्यग्निवत्येव जुहोति नान्धोऽध्वर्युर्भवति न यज्ञ॑ रक्षा॑सि घ्नन्ति प्राचीप्रेतमध्वरं कल्पयन्ती इत्याह सुवर्गमेवैनं लोकं गमयत्यत्र रमेथां वर्ष्मन्पृथिव्या इत्याह वर्ष्म ह्येतत्पृथिव्या यद्देवयजन॑ शिरो वा एतद्यज्ञस्य यद्धविर्धानं दिवो वा विष्णवुत वा पृथिव्याः [४७] इत्याशीर्पदयर्चा दक्षिणस्य हविर्धानस्य मेथीं नि हन्ति शीर्षत एव यज्ञस्य यजमान आशिषोऽव रुन्धे दण्डो वा औपरस्तृतीयस्य हविर्धानस्य वषट्कारेणाक्षमच्छिनद्यत्तृतीयं छदिर्हविर्धानयोरुदाह्रियते तृतीयस्य हविर्धानस्यावरुध्यै शिरो वा एतद्यज्ञस्य यद्धवि-

ஆகார ஹோமம்)

धानं विष्णो रराटमसि विष्णोः पृष्ठमसीत्याह तस्म देतावद्धा शिरो विष्यूतं विष्णोस्स्यूरसि विष्णोर्ध्रुवमसीत्याह वैष्णवꣳ हि देवतया हविर्धानं यं प्रथमं ग्रन्थिं ग्रथ्नीयाद्यत्तं न विस्रꣳसयेदमेहेनाध्वर्युः प्रमीयेत तस्मात्स विस्रस्यः [४८] ॥ पत्नी हन्युर्वा पृथिव्या विष्यूतं विष्णोष्षड्विꣳशतिश्च ॥ ९ ॥

*இதிலும் வியாகார ஹோமங்களே கூறப்படுகின்றன.*

---

'யுஞ்சதேமனஃ' என்பது முதலிய ஹோம மந்திரங்களை விநியோகிப்பதற்கு, உபோற்காதமாக அநுட்டிக்கத்தக்கதை விதிக்கின்றது.

பிராமணம்—1

**बद्धमवस्यति वरुणपाशादेवैने मुञ्चति प्रणेनेक्ति मेध्ये एवैने करोति ।**

*என்பது.*

உரை.

*கட்டிவைத்திருந்த அவிர்த்தான வண்டியின்கட்டை அவிழ்த்துவிடல் வேண்டும். இது, வருணபாசத்திலிருந்து விடுவித்ததாகும். அவ்வண்டியைக் கழுவுதலால் பரிசுத்தப் படுத்தலும்வேண்டும் என்பது.*

---

மந்திர விநியோகத்துடன் வண்டியைச் செலுத்துவதை விதிக்கின்றது.

பிராமணம்—2

**सावित्रियर्चा हुत्वा हविर्धाने प्रवर्तयति सवितृप्रसूत एवैने प्रवर्तयति ।**

*என்பது.*

உரை.

*சவிதா தேவதையின் மந்திரத்தால் ஹோமஞ் செய்துவிட்டு அவிர்த்தான வண்டியை ஓட்டுகின்றான். இதனால், சவிதா தேவதையாற் ஏவப் பெற்றே செலுத்துகின்றான் என்பது.*

---

வண்டியின் ஒலியைப் போற்றும் மந்திரத்திலுள்ள, 'சுவாக்'
என்னுஞ் சொல்லின் உபயோகத்தை விளக்குகின்றது.

பிராமணம்—3

**वरुणो वा एष दुर्वागुभयतो बद्धो यदक्षस्स यदुत्सर्जेद्यजमानस्य गृहानभ्यु-
त्सर्जेत्सुवाग्देव दुर्यां॑ आवदेत्याह गृहा वै दुर्याश्शान्त्यै ।**

என்பது.

உரை.

வண்டி, வருணபாசத்தாற் கட்டப்பட்டிருத்தலின் கத்துமாகில் அது கெட்ட வாக்காகும். ஆதலின், எசமானனுடைய வீட்டிற்கு நல்லவாக்கைச் சொல்வாயாக என்றது, இது நியசப்தத்தின் கோரத்தன்மை சாந்தியாதற் பொருட்டாம் என்பது.

---

வண்டிக்கு மைப்போடுவதை விதிக்கின்றது.

பிராமணம்—4

**पत्न्युपानक्ति पत्नी हि सर्वस्य मित्रं मित्रत्वाय यद्वै पत्नी यज्ञस्य करोति
मिथुनं तदथो पत्निया एवैष यज्ञस्यान्वारम्भोऽनवच्छित्यै ।**

என்பது.

உரை.

பத்தினி, முன் எடுத்துவைத்திருந்த மண்ணில் நெய்விட்டுக் குழைத்து வண்டிக்கு மைப் போடுகின்றான். இதனால், யாவருக்கும் மித்திரத்தன் மையை உண்டாக்குகின்றான். இதனால், பத்தினியும் தானுஞ்சேர்ந்துகொண் டவளாய் எக்ஞத்தைத் தொடங்கச் செய்கின்றாள். இது, இடையில் விடு படாமல் நடத்தற்பொருட்டாம் என்பது.

---

வண்டி செல்லும்வழியில் ஹோமஞ் செய்வதை விதிக்கின்றது.

பிராமணம்—5

**वर्त्मना वा अन्वित्य यज्ञं॑ रक्षां॑सि जिघां॑सन्ति वैष्णवीभ्यामृग्भ्यां
वर्त्मनोर्जुहोति यज्ञो वै विष्णुर्यज्ञादेव रक्षां॑स्यपहन्ति ।**

என்பது.

உரை.

வண்டியின் வழியாகப் புகுந்து, அசுரர்கள் எக்ஞத்தைக் கெடுப்பார்கள்; ஆதலின், விஷ்ணுவின் மந்திரத்தால் வண்டி சென்றவழியில் ஹோமஞ் செய்க. இதனால், விஷ்ணுவாகிய யக்ஞத்தால் அசுரர்களை விலக்குவதாகின்றது என்பது.

---

பொன்வைத்து அதன்மீது ஹோமஞ் செய்தல்வேண்டு மென்று விதிக்கின்றது.

பிராமணம்—6

**यदध्वर्युरनग्नावाहुतिं जुहुयादन्धोऽध्वर्युस्स्याद्रक्षाँसि यज्ञँ हन्युर्हिरण्यमुपास्य जुहोत्यग्निवत्येव जुहोति नान्धोऽध्वर्युर्भवति न यज्ञँ रक्षाँसि घ्नन्ति ।**

என்பது.

உரை.

வேட்போன், அக்கினி யில்லாதவிடத்தில் ஹோமஞ்செய்யில் குருடனாகின்றான், எக்ஞத்தையும் அசுரர்கள் கெடுத்துவிடுகின்றனர். ஆதலின், பொன்னைவைத்து அதன்மீது ஹோமஞ்செய்யில் அவ்விரண்டு குற்றங்களும் இல்லை என்பது.

---

கிழக்காய்ச் செலுத்தும் மந்திரத்திலுள்ள கிழக்கு, என்னுஞ் சொல்லின் கருத்தை விளக்குகின்றது.

பிராமண —7

**प्राचीप्रेतमध्वरं कल्पयन्ती इत्याह सुवर्गमेवैनं लोकं गमयति ।**

என்பது.

உரை

'பிராசீப்ரேத மத்வரம் கல்பயந்தீ' என்றது, சுவர்க்கலோகத்தை அடையுமாறு செய்கின்றது என்பது.

---

வேதிகைக்கு பூமி உடம்பாம் என்றது, 'யதிமாம்' என்பது முதலிய பிராமணத்தில் வெளிப்படை என்கின்றது.

பிராமணம்—8

**अत्र रमेथां वर्ष्मन्पृथिव्या इत्याह वर्ष्म ह्येतत्पृथिव्या यद्देवयजनम् ।**

என்பது.

உரை.

'அத்ரரமேதாம் வர்ஷ்மந் ப்ருதிவ்யா:' என்றது, உத்தரவேதியின் உடம்பு பூமியாம் என்கின்றது.

இங்கு, வேதிகைக்கு மேற்கில் வண்டியை நிறுத்தி அதைக் கட்டிவைப்பதற்கு நாட்டும் முளையை, கட்டிற்குத் தென்புறமாய் நாட்டல்வேண்டும் என்பதை யுணர்க.

---

முளையடிப்பதை விதிக்கின்றது.

பிராமணம்—9

**शिरो वा एतद्यज्ञस्य यद्धविर्धानं दिवो वा विष्णवुत वा पृथिव्या इत्याशीर्पदयर्चा दक्षिणस्य हविर्धानस्य मेथीं नि हन्ति शीर्षत एव यज्ञस्य यजमान आशिषोऽव रुन्धे ।**

என்பது.

உரை.

அவிகளைத் தாங்கும் வண்டியானது எக்ஞத்திற்குத் தலையாம். அதைக் கட்டிவைப்பதற்கு, 'திவோவா' என்பது முதலிய ஆசிர்வாதச் சொற்களாலாகிய மந்திரத்தால் ஒரு முளையை நாட்டுகின்றான். அது, தலைபோன்ற அவிர்த்தான வண்டியின் ஆசிர்வாதத்தைப் பெறுதலாம் என்பது.

---

வண்டிகட்குக் கூடுகட்டி மறைத்தல் வேண்டுமென்பதை விதிக்கின்றது.

பிராமணம்—10

**दण्डो वा औपरस्तृतीयस्य हविर्धानस्य वषट्कारेणाक्षमच्छिनद्यत्तृतीयं छदिर्हविर्धानयोरुदाह्रियते तृतीयस्य हविर्धानस्यावरुद्ध्यै ।**

என்பது.

உரை.

'உபரன்' என்னும் அசுரனுடைய புதல்வனாகிய 'தண்டன்' என்னும் அசுரன், வஷட்கார தேவனுடன் நட்புவைத்து அவன் வாயிலாகநுழைந்து மூன்றாவது அவிர்த்தான வண்டியின் இருசை அறுத்துவிட்டனன். ஆதலின் மூன்றாவது அவிர்த்தான வண்டிக்குப் பதிலாக ஒவ்வொரு வண்டியினும், பக்கங்களில் இரண்டு புற்பாய்களும் மேலே ஒருபாயுமாக மூன்று பாய்களால் மறைப்புக் கூண்டுகட்டல்வேண்டும். பிறகு, அவ்வண்டிகளை உள்ளே விட்டு அவிர்த்தானமண்டபத்தைக் கட்டல்வேண்டும் என்பது.

---

எக்ஞபுருடனுக்கு, அவிர்த்தானம் என்னும் மண்டபம் தலையாம் என்பதற்கு மந்திரங்களால் ஒப்புக் கூறப்படுகின்றது.

பிராமணம்—11

**शिरो वा एतद्यज्ञस्य यद्धविर्धानं विष्णो रराटमसि विष्णोः पृष्ठमसीत्याह तस्मादेतावद्धा शिरो विष्यूतम् ।**

என்பது.

உரை.

*அவிர்த்தான மண்டபம் எக்ஞ புருடனுடைய தலையாயாதலின், விஷ்ணோः ரராடமஸி, விஷ்ணோः ப்ருஷ்டமஸி என்றது, இவ்வாறே, விசுவ கருமன் தலையை யுண்டுபண்ணியுள்ளான் ஆதலின் இவ்விரண்டு பாய்களும் தலையை மூடும் தோலாம் என்பது.*

---

இங்கு, விஷ்ணுவினுடைய, என்னும் ஆறும் வேற்றுமையால், தேவதாத் தன்மைச் சம்பந்தம் குறிப்பிக்கப்பட்டுள்ளது என்கின்றது.

பிராமணம்—12

**विष्णोस्स्यूरसि विष्णोर्ध्रुवमसीत्याह वैष्णवꣳ हि देवतया हविर्धानम् ।**

என்பது.

உரை.

*'விஷ்ணோः ஸ்யூரஸி' என்றது முதலியது, அவிர்த்தானமானது தேவத் தன்மையுடையதாம் என்கின்றது.*

---

முதலாவது முடிந்த முடிச்சை அவிழ்த்து விடல்வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—13

**यं प्रथमं ग्रन्थिं ग्रथ्नीयाद्यत्तं न विस्रꣳसयेदमेहेनाध्वर्युः प्रमीयेत तस्मात्स विस्रस्यः ॥**

என்பது.

உரை.

*முதல் முடிச்சை அவிழ்க்காவிடில் அத்வர்யு என்பவன் மூத்திர மடைக் கப்பட்டு இறப்பன். ஆதலின், அவிழ்த்துவிடல் வேண்டும் என்பது.*

ஒன்பதாவது அநுவாகம்

*முற்றிற்று.*

---

## ஆறுங்காண்டம் இரண்டாம் பிரபாடகம்
### பத்தாம் அநுவாகம்
*சபாமண்டபத்தைக் கூறும் பிராமணங்கள்.*

ஏழு பஞ்சாதிக்குமேல் பதினைந்து பதங்களைக் கொண்டது.

देवस्य त्वा सवितुः प्रसव इत्यभ्रिमा दत्ते प्रसूत्या अश्विनो-र्बाहुभ्यामित्याहाश्विनौ हि देवानामध्वर्यू आस्तां पूष्णो हस्ताभ्या-मित्याह यत्यै वज्र इव वा एषा यदभ्रिरभ्रिरसि नारिरसीत्याह शान्त्यै काण्डेकाण्डे वै क्रियमाणे यज्ञꣳ रक्षाꣳसि जिघाꣳसन्ति परिलिखितꣳ रक्षः परिलिखिता अरातय इत्याह रक्षसामपहत्यै [४९] इदमहꣳ रक्षसो ग्रीवा अपि कृन्तामि योऽस्मान्द्वेष्टि यं च वयं द्विष्म इत्याह द्वौ वाव पुरुषौ यं चैव द्वेष्टि यश्चैनं द्वेष्टि तयो-रेवानन्तरायं ग्रीवाः कृन्तति दिवे त्वाऽन्तरिक्षाय त्वा पृथिव्यै त्वेत्याहैभ्य एवैनां लोकेभ्यः प्रोक्षति परस्तादर्वाचीं प्रोक्षति तस्मात् [५०] परस्तादर्वाचीं मनुष्या ऊर्जमुप जीवन्ति क्रूरमिव वा एतत्करोति यत्खनत्यपोऽव नयति शान्त्यै यवमतीरव नय-त्यूर्ग्वै यव ऊर्गुदुम्बर ऊर्जैवोर्जꣳ समर्धयति यजमानेन संमितौ-दुम्बरी भवति यावानेव यजमानस्तावतीमेवास्मिन्नूर्जं दधाति पितृणाꣳ सदनमसी ति बर्हिरव स्तृणाति पितृदेवत्यम् [५१] ह्येतद्यन्निखातं यद्बर्हिरनवस्तीर्य मिनुयात्पितृदेवत्या निखाता स्याद्बर्हिरवस्तीर्य मिनोत्यस्यामेवैनां मिनोत्यथो स्वारुहमेवैनां करोत्युद्दिवꣳ स्तभानाऽन्तरिक्षं पृणेत्याहैषां लोकानां विधृत्यै द्युतानस्त्वा मारुतो मिनोत्वित्याह द्युतानो ह स्म वै मारुतो देवा-

नामौदुम्बरीं मिनोति तेनैव [५२] एनां मिनोति ब्रह्मवनिं त्वा क्षत्रवनिमित्याह यथायजुरेवैतद्धृतेन द्यावापृथिवी आ पृणेथामित्यौदुम्बर्यां जुहोति द्यावापृथिवी एव रसेनानक्त्यान्तमन्वव-स्रावयत्यान्तमेव यजमानं तेजसाऽनक्त्यैन्द्रमसीति छदिरधि नि दधात्यैन्द्रꣳ हि देवतया सदो विश्वजनस्य छायेत्याह विश्वजनस्य ह्येषा छाया यत्सदो नवछदि [५३] तेजस्कामस्य मिनुयात्त्रिवृता स्तोमेन संमितं तेजस्त्रिवृत्तेजस्व्येव भवत्येकादशछदीन्द्रियकाम-स्यैकादशाक्षरा त्रिष्टुगिन्द्रियं त्रिष्टुगिन्द्रियाव्येव भवति पञ्चदश-छदि भ्रातृव्यवतः पञ्चदशो वज्रो भ्रातृव्याभिभूत्यै सप्तदशछदि प्रजाकामस्य सप्तदशः प्रजापतिः प्रजापतेराप्त्या एकविꣳशतिछदि प्रतिष्ठाकामस्यैकविꣳशस्स्तोमानां प्रतिष्ठा प्रतिष्ठित्या उदरं वै सद ऊर्गुदुम्बरो मध्यत औदुम्बरीं मिनोति मध्यत एव प्रजानामूर्जं दधाति तस्मात् [५४] मध्यत ऊर्जा भुञ्जते यजमानलोके वै दक्षिणानि छदीꣳषि भ्रातृव्यलोक उत्तराणि दक्षिणान्युत्तराणि करोति यजमानमेवायजमानादुत्तरं करोति तस्माद्यजमानोऽयज-मानादुत्तरोऽन्तर्वर्तान्करोति व्यावृत्त्यै तस्मादरण्यं प्रजा उप जीवन्ति परि त्वा गिर्वणो गिर इत्याह यथायजुरेवैतदिन्द्रस्य स्यूरसीन्द्रस्य ध्रुवमसीत्याहैन्द्रꣳ हि देवतया सदो यं प्रथमं ग्रन्थिं ग्रथ्नीयाद्यत्तं न विस्रꣳसयेदमेहेनाध्वर्युः प्रमीयेत तस्मात्स विस्रस्यः [५५] ॥ अपहत्यै तस्मात्पितृदेवत्यं तेनैव नवछदि तस्मात्सदः पञ्चदश च ॥ १० ॥

இதில், சபாமண்டபங்கட்டுவது கூறப்படுகின்றது.

---

குந்தாலியை எடுத்தல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—1

**देवस्य त्वा सवितुः प्रसव इत्यभ्रिमा दत्ते प्रसूत्या अश्विनोर्बाहुभ्यामित्याहाश्विनौ हि देवानामध्वर्यू आस्तां पूष्णो हस्ताभ्या मित्याह यत्यै ।**

என்பது.

உரை.

'தேவஸ்யத்வா' என்பது முதலியவைகளால் குந்தாலியை யெடுப்பது, சவிதா தேவதையின் ஏவலால் தேவர்களின் அத்வரியுக்களான அசுவினிகளின் கைகளால் எடுக்கப்பெற்றதாகப் பாவித்து முயற்சித்தலாம் என்பது.

---

'நாரிः' என்னுஞ் சொல்லின் பயனைக் கூறுகின்றது.

பிராமணம்—2

**वज्र इव वा एषा यदभ्रिरभ्रिरसि नारिरसीत्याह शान्त्यै ।**

என்பது.

உரை.

வச்சிரம் போன்று கூரியதாமாயினும் எமக்குப் பகையன்று என்றது, சாந்தமாதற் பொருட்டாம் என்பது.

---

கோடுகிழித்தலின் பயனைக் கூறுகின்றது.

பிராமணம்—3

**काण्डेकाण्डे वै क्रियमाणे यज्ञꣳ रक्षाꣳसि जिघाꣳसन्ति परिलिखितꣳ रक्षः परिलिखिता अरातय इत्याह रक्षसामपहत्या इदमहꣳ रक्षसो ग्रीवा अपि कृन्तामि योऽस्मान्द्वेष्टि यं च वयं द्विष्म इत्याह द्वौ वाव पुरुषौ यं चैव द्वेष्टि यश्चैनं द्वेष्टि तयोरेवानन्तरायं ग्रीवाः कृन्तति ।**

என்பது.

உரை.

இதன் உரை முன்னர்க்கூறப்பட்டுள்ளது என்பது.

---

சபா மண்டபம்)

அத்திமரத்தின் பாகங்களை மூன்றுலகங்கள் எனல் மந்திரத்தின் கருத்து என்கின்றது.

பிராமணம்—4

**दिवेत्वाऽन्तरिक्षाय त्वा पृथिव्यै त्वेत्याहैभ्य एवैनां लोकेभ्यः प्रोक्षति ।**

என்பது

உரை.

'திவே' என்றது முதலியன, மூன்றுலகங்களின் பொருட்டு இக்கொம்பில் நீர் தெளிக்கின்றான் என்பது.

---

நுனியிலிருந்து கடைவரை தெளித்தல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—5

**परस्तादर्वाचीं प्रोक्षति तस्मात्परस्तादर्वाचीं मनुष्या ऊर्जमुप जीवन्ति ।**

என்பது

உரை.

இவ்வாறு நீர் தெளித்தலால், வாயிலிருந்து வயிறு வரைக்கும் உள்ள சாரத்தால் மனிதர்கள் பிழைக்கின்றார்கள் என்பது.

---

குழியில் தண்ணீர் விடுவதை விதிக்கின்றது.

பிராமணம்—6

**क्रूरमिव वा एतत्करोति यत्खनत्यपोऽत्र नयति शान्त्यै ।**

என்பது.

உரை.

குழி கெல்லுவதால் கோபப்படும்படி செய்கின்றான்; ஆதலின், அது சாந்தமாதற்கு நீர் விடுதல் என்பது.

---

விடும்நீரில் வாற்கோதுமையைப் போடல்வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—7

**यवमतीरव नयत्यूर्ग्वै यव ऊर्गुदुम्बर ऊर्जैवोर्जं समर्धयति ।**

என்பது

உரை.

வாற்கோதுமை இரசமாம், அத்தியும் இரசமாம் ஆதலின் இரசத்துடன் இரசஞ் சேர்க்கப்படுகின்றது என்பது.

---

நட்டதற்குமேல் எசமானனுடைய அளவு இருத்தல்வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—8

**यजमानेन संमितौदुम्बरी भवति यावानेव यजमानस्तावतीमेवास्मिन्नूर्जं दधाति ।**

என்பது

உரை.

இதனால், எசமானனுக்கு வேண்டிய அளவே உணவுப்பொருளுண்டாகின்றது என்பது.

---

தருப்பை போடுவதை விதிக்கின்றது.

பிராமணம்—9

**पितृणाꣳ सदनमसीति बर्हिरव स्तृणाति पितृदेवत्याꣳ ह्येतद्यन्निखातं यद्बर्हिरनवस्तीर्य मिनुयात्पितृदेवत्या निखातास्यात् ।**

என்பது.

உரை.

குழிக்கு பிதிர்க்கள் தேவதைகளாவர் என்னும் இது, வேறோர் அர்த்தவாதத்தால் உணரப்பெற்றது என்பது.

---

அத்திக்கொம்பை நிமிர்த்தலை விதிக்கின்றது.

பிராமணம்—10

**बर्हिरवस्तीर्य मिनोत्यस्यामेवैनां मिनोत्यथो स्वारुहमेवैनां करोति ।**

என்பது.

உரை.

தருப்பை போடாமல் நாட்டில் முழுதும் பிதிர்க்களின் பொருட்டேயாகும். தருப்பையைப்போட்டு நடுவதால் தன்னளவுகொண்டதுபற்றி தன் பொருட்டுமாம் என்பது பெறப்படுகின்றது என்கின்றது.

---

சபாமண்டபம்)

மந்திரத்திலுள்ள, திவம் (சுவர்க்கம்) என்பது முதலிய சொற்களுக்கு உபயோகத்தைக் கூறுகின்றது.

பிராமணம்—11

**उद्दिवꣳ स्तभानाऽन्तरिक्षं पृणेत्याहैषां लोकानां विधृत्यै ।**

என்பது

உரை.

*வானைப் பற்றிக்கொள்வாயாக என்றது முதலியது, உலகங்களின் உறுதிப்பாட்டின் பொருட்டாம் என்கின்றது.*

---

ஏனையவைகளைத் தவிர்த்து, மாருதத்தைக் கொண்டதற்குக் காரணங் கூறுகின்றது.

பிராமணம்—12

**द्युतानस्त्वा मारुतो मिनोत्वित्याह द्युतानो ह स्म वै मारुतो देवानामौदुम्बरीं मिनोति तेनैवैनां मिनोति ।**

என்பது.

உரை.

*மாருதம் தேவர்கட்கு அத்திமரக் கொம்பை நாட்டுவதாமாதலின், அதனாலேயே இதையும் நாட்டும்படி செய்வித்தல் என்பது.*

---

மந்திரப்பொருள் வெளிப்படை என்பதை விளக்குகின்றது.

பிராமணம்—13

**ब्रह्मवनि त्वा क्षत्रवनिमित्याह यथायजुरेवैतत् ।**

என்பது.

உரை.

*'பிரமவநிம்' என்றது முதலியன, எசுர்மந்திரத்திலுள்ள பொருளையே உடையவைகள் என்பது.*

---

நெய் யோமத்தை விதிக்கின்றது.

பிராமணம்—14

**घृतेन द्यावापृथिवी आ पृणेथामित्यौदुम्बर्यां जुहोति द्यावापृथिवी एव रसेनानक्ति ।**

என்பது.

உரை.

'கிருதேன' என்பது முதலியது, இந்நெய் யோமத்தால் வானும் மண்ணும் இரசத்தால் நனைக்கப்பட்டதாகின்றன என்பது.

---

நுனியில்விட்ட நெய் அடிவரை ஒழுகல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—15

आन्तमन्ववस्रावयत्यान्तमेव यजमानं तेजसाऽनक्ति ।

என்பது.

உரை.

அடிவரை ஒழுகுவதால் எசமானனுடைய தலையிலிருந்து கால்வரை ஒளியால் நனைத்ததாகும் என்பது.

---

மேலே தடுக்கை வேய்வதை விதிக்கின்றது.

பிராமணம்—16

ऐन्द्रमसीति छदिरधि नि दधात्यैन्द्रꣳ हि देवतया सदो विश्वजनस्य छाये-त्याह विश्वजनस्य ह्येषा छाया यत्सदः ।

என்பது.

உரை.

'ஐந்திரமஸி' என்றது முதலியது, தெய்வசபையானது இந்திரனுடைய சபையாம் அது எல்லாருக்கு நிழலாம் என்கின்றது.

---

விருப்ப பேதங்களால் தடுக்குக்களின் எண்களை விதிக்கின்றது.

பிராமணம்—17

नवछदि तेजस्कामस्य मितुयात्त्रिवृता स्तोमेन संमितं तेजस्त्रिवृत्तेजस्व्येव भवत्येकादशछदीन्द्रियकामस्यैकादशाक्षरा त्रिष्टुगिन्द्रियं त्रिष्टुगिन्द्रिया-व्येव भवति पञ्चदशछदि भ्रातृव्यवतः पञ्चदशो वज्रो भ्रातृव्याभिभूत्यै सप्तदशछदि प्रतिष्ठाकामस्य सप्तदशः प्रजापतिः प्रजापतेराप्त्या एकविꣳशति छदि प्रतिष्ठाकामस्यैकविꣳशस्स्तोमानां प्रतिष्ठा प्रतिष्ठित्यै ।

என்பது.

உரை.

தேசசை (ஒளியை) விரும்பியவன் ஒன்றது, தடுக்குக்களால் மூடில், மும்மூன்று ஒன்பது ஸ்தோமத்தாலாகும் ஒளியையடைகின்றான். இந்திரிய விருப்புடையவன் பதினொருதடுக்குக்களால் மூடில், பதினொரு எழுத்துக் கள்கொண்ட திருஷ்டுபாகிய இந்திரியத்தையடைகின்றான். பதினைந்துதடுக் குக்களால் மூடில், விரும்பியபடி பதினைந்து ஆகிய வச்சிரம் பகைவனைக் கொல்கின்றது. பதினேழு தடுக்குக்களால் மூடில் பதினேழாகிய பிரசாபதி யால், விரும்பிய பிரசைகளை யடைகின்றான். இருபத்தொரு தடுக்குக்களால் மூடில், விரும்பிய பிரதிட்டையை யடைகின்றான் என்பது.

---

அத்திமரத்தின் தடிக்கு சபையின் நடுஇடமென விதிக்கின்றது.

பிராமணம்—18

**उदरं वै सद ऊर्गुदुम्बरो मध्यत औदुम्बरीं मिनोति मध्यत एव प्रजाना-
मूर्जं दधाति तस्मान्मध्यत ऊर्जा भुञ्जते ।**

என்பது.

உரை.

சபை, வயிறும், அதன் நடுவில் இரசமாகிய அத்திமரத்தின் தடி நாட் டப்படுகின்றது. இதுபற்றியே, மனிதர்கள் வயிற்றின் நடுவில் இரசத்தை வைத்துக்கொள்கின்றனர். நடுவில் அருந்துகின்றனர் என்பது.

---

தெற்குத்தட்டியின் நுனி வடக்குவுள்ள தட்டியின் மேல்நிற்கும்படி போடல் வேண்டுமேன்று விதிக்கின்றது.

பிராமணம்—19

**यजमानलोके वै दक्षिणानि छदींषि भ्रातृव्यलोक उत्तराणि दक्षिणान्यु-
त्तराणि करोति यजमानमेवायजमानदुत्तरं करोति तस्माद्यजमानोऽ-
यजनादुत्तरः ।**

என்பது.

உரை.

தெற்கிலுள்ள தட்டிகள் எசமானனுடைய இடத்திலுள்ளவைகள், அதாவது எசமானனுக் கொட்பானவைகள். வடக்கிலுள்ள தட்டிகள் பகைவரைப் போன்றன. ஆதலின், தெற்குத்தட்டிகளின் நுனிகளை வடக்குத்தட்டிகளின் மேலேவைத்தல்வேண்டும். இதனால், வேள்வி செய்யாதவர்களினின்றும் இவனைச் சிறந்த எசமானனாகச் செய்கின்றான் என்பது.

---

தட்டிகளின் இடைவெளிகளை மறைத்தல் வேண்டுமென்று
விதிக்கின்றது.

பிராமணம்—20

**अन्तर्वर्तान्करोति व्यावृत्त्यै तस्मादरण्यं प्रजा उप जीवन्ति ।**

*என்பது.*

உரை.

*அடிக்கட்டைகளும் புல்லுகளும் தட்டிகளினின்றும் வேறுதலின், காட்டில் உள்ள சுப்பில்களைக்கொண்டு சனங்கள் பிழைக்கின்றார்கள் என்பதாம்.*

---

கீழில் அடைக்கும் மந்திரத்தின் பொருள் வெளிப்படையென்று
விளக்குகின்றது.

பிராமணம்—21

**परित्वा गिर्वणो गिर इत्याह यथायजुरेवैतत् ।**

*என்பது.*

உரை.

*'பிரித்வா' என்பது முதலியன, எசுர்மந்திரத்திலுள்ளவாறே பொருள்களை யுடையன என்பது.*

---

தருப்பைக்கயிறறைக் கட்டும் மந்திரத்திற்கு உரை கூறுகின்றது.

பிராமணம்—22

**इन्द्रस्य स्यूरसीन्द्रस्य ध्रुवमसीत्याहैन्द्रꣳ हि देवतया सदः ।**

*என்பது.*

உரை.

*'இந்திரஸ்ய' என்றது முதலியது, தேவசபை இந்திரனுடைய சபையாம் என்கின்றது.*

---

முதலில் முடிந்த முடிச்சை அவிழ்த்துவிட வேண்டுமென்று
விதிக்கின்றது.

பிராமணம்—4

**यं प्रथमं ग्रन्थिं ग्रथ्नीयाद्यत्तं न विस्रꣳसयेदमेहेनाध्वर्युः प्रमीयेत तस्मात्स विस्रस्यः ।**

*என்பது.*

*முதலில் முடிந்த முடிச்சை அவிழ்க்காவிடில், அத்வரியு, மூத்திரம் அடைக்கப்பட்டு இறப்பன். ஆதலின், அம் முடிச்சை அவிழ்த்துவிடல் வேண்டும் என்பது.*

பத்தாவது அநுவாகம்

*முற்றிற்று.*

---

## ஆறுங்காண்டம் இரண்டாம்பிரபாடகம்

### பதினோராவது அநுவாகம்

*உபரவங்களைக் கூறும் பிராமணங்கள்.*

நான்கு பஞ்சாதிக்குமேல் இருபத்து மூன்றுபதங்களைக் கொண்டது.

शिरो वा एतद्यज्ञस्य यद्धविर्धानं प्राणा उपरवा हविर्धाने खायन्ते तस्माच्छीर्षन्प्राणा अधस्तात्खायन्ते तस्मादधस्ताच्छीर्ष्णः प्राणा रक्षोहणो वलगहनो वैष्णवान्खनामीत्याह वैष्णवा हि देवतयोपरवा असुरा वै निर्यन्तो देवानां प्राणेषु वलगान्न्यखनन्तान्बाहुमात्रेऽन्वविन्दन्तस्माद्बाहुमात्राः खायन्त इदमहं तं वलगमुद्वपामि [५६] यं नस्समानो यमसमानो निचखानेत्याह द्वौ वाव पुरुषौ यश्चैव समानो यश्चासमानो यमेवास्मै तौ वलगं निखनतस्तमेवोद्वपति संतृणत्ति तस्मात्संतृण्णा अन्तरतः प्राणा न सं भिनत्ति तस्मादसंभिन्नाः प्राणा अपोऽव नयति तस्मादार्द्रा अन्तरतः प्राणा यवमतीरव नयति [५७] ऊर्ग्वै यवः प्राणा उपरवाः प्राणेष्वेवोर्जं दधाति बर्हिरव स्तृणाति तस्माल्लोमशा अन्तरतः प्राणा आज्येन व्याघारयति तेजो वा आज्यं प्राणा उपरवाः प्राणेष्वेव तेजो दधाति हनू वा एते यज्ञस्य यदधिषवणे न सं तृणत्त्यसंतृण्णे हि हनू अथो खलु दीर्घसोमे संतृद्ये धृत्यै शिरो वा

एतद्यज्ञस्य यद्धविर्धानम् [५८] प्राणा उपरवा हनू अधिषवणे जिह्वा चर्म ग्रावाणो दन्ता मुखमाहवनीयो नासिकोत्तरवेदिरुदरꣳ सदो यदा खलु वै जिह्वया दत्स्वधि खादत्यथ मुखं गच्छति यदा मुखं गच्छत्यथोदरं गच्छति तस्माद्धविर्धाने चर्मन्नधि ग्रावभिरभिषुत्याऽऽहवनीये हुत्वा प्रत्यञ्चः परेत्य सदसि भक्षयन्ति यो वै विराजो यज्ञमुखे दोहं वेद दुह एवैनामियं वै विराट्तस्यै त्वक्चर्मोधोऽधिषवणे स्तना उपरवा ग्रावाणो वत्सा ऋत्विजो दुहन्ति सोमः पयो य एवं वेद दुह एवैनाम् [५९] ॥ वपामि यवमतीरवं नयति हविर्धानमेव त्रयोविꣳशतिश्च ॥ ११ ॥

இப்பிரபாடகத்தின் அநுவாகங்களின் தொகையைக் காட்டுந்தலைப்புச் சொற்கள்:—

यदुभौ देवासुरा मिथस्तेषाꣳ सुवर्गं यद्वा अनीशानः पुरोहविषि तेभ्य उत्तरवेदिस्सोत्तरवेदिर्बद्धं देवस्याभ्रिꣳ शिरो वा एकादश ॥ ११ ॥

பஞ்சாதிகளின் தொகையை காட்டுந்தலைப்புச் சொற்கள்:—

यदुभावित्याह देवानां यज्ञो देवेभ्यो न रथाय यजमानाय परस्तादर्वाचीं नवपञ्चाशत् ॥ ५९ ॥

இதில், உபரவங் கெல்லும் வகைகள் கூறப்படுகின்றன.

---

உபரவங் கெல்லுவதை விதிக்கின்றது.

பிராமணம்—1

शिरो वा एतद्यज्ञस्य यद्धविर्धानं प्राणा उपरवा हविर्धाने खायन्ते तस्माच्छीर्षन्प्राणाः ।

என்பது.

உபரவம்)

உரை.

அவிர்த்தான மண்டபம் எக்ஞத்தின் தலையாமாதலின் அதில், செவி, மூக்கு முதலிய துளைகளின் வாயிலாகவரும் பிராணனுக்கிடமாதலின் உபரவங் கெல்லல் வேண்டும். உபரவம்=உள்ளில் ஒன்று பட்டதாய்த் தோன்றும் நான்கு மண் வளைகள். இது, தலையில் இருத்தல் பொருத்தமுடையதாம்.

---

அதை விதிக்கின்றது.

பிராமணம்—2

**अधस्तात्खायन्ते तस्मादधस्ताच्छीर्ष्णः प्राणाः ।**

என்பது.

உரை.

அவிர்த்தான மண்பத்திற்குக் கீழே பூமியில் உபரவங் கெல்லப்படுதலால், உலகில், தலையின் மேல் ஓட்டிற்குக் கீழே பிராணன் உலாவுகின்றது.

---

'வைஷ்ணவங்களை' என்னும் ஆகுபெயரால் தேவதை கொள்ளப் படுகின்றது என்கிறது.

பிராமணம்—3

**रक्षोहणो वलगहनो वैष्णवान्खनामीत्याह वैष्णवा हि देवतयोपरवाः ।**

என்பது.

உரை.

'ரக்ஷோஹணஃ' என்றது முதலியது, உபரவம் என்னுந் துளைகள் விஷ்ணுவைத் தேவதையாக உடையவைகள் என்கின்றது.

---

மூன்று சாண் அளவு ஆழமிருத்தல் வேண்டுமென்பதிற் பிரமாணங் கூறுகின்றது.

பிராமணம்—4

**असुरा वै निर्यन्तो देवानां प्राणेषु वलगान्यखनन्तान्बाहुमात्रेऽन्वविन्दन्त-स्माद्बाहुमात्राः खायन्ते ।**

என்பது

உரை.

ஓடுவதற்கு முயன்ற அசுரர்கள் தேவர்களுடைய உயிர்கெடும்படி ஒரு முழம் ஆழத்தில் பூமியில் பள்ளங் கெல்லி சூனியம் வைத்திருந்தார்களாதலின் இப்போதும் ஒருமுழம் ஆழம் உபரவ மென்னும் வளைகள் கெல்லப் படுகின்றன என்பது.

---

பகைவர் அனைவரையுங் கொள்ளுதற் பொருட்டு, ஒத்தவன் ஒப்பில்லாதவன் என்னுஞ் சொற்கள் கூறப்பட்டன என்கின்றது.

பிராமணம்--5

**इदमहं तं वलगमुद्वपामि यं नस्समानो यमसमानो निचखानेत्याह द्वौ वाव पुरुषौ यश्चैव समानो यश्चासमानो यमेवास्मै तौ वलगं निखनतस्तमेवो-द्वपति ।**

என்பது.

உரை.

எனக்குச் சமமானவன் சமமில்லாதவன் என்னுமிருவர்களின் சூன்யத்தை எடுக்கின்றேன்'' என்றது, இவ்விருவகைச் சத்துருக்களின் பில்லி சூனியங்களையும் எடுக்கின்றேன் என்பது.

---

நான்கு துளைகளும் உள்ளில் ஒன்று சேர்ந்திருத்தல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்---6

**संतृणत्ति तस्मात्संतृण्णा अन्तरतः प्राणाः ।**

என்பது.

உரை.

பிராணன், கண், செவிகள் எல்லாம் உடம்பினுள் இருதயத்தில் ஒன்றுய்ச் சேர்ந்திருக்கின்றன ஆதலின் இவ்வாறு என்பது.

---

மேலே நான்காய் இருத்தல் வேண்டுமென்பதை விதிக்கின்றது.

பிராமணம்—7

**न सं भिनत्ति तस्मादसंभिन्नाः प्राणाः ।**

என்பது.

உபரவம்)

உரை.

*பிராணன்கள் தத்தமது துளைகளிலிருக்கின்றன ஒன்று படுவதில்லை. ஆதலின் பிரிந்திருத்தல் வேண்டும் என்பது.*

---

தெளித்து மீந்த நீரை உபரவத்திற் கொட்டல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—8

**अपोऽव नयति तस्मादार्द्रा अन्तरतः प्राणाः ।**

*என்பது.*

உரை.

*வாய், மூக்கு, கண் முதலிய துளைகளுள், ஈரப்பசையிருத்தலின் உள்ளில் ஈரப்பசையுடையவைகள் பிராணன்கள் என்பது.*

---

கொட்டிய நீரில் வாற்கோதுமையைப் போடல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—9

**यवमतीरव नयत्यूर्ग्वै यवः प्राणा उपरवाः प्राणेष्वेवोर्जं दधाति ।**

*என்பது*

உரை.

*உபரவம் பிராணனுமாதலின், அதில், அன்னரசத்தைப் போடல் வேண்டு என்பது.*

---

உபரவங்களில் தருப்பையைப் போடல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—10

**बर्हिरव स्तृणाति तस्माल्लोमशा अन्तरतः प्राणाः ।**

*என்பது*

உரை.

*கண் கோளைகள், மூக்குத்துளை முதலானவைகளில் உரோமங்கள் காணப்படுதலின் உள்ளே பிராணன்கள் உரோமங்களை யுடையவைகளாமாதலின் தருப்பையைப் போடுதல் என்பது.*

---

ஹோமத்தை விதிக்கின்றது.

பிராமணம்—11

**आज्येन व्याघारयति तेजो वा आज्यं प्राणा उपरवाः प्राणेष्वेव तेजो दधाति ।**

என்பது

உரை.

நெய்யால் ஹோமஞ் செய்யப்படுகின்றது என்றது, நெய் ஒளியாம் உபரவங்கள் பிராணங்கள் அப் பிராணங்களிடத்தில் ஒளி வைக்கப்படுகின்றது என்கின்றது.

---

சோமரசம் பிழியும் பலகைகள் ஒன்றாய் நெருங்கி யிருத்தல் கூடாதென்கின்றது.

பிராமணம்—12

**हनू वा एते यज्ञस्य यदधिषवणे न सं तृणत्त्यसंतृण्णे हि हनू ।**

என்பது.

உரை.

'சோமரசம் பிழியும் பலகைகளிரண்டும் எக்ஞத்திற்கு கன்னங்கள் போன்றன. ஆதலின் அவற்றை, கயிறு முதலியவைகளால் இறுகக்கட்டல் கூடாது என்பது.

---

தொடர்ப்புபற்றி மிகுந்த சோமரசம் பிழியும்மிடத்தும் அதை விதிக்கின்றது.

பிராமணம்—13

**अथो खलु दीर्घसोमे संतृद्ये धृत्यै ।**

என்பது,

உரை.

மீண்டும் மீண்டும் சோமரசம் பிழியும் யாகங்களில் வலுவுடனிருத்தற் பொருட்டு அப் பலகைகளைக் கட்டுதல் என்பது.

---

உருவகமாய் உபரவங்களைப் புகழ்ந்து, நிமித்தத்துடன் சபையில் சோம ரசத்தை அருந்தல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—14

शिरो वा एतद्यज्ञस्य यद्धविर्धानं प्राणा उपरवा हनू अधिषवणे जिह्वा चर्म ग्रावाणो दन्ता मुखमाहवनीयो नासिकोत्तरवेदिरुदरꣳ सदो यदा खलु वै जिह्वया दत्स्वधि खादत्यथ मुखं गच्छति यदा मुखं गच्छत्यथोदरं गच्छति तस्माद्धविर्धाने चर्मन्नधि ग्रावभिरभिषुत्याऽऽहवनीये हुत्वा प्रत्यञ्चः परेत्य सदसि भक्षयन्ति ।

என்பது.

உரை.

*எக்ஞத்திற்குத் தலை அவிர்த்தான மண்டபமாம். உபரவ வளைகள் பிராணன்கள், சோமரசம் பிழியும் பலகைகள் கன்னங்கள், தோல் நாவாம், இடிக்குங் கற்கள் பற்கள், ஆகவனீயம் வாய், மூக்கு உத்தரவேதிகை. சபை வயிறும், ஆதலின், நாக்குப் பற்களால் மென்று சுவைக்கில் வாய்க்குட் போகின்றது, பிறகு வயிற்றிற்குட் போகின்றது ஆதலின், அவிர்த்தான மண்டபத்தில் தோலின்மீது கற்களால் இடித்துப் பிழிந்து ஆகவனீயத்தில் ஹோமஞ் செய்து மீண்டும் வந்து சபையில் அருந்துகின்றனர் என்பது.*

---

மீண்டும் உபரவத்தை மற்றொரு உருவகப்படுத்திப் புகழ்ந்து அதன் உணர்வைப் புகழ்கின்றது.

பிராமணம்—15

यो वै विराजो यज्ञमुखे दोहं वेद दुह एवैनामियं वै विराट्तस्यै त्वक्चर्मोधोऽधिषवणे स्तना उपरवा ग्रावाणो वत्सा ऋत्विजो दुहन्ति सोमः पयो य एवं वेद दुह एवैनाम् ॥

என்பது.

உரை.

*ஈண்டு, அக்கினிட்டோம யாகத்தில் பன்னிரண்டு துதிகள் உள்ளன, அவற்றின் இருக்கு மந்திரங்களை மீண்டும் மீண்டும் ஓதில் தொண்ணூறாகின்றன. தொண்ணூறில் பத்தொன்பது பத்துக்களிருக்கின்றன. ஆதலின் விராட்சந்தத்தின் எழுத்தெண்ணிக்கையும் இதில் இருக்கின்றது. ஆதலின் இது விராட் எனப்படுகின்றது. இவ்விராட் இங்கு காமதேனுவாக உருவகித்துக் கூறப்படுகின்றது.*

இனி, இது, மறுநாளிற் செய்யப்படும் எக்ஞத்திற்குத் தொடக்கமாதலின் முகமெனப்படுகின்றது. இத்தகைய காமதேநுவிற்குத் தோல் அதிஷவண தோல்ாம்: பிழியும் பலகைள் மடியாம் உபரவங்கள் முலைகள், இடிக்குங் கல்லுகள், கன்றுகள், வேள்விச் செயலாளர்கள் சோமமாகிய பாலைக் கறப்போர்கள். இவ்வாறு கறக்கின்றவர்களும் இதை யுணர்கின்றவர்களும், இத்தகைய காமதேநுவில் நன்கு பால் கறக்கின்றவர்களாவர், அதாவது அவற்றின் பயனை அடைகின்றவர்கள் என்பது.

ஈண்டு, இது, உபரவத்தின் துதி யென்பர் சிலர். சிலர், தனி உபாசனை யென்பர். இருவகையும் உடன்படத்தக்கவைகளே என்பதையு முணர்க.

பதினோராவது அநுவாகம்
முற்றிற்று.

---

இரண்டாம் பிரபாடகம்
முடிந்தது.

---

மூன்றும் பிரபாடக விடயச் சுருக்கம்.

तृतीयस्याऽऽदिमे सर्वे धिष्णियास्स्युर्द्वितीयके ।
अग्नीषोमप्रणयनं तृतीये यूपखण्डनम् ॥ १ ॥
चतुर्थे स्थापयेद्यूपं बर्हिं मथ्नाति पञ्चमे ।
नियुनक्ति पशुं षष्ठे सामिधेन्यस्तु सप्तमे ॥ २ ॥
आघारौ च प्रयाजाश्च ह्यष्टमे हिंसनं पशोः ।
नवमे स्याद्वपाहोमोऽवदानानि त्वनन्तरे ॥ ३ ॥
एकादशे त्वनूयाजास्तृतीयोऽयं प्रपाठकः ॥

இம்மூன்றும் பிரபாடகத்திலும் பதினொரு அநுவகங்க ளிருக்கின்றன, அவற்றுள், முதலாவதில் திஷ்ணியங்(மேடை)களும், இரண்டாவதில் அக்கினி சோமம் என்பவைகளைக் கொண்டுபோவதும், மூன்றுவதில் யூபத்தை வெட்டுவதும், நான்காவதில் யூபத்தை நடுவதும், ஐந்தாவதில் தீக்கடைவதும், ஆறுவதில் யூபத்திற் பசுவை(ஆட்டை)க் கட்டுவதும், ஏழாவதில் சாமிதேனிகளும். எட்டாவதில் ஆகாரஹோம முதலியதும், ஒன்பதாவதில் வபாஹோமமும், பத்தாவதில் அங்கஹோமமும், பதினொராவதில் அநுயாசைகளுஞ் சொல்லப்படுகின்றன என்பது.

---

## ஆறுங்காண்டம் மூன்றும் பிரபாடகம்

### முதலநுவாகம்

*திஷ்ணியங்களைக் கூறும் பிராமணங்கள்.*

ஆறு பஞ்சாதிக்குமேல் பதினைந்து பதங்களை கொண்டது.

चात्वा॑लाद्धि॒ष्णि॑याा॒नुप॑ वपति॒ योनि॒र्वै य॒ज्ञस्य॒ चात्वा॑लं य॒ज्ञस्य॑ सयो॒नि॒त्वाय॑ दे॒वा वै य॒ज्ञं परा॑ऽजयन्त॒ तमाग्नी॑ध्रा॒त्पुन॒रपा॑जयन्ने॒तद्वै॒ य॒ज्ञस्याप॑राजितं॒ यदाग्नी॑ध्रं॒ यदाग्नी॑ध्राद्धि॒ष्णि॑यान्॒ वि॒हर॑ति॒ यदे॒व य॒ज्ञस्याप॑राजितं॒ तत॑ ए॒वैनं॒ पुन॑स्तनुते पराजि॒त्येव॒ खलु॒ वा ए॒ते य॑न्ति॒ ये ब॑हिष्पवमा॒नꣳ सर्प॑न्ति बहिष्पवमा॒ने स्तु॒ते [१] आहा॒ग्नीद॒ग्नीन् वि ह॑र ब॒र्हिस्स्तृ॑णाहि पुरो॒डाशाꣳ॒ अलं॑ कुरु॒ इति॑ य॒ज्ञमे॒वा-

पजित्य पुनस्तन्वाना यन्त्यङ्गारैर्द्वे सवने वि हरति शलाकाभि-
स्तृतीयꣳ सशुक्रत्वायाथो सं भरत्येवेनद्धिष्णिया वा अमुष्मिँल्लोके
सोममरक्षन्तेभ्योऽधि सोममाऽहरन्तमन्ववायन्तं पर्यविशन् य एवं
वेद विन्दते [२] परिवेष्टारं ते सोमपीथेन व्यार्ध्यन्त ते देवेषु
सोमपीथमैच्छन्त तान्देवा अब्रुवन्द्वे द्वे नामनी कुरुध्वमथ प्रवाऽऽ-
प्स्यथ न वेत्यग्नयो वा अथ धिष्णियास्तस्माद्द्विनामा ब्राह्मणोऽ-
र्धुकस्तेषां ये नेदिष्ठं पर्यविशन्ते सोमपीथं प्राऽऽप्नुवन्नाहवनीय
आग्नीध्रीयो होत्रीयो मार्जालीयस्तस्मात्तेषु जुह्वत्यतिहाय वषट्क-
रोति वि हि [३] एते सोमपीथेनाऽऽर्ध्यन्त देवा वै याः प्राची-
राहुतीरजुहवुर्ये पुरस्तादसुरा आसन्ताꣳस्ताभिः प्राणुदन्त याः
प्रतीचीर्ये पश्चादसुरा आसन्ताꣳस्ताभिरपानुदन्त प्राचीरन्या
आहुतयो हूयन्ते प्रत्यङ्ङासीनो धिष्णियान्व्याघारयति पश्चाच्चैव
पुरस्ताच्च यजमानो भ्रातृव्यान्प्रणुदते तस्मात्पराचीः प्रजाः प्रवी-
यन्ते प्रतीचीः [४] जायन्ते प्राणा वा एते यद्धिष्णिया यदध्वर्युः
प्रत्यङ्धिष्णियानतिसर्पेत्प्राणान्त्सं कर्षेत्प्रमायुकस्स्यान्नाभिर्वा एषा
यज्ञस्य यद्धोतोर्ध्वः खलु वै नाभ्यै प्राणोऽवाङपानो यदध्वर्युः
प्रत्यङ्होतारमतिसर्पेदपाने प्राणं दध्यात्प्रमायुकस्स्यान्नाध्वर्युरुप
गायेद्वाग्वीर्यो वा अध्वर्युर्यदध्वर्युरुपगायेदुद्गात्रे [५] वाचꣳ सं
प्रयच्छेदुपदासुकाऽस्य वाक्स्याद्ब्रह्मवादिनो वदन्ति नासꣳस्थिते
सोमेऽध्वर्युः प्रत्यङ्सदोऽतीयादथ कथा दाक्षिणानि होतुमेति

மேடைகள்)

यामो हि स तेषां कस्मा अह देवा यामं वाऽयामं वाऽनु ज्ञास्यन्तीत्युत्तरेणाऽऽग्नीध्रं परीत्य जुहोति दाक्षिणानि न प्राणान्त्सं कर्षति न्यन्ये धिष्णिया उप्यन्ते नान्ये यान्निवपति तेन तान्प्रीणाति यान्न निवपति यदनुदिशति तेन तान् [६] ॥ स्तुते विन्दते हि वीयन्ते प्रतीचीरुद्गात्र उप्यन्ते चतुर्दश च ॥ १ ॥

இதில், திஷ்ணியங்கள் என்னும் மேடைகள் கூறப்படுகின்றன.

---

மந்திரங்களை விரிப்பதைத் தவிர்த்து, அநுட்டானதந்த விதிக்கின்றது.

பிராமணம்—1

चात्वालाद्धिष्णियानुप वपति योनिर्वै यज्ञस्य चात्वालं यज्ञस्य सयोनित्वाय ।

என்பது.

உரை.

சாத்வாலம் என்னும் மண்ணெடுக்குங் குழியில் மண்ணெடுத்து திஷ்ணியங்களென்னும் இடவிசேடங்களைச் செய்யில், எக்ஞமனைத்தும் காரணத்துடன் செய்தவைகளாகின்றன. எதனுலெனின்; மட்குழி எக்ஞத்திற்குக் காரணமாம் (பிறப்பிடமாம்) ஆதலின் என்க என்பது.

---

வேறு காலங்களில் அநுட்டிக்கும் மேடைகளையும் தொடர்புபற்றி இங்குக் கூறுகின்றவிடத்து, ஆக்னீத்ரனுடைய, அதாவது அக்கினியைப் பாதுகாத்துவைத்துக் கொண்டிருக்கின்றவனுடைய மேடையிலுள்ள தீயிலிருந்து ஹோதா முதலியோர்களின் மேடைகளில் அக்கினியை எடுத்துக்கொண்டு வந்து வைத்தல் வேண்டுமேன்பதை விதிக்கின்றது.

பிராமணம்—2

देवा वै यज्ञं पराऽजयन्त तमाग्नीध्रात्पुनरपाजयन्नेतद्वै यज्ञस्यापराजितं यदाग्नीध्रं यदाग्नीध्राद्धिष्णियान् विहरति यदेव यज्ञस्यापराजितं तत एवैनं पुनस्तनुते ।

என்பது.

உரை.

முன், அசுரர்கள், தேவர்களைவென்று எக்ஞத்தீயைக் கவர்ந்து கொண்டனர், அப்போது, ஆக்னித்ரதேவதை தனது வலியால் மீண்டும் அவ்வக்கினியைக் கொண்டு வந்தது. அவ்வாக்கினீத்திரனுடைய இடம் பிறரால் வெல்லமுடியாதது. ஆதலின், அதிலிருந்து அக்கினியைக் கொண்டுவந்து மீண்டு வளர்த்தல் பொருத்தமேயாம் என்பது.

---

பிரேஷை மந்திரத்தைத் தோற்றுவிக்கின்றது,

பிராமணம்—3

पराजित्येव खलु वा एते यन्ति ये बहिष्पवमानꣳ सर्पन्ति बहिष्पवमाने स्तुत आहाग्नीदग्नीन्वि हर बर्हिस्स्तृणाहि पुरोडाशाꣳ अलं कुर्विति यज्ञमेवापजित्य पुनस्तन्वाना यन्ति ।

என்பது.

உரை.

காலையில் சோமரசம் பிழியும்போது செய்யப்படும் "உபாஸ்மை காயத" என்பது முதலிய துதியானது பஹிஷ்பவமானம் எனப்படும். அத்துதியைப்பாடும் வேள்விச்செயலாளர் தோல்வியுற்று ஓடுகிறவர்களைப் போல் ஓடுகின்றார்கள். ஆதலின், துதிசெய்து முடிந்தவுடன், ஆக்னீத்ரனைக் கூப்பிட்டு, "அக்கினியைக் கொண்டு வருவாயாக" என்பது முதலியனவாக ஏவில், தோல்வியுற்றதிலிருந்து மீண்டுங் கொண்டுவந்து வைத்ததாகும் என்பது.

---

அக்கினியை எடுத்துக்கோள்வதில் விசேடத்தை விதிக்கின்றது.

பிராமணம்—4

अङ्गारैर्द्वे सवने वि हरति शलाकाभिस्तृतीयꣳ सशुक्रत्वायाथो सं भरत्येवैनत् ।

என்பது.

உரை.

காலை, நடுப்பகல் என்னுஞ் சமயங்களிற் சோமரசம்பிழியும்போது ஆக்னீத்ரனுடைய தீயிலிருந்து எரியுந்தணலை எடுத்துக் கொள்ளல் வேண்டும். மூன்றும் முறை சோமரசம்பிழியும்போது ஒருபிடி புல்லைக் கொளுத்தி எடுத்துக் கொள்ளல் வேண்டும். இது, காயத்திரி, வாயால் சோமரசத்தைக்குடித்து

மேடைகள்)

விட்டதால் சாரமின்றியதாயிற்று. இப்போது, இவ்வாறு கொளுத்துவதால் ஒளியுமிருக்கிறது சாரமுடையது பாகின்றது என்பதாம்.

---

முற்கூறிய திஷ்ணியங்கள் என்னும் மேடைக்கூட்டத்தைப் புகழ்கின்றது.

பிராமணம்—5

**धिष्णिया वा अमुष्मिँल्लोके सोममरक्षन्तेभ्योऽधि सोममाऽहरन्तमन्ववायन्तं पर्यविशन् ।**

என்பது.

உரை.

சுவானன், பிராசன் என்பவர் முதலானோர்களைப்போல் திஷ்ணிய தேவதைகளும் சோமத்தைப் பாதுகாக்கின்றவர்களாவார்கள். இவர்கள் தாம் கொண்டு வந்த சோமத்திற்குப் பக்கத்திலும் வந்து உட்கார்ந்து கொண்டிருக்கின்றார்கள் என்பது புகழ் என்பதாம்.

---

இஃதுணர்ந்தவனைப் புகழ்கின்றது.

பிராமணம்—6

**य एवं वेद विन्दते परिवेष्टारम् ।**

என்பது.

உரை.

இவ்வாறுணர்ந்தவன், தொண்டுபண்ணும் சனங்களை யடைகின்றான் என்பது.

---

சிலமேடையில் சோமரச ஆகுதியை விதிக்கின்றது.

பிராமணம்—7

**ते सोमपीथेन व्यार्ध्यन्त ते देवेषु सोमपीथमैच्छन्त तान्देवा अब्रुवन्द्वे द्वे नामनी कुरुध्वमथ प्रवाऽऽप्स्यथ न वेत्यग्नयो वा अथ धिष्णियास्तस्माद्द्विनामा ब्राह्मणोऽर्धुकस्तेषां ये नेदिष्ठं पर्यविशन्ते सोमपीथं प्राऽऽप्नुवन्नाहवनीय आग्नीध्रीयो होत्रीयो मार्जालीयस्तस्मात्तेषु जुह्वति ।**

என்பது.

உரை.

திஷ்ணியங்கள் என்னும் மேடைகள் சோமரசமருந்திக் கிடைக்காத வைகளாய் தேவர்களுக்கு நடுவிலிருந்து சோமரச மருந்துவதற் கிச்சித்தன. அதை யுணர்ந்த தேவர்கள், உங்கட்கு ஒவ்வொரு பெயர் இருக்கில் சோம மருந்துவதற்கு முழு உரிமையுடையவர்களாக மாட்டீர்கள். ஆதலின், மற்றொரு பக்ஷமாக அக்கினிகள் என்னும் பெயர்களையும் வைத்துக்கொள்வீர்க ளாகில் பெருமை மிகுந்து சோமரச மருந்தும் உரிமையை யடைவீர்கள் என்றனர். அவ்வாறே அவைகள் இரண்டு நாமங்களைத் தரித்துக் கொண்டன. அவற்றுள்ளும், ஆகவனீயம் என்பது முதலிய பெயர்களைக்கொண்டு சோமத்திற்கருகிலுள்ள நான்கு மேடைகளும் சோமரசமருந்த உரியவைகளாதலின் அவைகளின் மீது சோமரச ஆகுதிகள் செய்தல் வேண்டும் என்பது.

---

இரண்டு பெயர்களைக் கொண்டதால் ஏனைய திஷ்ணியங்கட்கும் சோமபானம் உண்டு என்பதை விலக்குகின்றது.

பிராமணம்—8

**अतिहाय वषट्करोति वि ह्येते सोमपीथेनाऽऽर्ध्यन्त ।**

என்பது.

உரை.

தூரத்திலுள்ள மைத்ராவருண மேடை முதலியவைகளைத் தவிர்த்து, அருகிலிருக்கின்றவைகட்கு மாத்திரம் வஷட்காரமாம். அங்ஙனமே பிற சுருதியுங் கூறியிருத்தலின் என்க. ஆனாலும் இரண்டு நாமங்களைக் கொண்டதால் பெருமைவாய்ந்த தேயலாது சோமபானத்தில் உரிமையை அடையவில்லை. சோமம் இல்லையேனும் நெய்யின் வியாகார ஹோமத்தினாலேயே அதுபொருந்து மாறறிக என்பது.

---

சோமரச ஆகுதிகளின் பாகுபாட்டைக் கூறுகின்றது.

பிராமணம்—9

**देवा वै याः प्राचीराहुतीरजुहवुर्ये पुरस्तादसुरा आसन्तांस्ताभिः प्राणुदन्त याः प्रतीचीर्ये पश्चादसुरा आसन्तांस्ताभिरपानुदन्त प्राचीरन्या आहुतयो हूयन्ते प्रत्यङ्ङासीनो धिष्णियान्व्याघारयति पश्चाच्चैव पुरस्ताच्च यजमानो भ्रातृव्यान्प्रणुदते तस्मात्पराचीः प्रजाः प्रवीयन्ते प्रतीचीर्जायन्ते ।**

என்பது.

மேடைகள்)

உரை.

தேவர்கள் கிழக்குமுகமாக ஆகுதிகளைச் செய்து கிழக்கிலுள்ள அசுரர்களை விலக்கினர். மேற்கு முகமாகச் செய்யும் ஆகுதிகளால் மேற்கிலுள்ள அசுரர்களை விலக்கினர். மற்றைய ஆகுதிகளெல்லாம் கிழக்குமுகமாகவே செய்தல் வேண்டும். மேற்குமுகமாக இருந்துக்கொண்டு மேடைகட்கு வியாகார ஹோமங்களைச் செய்தல் வேண்டும். இதனால் முன்பின்னுள்ள பகைவரை எசமானன் விலக்குகின்றான். இதனால், அதாவது ஆகுதிகள் இருவகையாதலால் ஒருமுகமாய் கருப்பதானஞ் செய்கின்றான் தகப்பன் கருப்பாதானஞ் செய்கின்றான் குழந்தை அதற்கு எதிர்முகமாய்ப் பிறக்கின்றது என்பது.

---

அத்வரியு, மேற்கில் போதல் கூடாதென்பதை பழிப்பால் அறிவுறுத்துகின்றது.

## பிராமணம்—10

**प्राणा वा एते यद्धिष्णिया यदध्वर्युः प्रत्यङ्धिष्णियानतिसर्पेत्प्राणान्त्सं-कर्षेत्प्रमायुकस्स्यान्नाभिर्वा एषा यज्ञस्य यद्धोतोर्ध्वः खलु वै नाभ्यै प्राणोऽवाङपानो यदध्वर्युः प्रत्यङ्होतारमतिसर्पेदपाने प्राणं दध्यात्प्रमा-युकस्स्यात् ।**

என்பது.

உரை.

இத் திஷ்ணிய மேடைகள் பிராணன்களாம் ஆதலின் அத்வரியு, திஷ்ணியங்களைத் தாண்டி மேற்கில் போவானாகில் பிராணனை விட்டவனாவன், ஹோதாவோ நாபியிலிருக்கிறான், பிராணனைப்போல் கிழக்கிலிருக்கின்ற அத்வரியு மேற்கில் தாண்டிப் போவானாகில் அபானனின் பிராணனைச் சேர்ந்தவனாகி இறப்பன். ஈண்டு அத்வரியு மேற்கில் போதல் கூடாதெனல் திரண்ட பொருள் என்பது.

---

இருத்துவிக்குக்கள் கூடவிருந்து சாமைத்தைப் பாடல்வேண்டும், என்னும் விதியால், அத்விரியும் பாடல் வேண்டுமேன்பதை மறுக்கின்றது.

## பிராமணம்—11

**नाध्वर्युरुप गायेद्वाग्वीर्यो वा, अध्वर्युर्यदध्वर्युरुपगायेदुद्गात्रे वाचः संप्र-च्छेदुपदासुकाऽस्य वाक्स्यात् ।**

என்பது,

உரை.

*அத்வரியு கூடவிருந்து சாமம் பாடக்கூடாது, ஏனெனின்? அவன் வாக்கு வல்லுநன் ஆதலின், அவன் கூடப்பாடில் உத்காதாவின் வாக்குக் கெட்டுவிடும் ஆதலின் கூடவே பாடக்கூடாது என்பதாம்.*

---

மற்றொருவகையால், அத்வரியு, மேற்கே செல்லுவதை விதிப்பதற்கு வினவைக் கற்பிக்கின்றது.

பிராமணம்—12

**ब्रह्मवादिनो वदन्ति नासꣳ स्थिते सोमेऽध्वर्युः प्रत्यङ्सदोऽतीयादथ कथा- दाक्षिणानि होतुमेति ।**

என்பது.

உரை.

*அத்விரியு சபையைத்தாண்டி மேற்கில் போகக்கூடாதென்கிறது. அங்ஙனமானல், யாகம் முடியாதபோது தக்ஷிணை ஹோமஞ்செய்தல், அதாவது பிராசீன வமிசமென்னுங் கொட்டகையில் புதிய காருகபத்தியத் தீயிற் செய்யவேண்டிய ஹோமம் எவ்வாறும்? என்று பிரமவாதிகள் வினவுகின்றனர் என்பது.*

---

கூறிய வினவை நீக்கும் ஆபாசத்தை ஆசங்கிக்கின்றது.

பிராமணம்—13

**यामो हि स तेषाम् ।**

என்பது.

உரை

*தக்ஷிணையின் பொருட்டுச் செய்யப்படும் ஹோமகாலம் தேவர்களின் கருமங்கள் முடிவுறுங் காலமாம். ஆதலின், அது உலகியல் நடையாமாதலின் அதைத் தேவர்கள் ஏற்றுக்கொள்வார்கள் என்பது.*

---

இவ்வாறெழுந்த வினவின் ஆபாசத்தையும் பழிக்கின்றது.

பிராமணம்—14

**कस्मा अह देवा यामं वाऽयामं वाऽनु ज्ञास्यन्तीति ।**

என்பது.

மேடைகள்)

உரை.

*கருமங்கள் முடியும்போதேனும், அல்லது, முடியாதபோதேனும் தேவர்கள், அநுமதித்தலால் பயன் யாதுமில்லை. ஆதலின், மேற்கில் செல்லுதலடையாமையின் தக்ஷிணையின் ஹோமம் பொருந்தாது எனல் உறுதியாயிற்று என்பது.*

---

மேற்கூறியதற்கு நிவிர்த்திவகையைக்காட்டி, மேற்கில் செல்வதை விதிக்கின்றது.

பிராமணம்—15

**उत्तरेणाऽऽग्नीध्रं परीत्य जुहोति दाक्षिणानि न प्राणान्त्सं कर्षति ।**

*என்பது.*

உரை.

*ஆக்னீத்ர மண்டபம், அவிர்த்தானமண்டபம் என்னும் இரண்டிற்கும் நடுவிற் சென்று சபையைத் தாண்டிச்செல்வதே கூடாதெனல். ஏனெனின்? இது, ஆக்னீத்ரனை இடதுபாகத்தில் விட்டு நீங்குகின்றது எனலாலென்க. ஆதலின், வடக்காகவே மேற்குமுகமாம்ச் சென்று பிராசீன வமிசத்தில் தக்ஷிணையின் ஹோமத்தை செய்க என்பது.*

---

இனி, தொடர்புபற்றியதை விட்டுவிட்டு எடுத்துக்கொண்டதன் மேற்செல்கின்றது. மட்குழியிலிருந்து மண்ணெடுத்து திஷ்ணியமென்னும் மேடைகள் செய்வானாக. என்னும் போது விதியால் ஆக்னீத்ர மேடைமுதல் 'ப்ராசீஹிதம்' என்பது ஈறாகவுள்ள பதினாறு மேடைகளுஞ் செய்யற்பாலன என வந்தவிடத்து, மார்ச்சாலீயம் (கை கழுவும் மேடை) ஈறான எட்டு மேடைகளே செய்யற்பாலன என்று அதை விசேடமாய் விதிக்கின்றது.

பிராமணம்—16

**न्यन्ये धिष्णिया उप्यन्ते नान्ये यान्निवपति तेन तान्प्रीणाति ।**

*என்பது*

உரை.

*அருகிலுள்ள எட்டு மேடைகள் செய்யப்படுகின்றன. ஏனையவைகளைச் செய்தலில்லை. எம் மேடைகளைச் செய்கின்றானோ, அதனால், அதைப் பிரியப் படுத்துகின்றான் என்பது.*

---

ஆகவனீய மேடைமுதல், பிராசிஹிதம் என்பது ஈறுகவுள்ள எட்டு மேடைகளையும் போற்றுதல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—17

**यान्न निवपति यदनुदिशति तेन तान् ॥**

என்பது.

உரை.

*எந்த மேடைகளைச் செய்யவில்லையோ, அவற்றை, மந்திரத்தாற் போற்றல் வேண்டும். போற்றுவதால், அது பிரியமடைகின்றது என்பது.*

முதலாம் அநுவாகம்
*முற்றிற்று.*

---

## ஆறுங்காண்டம் மூன்றும் பிரபாடகம்

### இரண்டாவது அநுவாகம்

*அக்கினி சோமங்களின் பிரணயனத்தைக்கூறும் பிராமணங்கள்.*

ஆறு பஞ்சாதிகளைக் கொண்டது.

सुवर्गाय वा एतानि लोकाय हूयन्ते यद्वैसर्जनानि द्वाभ्यां गार्हपत्ये जुहोति द्विपाद्यजमानः प्रतिष्ठित्या आग्नीध्रे जुहोत्यन्तरिक्ष एवाऽऽक्रमत आहवनीये जुहोति सुवर्गमेवैनं लोकं गमयति देवान्वै सुवर्गं लोकं यतो रक्षाꣳस्यजिघाꣳसन्ते सोमेन राज्ञा रक्षाꣳस्यपहत्याप्सुमात्मानं कृत्वा सुवर्गं लोकमायन् रक्षसामनुपलाभायाऽऽत्तस्सोमो भवत्यथ [७] वैसर्जनानि जुहोति रक्षसामपहत्यै त्वꣳ सोम तनूकृद्भ्य इत्याह तनूकृध्येष द्वेषोभ्योऽन्यकृतेभ्य इत्याहान्यकृतानि हि रक्षाꣳस्युरु यन्ताऽसि वरूथमित्याहोरु णस्कृधीति वावैतदाह जुषाणो अप्तुराज्यस्य वेत्वित्याहाप्सुमेव यजमानं कृत्वा सुवर्गं लोकं गमयति रक्षसामनुपलाभायाऽऽ सोमं

ददते [८] आ ग्रावृण्ण आ वायव्यान्या द्रोणकलशमुत्पत्नीमा नयन्त्यन्वनाꣳसि प्रवर्तयन्ति यावदेवास्यास्ति तेन सह सुवर्गं लोकमेति नयवत्यर्चाऽऽग्नीध्रे जुहोति सुवर्गस्य लोकस्याभिनीत्यै ग्रावृण्णो वायव्यानि द्रोणकलशमाग्नीध्र उप वासयति वि ह्येनं तैर्गृह्णते यत्सहोपवासयेदपुवायेत सौम्यर्चा प्रपादयति स्वया [९] एवैनं देवतया प्रपादयत्यदित्यास्सदोऽस्यदित्यास्सद आ सीदेत्याह यथायजुरेवैतद्यजमानो वा एतस्य पुरा गोप्ता भवत्येष वो देव सवितस्सोम इत्याह सवितृप्रसूत एवैनं देवताभ्यस्सं प्रयच्छत्येतत्त्वꣳ सोम देवो देवानुपागा इत्याह देवो ह्येष सन् [१०] देवानुपैतीदमहं मनुष्यो मनुष्यानित्याह मनुष्यो१ह्येष सन्मनुष्यानुपैति यदेतद्यजुर्न ब्रूयादप्रजा अपशुर्यजमानस्स्यात्सह प्रजया सह रायस्पोषेणेत्याह प्रजयैव पशुभिस्सहेमं लोकमुपावर्तते नमो देवेभ्य इत्याह नमस्कारो हि देवानाꣳ स्वधा पितृभ्य इत्याह स्वधाकारो हि [११] पितृणामिदमहं निर्वरुणस्य पाशा-दित्याह वरुणपाशादेव निर्मुच्यतेऽग्ने व्रतपत आत्मनः पूर्वा तनू-रादेयेत्याहुः को हि तद्वेद यद्वसीयान्त्स्वे वशे भूते पुनर्वा ददाति न वेति ग्रावाणो वै सोमस्य राज्ञो मलिम्लुसेना य एवं विद्वा-न्ग्रावृण्ण आग्नीध्र उपवासयति नैनं मलिम्लुसेना विन्दति [१२] ॥

अथ ददते स्वया सन्त्स्वधाकारो हि विन्दति ॥ २ ॥

*இதில், அக்கினி சோமங்களின் பிரணயனம் கூறப்படுகின்றது.*

மந்திரங்கட்கு, உரை கூறுதற்பொருட்டு முதலில் வைசர்ச்சன ஹோமத்தை விதிக்கின்றது.

பிராமணம்—1

**सुवर्गाय वा एतानि लोकाय हूयन्ते यद्वैसर्जनानि।**

என்பது.

உரை.

இது அவாந்தர தீட்சையை விடுதற்பொருட்டுச் செய்யப் படுதலின், வைச்சர்ன ஹோமமெனப்படும். இது சுவர்க்கலோகத்தின் பொருட்டுச் செய்யப்படுகின்றது என்பது.

---

அதிலுள்ள விசேடங்களை முறையாய் விதிக்கின்றது.

பிராமணம்—2

**द्वाभ्यां गार्हपत्ये जुहोति द्विपाद्यजमानः प्रतिष्ठित्या आग्नीध्रे जुहोत्यन्तरिक्ष एवाऽऽक्रमत आहवनीये जुहोति सुवर्गमेवैनं लोकं गमयति ।**

என்பது.

உரை.

“ த்வம்சோம ” சுஷாணஃ, என்னுமிரண்டு மந்திரங்களால் எசமானனுடைய பிரதிட்டையின் பொருட்டு காருகபத்தியத்தில் ஹோமஞ்செய்தல் வேண்டும். ஆக்னீத்ரத்திற் கூறப்படும் மந்திரத்தால், அந்தரிக்ஷத்தில் ஏறுவதற்கு ஆக்கினீத்ரத்தீயில் ஹோமஞ்செய்தல் வேண்டும் “உருவிஷ்ணோ” என்னும் மந்திரத்தால், சுவர்க்கலோகத்தை யடைதற்பொருட்டு ஆகவனீயத் தீயில் ஹோமஞ் செய்தல் வேண்டும் என்பது.

---

ஹோமஞ் செய்வதன்முன், பிரமன் சோமத்தை வாங்கிக் கொள்ளல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—3

**देवान्वै सुवर्गं लोकं यतो रक्षाꣳस्यजिघाꣳसन्ते सोमेन राज्ञा रक्षाꣳस्यपहत्यात्पुमात्मानं कृत्वा सुवर्गं लोकमायन्रक्षसामनुपलाभायाऽऽत्तस्सोमो भवत्यथ वैसर्जनानि जुहोति रक्षसामपहत्यै ।**

என்பது.

உரை.

தேவர்கள் சுவர்க்லோகஞ் செல்கின்றபோது சோமராஜன், நுண்ணிய வுடம்பை, அதாவது, அசுரர்களின் கண்ணுக்குப் புலப்படாத தேகத்தை எடுத்து சுவர்க்கத்தை யடைந்து அங்கு அசுரர்களைக் கொன்றனன். ஆதலின், மேலே எடுத்துக்கொள்ளப் பெற்ற சோமம் அசுரர்களை கொல்வதாமாதலின் அசுரர்களைப் போக்குதற் பொருட்டு இவ்வோமத்தைச் செய்தல் வேண்டும் என்பது.

---

முதல் மந்திரத்தின் முற்பகுதியின் கருத்தாகிய சோமத்தின் வன்மையை எடுத்துக் கூறுகின்றது.

பிராமணம்—4

**त्वꣳ सोम तनूकृद्भ्य इत्याह तनूकृध्येषः ।**

என்பது.

உரை.

"த்வம் சோம" என்றது முதலியது, சோமம் ஏனைய உடம்புகளை வெட்டும் அசுரர்களின் உடம்புகளையும் அறுப்பதாமாதலின் போற்றத்தக்க உடம்பையுடைய சோமம் எம்மைப் பரிபாலிக்கும் வன்மை மிக்குடையது என்பதாம்.

---

அம்மந்திரத்தின் இரண்டாம் பாகத்திலுள்ள விசேடத்தை முடிக்கின்றது.

பிராமணம்—5

**द्वेषोभ्योऽन्यकृतेभ्य इत्याहान्यकृतानि हि रक्षाꣳसि ।**

என்பது.

உரை.

"மாறு செய்யும்பகைவர்கள்" என்றது, மாறுபட்டதைச் செய்யும் அசுரர்கள் என்கின்றது.

---

மந்திரத்தின், மூன்றும்பாகத்தில் உள்ள "உருவரூதம்" என்னும் வாக்கியத்தில் எஞ்சியதை நிறைக்கின்றது.

பிராமணம்—6

**उरु यन्ताऽसि वरूथमित्याहोरु णस्कृधीति वावैतदाह ।**

என்பது.

உரை.

'உருயந்தாவி' என்றது முதலியது, எமக்கு மிகுந்த நலங்களைச் செய்வாக என்னும் பொருளைக் கொண்டதேயாம் என்பது.

---

இரண்டாவது மந்திரத்தில், அப்து(சிறியவுடம்பாய்)என்னுஞ் சொல்லாற் குறிப்பிட்டதைக் கூறுகின்றது.

பிராமணம்—7

**जुषाणो अप्तुराज्यस्य वेत्वित्याहाप्तुमेव यजमानं कृत्वा सुवर्गं लोकं गमयति रक्षसामनुपलाभाय ।**

என்பது.

உரை.

"சுஷாணஃ" என்றது முதலியது, நுண்ணிய வுடம்பெடுத்துக் கொண்டு அசுரர்கள் காணாதபடி சுவர்க்கத்திற்கு எசமானனைக் கொண்டு போகின்றது என்கின்றது.

---

பிராசீன வமிசத்திலிருந்து புறப்பட்டு ஆக்னீந்திரனிடத்திற்குத் தீயைக் கொண்டு போகும்போது அநுட்டிக்கவேண்டிய சோமத்தை ஏற்றுக் கொள்ளல் முதலிய ஆறையும் விதிக்கின்றது.

பிராமணம்—8

**आ सोमं दद्त आ ग्राव्ण आ वायव्यान्या द्रोणकलशमुत्पत्नीमा नयन्त्यन्वनाꣳसि प्रवर्तयन्ति यावदेवास्यास्ति तेन सह सुवर्गं लोकमेति ।**

என்பது.

உரை.

சோமத்தை எடுத்துக் கொள்வதுடன் சோமரசம் பிழியும் கற்கள். உரல்போன்ற வாயவீய சோமரசபாத்திரங்கள், மரத்தாற் செய்த துரோண கலசம் என்பவைகளையும் எடுத்துக் கொள்ளல் வேண்டும். பத்தினியை, அவளிடத்திலிருந்து எழுப்பி அழைத்துக்கொண்டுவரல் வேண்டும். வண்டிகளை அதாவது, நெல் முதலிய தானியத்தைத் தாங்கும் வண்டிகளைச் செலுத்தல் வேண்டும் இந்த வண்டியானது அனேக இஷ்டிகளில் நெல் எடுத்ததால், வண்டிகள் என்று பன்மையாகக் கூறப்படுகின்றது. இவ்வாறு செய்யில் எசமானனுடைய பொருள்களுடன் எசமானன் சுவர்க்கத்தை யடைகின்றான் என்பதாம்.

---

பிரணயனம்)

ஓமத்தை விதிக்கின்றது

பிராமணம்—9

नयवत्यर्चाऽऽग्नीध्रे जुहोति सुवर्गस्य लोकस्याभिनीत्यै ।

என்பது.

உரை.

"அக்னே நய சுபதா" என்னுமந்திரத்தால், சுவர்க்கலோகஞ் செல்வதன் பொருட்டு ஆக்னீத்ரனுடைய தீயில் ஹோமஞ் செய்தல் வேண்டும் என்பது.

---

சோமமிடிக்குங் கற்கள் முதலியவைகளை வைத்தல் வேண்டுமென்பதை விதிக்கின்றது.

பிராமணம்—10

ग्रावूणो वायव्यानि द्रोणकलशमाग्नीध्र उप वासयति ।

என்பது.

உரை.

கற்கள், வாயவீயக்கிரகம், துரோண கலசம் என்பவைகளை ஆக்னீத்ரனிடத்தில் வைத்தல் வேண்டும் என்பதாம்.

---

ஏனையவைகளைப்போல் சோமத்தை வைத்தல் வேண்டுமென்று வந்தவிடத்து, அதைநீக்குதற்குச் சோமத்தை மாத்திரம் எடுத்துக் கொள்ளல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—11

वि ह्येनं तैर्गृह्णते यत्सहोपवासयेदपुवायेत ।

என்பது.

உரை.

ஏனையவைகளுடன் சோமத்தையும் வைத்துவிடில், அப்போதே சோமம் பிழிவார்களோ, என்னும் பயத்தால் சோமத்தின் வயிறும் தீநாற்றமுடையதாய் விடும் ஆதலின் சோமத்தை வைத்தல் கூடாது என்பது.

---

சோமங் கொண்டு போவதை விதிக்கின்றது.

பிராமணம்—12

**सौम्यर्चा प्रपादयति स्वयैवैनं देवतया प्रपादयति ।**

என்பது.

உரை.

*சோமமந்திரத்தால் அவிர்த்தான மண்டபத்தில் சேர்க்கில் தனது தேவதையாலேயே கொண்டுபோய்ச் சேர்த்ததாகின்றது என்பது.*

---

மான்தோல் விரிக்குமந்திரத்தின் பொருள் வெளிப்படை யென்கின்றது.

பிராமணம்—13

**अदित्यास्सदोऽस्यदित्यास्सद आ सीदेत्याह यथायजुरेवैतत् ।**

என்பது.

உரை.

*"அதித்யா:" என்றது முதலியது, மந்திரத்திற் கூறிய பொருளையே உள்ளவாறுடையது என்கின்றது.*

---

சவிதாவைக்கூவி அழைப்பதின் கருத்தைக் கூறுகின்றது.

பிராமணம்—14

**यजमानो वा एतस्य पुरा गोप्ता भवत्येष वो देव सवितस्सोम इत्याह सवितृप्रसूत एवैनं देवताभ्यस्सं प्रयच्छति ।**

என்பது.

உரை.

*இதற்குமுன் சோமத்தைப் பாதுகாத்தவன் எசமானன், இனி சவிதா வேத: என்றது, சவிதாதேவனின் ஏவலினாலேயே அவன் சோமத்தைத் தேவர்களிடத்தில் ஒப்புவிக்கின்றான் என்கின்றது.*

---

அம்மந்திரத்தின் இரண்டு பாகங்களின் பொருளும் வெளிப்படை யென்பதையும், மாறுபடில் கேடேன்பதையும் மூன்றும்பாகத்தில் விளக்குகின்றது.

பிராமணம்—15

**एतत्त्वं सोम देवो देवानुपागा इत्याह देवो ह्येष सन् देवानुपैतीदमहं मनुष्यो मनुष्यानित्याह मनुष्योऽह्येष सन्मनुष्यानुपैति यदेतद्यजुर्न ब्रूयादप्रजा-**

பிரணயனம்)

अपशुर्यजमानस्स्यात्सह प्रजया सह रायस्पोषेणेत्याह प्रजयैव पशुभि-
स्सहेमं लोकमुपावर्तते ।

என்பது.

உரை.

"ஏதத்வம்" என்றது முதலியதும், தேவனாயிருந்து சோமன் தேவர்களையடைந்தனன் என்றதும்,இவ்வாறு எசுர்மந்திரங் கூறுவிடில் எசமானன் பிரசைகளையும், பசுக்களையும் உடையவனாகான் என்று கூறப்படுகின்றது. இதுபற்றியே, "சஹப்பிரசயா" என்பது முதலியதாம். அதாவது, பிரசைகளுடனும் பசுக்களுடனும் எசமானன் இவ்வுலகையடைகின்றான் என்பதுமாம்.

---

வணங்கும் மந்திரங்களிரண்டின் பொருளும் வெளிப்படையென விளக்குகின்றது.'

பிராமணம்—16

नमो देवेभ्य इत्याह नमस्कारो हि देवानाꣳ स्वधा पितृभ्य इत्याह स्वधा-
कारो हि पितृणाम् ।

என்பது.

உரை.

"நமஃ" என்றது முதலியது, தேவர்கட்கு வணக்கமாம். சுவதா என்பது பிதிர்கட்கு வணக்கமாம் என்கின்றது.

---

இக்கருத்தையே விளக்குகின்றது.

பிராமணம்—17

इदमहं निर्वरुणस्य पाशादित्याह वरुणपाशादेवनिर्मुच्यते ।

என்பது.

உரை.

"இதமஹம்" என்றது முதலியது, வருணனுடைய பாசத்தினின்றும் இவன் விடுபடுகின்றான் என்கின்றது.

---

ஆகவனீயத்தைப் போற்றும் மந்திரத்தின் தலைப்புச் சொல்லை எடுத்துக் கோள்வதுடன் அதன் கருத்தையும் விளக்குகின்றது.

பிராமணம்—18

**अग्ने व्रतपत आत्मनः पूर्वा तनूरादेयेत्याहुः को हि तद्वेद यद्वसीयान्त्स्वे वशे भूते पुनर्वा ददाति न वेति ।**

என்பது.

உரை.

*"அக்னே விரதபதே" என்றது முதலியது, முன்னுள்ள தனதுடம்பை அக்கினியிடத்திலிருந்து வலியால் பெற்றுக் கொள்ளல் வேண்டுமென்று பெரியோர் கூறுகின்றார்கள். எதனாலெனின்? ஒரு தனிகனிடத்தில் நமது பொருள் சிக்கிக்கொள்ளில் அவன் மீண்டுங் கொடுப்பானோ, கொடுக்கமாட்டானோ, அறியோம் ஆதலின், முன்னேயே வலுவில் அதைக் கைப்பற்றிக் கொள்வதுபோல் என்பது போன்றதாலென்க.*

---

முற்கூறிய சோமமிடிக்குங் கற்களை வைத்தலுடன் அதைப்புகழ்கின்றது.

பிராமணம்—19

**ग्रावाणो वै सोमस्य राज्ञो मलिम्लुसेना य एवं विद्वान्ग्रावाण्ण आग्नीध्र उपवासयति नैनं मलिम्लुसेना विन्दति ।**

என்பது.

உரை.

*சோமராசனுடைய பகைவர்களைக் கவருஞ்சேனை கற்களாம். ஆதலின், அத்தகைய கற்களை ஆக்னீத்ரனிடத்தில் வைக்கின்றவனை பகைவனுடைய சேனை அடையாது என்பது.*

இரண்டாவது அநுவாகம்

*முற்றிற்று.*

---

## ஆறுங்காண்டம் மூன்றும்பிரபாடகம்

### மூன்றுவது அநுவாகம்

யூபம் வெட்டுவதைக் கூறும் பிராமணங்கள்.

ஆறு பஞ்சாதிக்குமேல் பத்தொன்பது பதங்களைக் கொண்டது.

**वैष्णव्यर्चा हुत्वा यूपमच्छैति वैष्णवो वै देवतया यूपस्स्वयै-वैनं देवतयाऽच्छैत्यत्यन्यानगां नान्यानुपागामित्याहाति ह्यन्या-**

नेति नान्यानुपैत्यर्वाक्त्वा पैररविदं परोऽवरै रित्याहार्वाघ्येनं पैरविन्दति परोऽवरैस्तं त्वा जुषे [१३] वैष्णवं देवयज्याया इत्याह देवयज्यायै ह्येनं जुषते देवस्त्वा सविता मध्वाऽनक्त्वि-त्याह तेजसैवैनमनक्त्योषधे त्रायस्वैनꣳ स्वधिते मैनꣳ हिꣳसीरि-त्याह वज्रो वै स्वधितिश्शान्त्यै स्वधितेर्वृक्षस्य बिभ्यतः प्रथमेन शकलेन सह तेजः परा पतति यः प्रथमश्शकलः परापतेत्तमप्या हरेत्सतेजसम् [१४] एवैनमा हरतीमे वै लोका यूपात्प्रयतो बिभ्यति दिवमग्रेण मा लेखीरन्तरिक्षं मध्येन मा हिꣳसीरित्या-हैभ्य एवैनं लोकेभ्यश्शमयति वनस्पते शतवल्शो वि रोहेत्याव्र-श्चने जुहोति तस्मादाव्रश्चनाद्वृक्षाणां भूयाꣳस उत्तिष्ठन्ति सहस्र-वल्शा वि वयꣳरुहेमेत्याहाऽऽशिषमेवैतामा शास्तेऽनक्षसङ्गम् [१५] वृश्चेद्यदक्षसङ्गं वृश्चेदधर्षं यजमानस्य प्रमायुकꣳ स्याद्यं कामयेताप्रतिष्ठितस्स्यादित्यारोहं तस्मै वृश्चेदेष वै वनस्पतीनाम-प्रतिष्ठितोऽप्रतिष्ठित एव भवति यं कामयेतापशुस्स्यादित्यपर्णं तस्मै शुष्काग्रं वृश्चेदेष वै वनस्पतीनामपशव्योऽपशुरेव भवति यं कामयेत पशुमान्त्स्यादिति बहुपर्णं तस्मै बहुशाखं वृश्चेदेष वै [१६] वनस्पतीनां पशव्यः पशुमानेव भवति प्रतिष्ठितं वृश्चेत्प्र-तिष्ठाकामस्यैष वै वनस्पतीनां प्रतिष्ठितो यस्समे भूम्यै स्वाद्योने रूढः प्रत्येव तिष्ठति यः प्रत्यङ्ङुपनतस्तं वृश्चेत्स हि मेधमभ्युप-नतः पञ्चारत्निं तस्मै वृश्चेद्यं कामयेतोपैनमुत्तरो यज्ञो नमेदिति पञ्चाक्षरा पङ्क्तिः पाङ्क्तो यज्ञ उपैनमुत्तरो यज्ञः [१७] नमति

षडरत्निं प्रतिष्ठाकामस्य षड्वा ऋतव ऋतुष्वेव प्रति तिष्ठति सप्तारत्निं पशुकामस्य सप्तपदा शक्करी पशवश्शक्करी पशूनेवाव रुन्धे नवारत्निं तेजस्कामस्य त्रिवृता स्तोमेन संमितं तेजस्त्रिवृत्तेजस्व्येव भवत्येकादशारत्निमिन्द्रियकामस्यैकादशाक्षरा त्रिष्टुगिन्द्रियं त्रिष्टुगिन्द्रियाव्येव भवति पञ्चदशारत्निं भ्रातृव्यवतः पञ्चदशो वज्रो भ्रातृव्याभिभूत्यै सप्तदशारत्निं प्रजाकामस्य सप्तदशः प्रजापतिः प्रजापतेराप्त्या एकविंशत्यरत्निं प्रतिष्ठाकामस्यैकविंशस्स्तोमानां प्रतिष्ठा प्रतिष्ठित्या अष्टाश्रिर्भवत्यष्टाक्षरा गायत्री तेजो गायत्री गायत्री यज्ञमुखं तेजसैव गायत्रिया यज्ञमुखेन संमितः ॥ [१८]
जुषे सतेजसमनक्षसङ्गं बहुशाखं वृश्चेदेष वै यज्ञ उपैनमुत्तरो यज्ञ आप्त्या एकान्नविंशतिश्च ॥ ३ ॥

இதில், யூபம் (ஆட்டுக்கடாவைக் கட்டுந்தறி) வெட்டும்வகை கூறப்படுகின்றது.

---

மரத்தை வெட்டுவதை விதிக்கின்றது.

பிராமணம்—1

वैष्णव्यर्चा हुत्वा यूपमच्छैति वैष्णवो वै देवतया यूपस्स्वयैवैनं देवतयाऽच्छैति ।

என்பது.

உரை.

*விஷ்ணுமந்திரத்தால் ஆகுதிசெய்துவிட்டு யூபத்தை வெட்டில், யூபம் விஷ்ணுவையே தேவதையாக வுடையதாமாதலின் தனது தேவதையாலேயே வெட்டப்பெற்றதாகின்றது என்பது.*

---

யூபத்தை வெட்டுதல்)

முற்கூறிய மந்திரப்பொருளில் வெளிப்படையை விளக்குகின்றது.

பிராமணம்—2

**अत्यन्यानगां नान्यानुपागामित्याहाति ह्यन्यानेति नान्यानुपैत्यर्वाक्त्वा परैरविदं परोऽवरैरित्याहार्वाग्घ्येनं परैर्विन्दति परोऽवरैस्तं त्वा जुषे वैष्णवं देवयज्याया इत्याह देवयज्यायै ह्येनं जुषते ।**

என்பது

உரை.

'அத்யன்யானகாம்' என்றது முதலியது, வேள்விக்குதவாத மரங்களை டையாமல் உன்னையடைந்து வெட்டுதல் தேவாராதனையின் பொருட்டு என்கின்றது.

---

இன்சுவையுடைய நெய்யைத்தடவுகின்முன் என்னுங் கருத்தைக் கூறுகின்றது.

பிராமணம்—3

**देवस्त्वासविता मध्वाऽनक्त्वित्याह तेजसैवैनमनक्त्योषधे त्रायस्वैनꣳ स्वधिते मैनꣳ हिꣳसीरित्याह वज्रो वै स्वधितिश्शान्त्यै ।**

என்பது.

உரை.

"தேவஸ்த்வா" என்றது முதலியது, ஒளியால் நனைக்கின்முன் என்கின்றது. "ஓஷதே" என்றது முதலியது, கத்தி வச்சிரமாதலின் இது சாந்தியின் பொருட்டு என்கின்றது

---

அதை விதிக்கின்றது.

பிராமணம்—4

**स्वधितेर्वृक्षस्य बिभ्यतः प्रथमेन शकलेन सह तेजः परा पतति यः प्रथमश्शकलः परापतेत्तमप्या हरेत्सतेजसमेवैनमा हरति ।**

என்பது.

உரை.

கத்திக்குப் பயந்து மரத்தின் ஒளி முதலெழும் சிராப்பொடியுடன் கீழேவிழுகின்றது. அதை எடுத்தல் ஒளியுடன் அதை யெடுத்தலாம் என்கின்றது.

---

முடியாததை விலக்கும் புத்தியைப் போக்குகின்றது.

பிராமணம்—5

इमेवै लोका यूपात्प्रयतो बिभ्यति दिवमग्रेण मा लेखीरन्तरिक्षं मध्येन मा हिंसीरित्याहैभ्य एवैनं लोकेभ्यश्शमयति ।

என்பது.

உரை.

மூன்றுலகங்களும் பயப்படுகின்றன. ஏனெனின்? விழுகின்றமரம். அடி நடு நுனி, என்பவைகளால் எம்மைக் கீறிவிடுமோ என்னும் ஐயப்பாட்லென்க. ஆதலின், "திவம் அக்ரேண" என்றது முதலியது, அதைச் சாந்தப்படுத்துகின்றான் என்கின்றது.

---

அடிவேரில் ஓமஞ்செய்வதை விதிக்கின்றது.

பிராமணம்—6

वनस्पते शतवल्शो विरोहेत्याव्रश्चने जुहोति तस्मादाव्रश्चनाद्वृक्षाणां भूयांस उत्तिष्ठन्ति ।

என்பது.

உரை.

"வநஸ்பதே" என்றது முதலியது, துளுத்தற் பொருட்டு வேரில் ஓமஞ்செய்யப்படுகின்றது; இதனால், மரங்கள் வெட்டியவேரிலிருந்து துளிர்த்தெழுகின்றது என்கின்றது.

---

வளர்க, என்பது ஆசீர்வாதப்பொருளைக் குறிப்பிடுகின்றது என்கின்றது.

பிராமணம்—7

सहस्रवल्शा वि वयं रुहेमेत्याहाऽऽशिषमेवैतामा शास्ते ।

என்பது.

உரை.

"யாம் ஆயிரங்கிளைகளாய் வளர்வோமாக" என்றது, இதுவே ஆசீர்வாதமாக விரும்புகின்றான் என்கின்றது.

---

யூபத்தை வெட்டுதல்)

முற்கூறிய யூபம் வெட்டுதல் மரத்தில் இன்ன இடத்தில் என்று விதிக்கின்றது

பிராமணம்—8

**अनक्षसङ्गं वृश्चेत् ।**

என்பது.

உரை.

மரத்தில் வெட்டியவிடத்தில் வண்டியின் அச்சுப்படாதிருக்கும்படி உயரமான இடத்தில் வெட்டுதல் வேண்டும் என்பது.

---

அதற்கு மாறுபாடில் கேடென விதிக்கின்றது.

பிராமணம்—9

**यदक्षसङ्गं वृश्चेदधर्ईषं यजमानस्य प्रमायुकँस्यात् ।**

என்பது

உரை.

வெட்டிய விடத்தில் வண்டியின் அச்சுப்படுமாகில், எசமானனுடைய பசுக்கள் கன்றுகள் முதலானவைகள் வண்டியின் நுகத்தடிக்காலுக்குக் கீழகப்பட்டு இறக்கநேரும் என்கின்றது.

---

மரத்தின்மேலுள்ள கொம்பை யூபத்தின் பொருட்டு வெட்டக்கூடாதென மறுக்கின்றது.

பிராமணம்—10

**यं कामयेताप्रतिष्ठितस्स्यादित्यारोहं तस्मै वृश्चेदेष वै वनस्पतीनामप्रतिष्ठितोऽप्रतिष्ठित एव भवति ।**

என்பது.

உரை.

எசமானன் நிலைப்படாதவனாய் இருக்கவிரும்பினால் மரத்தின்மீது ஏறி மேலுள்ள கொம்பை வெட்டுவானாக. ஏனெனின்? மேலுள்ள கொம்பு பூமியைப் பற்றி எழாததால் என்க. அதுபோல் எசமானனும் பிரதிட்டையில்லாதவனாகுவன் என்கின்றது.

---

தழைகளின்றிய கொம்புங் கூடாதென விதிக்கின்றது.

பிராமணம்—11

**यं कामयेतापशुस्स्यादित्यपर्णं तस्मै शुष्काग्रं वृश्चेदेष वै वनस्पतीनामपशव्योऽपशुरेव भवति ।**

என்பது.

உரை.

எசமானனுக்கு பசுக்களற்றுபோமாறு விரும்பில், அவன் பொருட்டுத் தழைகளின்றிய கொம்பை வெட்டுதல் வேண்டும். இதனால், பசுக்கட்குரிய தன்மை இல்லாததால் பசுக்களில்லாமற் கெட்டுப்போய்விடும் என்பது.

---

இலைகளுடன் கூடியதை வெட்டுதல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—12

**यं कामयेत पशुमान्स्यादिति बहुपर्णं तस्मै बहुशाखं वृश्चेदेष वै वनस्पतीनां पशव्यः पशुमानेव भवति ।**

என்பது.

உரை.

பசுக்கள் வேண்டுமென்று விரும்புகின்றவன் பசுமைநிற இலைகளுடன் கூடிய மரத்தை வெட்டுதல் வேண்டும் என்பது.

---

அது பூமியில் சமமான விடத்தில் தனது வித்தால் முளைத்தெழுந்ததாயிருத்தல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—13

**प्रतिष्ठितं वृश्चेत्प्रतिष्ठाकामस्यैष वै वनस्पतीनां प्रतिष्ठितो यस्समे भूम्यै स्वाद्योने रूढः प्रत्येव तिष्ठति ।**

என்பது.

உரை.

'தனது வித்தால்' என்பதால், மரத்திற்கிளைத்தகொம்பு நீக்கப்பட்டது. இத்தகைய கொம்பு பூமியில் நிலைப்பட்டிருப்பதுபோல் எசமானன்நிலையை யுடையவனாகின்றான் என்பது.

---

மேற்கே வளைந்ததாயிருத்தல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—14

**यः प्रत्यङ्ङुपनतस्तं वृश्चेत्स हि मेधमभ्युपनतः ।**

என்பது.

உரை.

எக்ஞம் உத்தரவேதியிற் செய்யப்படுவதாமாதலின், அது, யூபமிருக்குமிடத்திற்கு மேற்காகின்றது. ஆதலின் அதை நோக்கிக்கொண்டே மேற்கே வளைவாயிருத்தல் வேண்டுமென்பது.

---

விருப்பப்படி யூபத்தின் அளவுகளை விதிக்கின்றது.

பிராமணம்—15

**पञ्चारत्निं तस्मै वृश्चेद्यं कामयेतोपैनमुत्तरो यज्ञो नमेदिति पञ्चाक्षरा पङ्क्तिः पाङ्क्तो यज्ञ उपैनमुत्तरो यज्ञो नमति षडरत्निं प्रतिष्ठाकामस्य षड्वा ऋतव ऋतुष्वेव प्रति तिष्ठति सप्तारत्निं पशुकामस्य सप्तपदा शक्वरी पशवः शक्वरी पशूनेवाव रुन्धे नवारत्निं तेजस्कामस्य त्रिवृता स्तोमेन संमितं तेजस्त्रिवृत्तेजस्व्येव भवत्येकादशारत्निमिन्द्रियकामस्यैकादशाक्षरा त्रिष्टुगिन्द्रियं त्रिष्टुगिन्द्रियाव्येव भवति पञ्चदशारत्निं भ्रातृव्यवतः पञ्चदशो वज्रो भ्रातृव्याभिभूत्यै सप्तदशारत्निं प्रजाकामस्य सप्तदशः प्रजापतिः प्रजापतेराप्त्या एकविंशत्यरत्निं प्रतिष्ठाकामस्यैकविंशस्स्तोमानां प्रतिष्ठा प्रतिष्ठित्यै ।**

என்பது.

உரை.

சோமவிகிருதியாகிய உத்தர யக்ஞத்தையடைய விரும்பி ஐந்துமுழம் அளவு யூபம் வெட்டில் ஐந்தெழுத்துக்கள் கொண்ட பந்தி யென்னும் உத்தர எக்ஞத்தையடைகின்றான். பிரதிட்டையை விரும்பி ஆறுமுழம் நீளம் வெட்டில் ஆறு இருதுக்களில் பிரதிட்டையயடைகின்றான். பசுக்களை விரும்பி ஏழுமுழநீளம் வெட்டில், ஏழெழுத்துக்களைக் கொண்ட சாக்வரிச் சந்தத்தாலாய பசுக்களை யடைகின்றான். ஒளியைவிரும்பி ஒன்பதுமுழம் நீளம் வெட்டில், திரிவிருத் ஸ்துதியாலாகிய ஒலியை யடைகின்றான். இந்திரியங்களை விரும்பி, பதினொரு முழம் நீளம் வெட்டில் பதினொரு எழுத்துக்களைக் கொண்ட திரிஷ்டுப் சந்தத்தாலாய இந்திரியங்களை யடைகின்றான். பகைவரையடக்க விரும்பி, பதினைந்து முழம் நீளம் வெட்டில் பதினைந்து என்பது வச்சிரமாதலால் அதனால்பகைவரை அடக்குகின்றான். பிரசைகளை விரும்பி, பதினேழு முழநீளம் வெட்டில், பதினேழு வகையானது பிரசாபதியாம்

ஆதலின் பிரசைகளையடைகின்றான். பிரதிட்டையை விரும்பி இருபத்தொரு முழம் நீளம் வெட்டில் ஸ்தோமங்களின் பிரதிட்டை இருபத்தொன்றுமாதலின் பிரதிட்டையை யடைகின்றான் என்பது. அரத்நி = முழம்.

---

அதை விதிக்கின்றது.

பிராமணம்—12

**अष्टाश्रिर्भवत्यष्टाक्षरा गायत्री तेजो गायत्री गायत्री यज्ञमुखं तेजसैव गायत्रिया यज्ञमुखेन संमितः ।**

என்பது

உரை.

யூபம் எட்டுப் பட்டைகளாக இருத்தல் வேண்டும். இதனால், எட்டு எழுத்துக்களைக் கொண்டதும் ஒளியுடையதுமாகிய காயத்திரி எக்ஞத் தொடக்கமாம். ஆகவே, எக்ஞத் தொடக்கமாகிய ஒளியுடைய காயத்திரியால் யூபம் அளவிடப்பட்டதாகின்றது என்பது.

மூன்றாவது அநுவாகம்
*முற்றிற்று.*

---

## ஆறுங்காண்டம் மூன்றும் பிரபாடகம்

### நான்காவது அநுவாகம்

யூபம் நாட்டுவதைக் கூறும் பிராமணங்கள்.

எட்டு பஞ்சாதிக்குமேல் நாற்பத்திரண்டு பதங்களை கொண்டது.

पृथिव्यै त्वाऽन्तरिक्षाय त्वा दिवे त्वेत्याहैभ्य एवैनं लोकेभ्यः प्रोक्षति पराञ्चं प्रोक्षति पराङिव हि सुवर्गो लोकः क्रूरमिव वा एतत्करोति यत्खनत्यपोऽव नयति शान्त्यै यवमतीरव नयत्यूर्ग्वै यवो यजमानेन यूपस्संमितो यावानेव यजमानस्तावतीमेवास्मिन्नूर्जं दधाति [१९] पितृणाꣳ सदनमसीति बर्हिरव स्तृणाति पितृदेवत्याꣳ ह्येतद्यन्निखातं यद्बर्हिरनवस्तीर्य मिनुयात्पितृ-

देवस्यो निखातस्याद्बर्हिरवस्तीर्थ मिनोत्यस्यामेवैनं मिनोति यूप-शकलमवास्यति सतेजसमेवैनं मिनोति देवस्त्वा सविता मध्वाऽ-नक्त्वित्याह तेजसैवैनमनक्ति सुपिप्पलाभ्यस्त्वौषधीभ्य इति चषालं प्रति [२०] मुञ्चति तस्माच्छीर्षत ओषधयः फलं गृह्णन्त्य-नक्ति तेजो वा आज्यं यजमानेनाग्निष्ठाऽश्रिस्संमिता यदग्निष्ठा मश्रिमनक्ति यजमानमेव तेजसाऽनक्त्यान्तमनक्त्यान्तमेव यज-मानं तेजसाऽनक्ति सर्वतः परि मृशत्यपरिवर्गमेवास्मिन्तेजो दधा-त्युद्दिवꣳ स्तभानाऽन्तरिक्षं पृणेत्याहैषां लोकानां विधृत्यै वैष्ण-व्यर्चा [२१] कल्पयति वैष्णवो वै देवतया यूपस्स्वयैवैनं देवतया कल्पयति द्वाभ्यां कल्पयति द्विपाद्यजमानः प्रतिष्ठित्यै यं कामयेत तेजसैनं देवताभिरिन्द्रियेण व्यर्धयेयमित्यग्निष्ठां तस्याश्रिमाहव-नीयादित्थं वेत्थं वाऽति नावयेत्तेजसैवैनं देवताभिरिन्द्रियेण व्यर्धयति यं कामयेत तेजसैनं देवताभिरिन्द्रियेण समर्धयेयमिति [२२] अग्निष्ठां तस्याश्रिमाहवनीयेन सं मिनुयात्तेजसैवैनं देवता-भिरिन्द्रियेण समर्धयति ब्रह्मवनिं त्वा क्षत्रवनिमित्याह यथायजु-रेवैतत्परि व्ययत्यूर्ग्वै रशना यजमानेन यूपस्संमितो यजमानमे-वोर्जा समर्धयति नाभिदघ्ने परि व्ययति नाभिदघ्न एवास्मा ऊर्जं दधाति तस्मान्नाभिदघ्न ऊर्जा भुञ्जते यं कामयेतोर्जैनम् [२३] व्यर्धयेयमित्यूर्ध्वां वा तस्यावाचीं वाऽवोहेदूर्जैवैनं व्यर्धयति यदि कामयेत वर्षुकः पर्जन्यस्यादित्यवाचीमवोहेद्वृष्टिमेव नियच्छति

यदि कामयेतावर्षुकस्स्यादित्यूध्र्वामुद्दूहेद्वृष्टिमेवोद्यच्छति पितृणां निखातं मनुष्याणामूर्ध्वं निखातादा रशनाया ओषधीना॑ रशना विश्वेषाम् [२४] देवानामूर्ध्व॑ रशनाया आ चषालादिन्द्रस्य चषाल॑ साध्यानामतिरिक्त॑ स वा एष सर्वदेवत्यो यद्यूपो यद्यू॑ मिनोति सर्वा एव देवताः प्रीणाति यज्ञेन वै देवास्सुवर्गं लोकमायन्तेऽमन्यन्त मनुष्या नोऽन्वाभविष्यन्तीति ते यूपेन योपयित्वा सुवर्गं लोकमायन्तमृषयो यूपेनैवानु प्राजानन्तद्यूपस्य यूपत्वम् [२५] यद्यूपं मिनोति सुवर्गस्य लोकस्य प्रज्ञात्यै पुरस्ता-न्मिनोति पुरस्ताद्धि यज्ञस्य प्रज्ञायते प्रज्ञात॑ हि तद्यदतिपन्न आहुरिदं कार्यमासीदिति साध्या वै देवा यज्ञमत्यमन्यन्ततान् यज्ञो नास्पृशत्तान् यद्यज्ञस्यातिरिक्तमासीत्तदस्पृशदतिरिक्तं वा एतद्यज्ञस्य यदग्नावग्निं मथित्वा प्रहरत्यतिरिक्तमेतत् [२६] यूपस्य यदूर्ध्वं चषालात्तेषां तद्भागधेयं तानेव तेन प्रीणाति देवा वै स॑स्थिते सोमे प्रस्रुचोऽहरन्प्र यूपं तेऽमन्यन्त यज्ञवेशसं वा इदं कुर्म इति ते प्रस्तर॑ स्रुचां निष्क्रयणमपश्यन्त्स्वरुं यूपस्य स॑स्थिते सोमे प्रप्रस्तर॑ हरति जुहोति स्वरुमयज्ञवेशसाय [२७] ॥ दधाति प्रत्यृचा समर्धयेयमित्यूर्जैनं विश्वेषां यूपत्वमति-रिक्तमेतद्द्विचत्वारि॑शच्च ॥ ४ ॥

இதில், வெட்டிய யூபத்தை நாட்டும்வகை கூறப்படுகின்றது.

நாட்டல்)

உலகமூன்றின் அபிமானி தேவதைகள் பிரியமடைதற் பொருட்டு, நீர் தெளித்தலாம் என்கின்றது.

பிராமணம்—1

**पृथिव्यै त्वाऽन्तरिक्षाय त्वा दिवे त्वेत्याहैभ्य एवैनं लोकेभ्यः प्रोक्षति ।**

என்பது.

உரை.

"மண்ணின் பொருட்டு" என்றது முதலியது, மூன்றுலகங்களின் பொருட்டு இந்த யூபத்தில் நீரைத் தெளிக்கின்றான் என்கின்றது.

---

அத்திமரக் கோம்பிற்கு நுனியிலிருந்து அடிவரை தெளிப்பதுபோலன்று, மற்றோ, அடியிலிருந்து நுனிக்கு மேலாகத் தெளித்தல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—2

**पराञ्चं प्रोक्षति पराङिव हि सुवर्गो लोकः ।**

என்பது

உரை.

மேலே நோக்காகத் தெளித்தல், சுவர்க்கலோகம் மேலே யிருத்தலால் என்பது.

---

யூபம் நடுங்குழியில் நீர்வார்த்தல் முதலியவைகளை விதிக்கின்றது.

பிராமணம்—3

**क्रूरमिव वा एतत्करोति यत्खनत्यपोऽव नयति शान्त्यै यवमतीरव नयत्यूर्ग्वै यवो यजमानेन यूपस्संमितो यावानेव यजमानस्तावतीमेवास्मिन्नूर्जं दधाति पितृणाꣳ सदनमसीति बर्हिरव स्तृणाति पितृदेवत्याꣳ ह्येत-द्यन्निखातं यद्बर्हिरनवस्तीर्य मिनुयात्पितृदेवत्यो निखातस्स्याद्बर्हिरव-स्तीर्य मिनोत्यस्यामेवैनं मिनोति ।**

என்பது.

உரை.

குழி கெல்லுதல் வருவிக்கப்பட்டதாம். குழி கெல்லியதால் பூமி கோபமடைந்தது அதைத்தணிக்க நீர்வார்த்தல். வாற்கோதுமையைப் போடுதல் இரசத்தை வார்த்ததாகின்றது. எசமானனுடைய அளவைக் கொள்வதோ,

எசமானனுக்கு வேண்டிய அளவு உணவுப்பொருளை அடைதற் பொருட்டாம். தருப்பை விரித்தல், குழி, பிதிர்க்கட்கு இடமாதலின் என்க விரிக்காவிடில் இவனுடையதாகாமற் போய்விடும் என்பது.

---

சிராப் பொடியைப் போடுவதை விதிக்கின்றது.

பிராமணம்—4

**यूपशकलमवास्यति सतेजसमेवैनं मिनोति ।**

என்பது

உரை.

வெட்டும்பொது முதலில் ஒளியை கொண்டு எழுந்த சிராப் பொடிகளை அக்குழியிற்போடுதல், மரத்தின் ஒளி பயந்து சிராப் பொடியாக சிதறி விழுந்தது என்று முற்கூறிப் பட்டதன்றே, அத்தகைய ஒளியுடன் யூபத்தை நாட்டுவதாகும் என்பது.

---

நெய் தடவுவதை விதிக்கின்றது.

பிராமணம்—5

**देवस्त्वा सविता मध्वाऽनक्त्वित्याह तेजसैवैनमनक्ति ।**

என்பது

உரை

“ தேவஸ்த்வா ” என்றது முதலியது, ஒளியால் இந்த யூபத்தை நனைக்கின்றான் என்கின்றது. ஈண்டு நெய் = ஒளியெனப்படுகின்றதை யுணர்க.

---

யூபத்திற்கு, ‘ சஷாலம் ’ என்னுங் கங்கணம் போடுவதை விதிக்கின்றது.

பிராமணம்—6

**सुपिप्पलाभ्यस्त्वौषधीभ्य इति चषालं प्रति मुञ्चति तस्माच्छीर्षत ओषधयः फलं गृह्णन्ति ।**

என்பது.

உரை.

யூபத்தின் நுனியில் ஒரு மரவளையத்தைப் போடுதலால், கொடிசெடிகள் நுனியால் பயன்களைக் கொடுக்கின்றன என்பது.

---

நாட்டல்)

அக்கினிக்கு எதிர்முகமாய் இருக்கும் யூபப்பட்டைமீது நெய் தடவுதலை விதிக்கின்றது.

பிராமணம்—7

**अनक्ति तेजो वा आज्यं यजमानेनाग्निष्ठाऽश्रिस्संमिता यदग्निष्ठामश्रिमनक्ति यजमानमेव तेजसाऽनक्त्यान्तमनक्त्यान्तमेव यजमानं तेजसाऽनक्ति ।**

என்பது.

உரை.

அக்கினிக்கு நேராய் இருக்கும் யூபத்தின் எட்டுப் பட்டைகளுள் ஒன்றைச் சுருவத்தில் நெய் யெடுத்துக்கொண்டு நனைக்கில் எசமானனை நெய் யால் நனைத்ததாம் என்பது.

---

அப் பாகமுழுதும் நனைத்தல் வேண்டுமென்பதை விதிக்கின்றது.

பிராமணம்—8

**सर्वतः परि मृशत्यपरिवर्गमेवास्मिन्तेजो दधाति ।**

என்பது.

உரை.

அப்பாகம் முழுதையும் நெய்யால் நனைத்துவிடில் எசமானனுடைய அவயவங்களுள் ஒன்றையும் விடாமல் ஒளியை உண்டாக்கியதாகின்றது என்பது.

---

யூபத்தை நிமிர்க்கும் மந்திரத்திலுள்ள மூன்று சொற்களின் பயன் களைக் கூறுகின்றது

பிராமணம்—9

**उद्दिवंस्तभानाऽन्तरिक्षं पृणेत्याहैषां लोकानां विधृत्यै ।**

என்பது.

உரை.

"உத்திவம்" என்பது முதலியது மூவுலக வாசங்களும் அந்தஉலகங் களின் உறுதிப்பாட்டின் பொருட்டு என்கின்றது.

---

யூபத்தைக் குழியில் நாட்டுவதை விதிக்கின்றது.

பிராமணம்—10

**वैष्णव्यर्चा कल्पयति वैष्णवो वै देवतया यूपस्स्वयैवैनं देवतया कल्पयति ।**

என்பது.

உரை.

“தேதேதாமாஸி” என்னும் விஷ்ணுமந்திரத்தால் யூபத்தை நாட்டில், யூபம் விஷ்ணுவையே தேவதையாக வுடையதாமாதலின் தனது தேவதையாலேயே நாட்டப்பெற்றதாகும் என்பது.

---

யூபத்தை நாட்டுவேதில் தத்விஷ்ணோః, “விஷ்ணோః கர்மாணி” என்னும் இரண்டு மந்திரங்களையும் விநியோகிக்கின்றது.

பிராமணம்—11

**द्वाभ्यां कल्पयति द्विपाद्यजमानः प्रतिष्ठित्यै ।**

என்பது.

உரை.

இரண்டு மந்திரங்களால் அவ்வாறு வைத்தலால் இரண்டு கால்களையுடைய எசமானன் நிலையை யடைதற்பொருட்டென்கின்றது.

---

யூபத்தை ஆகவனீயாக்கினிக்கு நேராய் நுனி சிறிதுசாய்ந்து நிற்கும்படி வைப்பதில் பூர்வபட்சத்தைக் காட்டுகின்றது.

பிராமணம்—12

**यं कामयेत तेजसैनं देवताभिरिन्द्रियेण व्यर्धयेयमित्यग्निष्ठां तस्याश्रिमाहवनीयादित्थं वेत्थं वाऽति नावयेत्तेजसैवैनं देवताभिरिन्द्रियेण व्यर्धयति ।**

என்பது.

உரை.

எட்டுப் பட்டைவைத்துச் செதுக்கும் போது, இதை இந்திரியங்களுடனும் தேவதைகளுடனும் சேர்க்கின்றேன். அதற்கு, இப்பட்டைகளுடனும் ஒன்று யூபத்திற்கு மேற்கில் நிற்கும்படி செய்வதால் உறுதிபண்ணிக் கொள்வானாக. அதைக்கொண்டே அப்பட்டை ஆகவனீயாக்கினிக்கு வடக்கிலேனும் தெற்கிலேனும் நிற்கும்படிச் செய்யில் ஒளி முதலியவைகளின்றியவனாகின்றான் என்பது.

---

சித்தாந்தத்தை விளக்குகின்றது.

பிராமணம்—13

**यं कामयेत तेजसैनं देवताभिरिन्द्रियेण समर्धयेयमित्यग्निष्ठां तस्याग्नि-माहवनीयेन सं मिनुयात्तेजसैवैनं देवताभिरिन्द्रियेण समर्धयति ।**

என்பது.

**உரை.**

இந்திரிய முதலியவைகளை யடைய விரும்பில், யூபத்தின் பட்டைகளுள் ஒன்றை ஆகவனீயாக்கினிக்கு நேராய் இருக்கும்படி வைத்தல்வேண்டும் வைக்கில் அப்பயனை யடைகின்றான் என்பது.

---

குழியில் மண்ணைத்தள்ளி கெட்டிப்படுத்தும் மந்திரங்களிரண்டின் பொருள் வெளிப்படையென்பதை விளக்குகின்றது.

பிராமணம்—14

**ब्रह्मवनि त्वा क्षत्रवनिमित्याह यथायजुरेवैतत् ।**

என்பது.

**உரை.**

"பிரமவனிம்" என்றது முதலியது, எசுர் மந்திரத்திலுள்ளவாறே பொருளையுடையது என்கின்றது.

---

யூபத்தில் தருப்பைக்கயிற்றைச் சுற்றல் வேண்டுமென்பதை விதிக்கின்றது.

பிராமணம்--15

**परिव्ययत्यूर्ग्वै रशना यजमानेन यूपस्संमितो यजमानमेवोर्जा समर्धयति ।**

என்பது.

**உரை.**

தருப்பையாலாகிய கயிறானதால் இது இரசவடிவாம். ஆதலின், இது எசமானனுடைய அளவினதாகிய யூபசம்பந்தமுடையதாய் வேண்டிய அளவு உணவுப் பொருளை யளிக்கின்றது என்பது.

---

தருப்பைக்கயிற்றைக் கட்டுமிடத்தை விதிக்கின்றது.

பிராமணம்—16

**नाभिदघ्ने परि व्ययति नाभिदघ्न एवास्मा ऊर्जं दधाति तस्मान्नाभिदघ्न ऊर्जा भुञ्जते ।**

என்பது.

உரை.

உண்ணும் உணவுப் பொருள் உடம்பின் நடுவாகிய நாபியின் அளவில் இருத்தலின் நாபியின் உயரத்தில் தருப்பைக் கயிற்றை யூபத்திற் சுற்றுதல் என்பது.

---

நாபி அளவு என்பதைப் புகழ்வதன் பொருட்டு பழிக்கத்தக்க பட்சத்தை எடுத்துக் கூறுகின்றது.

பிராமணம்—17

**यं कामयेतोर्जैनं व्यर्धयेयमित्यूर्ध्वां वा तस्यावाचीं वाऽवोहेदूर्जैवैनं व्यर्धयति ।**

என்பது.

உரை.

உணவுப் பொருளை வீணுகச்செய்யவிரும்பில் வயிறுபோன்று நாபிஅளவுக்கு மேலேயாயினும், கீழேயாயினும் தருப்பைக் கயிற்றைச் சுற்றில் அவ்வாறே யாகிவிடும் என்கின்றது.

---

விருப்ப விசேடத்தால் அதன் இடவிசேடங்களை விதிக்கின்றது,

பிராமணம்—18

**यदि कामयेत वर्षुकः पर्जन्यस्यादित्यवाचीमवोहेद्वृष्टिमेव नियच्छति यदि कामयेतावर्षुकस्स्यादित्यूर्ध्वामुदूहेद्वृष्टिमेवोद्यच्छति ।**

என்பது.

உரை.

மழையை விரும்பில் நாபிக்கு நேராகக்கட்டிய தருப்பைக் கயிற்றை கீழே தள்ளிவிடல் வேண்டும். மழையை விரும்பாவிடில் அக்கயிற்றை மேலே தள்ளிவிடல்வேண்டும் என்பது.

---

எல்லாத் தேவதைகட்கும் யூபம்பிரியமாம் என்னுந் தன்மையால் துதிக்கின்றது.

பிராமணம்—19

पितॄणां निखातं मनुष्याणामूर्ध्वं निखाताद् रशनाया ओषधीनाᳪ रशना विश्वेषान्देवानामूर्ध्वᳪ रशनाया आ चषालादिन्द्रस्य चषालᳪ साध्यानामतिरिक्तᳪ स वा एष सर्वदेवत्यो यद्यूपो यद्यूपं मिनोति सर्वा एव देवताः प्रीणाति ।

என்பது.

உரை.

குழிக்குள்ளிருக்கும் வரையும் பிதிர்களுக்குப் பிரியமானதாம். அதற்கு மேல் நடு கயிறு கட்டியிருப்பதற்கு மனிதர்களுக்குப் பிரியமானதாம். கட்டியுள்ளவிடம் கொடி செடிகட்குப் பிரியமானதாம். அதிலிருந்து கங்கணமாயுயுள்ள விடத்திற்கு நடு விசுவேதேவர்கட்குப் பிரியமானதாம். கங்கணம (சழாலமென்னும் மரவளையம்) போட்டுள்ளவிடம் இந்திரனுக்குப் பிரியமானதாம். மற்றைய விடங்களெல்லாம் சாத்தியர்கட்குப் பிரியமானவைகள் என்பது.

---

மீண்டும் சுவர்க்கலோகத்தை யுணர்வதற்குக் காரமாந் தன்மையற்றி யூபத்தைத் துதிக்கின்றது.

பிராமணம் —20

यज्ञेन वै देवास्सुवर्गं लोकमायन्तेऽमन्यन्त मनुष्या नोऽन्वाभविष्यन्तीति ते यूपेन योपयित्वा सुवर्गं लोकमायन्तमृषयो यूपेनैवानु प्राजानन्तद्यूपस्य यूपत्वं यद्यूपं मिनोति सुवर्गस्य लोकस्य प्रज्ञात्यै ।

என்பது

உரை.

முன்னொருகால், தேவர்கள் எக்ஞஞ்செய்து அதனால் சுவர்க்கஞ் சென்றார்கள் அப்போது மனிதர்களும் நம்மைப் பின்பற்றிவந்து நம்மைப்போலாகிவிடுவார்கள் என்றெண்ணி, மனிதர்களை, யூபம் ஒருமரக்கொம்பு என்று நுண்ணிய நோக்கானுணர்ந்து தேவர்களைப் பின்பற்றி யூபத்தால் சுவர்க்கத்தை யுணர்ந்து கொண்டனர்; ஆதலின் யூபம் (மயக்குவது) என்ற பெயர் வந்தது. இவ்வாறு மகிமையையுணர்ந்து யூபத்தை நாட்டியவன் சுவர்க்கத்தை யுணர்கின்றான் என்பது.

---

ஆகவனீயத்திற்குக் கிழக்கில் யூபத்தை நாட்டுதல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—21

**पुरस्तान्मिनोति पुरस्ताद्धि यज्ञस्य प्रज्ञायते प्रज्ञातꣳ हि तद्यदतिपन्न आहु-रिदं कार्यमासीदिति ।**

என்பது.

உரை.

*ஆகவனீயத்திற்குக் கிழக்கில் யூபம் நாட்டப்படுகின்றது எக்ஞத்திற்குரிய அங்கங்களனைத்தும் முன் உணரப்பட்டிருப்பதுபோல் யூபம் நடுமிடம் கிழக்கென்று முன் உணரப்பட்டிருப்பதற்கு அடையாளமாக கிழக்கில் நடுதல் என்பது.*

---

முன், சஷாலத்திற்கு மேற்பட்ட இடம் சாத்தியர்கள் என்னுந் தேவர்கட்கு பிரியமான தேன்பதை அமைத்துக் காட்டுகின்றது.

பிராமணம்—22

**साध्या वै देवा यज्ञमत्यमन्यन्त तान् यज्ञो नास्पृशत्तान् यद्यज्ञस्यातिरिक्तमा-सीत्तदस्पृशदतिरिक्तं वा एतद्यज्ञस्य यदग्नावग्निं मथित्वा प्रहरत्यतिरि-क्तमेतद्यूपस्य यदूर्ध्वं चषालात्तेषां तद्भागधेयं तानेव तेन प्रीणाति ।**

என்பது.

உரை.

*சாத்தியர்கள் என்னுந் தேவர்கள், முன், எக்ஞத்திற்கு உரிய விடங்களினின்றும் அதிகமானவைகள் எமக்கு உரியனவாருக, என்றெண்ணி எக்ஞத்தைத் தொட்டிலர். எக்ஞத்திற்குரியவைகளின்றும் வேறுபட்டவைகள் எவைகளெனின்? அக்கினியில் அக்கினியைக் கடைந்து கொண்டுவருதலாம் இது, வேறு எக்ஞத்தில் இல்லாமையின் வேறுபட்டதாம். அங்ஙனமே, சுண்டு எசமானனுடைய அளவுக்கு மேலேயுள்ளதாம். ஆதலின் இதுவும் சாத்தியர்கட்குப் பிரியமுடையது என்பது.*

---

தொடற்புப்பற்றி, முடிவில் சுவரு(கத்தி) ஹோமத்தை விதிக்கின்றது.

பிராமணம்—23

**देवा वै सꣳस्थिते सोमे प्रस्रुचोऽहरन्प्र यूपं तेऽमन्यन्त यज्ञवेशसं वा इदं कुर्म इति ते प्रस्तरꣳ स्रुचां निष्क्रयणमपश्यन्त्स्वरुं यूपस्य सꣳस्थिते सोमे प्रप्रस्तरꣳ हरति जुहोति स्वरुमयज्ञवेशसाय ।**

என்பது

நாட்டுதல்)

உரை.

முனர் தேவர்கள், யூபத்தையும் அதிற்செருகியுள்ள சுவருவையும் சோம யாகமுடிவில் அக்கினியில் எரித்துவிட வெண்ணினர். இதனால் எக்ஞங்கெடா தென ஆராய்ந்து பிரஸ்தரத்துடன் சுருக்குக்களையும் யூபத்துடன் சுவருவையும் மீட்டுக்கொண்டனர். ஆதலின், சோமயாக முடிவில் பிரஸ்தரத்தை (விரித்திருந்த தருப்பையை)யும், சுவருவையும் அக்கினியில் எரித்துவிடுக. சுவரு என்பது யூபத்தைச் செதுக்கும்போது முதலில்எழுந்த செதிள் அதாவது கத்திபோற் கூர்மையாயுள்ளது என்பது.

நான்காம் அநுவாகம்
முற்றிற்று.

---

## ஆறுங்காண்டம் மூன்றும் பிரபாடகம்

### ஐந்தாவது அநுவாகம்

*தீக்கடைவதைக் கூறும் பிராமணங்கள்.*

நான்கு பஞ்சாதிக்குமேல் பதினெட்டுப் பதங்களைக் கொண்டது.

साध्या वै देवा अस्मिँल्लोक आसन्नान्यत्किंचन मिषत्तेऽग्निमेवाग्नये मेधायाऽलभन्त न ह्यन्यदालम्भ्यमविन्दन्ततो वा इमाः प्रजाः प्राजायन्त यदग्नावग्निं मथित्वा प्रहरति प्रजानां प्रजननाय रुद्रो वा एष यदग्निर्यजमानः पशुर्यत्पशुमालभ्याग्निं मन्थेद्रुद्राय यजमानम् [२८] अपि दध्यात्प्रमायुकस्स्यादथो खल्वाहुरग्निस्सर्वा देवता हविरेतद्यत्पशुरिति यत्पशुमालभ्याग्निं मन्थति हव्यायैवाऽऽसन्नाय सर्वा देवता जनयत्युपाकृत्यैव मन्थ्यस्तन्नेवाऽऽलब्धं नेवानालब्धमग्नेर्जनित्रमसीत्याहाग्नेर्ह्येतज्जनित्रं वृषणौ स्थ इत्याह वृषणौ [२९] ह्येतावुर्वश्यस्यायुरसीत्याह मिथुनत्वाय घृतेनाक्ते वृषणं दधाथामित्याह वृषणꣳ ह्येते दधाते ये अग्नि गायत्रं छन्दोऽनु प्रजायस्वेत्याह छन्दोभिरेवैनं प्रजनयत्यग्नये

मथ्यमानायानु ब्रूहीत्याह सावित्रीमृचमन्वाह सवितृप्रसूत एवैनं मन्थति जातायानु ब्रूहि [३०] प्रह्रियमाणायानु ब्रूहीत्याह काण्डेकाण्ड एवैनं क्रियमाणे समर्धयति गायत्रीस्सर्वा अन्वाह गायत्रछन्दा वा अग्निस्स्वेनैवैनं छन्दसा समर्धयत्यग्निः पुरा भवत्यग्निं मथित्वा प्रहरति तौ संभवन्तौ यजमानमभि संभवतो भवतं नस्समनसावित्याह शान्त्यै प्रहृत्य जुहोति जातायैवास्मा अन्नमपि दधात्याज्येन जुहोत्येतद्वा अग्नेः प्रियं धाम यदाज्यं प्रियेणैवैनं धाम्ना समर्धयत्यथो तेजसा [३१] ॥ यजमानमाह वृषणौ जातायानु ब्रूह्यष्टादश च ॥ ५ ॥

இதில் தீக்கடைதல் கூறப்படுகின்றது.

---

ஈண்டுப் பாடமுறையில், "இழேத்வா' என்பது முதலிய உபாகரண (பசுவைத் தொடுதல்முதலிய) மந்திரங்கட்கு உரை கூறல் வேண்டும். அங்ஙனமாயினும் முன்அநுவாகத்தில், தொடற்புபற்றி எக்ஞத்திற்கு வேறுபட்டது தீக்கடைதல் என்று கூறியதால் அதை வெளிப்படையாக்குதற் பொருட்டு முதலில் தீக்கடையும் மந்திரங்கட்கு உரைகூறப் புகுந்து தீக்கடைதலுடன் தீயைக் கொண்டுவருவதை விதிக்கின்றது.

பிராமணம்—1

साध्या वै देवा अस्मिँल्लोक आसन्नान्यत्किञ्चन मिषत्तेऽग्निमेवाग्नये मेधायाऽलभन्त न ह्यन्यदालम्भ्यमविन्दन्ततो वा इमाः प्रजाः प्राजायन्त यदग्नावग्निं मथित्वा प्रहरति प्रजानां प्रजननाय ।

என்பது.

உரை.

மனிதர்கள் குதிரை முதலிய விலங்குகள் உண்டாவதற்கு முன் சாத்தியர்கள் எனப்படும் தேவர்களே இவ்வுலகிலிருந்தனர். மற்றெவ்வுயிர்களும் இல. அப்போது, சாத்தியர்கள் பிரசையை விரும்பி எக்ஞஞ் செய்தனர் அதில், ஏனையபசுக்கள் ஒன்றும் அகப்படாமையின் அக்கினியையே புருடா

தீக்கடைதல்)

ரண்ய பசு நியாயத்தால் பசுவாகக்கொண்டு உபாகரணஞ் செய்தனர். பிறகு, அக்கினியைக்கொன்று எக்ஞஞ் செய்ததால் பிரசைகளை யுண்டாக்கினர். ஆதலின், முன்னிருந்த அக்கினியில், பிறகு கடைந்த தீயையுஞ் சேர்க்கில் பிரசைகள் உண்டாகும் என்பது.

---

இனி, பசு உபாகரணந் தொடங்கி, கொல்லும்வரை செய்யப்படுஞ் செயல்களுக்கு ஆலம்பம் என்று பெயராதலின், அத்தகைய ஆலம்பத்திற்குமுன். அக்கினியைக் கடைதலா? அல்லது பின்னு? என்று கடைவதில் ஆராய்ச்சி செய்யும்போது முதலாம் பக்ஷத்தில் குற்றத்தைக் கூறுகின்றது.

பிராமணம்—2

**रुद्रो वा एष यदग्निर्यजमानः पशुर्यत्पशुमालभ्याग्निं मन्थेद्रुद्राय यजमानमपि दध्यात्प्रमायुकस्स्यात् ।**

என்பது.

உரை.

இவ் வக்கினியே கோரவடிவாதலின் உருத்திரனும். பசு, எசமானனை மீட்கும் வடிவாதலின் எசமானனும். ஆதலின், ஆலம்பஞ் செய்வதற்கு முன் தீக்கடையின், அவியாகிய எசமானனையும் உருத்திரனுக்குக் கொடுத்ததாகும்; கொடுக்கில் எசமானன் இறப்பன் என்பது.

---

முற் கூறியபட்சத்திலுள்ள குணத்தையும் விளக்குகின்றது.

பிராமணம்—3

**अथो खल्वाहुरग्निस्सर्वा देवता हविरेतद्यत्पशुरिति यत्पशुमालभ्याग्निं मन्थति हव्यायैवाऽऽसन्नाय सर्वा देवता जनयति ।**

என்பது.

உரை.

தேவர்களனைவரும் அக்கினியுட் புகுந்தன ராதலின் அக்கினி எல்லாத் தேவதைகளின் வடிவாம். பசு அவியாம் ஆதலின் அவியாகிய பசுவைக் கொன்ற பிறகு தீயைக் கடையில், எல்லாத் தேவதைகளையும் அருகிற் சேர்த்ததாகும் என்பது.

---

இரண்டாவது பக்ஷமே சித்தாந்தமாமென எடுத்துக்கொள்கின்றது.

பிராமணம்—4

**उपाकृत्यैव मन्थ्यस्तन्नेवाऽऽलब्धं नेवानालब्धम् ।**

என்பது.

உரை.

*பசு உபாகரணஞ் செய்தபின் தீயைக் கடைதல் வேண்டும். இதனால், பசுவைக் கொல்வதற்கு வேண்டிய கிரியைகளைத் தொடங்கினும் பசுவைக் கொல்லாமையின் அக்கிரியை முடியவில்லை; ஆதலின், முற்கூறிய குற்றம் இல்லை என்பதாம்.*

---

கட்டைகளையும், தருப்பைகளையும் வைக்கும் மந்திரங்களிரண்டின் பொருள்களும் வெளிப்படையாம் என விளக்குகின்றது.

பிராமணம்—5

**अग्नेर्जनित्रमसीत्याहाग्नेर्ह्येतज्जनित्रं वृषणौ स्थ इत्याह वृषणौ ह्येतौ ।**

என்பது.

உரை.

*அணையாகவைக்கும் இரண்டு கட்டைகளும் தீயை உண்டாக்கு கின்றவைகளாகவும், தருப்பைகளிரண்டும் இந்திரியத்தை வீரியமுடையவைகளாகச்செய்யவும் இருக்கின்றன என்பது.*

---

தீக்கடைக்கோலை, ஆண் பெண்களாகவுங் கூறல் சேர்க்கையாதலுக்கு வெளிப்படைப் பொருளாம் என விளக்குகின்றது.

பிராமணம்—6

**उर्वश्यस्यायुरसीत्याह मिथुनत्वाय ।**

என்பது

உரை.

*ஆண் பெண் என்றது, இரண்டின் புணர்ச்சியின் பொருட்டு என்கின்றது.*

---

தீக்கடைதல்)

வீரியத்தைத் தெளித்தல் என்பதால் வீரியத்தாலுண்டாகும் தீயே குறிப்பேன்கின்றது.

பிராமணம்—7

घृतेनाक्ते वृषणं दधाथामित्याह वृषणः ह्येते दधाते ये अग्निम् ।

என்பது.

உரை.

*"கிருதேனக்தே" என்றது, கருப்பாதானத்தைத் தாங்கிக்கொள்க. அதாவது அக்கினியே! நீ யுண்டாக்குவதைப் பொறுத்துக்கொள்வாயாக என்கின்றது.*

---

தீக்கடைக்கோலை கடையும் மந்திரத்தில், சந்தம், தீயுண்டாக்குவதற்குச் சாதனம் என விளக்கப்பட்டிருக்கின்ற தென்கின்றது.

பிராமணம்—8

गायत्रं छन्दोऽनु प्रजायस्वेत्याह छन्दोभिरेवैनं प्रजनयति ।

என்பது.

உரை.

*"காயத்ரம் சந்தஃ" என்றது முதலியது, சந்தங்களால் இவ்வக்கினியை யுண்டாக்குகின்றான் என்கின்றது.*

---

ஹோதாவிற்கு, அத்வரியுவின் பிரேஷை மந்திரத்தைத் தோற்றுவிக்கின்றது.

பிராமணம்—9

अग्नये मथ्यमानायानु ब्रूहीत्याह ।

என்பது.

உரை.

*கடையுந்தீயின் பொருட்டு இருக்கு வாக்கியத்தைச் சொல்வாயாக என்பது.*

---

"அபித்வா" என்பது முதலிய இருக்கை விதிக்கின்றது.

பிராமணம்—10

सावित्रीमृचमन्वाह सवितृप्रसूत एवैनं मन्थति ।

என்பது.

உரை.

"சாவித்ரம் என்றது முதலியது, சவிதாவின் ஏவலினாலேயே இது கடையப்படுகின்றது என்கின்றது.

---

மீண்டும் இரண்டு பிரேஷை மந்திரங்களைத் தோற்றுவிக்கின்றது.

பிராமணம்—11

**जातायाऽनु ब्रूहि प्रह्रियमाणायाऽनु ब्रूहीत्याह काण्डेकाण्ड एवैनं क्रियमाणे समर्धयति ।**

என்பது

உரை.

அக்கினியைக் கடையும்போதும், உண்டாகும்போதும், உண்டாகிய தீயை முன் அக்கினியுடன் சேர்க்கும்போதும் பிரேஷை மந்திரங்களைக் கூறுவதால் அக்கினி நிறைந்த சம்பத்துடையதாகின்றது என்பது.

---

ஹோதாவின் மந்திரங்களை விதிக்கின்றது.

பிராமணம்—12

**गायत्रीस्सर्वा अन्वाह गायत्रछन्दा वा अग्निस्स्वेनैवैनं छन्दसा समर्धयति ।**

என்பது.

உரை.

கடையும்போது, 'அபித்வா' என்பது முதலியதும், உண்டாகும்போது, "உதப்ருவந்து" என்பது முதலியதும், அதை எடுத்துக்கொள்ளும்போது "பிரதேவம்" என்பது முதலியதும் ஓதற்பாலன. இவ்விருக்கு மந்திரங்களெல்லாம் காயத்திரிச் சந்தத்தை யுடையவைகள். அக்கினியும், காயத்திரிச் சந்தத்துடன் தோன்றியதால் காயத்திரிச் சந்தமாம் என்பது.

---

கடைந்த தீயை ஆகவனீயத்தீயில் கலக்கு மந்திரத்தால், "நீவிரிருவரும் மங்களத்தைச் சொல்வீர்களாக" என்று துதிப்பதற்குப் பொருத்தத்தைக் காட்டுகின்றது.

பிராமணம்—5

**अग्निः पुरा भवत्यग्निं मथित्वा प्रहरति तौ संभवन्तौ यजमानमभि संभवतो भवतं नस्समनसावित्याह शान्त्यै ।**

என்பது,

உரை.

எசமானனை அருந்துவதைக் குறியாக வைத்துக்கொண்டு இரண்டக்கினிகளும் ஒன்று சேர்ந்தமையின் அவைகட்கு அக்கோபம் தணிதற்பொருட்டுத் துதிக்கப்படுகின்றது என்பது.

---

அதை விதிக்கின்றது.

பிராமணம்—14

**प्रहृत्य जुहोति जातायैवास्मा अन्नमपि दधात्याज्येन जुहोत्येतद्वा अग्नेः प्रियं धाम यदाज्यं प्रियेणैवैनं धाम्ना समर्धयत्यथो तेजसा ।**

என்பது.

உரை.

அக்கினியை எடுத்துக்கொண்டு உண்டாகிய அவ்வக்கினிக்கு ஹோமஞ் செய்தல் வேண்டும் நெய், அக்கினிக்குப் பிரியமாகிய இடமாம். ஆதலின், பிரியமாகிய ஒளியால் அதை நிறையச் செய்கின்றான் என்பது.

ஐந்தாவது அநுவாகம்
முற்றிற்று.

---

## ஆறுங்காண்டம் மூன்றும்பிரபாடகம்

### ஆறுவது அநுவாகம்

உபாகரணத்தைக் கூறும் பிராமணங்கள்.

நான்கு பஞ்சாதிக்குமேல் பத்துப் பதங்களைக் கொண்டது.

**इषे त्वेति बर्हिरा दत्त इच्छन्त इव ह्येष यो यजत उपवीरसीत्याहोप ह्येनानाकरोत्युपो देवान्दैवीर्विशः प्रागुरित्याह दैवीर्ह्येता विशस्सतीर्देवानुपयन्ति वह्नीरुशिज इत्याहर्त्विजो वै वह्नय उशिजस्तस्मादेवमाह बृहस्पते धारया वसूनीति [३२] आह ब्रह्म वै देवानां बृहस्पतिर्ब्रह्मणैवास्मै पशूनवरुन्धे हव्या ते स्वदन्तामित्याह स्वदयत्येवैनान्देव त्वष्टर्वसु रण्वेत्याह त्वष्टा वै पशूनां**

मिथुनानाꣳ रूपकृद्रूपमेव पशुषु दधाति रेवती रमध्वमित्याह पशवो वै रेवतीः पशूनेवास्मै रमयति देवस्य त्वा सवितुः प्रसव इति [३३] रशनामा दत्ते प्रसूत्या अश्विनोर्बाहुभ्यामित्याहाश्विनौ हि देवानामध्वर्यू आस्तां पूष्णो हस्ताभ्यामित्याह यत्यै ऋतस्य त्वा देवहविः पाशेनाऽऽरभ इत्याह सत्यं वा ऋतꣳ सत्येनैवैन-मृतेनाऽऽ रभतेऽक्ष्णया परि हरति वध्यꣳ हि प्रत्यञ्चं प्रतिमुञ्चन्ति व्यावृत्त्यै धर्षा मानुषानिति नि युनक्ति धृत्या अद्भ्यः [३४] त्वौषधीभ्यः प्रोक्षामीत्याहाद्भ्यो ह्येष ओषधीभ्यस्संभवति यत्प-शुरपां पेरुरसीत्याहैष ह्यपां पाता यो मेधायाऽऽरभ्यते स्वात्तं चित्सदेवꣳ हव्यमापो देवीस्स्वदतैनमित्याह स्वदयत्येवैनमुपरिष्टा त्प्रोक्षत्युपरिष्टादेवैनं मेध्यं करोति पाययत्यन्तरत एवैनं मेध्यं करोत्यधस्तादुपोक्षति सर्वत एवैनं मेध्यं करोति [३५]॥ वस्नीति प्रसव इत्यद्भ्योऽन्तरत एवैनं दश च ॥ ६ ॥

இதில், பசுவை உபாகரணம் பண்ணுத (கட்டுதல் கல்லாலங்கிளையால் தொடுத)ல் முதலியன கூறப்படுகின்றன.

---

மேல்வரும் தீக்கடை மந்திரங்கட்கு முன்னர் உரை கூறிவிட்டு, இனி, முன் செய்யப்படும் உபாகரண மந்திரங்கட்கு உரைகூறவிரும்பி தருப்பையை எடுப்பதை விதிக்கின்றது.

பிராமணம்—1

इषे त्वेति बर्हिरा दत्त इच्छत इव ह्येष यो यजते ।

என்பது.

உரை.

தருப்பையை எடுக்கும் மந்திரத்தில் 'இழேத்வா' என்பது முதலியது, இவ்வெசமானன், பசுவாகிய அவியை தேவர்கட்குக் கொடுப்பதற்கு விரும்புவதால் 'இழ:' எனப்பட்டது என்கின்றது.

---

பசுவிற்கருகில் தேவர்களை யழைத்தல் கல்லாலங்கிளையாற்றேடுதலாம் என்பதை விளக்குகின்றது.

பிராமணம்—2

**उपवीरसीत्याहोप ह्येनानाकरोति ।**

என்பது.

உரை.

"உபவீரஸி" என்றது முதலியது, தேவர்களை அருகில் வரும்படி செய்கின்றான் என்பது.

---

"இருதயமுதலிய அவயவங்கள், தேவர்களையும், தேவர்களின் பிரசைகளையும் அடைந்தன" என்று உரை கூறியது வெளிப்படையாம் என்கின்றது.

பிராமணம்—3

**उपो देवान्दैवीर्विशः प्रागुरित्याह दैवीर्ह्येता विशस्सतीर्देवानुपयन्ति ।**

என்பது.

உரை.

"உபோதேவாந்" என்றது முதலியது, இவைகள் தெய்வப்பிரசைகளாயிருந்து அடைகின்றன என்கின்றது. அல்லது, இவைகளே தெய்வப்பிரசைகளாய்த் தேவர்களை யடைகின்றன எனினுமாம் என்பது.

---

'வன்னி' என்னுஞ்சொல் ஏற்றுக்கொள்வது என்னும் பொருளைத்தருவதாம் என்னுங்கருத்தை விளக்குகின்றது.

பிராமணம்—4

**वह्नीरुशिज इत्याहर्त्विजो वै वह्नय उशिजस्तस्मादेवमाह ।**

என்பது.

உரை.

"வன்னீருசிசः" என்றது முதலியது, வன்னி இந்த அவிகளையுண்ணும் இருத்துவிக்களாம் ஆதலின் இவ்வாறு கூறப்பட்டது என்கின்றது.

---

இங்கு, பசுக்கொடுத்தலால் இது பிரகற்பதியின் பிரார்த்தனை என்கின்றது.

பிராமணம்—5

**बृहस्पते धारया वसूनीत्याह ब्रह्म वै देवानां बृहस्पतिर्ब्रह्मणैवास्मै पशूनवरुन्धे ।**

என்பது.

உரை.

"பிருகஸ்தே" என்றது முதலியது, பிருகஸ்பதி, தேவர்கட்குப்பிரமம் ஆனதால், பிரமத்தால் இவனுக்குப் பசுக்கள் கிடைக்கச் செய்கின்றது என்கின்றது.

---

இதயமுதலிய அங்கங்களை, இன்சுவை யுடையவைகளாகச் செய்வதற்கு இவ்வாசீர்வாதம் என்கின்றது.

பிராமணம்—6

**हव्या ते स्वदन्तामित्याह स्वदयत्येवैनान् ।**

என்பது.

உரை.

"ஹவ்யா" என்றது முதலியது, இவ்வங்கங்களை இன்சுவையுடையவைகளாகச் செய்கின்றான் என்கின்றது.

---

புணர்ச்சியாகிய பசுவைக் கொடுத்தலால் இது துவஷ்டாவின் பிரார்த்தனையாம் என்கின்றது.

பிராமணம்—7

**देवत्वष्टर्वसु रण्वेत्याह त्वष्टा वै पशूनां मिथुनानाꣳ रूपकृद्रूपमेव पशुषु दधाति ।**

என்பது

உரை.

"தேவத்வஷ்டஃ" என்பது முதலியது, துவஷ்டா என்பவன் பசுக்களின் புணர்ச்சிவடிவைச் செய்கின்றவன் என்கின்றது.

---

'ரேவதி' என்னுஞ்சொல், பசு என்னும் பொருளைக்கொண்டது என்கின்றது.

பிராமணம்—8

**रेवती रमध्वमित्याह पशवो वै रेवतीः पशूनेवास्मै रमयति ।**

என்பது

உரை.

'ரேவதீரமத்வம்' என்றது, இவனுக்கு பசுக்களை இரமணீய முடைய வைகளாகச் செய்கின்றான் என்கின்றது.

---

கட்டுவதை விதிக்கின்றது.

பிராமணம்—9

**देवस्य त्वा सवितुः प्रसव इति रशनामा दत्ते प्रसूत्या अश्विनोर्बाहुभ्या-मित्याहाश्विनौ हि देवानामध्वर्यू आस्तां पूष्णो हस्ताभ्यामित्याह यत्यै ।**

என்பது.

உரை.

"தேவஸ்ய' என்பது முதலியது, சவிதாவின்ஏவலால் அசுவினிகளின் கைகளாலும் பூஷாவின் கைகளாலுங்கட்டுகின்றான் என்கின்றது.

---

மந்திரத்திலுள்ள 'ருத' என்னுஞ் சொற்பொருளைக் கூறுகின்றது.

பிராமணம்—10

**ऋतस्य त्वा देवहविः पाशेनाऽऽरभ इत्याह सत्यं वा ऋतꣳ सत्येनैवैनमृते-नाऽऽरभे ।**

என்பது.

உரை.

'ருதஸ்ய' என்றது முதலியது, சத்தியபயனையுடையதால் சத்தியமாகிய எக்ஞத்தின் பொருட்டுப் பசுவைக் கட்டுகின்றான் என்கின்றது.

---

பசுவைக்கட்டும் முறையை விதிக்கின்றது.

பிராமணம்—11

**अक्ष्णया परि हरति वध्यं᳚ हि प्रत्यञ्चं प्रतिमुञ्चन्ति व्यावृत्त्यै ।**

என்பது.

உரை.

"*அக்ஷ்ண்யா*" என்றது முதலியது, புலாலுண்போர் ஆட்டுக்கடாவை தமக்கெதிரில் நிற்கவைத்து கழுத்திற் கட்டுகின்றனர். அத்தகையகட்டு கூடா தென்பதற்கு வலதுகாலையுந் தலையையுஞ் சேர்த்துக் கோணலாகக் கட்டுதல் வேண்டும் என்கின்றது.

---

யூபத்திற் கட்டுவதை விதிக்கின்றது.

பிராமணம்—12

**धर्षा मानुषानिनियुनक्ति धृत्यै ।**

என்பது.

உரை.

யூபத்தில் இடையின்றிக் கட்டல்வேண்டும். அதாவது தளர்வின்றிக் கட்டுதலாம் இது ஓடிவிடாதிருத்தற் பொருட்டென்பது.

---

அருந்திய நீராலும், கோடிசெடிகளாலும் பசு உண்டானதாமாதலின், அவ்விரண்டாலும் பசுவைத் தெளித்தல் பொருத்தம் என்கின்றது.

பிராமணம்—13

**अद्भ्यस्त्वौषधीभ्यः प्रोक्षामीत्याहाद्भ्यो ह्येष ओषधीभ्यस्सम्भवति यत्पशुः ।**

என்பது.

உரை.

குடித்த தண்ணீராலும், அருந்திய புல்லாலும் பசு உண்டானதாமாதலின் இவ்வாறு செய்கின்றதென்கின்றது.

---

பசு உபாகரணம்)

'பேருঃ' என்னுஞ்சொல், குடித்தல் என்னும் பொருளையுடையதென்கின்றது.

பிராமணம்—14

**अपां पेरुरसीत्याहैष ह्यपां पाता यो मेधायाऽऽरभ्यते ।**

என்பது.

உரை.

'ஆபாம் பேருঃ' என்றது முதலியது, கொல்லவேண்டிய பசு, இதற்கு மேல் தண்ணீர்குடித்தல் இல்லாததால் இப்போதே தண்ணீரை அருந்தச் செய்கின்றான் என்கின்றது. இது, பசுஇன்சுவை யுடையதாதற் பொருட்டென்பதாம்.

---

இம்மந்திரத்தால் இன்சுவை யுடையதாகின்றது என்று கூறுகின்றது.

பிராமணம்—15

**स्वात्तं चित्सदेवꣳ हव्यमापो देवीस्स्वदतैनमित्याह स्वदयत्येवैनम् ।**

என்பது.

உரை.

"ஸ்வாத்தம்சித்" என்றது முதலியது, தண்ணீர் மாதா இன்சுவை வடிவினள் ஆதலின் இதையும் இன்சுவையுடையதாகச் செய்வாள் என்கின்றது.

---

மூன்று மந்திரங்களால் தண்ணீரநுட்டானமென விதிக்கின்றது.

பிராமணம்—16

**उपरिष्टात्प्रोक्षत्युपरिष्टादेवैनं मेध्यं करोति पाययत्यन्तरत एवैनं मेध्यं करोत्यधस्तादुपोक्षति सर्वत एवैनं मेध्यं करोति ।**

என்பது.

உரை.

மேலே தெளித்தல், உள்ளே குடிக்கவைத்தல், கீழே தெளித்தல் முழுதுந் தெளித்தல் என்னும் மூன்றாலும், மேல், உள், கீழெங்கும் இப்பசுவைப் புனிதப் படுத்துகின்றான் என்பது.

ஆறுவது அநுவாகம்

முற்றிற்று.

---

## ஆறுங்காண்டம் மூன்றும் பிரபாடகம்

### ஏழாவது அநுவாகம்

*சாமிதேனி மந்திரத்தை கூறும் பிராமணங்கள்.*

ஐந்து பஞ்சாதிக்கு மேல் பதினெட்டுப் பதங்களைக் கொண்டது.

अग्निना वै होत्रा देवा असुरानभ्यभवन्नग्नये समिध्यमानायानु ब्रूहीत्याह भ्रातृव्याभिभूत्यै सप्तदश सामिधेनीरन्वाह सप्तदशः प्रजापतिः प्रजापतेराप्त्यै सप्तदशान्वाह द्वादश मासाः पञ्चर्तवस्स संवत्सरस्संवत्सरं प्रजा अनु प्रजायन्ते प्रजानां प्रजननाय देवा वै सामिधेनीरनूच्य यज्ञं नान्वपश्यन्त्स प्रजापतिस्तूष्णीमाघारम् [३६] आऽघारयत्ततो वै देवा यज्ञमन्वपश्यन् यत्तूष्णीमाघारमाघारयति यज्ञस्यानुख्यात्या असुरेषु वै यज्ञ आसीत्तं देवास्तूष्णीꣳ होमेनावृञ्जत यत्तूष्णीमाघारमाघारयति भ्रातृव्यस्यैव तद्यज्ञं वृङ्क्ते परिधीन्त्सं मार्ष्टि पुनात्येवैनान्त्रिस्त्रिस्सं मार्ष्टि त्र्यावृद्धि यज्ञोऽथो रक्षसामपहत्यै द्वादश संपद्यन्ते द्वादश [३७] मासास्संवत्सररस्संवत्सरमेव प्रीणात्यथो संवत्सरमेवास्मा उप दधाति सुवर्गस्य लोकस्य समष्ट्यै शिरो वा एतद्यज्ञस्य यदाघारोऽग्निः सर्वा देवता यदाघारमाघारयति शीर्षत एव यज्ञस्य यजमानस्सर्वा देवता अव रुन्धे शिरो वा एतद्यज्ञस्य यदाघार आत्मा पशुराघारमाघार्य पशुꣳ समनक्त्यात्मन्नेव यज्ञस्य [३८] शिरः प्रति दधाति सं ते प्राणो वायुना गच्छतामित्याह वायुदेवत्यो वै प्राणो वायावेवास्य प्राणं जुहोति सं यजत्रैरङ्गानि सं यज्ञपतिराशिषेत्याह यज्ञपतिमेवास्याऽऽशिषं गमयति विश्वरूपो वै त्वाष्ट्र

उपरिष्टात्पशुमभ्यंवमीत्तस्मादुपरिष्टात्पशोर्नाव द्यन्ति यदुपरिष्टा-
त्पशुꣳ समनक्ति मेध्यमेव [३९] एनं करोत्यृत्विजो वृणीते
छन्दाꣳस्येव वृणीते सप्त वृणीते सप्त ग्राम्याः पशवस्सप्ताऽऽरण्या
स्सप्त छन्दाꣳस्युभयस्यावरुद्ध्या एकादश प्रयाजान् यजति दश वै
पशोः प्राणा आत्मैकादशो यावानेव पशुस्तं प्रयजति वपामेकः
परि शय आत्मैवाऽऽत्मानं परि शये वज्रो वै स्वधितिर्वज्रो
यूपशकलो घृतं खलु वै देवा वज्रं कृत्वा सोममघ्नन्घृतेनाक्तौ
पशुं त्रायेथामित्याह वज्रेणैवैनं वशे कृत्वाऽऽलभते [४०] ॥
आधारं पद्यन्ते द्वादशाऽऽत्मन्नेव यज्ञस्य मेध्यमेव खलु वा
अष्टादश च ॥ ७ ॥

இதில், சாமிதேனி (சமத்துகளை வைக்கு மந்திரம்) முதலியன கூறப் படுகின்றன.

---

ஹோதாவிற்கு, அத்வரியு செய்ய வேண்டிய பிரேஷையைத் தோற்றுவிக் கின்றது.

பிராமணம்—1

अग्निना वै होत्रा देवा असुरानभ्यभवन्नग्नये समिध्यमानायानु ब्रूहीत्याह भ्रातृव्याभिभूत्यै ।

என்பது.

உரை.

ஹோதாவாகிய அக்கினியால் தேவர்கள் அசுரர்களை வென்றனர் ஆத லின், "அக்கினி வளர்ப்பதற்கு அநுப்ரூஹி" என்றது, பகைவரை அடக்கு தற் பொருட்டு என்கின்றது. இதனால், அக்கினி வளரில் பகையை ஒழிக்கு மென்பது கொள்ளக்கிடக்கின்றது என்பது.

---

அக்கினியை வளர்த்தற் பொருட்டு ஹோதாவாற் சொல்லப்படும் இருக்கு மந்திரங்களின் விதியால் வந்த பதினைந்து என்னும் எண்ணை விலக்கிவிட்டு சமித்துக்கள் பதினேழு என்கின்றது.

பிராமணம்—2

**सप्तदश सामिधेनीरन्वाह सप्तदशः प्रजापतिः प्रजापतेराप्त्यै ।**

என்பது.

உரை.

*பதினேழு என்பது பதினேழுவகை யாதலின் பிரசாபதியாம் ஆதலின் அத்தகைய பிரசாபதியை அடைதற் பொருட்டாம் என்கின்றது. இத, "ஆஶ்ராவிய) என்பது முதலிய பதினேழு எழுத்துக்களாற் பெறப்பட்ட தென்பதை யுணர்க என்பது.*

---

அவ்விதியையே எடுத்துக்கொண்டு புகழ்கின்றது.

பிராமணம்—3

**सप्तदशान्वाह द्वादश मासाः पञ्चर्तवस्स संवत्सरस्संवत्सरं प्रजा अनु प्रजायन्ते प्रजानां प्रजननाय ।**

என்பது.

உரை.

*"சப்த தசாந்வாஹ" என்றது, பண்ணிரண்டு மாதங்கள் இருதுக்கள் ஐந்து என்பன பதினேழாம். இது வருடமெனப்படுகின்றது. வருடம் வரை குழந்தை வயிற்றிலிருந்து பிறக்கின்றது ஆதலின் இது பிரசைகள் உண்டாதற் பொருட்டாம் என்கின்றது. ஈண்டு, பனிக்காலம் குளிர்காலத்தையுமொன்று படுத்திக்கொண்டு இருதுக்கள் ஐந்தெனப்பட்டன என்பது.*

---

மந்திரமின்றி, முதலில் ஆகாரஹோமஞ் செய்வதை விதிக்கின்றது.

பிராமணம்—4

**देवा वै सामिधेनीरनूच्य यज्ञं नान्वपश्यन्त्स प्रजापतिस्तूष्णीमाघार माऽघारयत्ततो वै देवा यज्ञमन्वपश्यन् यत्तूष्णीमाघारमाघारयति यज्ञस्यानुख्यात्यै ।**

என்பது.

சமித்து மந்திரம்)

உரை.

தேவர்கள், பல்வகை நியமங்களுடன் கூடிய சாமிதேனியைக் கூறுவதில் மதிமயங்கினவர்களாய் பின் செய்யப்படும் எக்ஞத்தை மறந்து விட்டனர். அதன் பிறகும், மந்திரமின்டு ஆகார ஹோமஞ் செய்து புத்தியின் மயக்கத்தைப் போக்கினர். ஆதலின், இது, எக்ஞத்தை இனிது உணர்ந்து கொள்ளுதற் பொருட்டாம் என்பது.

---

அவ்விதியையே எடுத்துக்கொண்டு புகழ்கின்றது.

பிராமணம்—5

**असुरेषु वै यज्ञ आसीत्तं देवास्तूष्णीं होमेनावृञ्जत यत्तूष्णीमाघारमाघारयति भ्रातृव्यस्यैव तद्यज्ञं वृङ्क्ते ।**

என்பது.

உரை

தேவர்கள் செய்வதை மறைந்திருந்து பார்த்துக்கொண்டு அசுரர்ளும் எக்ஞத்தைச் செய்துகொண்டு வந்தனர். அதைக்கண்ட அசுரர்கள், எல்லா எக்ஞங்களையும் மந்திரமின்றிச் செய்தனர் ஆதலின் அசுரர்களுடைய எக்ஞம் ஒழிந்தன. ஆதலின், இவ்வாகார ஹோமம் பகைவரின் எக்ஞத்தைக் கெடுத்தற் பொருட்டாம் என்பது.

---

பரிதிகளுக்கு, தனித்தனியே மீண்டும் மீண்டுந் துடைப்பதை விதிக்கின்றது

பிராமணம்—6

**परिधीन्सं मार्ष्टि पुनात्येवैनान्त्रिस्त्रिस्सं मार्ष्टि त्र्यावृद्धि यज्ञोऽथो रक्षसामपहत्यै द्वादश संपद्यन्ते द्वादश मासास्संवत्सरस्संवत्सरमेव प्रीणात्यथो संवत्सरमेवास्मा उप दधाति सुवर्गस्य लोकस्य समष्ट्यै ।**

என்பது.

உரை.

பரிதிகளை அதாவது அக்கினிக்குப் பக்கங்களிற் போட்டுள்ள விறகு கட்டைகளை மூன்று முறை துடைத்து அதிலுள்ள தூசுமுதலியவைகளைப் போக்கிப் புநிதமாக்குகின்முன். இவ்வாறு துடைத்தலும் ஒவ்வொன்றிலும் மும்முறை துடைத்தல் வேண்டும்; இதனால் அசுரர் விலகுகின்றனர். மற்றும், அக்கினிக்கு மூன்று முறை துடைத்தல் கூறப்படாவிடினும் அவற்றையும் கொள்ளில் பன்னிரண்டு முறைகளாகின்றன. ஆகவே பன்னிரண்டு

மாதங்களைக் கொண்டதாம் அதனால் இவனுக்கு வருடத்தைக் கொடுக்கின்றது. இது, சுவர்க்கலோகத்தை அடைதற்பொருட்டு எசமானனை அருகில் கொண்டு வருகின்றது என்பது.

---

முன், சுருவத்தால் ஆகாரஹோமம் விதிக்கப்பட்டது. இப்போது, சுருக்கால் ஆகார ஹோமம் விதிக்கப்படுகின்றது.

பிராமணம் —7

**शिरो वा एतद्यज्ञस्य यदाघारोऽग्निस्सर्वा देवता यदाघारमाघारयति शीर्षत एव यज्ञस्य यजमानस्सर्वा देवता अव रुन्धे ।**

என்பது.

உரை.

ஆகாரஹோமம் எக்ஞத்திற்குத் தலையாம். அது செய்யப்படும் அக்கினியின் எல்லாத் தேவதைகளின் வடிவாம். ஆதலின், எக்ஞத்தின் தலையால், எசமானன் எல்லாத்தேவதையுகளையு மடைகின்றான் என்பது.

---

ஆகார ஹோமம்பண்ணி மீந்த நெய்யை ஆட்டுக்கடாவின்மேல் தடவல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—8

**शिरो वा एतद्यज्ञस्य यदाघार आत्मा पशुराघारमाघार्य पशुं समनक्त्या-त्मन्नेव यज्ञस्य शिरः प्रति दधाति ।**

என்பது.

உரை.

ஆகார ஹோமம் எக்ஞத்தின் தலையாம். பசு, ஆன்மாவாம். அதாவது கழுத்திற்குக் கீழுள்ள உடம்பாம். பசுவிற்கு நெய்தடவுதலால் உடம்பை யுண்டாக்கி அதன் மீது தலையை வைத்ததுபோலாகின்றது என்பது.

---

பசுவின் பிராணன் வாயுவுடன் சேர்தல் பொருந்துமென்கின்றது.

பிராமணம்—9

**सं ते प्राणो वायुना गच्छतामित्याह वायुदेवत्यो वै प्राणो वायवेवास्य प्राणं जुहोति ।**

என்பது.

சமித்து மந்திரம்)

உரை.

"சந்தே" என்றது முதலியது, பிராணன் வாயு தேவதையை யுடையதாமாதலின் பிராணனை வாயுவினிடத்தில் ஹோமஞ் செய்கின்றான் என்கின்றது.

---

இவ்வேக்ஞபயனை, எசமானன் அடைகின்றான் என்னும் பொருளை வேறொரு மந்திரத்திலும் உள்ள தென்றுவிளக்குகின்றது.

பிராமணம்—10

**सं यजत्रैरङ्गानि सं यज्ञपतिराशिषेत्याह यज्ञपतिमेवाऽस्याऽऽशिषं गमयति।**

என்பது.

உரை.

"சம்யஜத்ரை:" என்றது முதலியது, இவ்வாசிர்வாதமானது எசமானனைப் பயனுடன் கூடும்படி செய்கின்றது என்கின்றது.

---

இப்போது, தோள், கொண்டை முதலானவிடங்களில் நெய்தடவுவதை விதிக்கின்றது. அல்லது, முன் விதியை எடுத்துக்கொண்டு புகழ்கின்றது.

பிராமணம்—11

**विश्वरूपो वै त्वाष्ट्र उपरिष्टात्पशुमभ्यवमीत्तस्मादुपरिष्टात्पशोर्नाव द्यन्ति यदुपरिष्टात्पशुꣳ समनक्ति मेध्यमेव एनं करोति।**

என்பது.

உரை.

துவஷ்டாவின் புதல்வனாகிய விசுவரூபன், பசுவின் பின்புறத்தில் வாந்திபண்ணிவிட்டான். ஆதலின், எக்ஞஞ் செய்கின்றவர்கள் பசுவின் இருதய முதலியவைகளின் மேற்பாகங்களை அறுத்துக்கொள்ளமாட்டார்கள். ஆகையால், அப்பாகங்களை நெய்தடவிப் புநிதஞ்செய்கின்றான் என்பது.

---

இருத்துவிக்குகளை அழைப்பதை விதிக்கின்றது.

பிராமணம்—12

**ऋत्विजो वृणीते छन्दाꣳस्येव वृणीते।**

என்பது.

உரை.

இருத்துவிக்குக்களை அழைத்தல், எண் ஒப்புமையால் சந்தங்களை அழைத்ததாகின்றது என்பது.

---

ஏழென விதிக்கின்றது.

பிராமணம்—13

**सप्त वृणीते सप्त ग्राम्याः पशवस्सप्ताऽऽरण्यास्सप्त छन्दाꣳस्युभयस्यावरुद्ध्यै ।**

என்பது.

உரை.

ஏழுபேர்களை யழைக்கின்றான். கிராமத்திலுள்ள பசுக்கள் ஏழாகின்றன. ஏழு ஆரணியத்திலுள்ள பசுக்களாகின்றன. இது சந்தங்களால் இரண்டையும் அடைதற்பொருட்டு என்பது.

---

விதிவாக்கியத்தால் வந்த, பிரயாசங்களுக்கு எண்ணிக்கையை விதிக்கின்றது

பிராமணம்—14

**एकादश प्रयाजान् यजति दश वै पशोः प्राणा आत्मैकादशो यावानेव पशुस्तं प्रयजति ।**

என்பது.

உரை.

மேலுங்கீழுமுள்ள பிராணன்களுடைய துளைகள் ஒன்பது, நாபியில் ஒன்று, உடம்பு ஒன்று ஆக பதினொன்றாதலின், பதினொரு பிரயாசைகள் செய்வதால் முழுப்பசுவையும் நன்கு யாகஞ்செய்ததாகின்றது என்பது.

---

முடிவிற் செய்யும் பிரயாசை யாகத்திற்கு வேறு காலத்தை விதிக்கின்றது.

பிராமணம்—15

**वपामेकः परि शय आत्मैवाऽऽत्मानं परि शये ।**

என்பது.

உரை.

வபையும், ஈற்றிற் செய்யும் பிரயாசையும் உடம்பாமாதலின், வபா ஹோமத்திற்கருகில் இருக்கும்போது முடிவுப்பிரயாசை யாகஞ் செய்தல் வேண்டும் என்பது.

---

சுவரு, கத்தி, நெய் என்பவைகளின் உபயோகத்தை விளக்குகின்றது.

பிராமணம்—16

**वज्रो वै स्वधितिर्वज्रो यूपशकलो घृतं खलु वै देवा वज्रं कृत्वा सोममघ्नन्घृतेनाक्तौ पशुं त्रायेथामित्याह वज्रेणैवैनं वशे कृत्वाऽऽलभते ॥**

என்பது.

உரை.

கத்தியும் வச்சிரமாம், யூபத்தின் சிராவாகிய சுவரும் வச்சிரமாம், தேவர்கள், நெய்யையே வச்சிரமாக்கி அசுரர்களைக் கொன்றதால், நெய்யும் வச்சிரமாம் இம்மூவகை வச்சிரங்களாலும் பசுவை வசப்படுத்திக் கொல்லச் செய்கின்றான் என்பது.

ஏழாம் அநுவாகம்
முற்றிற்று.

---

## ஆறுங்காண்டம் மூன்றும் பிரபாடகம்

எட்டாவது அநுவாகம்

பசுவைக் கொல்வதைக் கூறும் பிராமணங்கள்.

மூன்று பஞ்சாதிக்குமேல் முப்பத்தேழு பதங்களைக் கொண்டது.

**पर्यग्नि करोति सर्वहुतमेवैनं करोत्यस्कन्दायास्कन्नꣳ हि तद्यद्धुतस्य स्कन्दति त्रिः पर्यग्नि करोति त्र्यावृद्धि यज्ञोऽथो रक्षसामपहत्यै ब्रह्मवादिनो वदन्त्यन्वारभ्यꣳ पशू३र्नान्वारभ्या३ इति मृत्यवे वा एष नीयते यत्पशुस्तं यदन्वारभेत प्रमायुको यजमानस्स्यादथो खल्वाहुस्सुवर्गाय वा एष लोकाय नीयते यत् [४१] पशुरिति यन्नान्वारभेत सुवर्गाल्लोकाद्यजमानो हीयेत वपाश्रपणी**

भ्यामन्वारंभते तन्नेवान्वारब्धं नेवानन्वारब्धमुप प्रेष्य होतर्हव्या देवेभ्य इत्याहेषितꣳ हि कर्म क्रियते रेवतीर्यज्ञपतिं प्रियधाऽऽ विशतेत्याह यथायजुरेवैतदाग्निना पुरस्तादेति रक्षसामपहत्यै पृथिव्यास्संपृचः पाहीति बर्हिः [४२] उपास्यत्यस्कन्दायास्कन्नꣳ हि तद्यद्बर्हिषि स्कन्दत्यथो बर्हिषदमेवैनं करोति पराङा वर्ततेऽ-ध्वर्युः पशोस्संज्ञप्यमानात्पशुभ्य एव तन्निह्नुत आत्मनोऽनात्र-स्काय गच्छति श्रियं प्रपशूनाप्नोति य एवं वेद पश्चाल्लोका वा एषा प्राच्युदानीयते यत्पत्नी नमस्त आतानेत्याहाऽऽदित्यस्य वै रश्मयः [४३] आतानास्तेभ्य एव नमस्करोत्यनर्वा प्रेहीत्याह भ्रातृव्यो वा अर्वा भ्रातृव्यापनुत्यै घृतस्य कुल्यामनु सह प्रजया सह रायस्पोषेणेत्याहाऽऽशिषमेवैतामा शास्त आपो देवीश्शुद्धायुव इत्याह यथायजुरेवैतत् [४४] ॥ लोकाय नीयते यद्बर्हीं रश्मय स्सप्तत्रिꣳशच्च ॥ ८ ॥

*இதில் பசுவைக் கொல்லும் முறை கூறப்படுகின்றது.*

---

கொள்ளி சுற்றுவதை விதிக்கின்றது.

பிராமணம்—1

**पर्यग्नि करोति सर्वहुतमेवैनं करोत्यस्कन्दायास्कन्नꣳ हि तद्यद्धुतस्य स्कन्दति।**

என்பது.

உரை.

*பசுவைக் கொள்ளியாற் சுற்றுகின்றான். இதனால், இப்பசுமுழுதும் ஹோமமாகும்படி செய்கின்றான். இது, ஹோமஞ்செய்வது தெறித்து வெளியில் விழுந்து விடாதபடி யிருத்தற்பொருட்டு என்பது.*

---

மீண்டும் மீண்டுஞ் சுற்றல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—2

**त्रिः पर्यग्नि करोति त्र्यावृद्धि यज्ञोऽथो रक्षसामपहत्यै ।**

என்பது.

உரை.

மும்முறை சுற்றுகின்றான் எக்ஞம் மூன்று சுற்றுக்களையுடையதாம். இது, இராக்கதர்களை நீக்குதற்பொருட்டாம் என்பது.

---

பசுவைக் கொண்டுபோம்போது, தொடும் விஷயமாய் ஆராச்சி செய்யத் தொடங்குகின்றது.

பிராமணம்—3

**ब्रह्मवादिनो वदन्त्यन्वारभ्यः पशू३र्नान्वारभ्या३ इति ।**

என்பது.

உரை.

பசுவைக் கொல்வதற்குக் கொண்டுபோம்போது தொடுதல் கூடுமா? கூடாதா? என்று பிரமவாதிகள் ஆசங்கிக்கின்றனர் என்பது.

---

முதலாம் பக்ஷத்தில் குற்றங்கூறுகின்றது

பிராமணம்—4

**मृत्यवे वा एष नीयते यत्पशुस्तं यदन्वारभेत प्रमायुको यजमानस्स्यात् ।**

என்பது

உரை.

கொல்லுதற் பொருட்டு பசுவைக் கொண்டுபோம்போது தொடில் எசமானன் ஆயுள் முடிந்தவனாவன் என்பது.

---

இரண்டாம் பக்ஷத்தில் குற்றத்தைக் கூறுகின்றது.

பிராமணம்—5

**अथो खल्वाहुस्सुवर्गाय वा एष लोकाय नीयते यत्पशुरिति यन्नान्वारभेत सुवर्गाल्लोकाद्यजमानो हीयेत ।**

என்பது.

உரை.

சுவர்க்க மடைவித்தற் பொருட்டு இக்கடா கொண்டு செல்லும்போது தொடுதல் என்பதால், கொண்டுபோம்போது தொடாவிடில் சுவர்க்கத்தி லிருந்து எசமானன் நழுகியவனுவன் என்பது.

---

இருவகைக் குற்றங்களும் நீங்குவதற்கு மூன்றுவது முறையை விதிக்கின்றது.

பிராமணம்—6

**वपाश्रपणीभ्यामन्वारभते तन्नेवान्वारब्धं नेवानन्वारब्धम् ।**

என்பது

உரை.

வபையை(இருதயத்திலுள்ள சவ்வை)க் காச்சுவதற்குரிய இரண்டு கொம்புகளால் ஆட்டுக்கடாவைத் தொட்டுக்கொண்டு சென்றல் தொட்டுக் கொண்டிருந்தும் தொடாதவனுகின்முன். ஆதலின் அக்குற்றங்களில்லை என்பது.

---

பிரேஷை மந்திரத்தைத் தோற்றுவிக்கின்றது.

பிராமணம்—7

**उप प्रेष्य होतर्हव्या देवेभ्य इत्याहेषितꣳ हि कर्म क्रियते ।**

என்பது.

உரை.

"உபப்ரேஷய" என்றது முதலியது, எசமானனல் ஏவப்பெற்ற காரி யம் இனிது முடிவு பெறுதலின் ஆட்டுக்கடாவைக் கொல்லுவோர்களை அதனருகில் வரும்படி ஏவுவாயாக என்கின்றது.

---

எசமானனும் அத்வரியும் பசுவைத் தொட்டுக்கொண்டு பின்செல்வதற் குரிய மந்திரத்தின் பொருள் வெளிப்படை என்கின்றது.

பிராமணம்—18.

**रेवतीर्यज्ञपतिं प्रियधाऽऽविशतेत्याह यथायजुरेवैतत् ।**

என்பது.

உரை.

"ரேவதீः" என்றது முதலியது, இது எசுர்மந்திரத்திலுள்ளவாறே பொருளையுடையது என்கின்றது.

---

அக்கினியைக் கொண்டுபோவதை விதிக்கின்றது.

பிராமணம்—9

**अग्निना पुरस्तादेति रक्षसामपहत्यै ।**

என்பது.

உரை.

ஆக்னீத்ரன் கொள்ளிநெருப்புடன் அதற்கு முன்னர்ச்செல்லல் வேண்டும். இது, அசுரர்களை நீக்குதற் பொருட்டாம் என்பது.

---

தருப்பை போடுவதை விதிக்கின்றது.

பிராமணம்—10

**पृथिव्यास्संपृचः पाहीति बर्हिरुपास्यत्यस्कन्दायास्कन्नं हि तद्यद्बर्हिषि स्कन्दत्यथो बर्हिषदमेवैनं करोति ।**

என்பது.

உரை.

"பிருதிவ்யாः" என்றது முதலியது, பசுவின் அவயவத்தின் இரேணுக்கள்சிதறி கீழே விழுந்தால் அதைத் தருப்பையின்மேல் விழும்படி செய்கின்றான் என்பது.

---

அத்வரியு திரும்பிப்பாராமல் வருவதை விதிக்கின்றது.

பிராமணம்—11

**पराङा वर्ततेऽध्वर्युः पशोस्संज्ञप्यमानात्पशुभ्य एव तन्निहुत आत्मनोऽनाव्रस्काय ।**

என்பது.

உரை.

வேட்போன் கொல்லப்படும் கடாவைப் பாராமல் திரும்பிவருதல், யான் பசுவைகொல்விக்கமாட்டேன் என்று எண்ணுமாறு கூறுதலாம் இதனால், தனக்கு குற்றமில்லாமையைத் தேடுகின்றான் என்பது.

---

இதை யுணர்ந்தவனைப் புகழ்கின்றது.

பிராமணம்—12

**गच्छति श्रियं प्रपशूनाप्नोति य एवं वेद ।**

என்பது.

உரை.

இவ்வாறுணர்ந்தவன், ஐசுவரியத்தையும் பசுக்களையும் அடைகின்றான் என்பது.

---

பத்தினி, இரவியை நோக்குவதை விதிக்கின்றது.

பிராமணம்—13

**पश्चाल्लोका वा एषा प्राच्युदानीयते यत्पत्नी नमस्त आतानेत्याहाऽऽदित्यस्य वै रश्मय आतानास्तेभ्य एव नमस्करोति ।**

என்பது.

உரை.

மேற்கிலுள்ள கொட்டகையிலிருக்கும் பத்தினியைக் கிழக்கில் அழைத்துக்கொண்டு வருகின்றான்; ஆதலின், "நகஸ்தஆதான" என்றது முதலியது, கிழக்கே செல்கின்றவளாதலின் நேரில்படும் சூரிய கிரணங்கட்கு வணக்கஞ் செய்கின்றாள் என்கின்றது

---

பத்தினியைப் போற்று மந்திரம், மட்குழியில் நீர்வவிடும் மந்திரம் இரண்டிற்கும் உரை கூறுகின்றது.

பிராமணம்—14

**अनर्वा प्रेहीत्याह भ्रातृव्यो वा अर्वा भ्रातृव्यापनुत्त्यै घृतस्य कुल्यामनु सह प्रजया सह रायस्पोषेणेत्याहाऽऽशिषमेवैतामा शास्त आपो देवीश्शुद्धायुव इत्याह यथायजुरेवैतत् ॥**

என்பது.

உரை.

அநர்வா, என்றது முதற்கொண்டு, ராயஸ் போஷேண, என்றது வரையுள்ளதால் பகையற்று புத்திரன் தனம் முதலியவைகளுடன் செல்வாயாக

*என்று ஆசிர்வாதஞ் செய்கின்றது. "ஆயோதேவீ:" என்றது முதலியது, ஈசுர்மந்திரத்தி லுள்ள பொருளையேயுடையது என்கின்றது.*

எட்டாவது அநுவாகம்
*முற்றிற்று.*

---

## ஆறுங்காண்டம் மூன்றும் பிரபாடகம்

### ஒன்பதாவது அநுவாகம்

*வபாஹோமத்தைக் கூறும் பிராமணங்கள்.*

ஐந்து பஞ்சாதிக்குமேல் நாற்பத்தாறு பதங்களை கொண்டது.

पशोर्वा आलब्धस्य प्राणाञ्छुग्गृच्छति वाक्त आप्यायतां
प्राणस्त आ प्यायतामित्याह प्राणेभ्य एवास्य शुचꣳ शमयति सा
प्राणेभ्योऽधि पृथिवीꣳ शुक्प्र विशति शमहोभ्यामिति नि नयत्य-
होरात्राभ्यामेव पृथिव्यै शुचꣳ शमयत्योषधे त्रायस्वैनꣳ स्वधिते
मैनꣳ हिꣳसीरित्याह वज्रो वै स्वधितिः [४५] शान्त्यै पार्श्वत
आ च्छ्यति मध्यतो हि मनुष्या आ च्छ्यन्ति तिरश्चीनमा
च्छ्यत्यनूचीनꣳ हि मनुष्या आच्छ्यन्ति व्यावृत्त्यै रक्षसां
भागोऽसीति स्थविमतो बर्हिरक्त्वाऽपास्यत्यस्नैव रक्षाꣳसि निरव
दयत इदमहꣳ रक्षोऽधमं तमो नयामि योऽस्मान्द्वेष्टि यं च वयं
द्विष्म इत्याह द्वौ वाव पुरुषौ यं चैव [४६] द्वेष्टि यश्चैनं द्वेष्टि
तावुभावधमं तमो नयतीषे त्वेति वपामुत्खिदतीच्छत इव ह्येष
यो यजते यदुपतृन्द्याद्रुद्रोऽस्य पशून्घातुकस्स्याद्यन्नोपतृन्द्यादयता
स्यादन्ययोपतृणत्त्यन्यया न धृत्यै घृतेन द्यावापृथिवी प्रोर्ण्वाथा
मित्याह द्यावापृथिवी एव रसेनानक्त्यच्छिन्नः [४७] रायस्सुवीर

इत्याह यथायजुरेवैतत्क्रूरमिव वा एतत्करोति यद्वपामुत्खिदत्युर्व-न्तरिक्षमन्विहीत्याह शान्त्यै प्रवा एषोऽस्माल्लोकाच्च्यवते यः पशुं मृत्यवे नीयमानमन्वारभते वपाश्रपणी पुनरन्वारभतेऽस्मिन्नेव लोके प्रति तिष्ठत्यग्निना पुरस्तादेति रक्षसामपहत्या अथो देवता एव हव्येन [४८] अन्वेति नान्तममङ्गारमति हरेद्यदन्तममङ्गार मतिहरेद्देवता अति मन्येत वायो वीहि स्तोकानामित्याह तस्मा-द्विभक्तास्स्तोका अव पद्यन्तेऽग्रं वा एतत्पशूनां यद्वपाऽग्रमोषधीनां बर्हिरग्रेणैवाग्रꣳ समर्धयत्यथो ओषधीष्वेव पशून्प्रतिष्ठापयति स्वाहाकृतीभ्यः प्रेष्येत्याह [४९] यज्ञस्य समिष्ट्यै प्राणापानौ वा एतौ पशूनां यत्पृषदाज्यमात्मा वपा पृषदाज्यमभिघार्य वपामभि धारयत्यात्मन्नेव पशूनां प्राणापानौ दधाति स्वाहोर्ध्वनभसं मारुतं गच्छतमित्याहोर्ध्वनभाह स वै मारुतो देवानां वपाश्रपणी प्रहरति तेनैवैने प्रहरति विषूची प्रहरति तस्माद्विष्वञ्चौ प्राणापानौ [५०] ॥ स्वधितिश्चैवाच्छिन्नो हव्येनेष्येत्याह षट्चत्वारिꣳशच्च

॥ ९ ॥

இதில், வபை என்னும், ஈரலிலுள்ள ஒருவகையான மெல்லிய சவ்வை ஹோமஞ்செய்யும் முறை கூறப்படுகின்றது.

---

கொல்வதால் துன்பம் உண்டாமென்பதைக் காட்டி, கொன்ற கடாவின் மீது நீர் தெளிக்கும் மந்திரத்திற்கு உரை கூறுகின்றது.

பிராமணம்—13

पशोर्वा आलब्धस्य प्राणाञ्छुगृच्छति वाक्त आप्यायतां प्राणस्त आ प्याय-तामित्याह प्राणेभ्य एवास्य शुचꣳ शमयति ।

என்பது.

வபாஹோமம்)

உரை.

கொல்லப்பட்ட பசுவின் உயிர்கள் துன்புற்றன. ஆதலின், "வாக்தே" என்றது முதலியது, பிராணன்களினின்று இதனுடைய துன்பத்தைத் தணிக்கின்றான் என்கின்றது.

---

சோகத்தால் பீடையுண்டாகாமையை விதிக்கின்றது.

பிராமணம்—2

**सा प्राणेभ्योऽधि पृथिवीꣳ शुक्प्र विशति शमहोंऽभ्यामिति नि नयत्यहो-
रात्राभ्यामेव पृथिव्यै शुचꣳ शमयति ।**

என்பது.

உரை.

பிராணன்களிலிருந்து நீக்கிய பீடை பூமியிற் புகுந்துகொண்டது. ஆதலின், பகலிரவுகட்கும், பூமிக்கும் அத்துன்பம் நீங்குமாறு பூமியில் நீர் ஊற்றப் படுகின்றது என்பது.

---

பசுவின்மேல் தருப்பையை வைத்து அவ்விடத்தில் அறுக்குதற்குரிய மந்திரத்தில் உள்ள 'கோல்லாதே' என்னுஞ் சொல்லுக்குக் கருத்து இதுவென விளக்குகின்றது.

பிராமணம்—3

**ओषधे त्रायस्वैनꣳ स्वधिते मैनꣳहिꣳसीरित्याह वज्रो वै स्वधितिश्शान्त्यै
पार्श्वत आ च्छ्यति मध्यतो हि मनुष्या आ च्छ्यन्ति तिरश्चीनमा
च्छ्यत्यनूचीनꣳ हि मनुष्या आच्छ्यन्ति व्यावृत्त्यै ।**

என்பது.

உரை.

தொப்பூழ்க்குத் தெற்காக அறுத்தல்வேண்டும். புலாலுண்ணும் மனிதர் நடுவில் அறுக்கின்றனர். குறுக்காய்க் கீறல்வேண்டும். உலகமனிதர் நீளத்திற் கீறுகின்றனர். இதனால் நடுவிலும் நீளமாயும் அறுத்தலிரண்டும் நீக்கப்பட்டன என்பது.

---

தருப்பையைப் போடுவதை விதிக்கின்றது.

பிராமணம்—4

**रक्षसां भागोऽसीति स्थविमतो बर्हिरक्त्वाऽपास्यत्यस्नैव रक्षाꣳसि निरवदयते ।**

என்பது.

உரை.

*"ரக்ஷஸாம்" என்றது முதலியது, தருப்பையின் அடித்துண்டில் இரத்தத்தைத் தோய்த்து எறியில் எல்லா அசுரர்களும் பாகங்கொடுத்து விலக்கப் பட்டனர் என்கின்றது.*

---

தருப்பையை மிதிக்கும் இரண்டாவது மந்திரத்திற்கு உரை கூறுகின்றது.

பிராமணம்—5

**इदमहꣳ रक्षोऽधमं तमो नयामि योऽस्मान्द्वेष्टि यं च वयं द्विष्म इत्याह द्वौ वाव पुरुषौ यं चैव द्वेष्टि यश्चैनं द्वेष्टि तावुभावधमं तमो नयति ।**

என்பது.

உரை.

*"இதமஹம்" என்றது முதலியது, தன்னை வெறுக்கின்றவன் தன்னால் வெறுக்கப் படுகின்றவன் என்னும் இருவகைப் பகைவர்களையும் தருப்பையை மிதித்தலால் பெருந்துன்பமடையும்படி கீழுகில் தள்ளுகின்றான் என்கின்றது.*

---

வபை எடுப்பதை விதிக்கின்றது.

பிராமணம்—6

**इषे त्वेति वपामुत्खिदतीच्छत इव ह्येष यो यजते ।**

என்பது

உரை.

*இதனால் வேள்விசெய்ய விரும்பி எடுக்கின்றான் என்பது.*

---

வடாஹோமம்)

இங்கு, ஏகசூலம் துவிசூலம் என்னும் முட்கிளைகளின் நுனிகளால் வபையைக் குத்தி வைத்தல்வேண்டுமோ? இல்லையா? என்னும் இரண்டு பக்ஷங்களையும் மனதில் உள்ளே வைத்துக்கொண்டு அவ்விரண்டிலும் குற்றங்களைக் கூறுகின்றது.

பிராமணம்—7

**यदुपतृन्द्याद्रुद्रोऽस्य पशून्घातुकस्स्याद्यन्नोपतृन्द्यादयता स्यात् ।**

என்பது.

உரை.

அக்கொம்புகளில் குத்திவைக்கில் இவனுடைய பசுக்களை உருத்திரன் கொல்லுவன்; குத்தாமல் வைக்கிலோ, கீழே விழுந்துவிடும் என்பது.

---

இருவகைக் குற்றங்களுஞ் சேராத மற்றொரு பக்ஷத்தை விதிக்கின்றது.

பிராமணம்—8

**अन्ययोपतृणत्त्यन्यया न धृत्यै ।**

என்பது.

உரை.

ஒருமுட்கிளையில் குத்திவைத்தல் வேண்டும். மற்றொரு கிளையால் குத்திவைத்தல் கூடாது. அங்ஙனமாகில், குத்தியுங் குத்தப்படாமையின் உருத்திரனுங் கொல்லமாட்டான் கீழேயும் விழாது என்பது.

---

வபை, சூலம் என்னுஞ் சொற்களைத் தவிர்த்து 'கிருதம்' என்றதற்கும், "த்யாவா பிருதிவீ' என்றதற்கும் கருத்தைக் கூறுகின்றது.

பிராமணம்—9

**घृतेन द्यावापृथिवी प्रोर्णुवाथामित्याह द्यावापृथिवी एव रसेनानक्ति ।**

என்பது

உரை.

கிருதம் (நெய்) என்றதால், வானையும், பூமியையும், இரசத்தால் நனைக்கின்றான் என்பது.

---

வபையை அறுக்கு மந்திரப் பொருள் வெளிப்படை என்கின்றது

பிராமணம்—10

**अच्छिन्नो रायस्सुवीर इत्याह यथायजुरेवैतत् ।**

என்பது

**உரை.**

"அச்சின்னः" என்றது முதலியது, எசுர்மந்திரத்திலுள்ள பொருளையே யுடையது என்கின்றது.

---

'உருவந்தரிக்ஷம்' என்பது முதலிய மந்திரம், சாந்தமாம்படி செய்கின்றது என்னும் பொருளையே விளக்குகின்றது.

பிராமணம்—11

**क्रूरमिव वा एतत्करोति यद्वपामुत्खिदत्युर्वन्तरिक्षमन्विहीत्याह शान्त्यै ।**

என்பது.

**உரை.**

வபையை அறுத்து எடுத்தலால் அதற்குக் கோபம் உண்டாகின்றது அதைச் சாந்திசெய்தற்பொருட்டு, "உருவந்தரிட்சம்" என்றது முதலியது, ஆகவனீய தேசஞ்செல்வாயாக என்று கூறுகின்றது என்பது.

---

வபாசிரபணி என்னும் முட்கிளைகளைத் தொடல்வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—12

**प्रवा एषोऽस्माल्लोकाच्च्यवते यः पशुं मृत्यवे नीयमानमन्वारभते वपाश्रपणी पुनरन्वारभतेऽस्मिन्नेव लोके प्रतितिष्ठति ।**

என்பது.

**உரை.**

பசுவைக் கொண்டுபோம் போதுந்தொட்டுக்கொண்டு போனன். ஆதலின் இப்போதும் அதைத் தொட்டுக்கொண்டுவரல் வேண்டும். அவ்வாறு வந்தரால் இவ்வுலகில் பெருமையை யடைகின்ருன் என்கின்றது.

---

பசுவைப்போல், வபைக்கு முன் அக்கினியைக் கொண்டுவரல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—13

**अग्निना पुरस्तादेति रक्षसामपहत्या अथो देवता एव हव्येनान्वेति ।**

என்பது.

உரை.

அக்கினியை முன்னே கொண்டுவருவதால் அசுரர்கள் விலகுகின்றனர். மற்றும், அக்கினி எல்லாத் தேவதைகளின் வடிவமாதலால் எல்லாத் தேவதைகட்கும் முன்வந்தது மாகின்றது என்கின்றது.

---

எதிர்மறையால் ஆகவனீயத்திற்கு வடக்கிலும் பக்கங்களிலுமுள்ள அக்கினிகளில் வபையைக் காய்ச்சல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—14

**नान्तममङ्गारमति हरेद्यदन्तममङ्गारमतिहरेद्देवता अति मन्येत ।**

என்பது.

உரை.

ஆகவனீயத்தின் ஓரமாக பக்கங்களிலுள்ள அக்கினிகளிற் காச்சுதல் வேண்டும். அதாவது ஆகவனீத்தீயின் ஓரத்திற் காய்ச்சாவிடில் அக்கினியானது தேவதையாமாதலின் தேவதையையே தள்ளிவிட்டதாகும். ஆதலின், ஆகவனீயத் தீயின் ஓரத்திலேயே வபையைக் காய்ச்சல்வேண்டும் என்பது.

---

மந்திரத்தில் உள்ள "வீஹி" என்னுஞ் சொல்லில், 'வி' என்பதன் பொருளை விளக்குகின்றது.

பிராமணம்—15

**वायो वीहि स्तोकानामित्याह तस्माद्विभक्तास्स्तोका अव पद्यन्ते ।**

என்பது.

உரை.

"வாயோ" என்றது முதலியது, நெய்த் துளிகள் பல்வேறு வகைகளாய்ப் பிரிந்து கீழே விழுகின்றன என்கின்றது

---

வபைக்குக் கீழே தருப்பை நுனியைப் போடல் வேண்டுமென்னும் விதியை அர்த்தவாதத்தால் அறிவுறுத்துகின்றது.

பிராமணம்—16

**अग्रं वा एतत्पशूनां यद्वपाऽग्रमोषधीनां बर्हिरग्रेणैवाग्रꣳ समर्धयत्यथो ओषधीष्वेव पशून्प्रतिष्ठापयति ।**

என்பது.

உரை.

பசுவிற்கு நுனி (சிறந்தது) வபையாம், கொடிசெடிகட்கு நுனி சோமமாம். ஆதலின், நுனியுடன் நுனிகூடில் சம்பத்துண்டாகின்றது. ஆதலால், வபைக்குக் கீழே தருப்பை நுனியைப் போடல் வேண்டுமென்பதாம்.

---

இனி, அந்திமப் பிரயாசை யாகத்தின் பொருட்டு மைத்திரா வருணனை அத்வரியு ஏவவேண்டிய பிரேஷை மந்திரத்தைத் தோற்றுவிக்கின்றது.

பிராமணம்—17

**स्वाहाकृतीभ्यः प्रेष्येत्याह यज्ञस्य समिष्ट्यै ।**

என்பது

உரை.

'சுவாஹா' என்னுஞ் சொல்மிகுதியாகப் பிரயோகிக்கப்படும் அந்திமப்பிரயாசையின் பொருட்டு, மைத்திராவருண! நீ ஹோதாவை ஏவுவாயாக மைத்திராவருணன் "ஹோதாயக்ஷதக்கினிம்" என்றது முதலியதால் ஹோதாவை ஏவுகின்றான். ஹோதா, "ஸத்யோஜாதः" என்றது முதலிய யாஜ்யா வாக்கியத்தை ஓதுகின்றான். பிறகு, அத்வரியு அந்தியப் பிரயாசையாகத்தைச் செய்கின்றான். இவ்வாற்றால் இப்பிரேஷை, எக்ஞம் இனிது நடப்பதன் பொருட்டாம் என்கின்றது. அந்திமம் = கடைசி.

---

பிரயாசை யாகத்தின் சேடத்தால், அவியின் அபிகாரத்தை விதிக்கின்றது.

பிராமணம்—18

**प्राणापानौ वा एतौ पशूनां यत्पृषदाज्यमात्मा वपा पृषदाज्यमभिघार्य वपामभि घारयत्यात्मन्नेव पशूनां प्राणापानौ दधाति ।**

என்பது.

உரை.

பிருஷதாச்சிய மென்னும் தயிர்கலந்த நெய், பசுக்களின் பிராண அபா னன்களாம். ஆதலின் அபிகாரஞ் செய்வதால் வபையாகின்ற பசுவின் ஆன்மா வில் பிருஷதாச்சியமாகின்ற பிராணபானன்களை நிறுவுகின்றான் என்பது.

---

முட்கிளைகள் மருத்புத்திரனை யடையில் உள்ள உபயோகத்தை விளக்குகின்றது.

பிராமணம்—19

**स्वाहोर्ध्वनभसं मारुतं गच्छतमित्याहोर्ध्वनभाह स वै मारुतो देवानां वपा-श्रपणी प्रहरति तेनैवैने प्रहरति ।**

என்பது.

உரை.

'சுவாஹா' என்றது முதலியது, "ஊர்த்துவநபம்" என்னும் வாயுவே தேவர்களுடைய வபாசிரபணி யென்னும் முட்கிளைகளை எரிப்பதாம். ஆத லின், அதனாலேயே முட்கிளைகள் எரிக்கப் பட்டதாகின்றன என்கின்றது என்பது.

---

முட்கிளைகளின் நுனிகள் கிழக்கு மேற்காய் மாறியிருத்தல் வேண்டு மென்று விதிக்கின்றது.

பிராமணம்—20

**विषूची प्रहरति तस्माद्विष्वञ्चौ प्राणापानौ ।**

என்பது.

உரை.

பிராணன் அபானன் என்னுமிரண்டும் மேல்நோக்கும் கீழ்நோக்குமாக இருக்கின்றன. ஏனெனின்? முட்கிளைகளை நுனிகள் மாறியிருக்கும்படி அக் கினியிற் போட்டுவிட்டதாலென்பது.

ஒன்பதாவது அநுவாகம்

*முற்றிற்று.*

---

## ஆறுங்காண்டம் மூன்றும் பிரபாடகம்

### பத்தாவது அநுவாகம்

*அங்க ஹோமங்களைக் கூறும் பிராமணங்கள்.*

ஐந்து பஞ்சாதிக்குமேல் நாற்பத்தைந்து பதங்களைக் கொண்டது.

पशुमालभ्य पुरोडाशं निर्वपति समेधमेवैनमा लभते वपया प्रचर्य पुरोडाशेन प्रचरत्यूर्ग्वै पुरोडाश ऊर्जमेव पशूनां मध्यतो दधात्यथो पशोरेव छिद्रमपि दधाति पृषदाज्यस्योपहत्य त्रिः पृच्छति शृतꣳहवी३श्शमितरिति त्रिषत्या हि देवा योऽशृतꣳ शृतमाह स एनसा प्राणापानौ वा एतौ पशूनाम् [५१] यत्पृषदाज्यं पशोः खलु वा आलब्धस्य हृदयमात्माऽभि समेति यत्पृषदाज्येन हृदयमभिघारयत्यात्मन्नेव पशूनां प्राणापानौ दधाति पशुना वै देवास्सुवर्गं लोकमायन्तेऽमन्यन्त मनुष्या नोऽन्वाभविष्यन्तीति तस्य शिरश्छित्त्वा मेधं प्राक्षारयन्त्स प्रक्षोऽभवत्तत्प्रक्षस्य प्रक्षत्वं यत्प्लक्षशाखोत्तरबर्हिर्भवति समेधस्यैव [५२] पशोरव द्यति पशुं वै ह्रियमाणꣳ रक्षाꣳस्यनु सचन्तेऽन्तरा यूपं चाऽऽहवनीयं च हरति रक्षसामपहत्यै पशोर्वा आलब्धस्य मनोऽप क्रामति मनोतायै हविषोऽवदीयमानस्यानु ब्रूहीत्याह मन एवास्याव रुन्ध एकादशावदानान्यव द्यति दश वै पशोः प्राणा आत्मैकादशो यावानेव पशुस्तस्याव [५३] द्यति हृदयस्याग्रेऽव द्यत्यथ जिह्वाया अथ वक्षसो यद्वै हृदयेनाभिगच्छति तज्जिह्वया वदति यज्जिह्वया वदति तदुरसोऽधि निर्वदत्येतद्वै पशोर्यथापूर्वं यस्यैवमवदाय यथाकाममुत्तरेषामवद्यति यथापूर्वमेवास्य पशोरवत्तं भवति

मध्यतो गुदस्याव द्यति मध्यतो हि प्राण उत्तमस्याव द्यति [५४] उत्तमो हि प्राणो यदीतरं यदीतरमुभयमेवाजामि जायमानो वै ब्राह्मणस्त्रिभिर्ऋणवा जायते ब्रह्मचर्येणर्षिभ्यो यज्ञेन देवेभ्यः प्रजया पितृभ्य एष वा अनृणो यः पुत्री यज्वा ब्रह्म चारिवासी तदवदानैरेवाव दयते तदवदानानामवदानत्वं देवा-सुरास्संयत्ता आसन्ते देवा अग्निमब्रुवन्त्वया वीरेणासुरानभि भवामेति [५५] सोऽब्रवीद्वरं वृणै पशोरुद्धारमुद्धरा इति स एत मुद्धारमुदहरत दोः पूर्वार्धस्य गुदं मध्यतश्श्रोणिं जघनार्धस्य ततो देवा अभवन्पराऽसुरा यत्त्र्यङ्गाणा᳚ᳵसमवद्यति भ्रातृव्याभिभूत्यै भवत्यात्मना पराऽस्य भ्रातृव्यो भवत्यक्ष्णयाऽव द्यति तस्माद-क्ष्णया पशवोऽङ्गानि प्रहरन्ति प्रतिष्ठित्यै [५६] ॥ एतौ पशूना᳚ᳵ समेधस्यैव तस्यावोत्तमस्याव द्यतीति पञ्चचत्वारिᳵशच ॥ १० ॥

இதில், பசுவின் அங்கங்களை ஹோமஞ் செய்தற் பொருட்டு சிறிது சிறிது அறுத்தெடுத்துக் கொள்ளல் வேண்டுமென்று விதிக்கின்றது.

---

அபிகாரத்தை விதிக்க விரும்பிதாய், முதலில், வபையை அறுத்தெடுத்த துவாரத்தை மூடுவதாகிய பசுவின் அங்கமென்னும் புரோடாசத்தை விதிக்கின்றது.

பிராமணம்—1

पशुमालभ्य पुरोडाशं निर्वपति समेधमेवैनमा लभते ।

என்பது.

உரை.

பசுவைக் கொன்றுவிட்டு புரோடாசத்திற்கு நெல்லெடுத்தல், புரோடாசம் நெல்லின் காரணமானதால் சாரத்தோடு பசுவைக் கொன்றதாகின்றது என்பது.

---

நெல்லெடுத்துச்செய்த புரோடாச ஹோமத்திற்குக் காலத்தை விதிக்கின்றது.

பிராமணம்—2

**वपया प्रचर्य पुरोडाशेन प्रचरत्यूर्वै पुरोडाश ऊर्जमेव पशूनां मध्यतो दधात्यथो पशोरेव छिद्रमपि दधाति ।**

என்பது

உரை.

"ஜாதவேதః" என்று முதலிய மந்திரத்தால் வபையை ஹோமம் பண்ணிவிட்டு, பிறகு புரோடாச ஹோமஞ் செய்தல் வேண்டும். வபாஹோமம், இருதய முதலியவைகளின் ஹோமம் என்னுமிரண்டிற்கும் நடு பசுக்களின் வயிறுபோன்றதாம். அதில்புரோடாசமாகிய அன்னத்தை (இரசத்தை) வைத்ததாகின்றது. மற்றும், வபையை அறுத்ததாலுண்டாகிய் துவாரத்தையும் அடைத்ததாகும் என்பது.

---

வடக்கில், இருதய முதலிய அவிகளைச் சமைக்கும் கடாக்கோன்றேனே வினவும் வினா மந்திரத்தைத் தோற்றுவிக்கின்றது.

பிராமணம்—3

**पृषदाज्यस्योपहत्य त्रिः पृच्छति शृतँ हवी३ः शमितरिति त्रिषत्या हि देवाः ।**

என்பது.

உரை.

பாத்திரத்திலுள்ள தயிர்கலந்த நெய்யை (பிருஷதாச்யத்தை) சுருவத்திற் சிறிது எடுத்துக்கொண்டு, கடாவைக் கொல்லுவோய்! அங்கமாகிய அவி நன்கு வெந்துபோயிற்றா? என்று மும்முறை வினவுதல் வேண்டும். ஏனெனின்? உண்மையில் நன்குவெந்துபோயிற்று என்று மும்முறை விடை கூறிய பிறகு தேவர்கட்கு அவியாகின்றதால் என்க என்பது.

---

எதிர்மறை வாயிலாக விடை கூறும் விதியைக் குறிப்பிக்கின்றது.

பிராமணம்—4

**योऽशृतँ शृतमाह स एनसा ।**

என்பது.

உரை.

பக்குவமாகாமலிருக்கும் போதே பக்குவமாயிற்றென்று சொன்னவன் பாவத்தை யடைகின்றான். இதனால், பக்குவமானபோது அவ்வாறு சொல்லல் வேண்டுமென்பது விதியாம் என்பது.

---

அபிகார (நெய் தடவும்) மந்திரத்தை விட்டுவிட்டு அபிகாரத்தை விதிக்கின்றது.

பிராமணம்—5

**प्राणापानौ वा एतौ पशूनां यत्पृषदाज्यं पशोः खलु वा आलब्धस्य हृदयमात्माऽभि समेति यत्पृषदाज्येन हृदयमभिघारयत्यात्मन्नेव पशूनां प्राणापानौ दधाति ।**

என்பது.

உரை.

தயிர் கலந்த நெய் பசுக்களின் பிராண அபானன்களாம் ஆதலின் இருதயத்தில் நெய் தடவில் ஆன்மா இருதயத்திற்குவருகின்றது. இதனால் அதில் பிராண அபானன்களை நிறுவியதாகின்றது என்பது.

---

அறுத்துவைக்கும் அங்கங்கட்கு கல்லாலங்கிளை ஆதாரமென்று விதிக்கின்றது.

பிராமணம்—6

**पशुना वै देवास्सुवर्गं लोकमायन्तेऽमन्यन्त मनुष्या नोऽन्वाभविष्यन्तीति तस्य शिरश्छित्त्वा मेधं प्राक्षारयन्त्स प्लक्षोऽभवत्तत्प्लक्षस्य प्लक्षत्वं यत्प्लक्षशाखोत्तरबर्हिर्भवति समेधस्यैव पशोरवद्यति ।**

என்பது.

உரை.

பசுக்களுடன் சுவர்க்கஞ் சென்ற தேவர்கள், தம்முடன் மனிதர்களும் வரக்கூடாதென வெண்ணி பசுவின் தலையை அறுத்து அதன் இரசத்தைப் பிழிந்தனர். பூமியில் விழுந்த அந்த இரசமே கல்லாலமரமாயிற்று. இது பற்றியே 'ப்லக்ஷம்' என்னுங் காரணப்பெயர் வந்தது. ஆதலின் அக்கிளையைத் தருப்பையின்மேல் வைக்கில் அது, மேல் தருப்பை எனப்படுகின்றது. இதனால், இரசத்துடன்கூடவே பசுக்களின் அங்கங்கள் அறுத்துவைக்கப் பெற்றவைகளாகின்றன என்பது.

---

பக்குவமாகிய அவியை ஆகவனீயத்திற்கு எடுத்துக்கொண்டு வருவதில் மார்க்க விசேடத்தை விதிக்கின்றது.

பிராமணம்—7

**पशुं वै ह्रियमाणꣳ रक्षाꣳस्यनु सचन्तेऽन्तरा यूपं चाऽऽहवनीयं च हरति रक्षसामपहत्यै ।**

என்பது.

உரை.

பசுவின் அவியைக் கவரும் அசுரர்கள், ஆகவனீயத்திலும் யூபத்திலுந் திரிகின்றனர். ஆதலின் அவியை அவ்விரண்டிற்கு நடுவாகக் கொண்டுவரில் இராக்கதர்கள் விலகிவிடுகின்றார்கள் என்பது.

---

ஹோதாவின் பிரேஷை மந்திரத்தைத் தோற்றுவிக்கின்றது.

பிராமணம்—8

**पशोर्वा आलब्धस्य मनोऽप क्रामति मनोतायै हविषोऽवदीयमानस्यानु ब्रूहीत्याह मन एवास्याव रुन्धे ।**

என்பது.

உரை.

கொன்றபசுவின்மனம் ஓடிவிடுகின்றது மனதிற்கட்டுப்படும் அக்கினி தேவதையின் பொருட்டு அங்கஅவி அரிந்து வைத்திருக்கின்றது; அதன் பொருட்டு புரோநுவாக்கியங் கூறுவாயாக என்றது, இதனுடைய மனத்தையே இதை அடையும்படி செய்விக்கின்றான் என்பது.

---

எண்ணிக்கையுடன் அரிந்தெடுப்பவைகளை விதிக்கின்றது.

பிராமணம்—9

**एकादशावदानान्यव द्यति दश वै पशोः प्राणा आत्मैकादशो यावानेव पशुस्तस्याव द्यति ।**

என்பது.

உரை.

பதினொரு அங்கங்கள் அறுத்தெடுக்கப் படுகின்றன. பசுவிலுள்ள பத்துப் பிராணன் ஆன்மா ஒன்று ஆக பதினொன்றாதலின் இது பசுமுழுதையும் அறுத் தெடுத்ததாகின்றது என்பது.

---

அறுத்தெடுப்பதின் முறையை விதிக்கின்றது.

பிராமணம்—10

**हृदयस्याग्रेऽव द्यत्यथ जिह्वाया अथ वक्षसो यद्वै हृदयेनाभिगच्छति तज्जिह्वया वदति यज्जिह्वया वदति तदुरसोऽधि निर्वदत्येतद्वै पशोर्यथापूर्वम् ।**

என்பது

உரை.

இதயத்தில் நினைத்தது நாவால் சொல்லப்படுகின்றது, அவ்வாறு சொல்லலும் மார்பின் மேலிடத்தின் வலியாலாமாதலின், முதலில் இருதயத்தையும், இரண்டாவது நாவையும், மூன்றுவது மார்பையும் அறுத்தல் வேண்டும். இதுவே நல்ல முறையாம் என்பது.

---

மேல் அறுக்கும் அங்கங்கட்கும், இருதய முதலிய முறை வேண்டும் என்பதை நீக்குகின்றது.

பிராமணம்—11

**यस्यैवमवदाय यथाकाममुत्तरेषामवद्यति यथापूर्वमेवास्य पशोरवत्तं भवति ।**

என்பது.

உரை.

முறையாய் இருதய முதலிய மூன்று அங்கங்களையும் அறுத்தெடுத்துக் கொண்டு, மேல் அறுக்கவேண்டியவைகளை விரும்பிய வண்ணம் அறுக்கில் குற்றமில்லை என்பது.

---

பதினொரு அங்கங்களுள் சாணிக்குடலாகிய அங்கத்தை உத்தமம், மத்தியமம், அதமம் என மூவகைத்து எனப்பிரித்து, அம் மூன்றனுள், மத்தியமம் உத்தமம் என்னும் இரண்டு பாகங்களையும் விகற்பமாய் அறுப்பதை விதிக்கின்றது.

பிராமணம்—12

**मध्यतो गुदस्याव द्यति मध्यतो हि प्राण उत्तमस्याव द्यत्युत्तमो हि प्राणो यदीतरं यदीतरमुभयमेवाजामि ।**

என்பது.

உரை.

முகத்தின் மத்திய பாகத்தில் பிராணனிருத்தலானும், அதுவே பிழைத்தற்குக் காரணமாதலானும் மத்தியபாகத்தை அறுத்தெடுத்தல் வேண்டும்.

அவ்வாறே உத்தமபாகமும் குற்றமின்றியதாம். ஆதலின் அதையும் அறுத்தெடுத்தல் வேண்டும் என்பது.

---

இருதய முதலியவைகளை அறுத்தெடுப்பதைப் புகழ்கின்றது.

பிராமணம்—13

**जायमानो वै ब्राह्मणस्त्रिभिर्ऋणवा जायते ब्रह्मचर्येणर्षिभ्यो यज्ञेन देवभ्यः प्रजया पितृभ्य एष वा अनृणो यः पुत्री यज्वा ब्रह्मचारिवासी तदवदानैरेवाव दयते तदवदानानामवदानत्वम् ।**

என்பது.

உரை.

பிறக்கும் அந்தணன், மறையோதும் பிரமசாரியாய் குருகுலத்தில் வாழ்தல், எக்ஞத்தால் தேவர்களை வழிபடல், புத்திரோற்பத்தியால் பிதிர்க்களை வழிபடல் என்னும் மூவகைக்கடன்களுடன் பிறக்கின்றான். அம்மூவகைக் கடன்களையும் இருதய முதலிய அங்கங்களை யறுத்தெடுத்தலாற் போக்குகின்றான். இதுவே அவதானம்=அறுத்தலாம். அதாவது கடன்களைத் தொலைத்தல் எனப்படுத்தலால் அவதானம் (அறுத்தல்) எனப்படுகின்றது என்பது.

---

சுவிஷ்டகிருத் யாகத்திற்கு மூவகை அங்கங்களை யறுத்தெடுப்பதை விதிக்கின்றது.

பிராமணம்—14

**देवासुरास्संयत्ता आसन्ते देवा अग्निमब्रुवन्त्वया वीरेणासुरानभि भवामेति सोऽब्रवीद्वरं वृणै पशोरुद्धारमुद्धरा इति स एतमुद्धारमुदहरत दोः पूर्वार्धस्य गुदं मध्यतश्श्रोणिं जघनार्धस्य ततो देवा अभवन्परा यत्त्र्यङ्गाणां समवद्यति भ्रातृव्याभिभूत्यै भवत्यात्मना पराऽस्य भ्रातृव्यो भवति ।**

என்பது.

உரை.

தேவாசுரர்கள் போரிடும்போது தேவர்கள், யாம் வீரனாகிய அக்கினியைக்கொண்டு அசுரர்களை வெல்வோம் என்றனர். அப்போது அக்கினி, யான் பசுவின் உத்தம பாகங்களை ஏற்றுக்கொள்வேன் என்று வரங் கேட்டது. ஆதலின், பசுவின் முற்பாதியிலுள்ள முன்கால், நடுவிலுள்ள குதத்

தில் இரண்டாம்பாதி பின்காலின் தொடைமுதலியது என்னும் இம் மூவகை அங்கங்களையும் அறுத்தெடுக்கில் பகைவன் தோல்வியடைகின்றான் என்பது.

---

கோணலாக அறுப்பதை விதிக்கின்றது.

பிராமணம் — 15

अक्षणयाऽव द्यति तस्मादक्षणया पशवोऽङ्गानि प्रहरन्ति प्रतिष्ठित्यै ।

என்பது.

உரை.

கோணலாக அங்கங்களை அறுத்தல் வேண்டும். இதனால், பசுக்கள் படுக்கும்போது கால்களை மாறுக மடக்கிக்கொண்டு படுக்கின்றது. இது, நிலையை யடைதற் பொருட்டாம் என்கின்றது.

பத்தாவது அநுவாகம்

முற்றிற்று.

---

## ஆறுங்காண்டம் மூன்றும்பிரபாடகம்

### பதினோராவது அநுவாகம்

அநுயாசைகளைக் கூறும் பிராமணங்கள்.

ஆறு பஞ்சாதிக்குமேல் ஆறு பதங்களைக் கொண்டது.

मेदसा स्रुचौ प्रोर्णोति मेदोरूपा वै पशवो रूपमेव पशुषु दधाति यूषन्नवधाय प्रोर्णोति रसो वा एष पशूनां यद्यू रसमेव पशुषु दधाति पार्श्वेन वसाहोमं प्रयौति मध्यं वा एतत्पशूनां यत्पार्श्वꣳ रस एष पशूनां यद्वसा यत्पार्श्वेन वसाहोमं प्रयौति मध्यत एव पशूनाꣳ रसं दधाति घ्नन्ति [५७] वा एतत्पशुं यत्संज्ञपयन्त्यैन्द्रः खलु वै देवतया प्राण ऐन्द्रोऽपान ऐन्द्रः प्राणो अङ्गे अङ्गे नि देध्यदित्याह प्राणापानावेव पशुषु दधाति देव त्वष्टर्भूरि ते सꣳ समेत्वित्याह त्वाष्ट्रा हि देवतया पशवो विषुरूपा यत्स-

लक्ष्माणो भवथेत्याह विषुरूपा ह्येते सन्तस्स लक्ष्माण एतर्हि भवन्ति देवत्रा यन्तम् [५८] अवसे सखायोऽनु त्वा माता पितरो मदन्त्वित्याहानुमतमेवैनं मात्रा पित्रा सुवर्गं लोकं गमयत्यर्धर्चे वसाहोमं जुहोत्यसौ वा अर्धर्च इयमर्धर्च इमे एव रसेनानक्ति दिशो जुहोति दिश एव रसेनानक्त्यथो दिग्भ्य एवोर्जꣳ रसमवरुन्धे प्राणापानौ वा एतौ पशूनां यत्पृषदाज्यं वानस्पत्याः खलु [५९] वै देवतया पशवो यत्पृषदाज्यस्योपहत्याऽऽह वनस्पतयेऽनु ब्रूहि वनस्पतये प्रेष्येति प्राणापानावेव पशुषु दधात्यन्यस्यान्यस्य समवत्तꣳ समवद्यति तस्मान्नानारूपाः पशवो यूष्णोप सिञ्चति रसो वा एष पशूनां यद्यू रसमेव पशुषु दधातीडामुप ह्वयते पशवो वा इडा पशूनेवोप ह्वयते चतुरुप ह्वयते [६०] चतुष्पादो हि पशवो यं कामयेतापशुस्स्यादित्यमेदस्कं तस्मा आ दध्यान्मेदोरूपा वै पशवो रूपेणैवैनं पशुभ्यो निर्भजत्यपशुरेव भवति यं कामयेत पशुमान्त्स्यादिति मेदस्वत्तस्मा आ दध्यान्मेदोरूपा वै पशवो रूपेणैवास्मै पशूनव रुन्धे पशुमानेव भवति प्रजापतिर्यज्ञमसृजत स आज्यम् [६१] पुरस्तादसृजत पशुं मध्यतः पृषदाज्यं पश्चात्तस्मादाज्येन प्रयाजा इज्यन्ते पशुना मध्यतः पृषदाज्येनानूयाजास्तस्मादेतन्मिश्रमिव पश्चात्सृष्टꣳ ह्येकादशानूयाजानूयजति दश वै पशोः प्राणा आत्मैकादशो यावानेव पशुस्तमनु यजति घ्नन्ति वा एतत्पशुं यत्संज्ञपयन्ति प्राणापानौ खलु वा एतौ

அநுயாசம்)

पशूनां यत्पृषदाज्यं यत्पृषदाज्येनानूयाजान् यजति प्राणापानावेव पशुषु दधाति [६२] ॥ घ्नन्ति यन्तं खलु चतुरुपं ह्वयत आज्यं यत्पृषदाज्येन षट्च ॥ ११ ॥

இப் பிரபாடகத்தின் அநுவாகத் தொகையைக் காட்டும் தலைப்புச் சொற்கள்:—

चात्वालात्सुवर्गाय वैसर्जनानि वैष्णव्यर्चा पृथिव्यै साध्या इषे त्वेत्यग्निना पर्यग्नि पशोः पशुमालभ्य मेदसा स्रुचावेकादश ॥ ११ ॥

பஞ்சாதிகளின் தொகையைக் காட்டுந்தலைப்புச் சொற்கள்:—

चात्वालाद्देवानुपैति मुञ्चति प्रह्रियमाणाय पर्यग्नि पशुमालभ्य चतुष्पादो द्विषष्टिः ॥ ६२ ॥

இதில், அநூயாசயாகமுறை கூறப்படுகின்றது.

---

கொழுப்பை எடுப்பதை விதிக்கின்றது.

பிராமணம்—1

मेदसा स्रुचौ प्रोर्णोति मेदोरूपा वै पशवो रूपमेव पशुषु दधाति ।

என்பது.

உரை.

பழந்துணிபோல் இதயத்தை மூடியிருக்கும் கொழுப்பிற்கு மேதை என்று பெயர். அதை, சுருவிலும், உபபிருதிலும் எடுத்துவைத்தல் வேண் டும். அது மிகுதியாயிருக்கில் பசுக்கள் நல்ல வடிவமுடையவைகளாகின்றன என்பது.

---

அதில் ஒருவிசேடத்தை விதிக்கின்றது.

பிராமணம்—2

यूषन्नवधाय प्रोर्णोति रसो वा एष पशूनां यद्यूष रसमेव पशुषु दधाति ।

என்பது.

உரை.

மாமிசம்வெந்த நீரில் கொழுப்பைப்போட்டு அந்நீரால் சுருவையும் உபபிருதையும் நிறைத்தல்வேண்டும். இது பசுக்களின் இரசமானதால் பசுக்களில் இரசத்தை நிறுத்திவைக்கின்றது என்பது.

---

அங்கம் வெந்த நீரை, எலும்பால் கலக்கி விடுவேதை விதிக்கின்றது.

பிராமணம்—3

**पार्श्वेन वसाहोमं प्रयौति मध्यं वा एतत्पशूनां यत्पार्श्वꣳ रस एष पशूनां यद्वसा यत्पार्श्वेन वसाहोमं प्रयौति मध्यत एव पशूनाꣳ रसं दधाति ।**

என்பது.

உரை.

மாமிசநீரை, பக்கத்திலுள்ள எலும்பின் நுனியால் கலக்கிவிடுகின்றான். அவ்வெலும்பு பசுக்கட்கு நடுவாம். ஆதலின் பசுக்களின் நடுவில் இரசத்தை வைக்கின்றான் என்பது. இங்கு, கத்தியாலுங் கலக்கிவிடலாம் என்பதை யுணர்க.

---

அறுக்கு மந்திரத்தின் முற்பாதியிலுள்ள, "ஐந்திரஃ" என்னுஞ் சொல் ஆகுபெயரால் தேவதையின் வாசகம் என்கின்றது.

பிராமணம்—4

**घ्नन्ति वा एतत्पशुं यत्संज्ञपयन्त्यैन्द्रः खलु वै देवतया प्राण ऐन्द्रोऽपान ऐन्द्रः प्राणो अङ्गेअङ्गे नि देध्यदित्याह प्राणापानावेव पशुषु दधाति ।**

என்பது.

உரை.

அடித்துக் கழுத்தை நெரித்து பசுக் கொல்லப்படுகின்றதால் வெளிப் பட்டபிராண அபானன்கள் இந்திர தேவதையைப் பற்றியவைகள். ஆதலின், "அங்கே அங்கே நிதேத்யத்" என்றது, அத்தகைய பிராண அபானன்களை மீண்டுங்கொண்டுவந்து நிறுத்துகின்றான் என்பது.

---

அநுயாசம்).

மந்திரத்தின் இரண்டாம் பாகத்தில் உள்ள 'துவஷ்டா" என்னுஞ் சொல்லின் கருத்தைக் கூறுகின்றது.

பிராமணம்—5

**देव त्वष्टर्भूरि ते सं॑ समेत्वित्याह त्वाष्ट्रा हि देवतया पशवः ।**

என்பது.

உரை.

*அறுத்த அங்கக்கூட்டங்களை ஒட்டுகின்றவன் துவஷ்டாவாதலின், தேவத்வஷ்டః என்றது முதலியது, பசுக்கள் துவஷ்டா தேவதையால் உண்டாக்கப்படுகின்றன என்கின்றது.*

---

மந்திரத்தின் மூன்றுவது பாதத்தில், இருதய முதலியவைகளை நோக்க விகாரவடிவமும், அவித்தன்மையை நோக்க நல்ல வடிவமும் வெளிப்படை என்கின்றது.

பிராமணம்—6

**विषुरूपा यत्सलक्ष्माणो भवथेत्याह विषुरूपा ह्येते सन्तस्सलक्ष्माण एतर्हि भवन्ति ।**

என்பது.

உரை.

*"விஷுரூபாః" என்றது முதலியது, இவைகள் விகாரவடிவங்களாயிருப்பினும் நல்ல வடிவங்களைப் பெறுகின்றன என்கின்றது.*

---

மந்திரத்தின் நான்காம் பாதத்தில், அநுமதந்து, (அநுமதிப்பார்களாக) என்னுஞ் சொல்லின் கருத்தைக் கூறுகின்றது.

பிராமணம்—7

**देवत्रा यन्तमवसे सखायोऽनु त्वा माता पितरो मदन्त्वित्याहानुमतमेवैनं मात्रा पित्रा सुवर्गं लोकं गमयति ।**

என்பது.

உரை.

*"தேவத்ரா" என்றது முதலியது, இப்பசுவின் மாதாபிதாக்களின் அநுமதிபெற்றே இப்பசுவை சுவர்க்கத்திற்கு அநுப்புகின்றுன் என்கின்றது.*

---

மாமிச நீரின் ஹோமத்தை விதிக்கின்றது.

பிராமணம்—8

**अर्धर्चे वसाहोमं जुहोत्यसौ वा अर्धर्च इयमर्धर्च इमे एव रसेनानक्ति दिशो जुहोति दिश एव रसेनानक्त्यथो दिग्भ्य एवोर्जꣳ रसमवरुन्धे ।**

என்பது.

உரை.

*யாஜ்யாவாக்கியத்தின் முன் பின் பாகங்களின் அபிமானி தேவதைகள் வானும் மண்ணுமாதலின், பாதிமந்திரத்தில் ஹோமங்கள் செய்வதால் வானும் மண்ணும் இரசத்தால் நனைக்கப்பெற்றதாகின்றன. மற்றும், திக்குக்களின் ஓமத்தால் திக்குக்கள் களிப்புறுகின்றன. எசமானன் திக்குக்களினின்று அன்னரசங்களை யடைகின்றான் என்பது.*

---

மைத்திரா வருணனுக்கு, அவதானத்துடன் இரண்டு பிரேஷை மந்திரங் களைத் தோற்றுவிக்கின்றது.

பிராமணம்—9

**प्राणापानौ वा एतौ पशूनां यत्पृषदाज्यं वानस्पत्याः खलु वै देवतया पशवो यत्पृषदाज्यस्योपहत्याऽऽह वनस्पतयेऽनु ब्रूहि वनस्पतये प्रेष्येति प्राणापानावेव पशुषु दधाति ।**

என்பது.

உரை.

*தயிர்கலந்த நெய் பசுக்கட்கு பிராண அபானன்களாம். ஆதலின், பாத்திரத்திலுள்ள பிருஷதாச்சியத்தை சுருவத்தால் சுருவில் எடுத்துக்கொண்டு வநஸ்பதி தேவதையின் பொருட்டு புரோநுவாக்கியங் கூறுவாயாக. பிறகு, யாஜ்யாவாக்கியம் படிப்பதற்கு ஹோதாவை ஏவுவாயாக என்றது, வநஸ்பதி தேவதைகளிடத்தும் பசுக்களிடத்தும் பிருஷதாச்சியமாகிய பிராண அபானன்களை வைக்கின்றான் என்கின்றது.*

---

இடாவின் பொருட்டு, அந்த அந்த இருதய முதலிய அங்கத்திற் சிறிது சிறிது ஒன்றாய்ச் சேர்த்து வைப்பதை விதிக்கின்றது.

பிராமணம் —10

**अन्यस्यान्यस्य समवत्तꣳ समवद्यति तस्मान्नानारूपाः पशवः ।**

என்பது.

உரை.

அரிந்தெடுத்த ஒவ்வொரு அங்கத்தில் மீந்தவைகளை ஒன்றுய்ச்சேர்த்து இடாவில் வைக்கின்றுன். ஆதலின் ஹோமத்தாற் கிடைக்கும் பசுக்களும் பல்வகைகளாகின்றன என்பது.

---

அரிந்தெடுத்த அங்கங்களில் மாமிசம் வெந்த நீரை விடல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—11

**यूष्णोप सिञ्चति रसो वा एष पशूनां यद्यू रसमेव पशुषु दधाति ।**

என்பது.

உரை.

மாமிசம் வெந்தநீர் பசுக்களின் இரசமானதால் பசுக்களிடத்தில் இரசத்தை நிலைக்கவைக்கின்றுன் என்பது.

---

அவியின் சேடமாகிய இடாபாகத்தை யருந்துவதற்கு ஹோதா அழைத்தல் வேண்டுமென விதிக்கின்றது.

பிராமணம்—12

**इडामुप ह्वयते पशवो वा इडा पशूनेवोप ह्वयते चतुरुप ह्वयते चतुष्पादो हि पशवः ।**

என்பது.

உரை.

இடாபாகத்திற்கு அழைத்தல் பசுக்களையே அழைத்தலாகும். நான்கு முறை அழைத்தலால் பசுக்கட்கு நான்குகால்கள் உள எனப்படுகின்றது. இது, இஷ்டியின் விகிருதியாமாதலின் மீண்டும் விதிக்கப்பட்டது என்பதை யுணர்க.

---

இங்கு, இடாவைப் பகுத்து ஹோதாவின் கையில் கொடுக்கும்போது கொழுப்பை கீழும் மேலும் வைத்தலை விதிப்பதற்கு, அதற்கு மாறுனதைப் பழிக்கின்றது.

பிராமணம்—13

**यं कामयेतापशुस्स्यादित्यमेदस्कं तस्मा आ दध्यान्मेदोरूपा वै पशवो रूपेणैवैनं पशुभ्यो निर्भजत्यपशुरेव भवति ।**

என்பது.

உரை.

எசமானனைப் பசுக்களில்லாதவனாகச் செய்யவிரும்பில், கொழுப்பைக் கொடுத்தல்கூடாது என்பது.

---

கொடுக்கும் பக்ஷத்தை விதிக்கின்றது.

பிராமணம்—14

**यं कामयेत पशुमान्त्स्यादिति मेदस्वत्तस्मा आ दध्यान्मेदोरूपा वै पशवो रूपेणैवास्मै पशूनव रुन्धे पशुमानेव भवति ।**

என்பது.

உரை.

எசமானனைப் பசுக்களுடையவனாகச் செய்யவிரும்பில், கொழுப்பைக் கீழும் மேலும் வைத்துக் கொடுத்தல்வேண்டும். கொழுப்புப் பசுவடிவங்களாதலின் பசுவடிவத்தாலே பசுக்களை யடைகின்றான் என்பது.

---

தயிர் கலந்த நெய்யால் அநுயாச ஹோமத்தை விதிக்கின்றது.

பிராமணம்—15

**प्रजापतिर्यज्ञमसृजत स आज्यं पुरस्तादसृजत पशुं मध्यतः पृषदाज्यं पश्चात्तस्मादाज्येन प्रयाजा इज्यन्ते पशुना मध्यतः पृषदाज्येनानूयाजास्तस्मादेतन्मिश्रमिव पश्चात्सृष्टꣳहि ।**

என்பது.

உரை.

பிரமன், முதலில் நெய்யை யுண்டாக்கினான், நடுவில் பசுக்களை யுண்டாக்கினான், முடிவில் பிருஷதாச்சியத்தை யுண்டாக்கினான். ஆதலின், முதலாவதால் முதலாவது பிரயாசயாகமும், நடுவால் (அங்கங்களால்) மத்தியத்திலுள்ளயாகமும், முடிவால், (பிருஷதாச்சியத்தால்) முடிவாகிய அநூயாச யாகமுஞ் செய்யப்படுகின்றன என்பது.

---

பிரகிருதியிலுள்ள மூன்றென்பதை விலக்கி வேறு எண்ணிக்கையை விதிக்கின்றது.

பிராமணம்—16

**एकादशानूयाजान्यजति दश वै पशोः प्राणा आत्मैकादशो यावानेव पशुस्तमनु यजति ।**

என்பது

அநுயாசம்) .

உரை.

பதினொரு அநுயாசங்கள் செய்கின்றான். இதனால், பசுக்கட்குப் பிராணன்கள் பத்து ஆன்மா ஒன்று ஆகப்பதினொன்றுமாதலின் முழுப்பசுவாலும் அநுயாசயாகஞ் செய்ததாகின்றது என்பது.

---

பிருஷதாச்சியத்தை (தயிர் கலந்த நெய்யை)ப் புகழ்கின்றது.

பிராமணம்—17

**घ्नन्ति वा एतत्पशुं यत्संज्ञपयन्ति प्राणापानौ खलु वा एतौ पशूनां यत्पृषदाज्यं यत्पृषदाज्येनानूयाजान्यजति प्राणापानावेव पशुषु दधाति ।**

என்பது.

உரை.

பசுவைக் கொல்லும்போது பிராண அபானன்கள் பீடைப்பட்டு வெளிப்படுகின்றன. நெய்கலந்ததயிர் பசுக்களின் பிராண அபானவடிவாதலின், அதனால் ஹோமஞ்செய்யில் பசுக்களிடத்துப் பிராண அபானன்களை நிலைக்கவைத்ததாகும் என்பது.

பதினோராவது அநுவாகம்

முற்றிற்று.

---

மூன்றும் பிரபாடகம்

முடிந்தது.

---

நான்காம் பிரபாடக விடயச் சுருக்கம்.

गुदयागश्चतुर्थाद्ये वसतीवर्य ईरिताः ।
द्वितीयेऽथ तृतीये सोमोपावहरणं श्रुतम् ॥ १ ॥
सोमोन्मानं चतुर्थे स्यात्पञ्चमादिषु सप्तसु ।
उपांशुप्रमुखा आग्रयणान्ता हि ग्रहाश्श्रुताः ॥ २ ॥
उपांशुरन्तर्यामश्च तृतीयश्चैन्द्रवायवः ।
मैत्रावरुणनामा स्यादाश्विनाख्यग्रहस्तथा ॥ ३ ॥
शुक्रामन्थिग्रहावाग्रयणस्तुर्यः प्रपाठकः ॥

*இந் நான்காம் பிரபாடகத்திலும், பதினொரு அநுவாகங்களிருக்கின்றன. அவற்றுள் முதலாவதில் குத (சாணிப்பை) ஹோமமும், இரண்டாவதில் வசதீவரியும், மூன்றுவதில் சோமத்தை வண்டியிலிருந்து கீழே இறக்குதலும், நான்காவதில் சோம அளவும், ஐந்தாவதில் உபாம்சுக்கிரகமும், ஆறுவதில் அந்தர்யாமக் கிரகமும், ஏழாவதில் ஐந்திரவாயவக் கிரகமும், எட்டாவதில் மைத்திராவருணக் கிரகமும், ஒன்பதாவதில் ஆசுவினக் கிரகமும், பத்தாவதில் சுக்கிராமந்தக் கிரகங்களும், பதினோராவதில் ஆக்கிரயணமுஞ் சொல்லப்படுகின்றன என்பது.*

---

## ஆறுங்காண்டம் நான்காம் பிரபாடகம்

### முதலநுவாகம்

*குதகாண்ட ஹோமங்களை விதிக்கும் பிராமணங்கள்.*

நான்கு பஞ்சாதிக்குமேல் முப்பத்திரண்டு பதங்களைக் கொண்டது.

**यज्ञेन वै प्रजापतिः प्रजा असृजत ता उपयड्भिरेवासृजत यदुपयज उपयजति प्रजा एव तद्यजमानस्सृजते जघनार्धादव द्यति जघनार्धाद्धि प्रजाः प्रजायन्ते स्थविमतोऽव द्यति स्थविमतो हि प्रजाः प्रजायन्तेऽसंभिन्दन्नव द्यति प्राणानामसंभेदाय न पर्या वर्तयति यत्पर्यावर्तयेदुदावर्तः प्रजा ग्राहुकस्स्यात्समुद्रं गच्छ स्वाहेत्याह रेतः [१] एव तद्दधात्यन्तरिक्षं गच्छ स्वाहेत्याहान्त-**

रिक्षेणैवास्मै प्रजाः प्रजनयत्यन्तरिक्षꣳ ह्यनु प्रजाः प्रजायन्ते देवꣳ सवितारं गच्छ स्वाहेत्याह सवितृप्रसूत एवास्मै प्रजाः प्रजनयत्यहोरात्रे गच्छ स्वाहेत्याहाहोरात्राभ्यामेवास्मै प्रजाः प्रजनयत्यहोरात्रे ह्यनु प्रजाः प्रजायन्ते मित्रावरुणौ गच्छ स्वाहा [२] इत्याह प्रजास्वेव प्रजातासु प्राणापानौ दधाति सोमं गच्छ स्वाहेत्याह सौम्या हि देवतया प्रजा यज्ञं गच्छ स्वाहेत्याह प्रजा एव यज्ञियाः करोति छन्दाꣳसि गच्छ स्वाहेत्याह पशवो वै छन्दाꣳसि पशूनेवाव रुन्धे द्यावापृथिवी गच्छ स्वाहेत्याह प्रजा एव प्रजाता द्यावापृथिवीभ्यामुभयतः परि गृह्णाति नभः [३] दिव्यं गच्छ स्वाहेत्याह प्रजाभ्य एव प्रजाताभ्यो वृष्टिं नियच्छत्यग्निं वैश्वानरं गच्छ स्वाहेत्याह प्रजा एव प्रजाता अस्यां प्रतिष्ठापयति प्राणानां वा एषोऽव द्यति योऽवद्यति गुदस्य मनो मे हार्दि यच्छेत्याह प्राणानेव यथास्थानमुप ह्वयते पशोर्वा आलब्धस्य हृदयꣳ शुगृच्छति सा हृदयशूलम् [४] अभि समेति यत्पृथिव्याꣳ हृदयशूलमुद्वासयेत्पृथिवीꣳ शुचाऽर्पयेद्यदप्स्वपश्शुचाऽर्पयेच्छुष्कस्य चाऽऽर्द्रस्य च संधावुद्वासयत्युभयस्य शान्त्यै यं द्विष्यात्तं ध्यायेच्छुचैवैनमर्पयति [५] ॥

रेतो मित्रावरुणौ गच्छ स्वाहा नमो हृदयशूलं द्वात्रिꣳशच्च ॥ १ ॥

இதில், சூதகாண்டத்துடன் உபயட் என்னும் ஓமங்களுங் கூறப்படுகின்றன.

அநூயாசத்திற்கு அடுத்தாற் போற்செய்யும் யாகத்தை விதிக்கின்றது.

பிராமணம்—1

**यज्ञेन वै प्रजापतिः प्रजा असृजत ता उपयड्भिरेवासृजत यदुपयज उपयजति प्रजा एव तद्यजमानस्सृजते ।**

என்பது.

உரை.

பிரசாபதி, வேள்வியால் பிரசைகளைப் படைத்தான் என்றது, உபயட் யாகத்தினாலேயே நேரே படைத்தார் என்பதாம். ஆதலின், உபயட் யாகத்தைச் செய்கின்ற எசமானன் பிரசைகளை உண்டாக்குகின்றான் என்பது.

---

பசுவின் பின்புறத்தை யாகத்திற்குரிய பொருளென விதிக்கின்றது.

பிராமணம்—2

**जघनार्धादव द्यति जघनार्धाद्धि प्रजाः प्रजायन्ते ।**

என்பது.

உரை.

பசுவின் பின்பாதியிலிருந்து அறுத்தெடுக்கின்றான். இடுப்பின் பின்பாதியால் பிரசைகளுண்டாகின்றன என்பது.

---

மூவகையாய்ப் பிரித்த குடல் துண்டுகளுள் பெரிதாயிருப்பதை விதிக்கின்றது.

பிராமணம்—3

**स्थविमतोऽव द्यति स्थविमतो हि प्रजाः प्रजायन्ते ।**

என்பது

உரை.

பெரிதாயிருப்பதை அறுத்தெடுக்கின்றான். பெரிதாயிருக்குந் துவாரத்திலிருந்து பிரசைகள் உண்டாகின்றன என்பது.

---

முறையாய் அறுத்தெடுத்த பாகங்கள் ஒன்றோடொன்று கலக்கக் கூடாதென விலக்குகின்றது.

பிராமணம்—4

**असंभिन्दन्नव द्यति प्राणानामसंभेदाय ।**

என்பது

உரை.

ஒன்றேடொன்று சேராமல் அறுத்தெடுக்கின்றான். இது பிராணன்கள் ஒன்றேடொன்று சேராதிருத்தற் பொருட்டு என்பது

---

நுனியை முதலில் அறுத்துவிட்டு, அடியை இரண்டாவது அறுக்கும் விபரீதத்தை மறுக்கின்றது.

பிராமணம்—5

**न पर्यावर्तयति यत्पर्यावर्तयेदुदावर्तः प्रजा ग्राहुकस्स्यात् ।**

என்பது.

உரை.

விபரீதமாய் அறுக்கில், பிரசைகள் உதாவர்த்தம் என்னும் நோயால் பீடிக்கப்பட்டனவாகும் என்பது.

---

"சமுத்ரம் கச்ச" என்பது முதலான எல்லா மந்திரங்கட்கும் பிரசா உற்பத்தியில் உபயோகத்தைக் காட்ட விரும்பியதாய் கடல் நீர் சுக்கிலம் போன்றதென்னுங் கருத்தைக் கூறுகின்றது.

பிராமணம்—6

**समुद्रं गच्छ स्वाहेत्याह रेत एव तद्दधाति ।**

என்பது.

உரை.

"சமுத்ரம் கச்ச" என்றது முதலியது, இரேதசை (சுக்கிலத்தை) தரிக்கும்படி செய்கின்றான் என்கின்றது.

---

அந்தரிக்ஷம் என்னுஞ்சொல் இடங்கொடுத்தற்கும் உபயோகமுடையதென்பதை விளக்குகின்றது.

பிராமணம்—7

**अन्तरिक्षं गच्छ स्वाहेत्याहान्तरिक्षेणैवास्मै प्रजाः प्रजनयत्यन्तरिक्षꣳ ह्यनु प्रजाः प्रजायन्ते ।**

என்பது.

உரை.

"அந்தரிக்ஷம் கச்ச ஸ்வாஹா" என்றது, அந்தரிக்ஷத்தாலேயே பிரசை பிறக்கின்றது. ஆதலின், அந்தரிட்சமே இவனுக்கு பிரசையை யுண்டாக்குகின்றது என்கின்றது.

---

ஏவுவதால் சவிதா தேவதையின் உபயோகமாம் என்கின்றது

பிராமணம்—8

**देवꣳ सवितारं गच्छ स्वाहेत्याह सवितृप्रसूत एवास्मै प्रजाः प्रजनयत्यहोरात्रे गच्छ स्वाहेत्याहाहोरात्राभ्यामेवास्मै प्रजनयत्यहोरात्रे ह्यनु प्रजाः प्रजायन्ते मित्रावरुणौ गच्छ स्वाहेत्याह प्रजास्वेव प्रजातासु प्राणापानौ दधाति ।**

என்பது.

உரை.

"தேவம்" என்றது முதலியது, சவிதாவால் ஏவப்பெற்றே இவன் பிரசையை யுண்டாக்குகின்றான் என்கின்றது.

---

தேவதையாந் தன்மையால் சோமத்திற்கு உபயோகத்தைக் கூறுகின்றது.

பிராமணம்—9

**सोमं गच्छ स्वाहेत्याह सौम्या हि देवतया प्रजाः ।**

என்பது.

உரை.

"சோமம் கச்ச ஸ்வாஹா" என்பது, சோம தேவதையால் பிரசைகள் உண்டாகின்றன என்கின்றது.

---

பிரசையைக் கொடுப்பதால் எக்ஞத்தின் உபயோகமாம் என்கின்றது.

பிராமணம்—10

**यज्ञं गच्छ स्वाहेत्याह प्रजा एव यज्ञियाः करोति ।**

என்பது.

உரை.

"எக்ஞம் கச்ச ஸ்வாஹா" என்றது, எக்ஞஞ் செய்கின்றவன் பிரசையை யுண்டாக்குகின்றான் என்கின்றது.

---

பசுவைக் கொடுத்தல் சந்தங்களின் உபயோகமாம் என்கின்றது.

பிராமணம்—11

**छन्दाꣳसि गच्छ स्वाहेत्याह पशवो वै छन्दाꣳसि पशूनेवाव रुन्धे ।**

என்பது.

உரை.

"சந்தாம்ஸி" என்றது முதலியது, பசுக்கள் சந்தங்களாதலின் சந்தங்களால் பசுக்களை யடைகின்றான் என்கின்றது.

---

தாங்கிக்கொள்வதன் பொருட்டு வான் மண்களின் உபயோகம் என்கின்றது

பிராமணம்—12

**द्यावापृथिवी गच्छ स्वाहेत्याह प्रजा एव प्रजाता द्यावापृथिवीभ्यामुभयतः परि गृह्णाति ।**

என்பது.

உரை.

"த்யாவா பிருதிவீ கச்ச ஸ்வாஹா" என்றது, உண்டாகிய பிரசைகளை வானும் மண்ணும் இருபக்கமுந் தாங்கிக்கொள்கின்றன என்கின்றது.

---

மழையைக் கொடுப்பதால் வைசுவாநரனுடைய உபயோகம் என்கின்றது.

பிராமணம்—13

**नभो दिव्यं गच्छ स्वाहेत्याह प्रजाभ्य एव प्रजाताभ्यो वृष्टिं नियच्छति ।**

என்பது.

உரை.

"நபோ திவ்யம் கச்ச ஸ்வாஹா" என்றது, உண்டாகிய பிரசைகளின் பொருட்டு வான் மழையைக் கொடுக்கின்றது என்கின்றது.

---

நிலையைக் கொடுப்பதால் வைசுவாநரனுடைய உபயோகம் என்கின்றது.

பிராமணம்—14

**अग्निं वैश्वानरं गच्छ स्वाहेत्याह प्रजा एव प्रजाता अस्यां प्रतिष्ठापयति ।**

என்பது.

உரை.

"அக்கினிம்" என்றது முதலியது, உண்டாகிய பிரசையை வைசுவாநராக்கினி இதில் நிலைத்திருக்கும்படி செய்கின்றது என்கின்றது.

---

"மனோமேஹார்தியச்ச" என்று வேண்டிக் கொள்வதற்குப் பிரசங்கம் இன்னதென்கின்றது.

பிராமணம்—15

**प्राणानां वा एषोऽवद्यति योऽवद्यति गुदस्य मनो मे हार्दि यच्छेत्याह प्राणानेव यथास्थानमुपह्वयते ।**

என்பது.

உரை.

குடலின் துண்டுகளை யறுத்தெடுத்தல் பிராணன்களின் இடங்களையே அறுத்தெடுத்தலாகின்றது. ஆதலின், "மனோமே" என்றது முதலியது, பிராணனிருப்பதற்கு இடமாகிய குடலை யறுத்துவிட்டதால் வேறிடஞ் சென்ற பிராணன்களை மந்திரத்தால் மீண்டும் இருந்த விடத்தில் நிலைக்க வைக்கின்றான் என்கின்றது.

---

இருதய சூலத்தை (இருதயத்தைக் குத்திக் காய்ச்சும் முள்ளை) எறிந்து விடல் வேண்டுமென்பதை விதிக்கின்றது.

பிராமணம்—16

**पशोर्वा आलब्धस्य हृदयꣳ शुगृच्छति सा हृदयशूलमभि समेति यत्पृथिव्याꣳ हृदयशूलमुद्वासयेत्पृथिवीꣳ शुचाऽर्पयेद्यदप्स्वपश्शुचाऽर्पयेच्छुष्कस्य चाऽऽर्द्रस्य च सधावुद्वासयत्युभयस्य शान्त्यै ।**

என்பது.

உரை.

கொல்லும் பசுவின் இருதயத்திற்குத் துன்பைக் கொடுத்தலால் அதை எறிதல் வேண்டும், நல்ல பூமியிற் போட்டால் பூமி துன்புறும், தண்ணீரில் போட்டால் அதுவுந் துன்புறும், காய்ந்ததும் காயாததுமாகிய இடத்தில் அதை எறிந்துவிடில் முற்கூறிய குற்றங்களிரண்டும் இல்லை என்கின்றது.

---

வசதீவரி நீர்)

இருதய சூலத்தை எறியும்போது செய்யவேண்டிய தியானத்தை விதிக்கின்றது.

பிராமணம்—17

यं द्विष्यात्तं ध्यायेच्छुचैवैनमर्पयति ॥

என்பது.

உரை.

எவனை வெறுக்கின்றானோ, அவனை நினைத்துக்கொள்ளல் வேண்டும். பகைவனை மனதில் நினைத்துக்கொள்ளல் வேண்டுமென்பது திரண்டபொருள் என்பது.

முதலநுவாகம்

முற்றிற்று.

---

## ஆறாங்காண்டம் நான்காம்பிரபாடகம்

### இரண்டாவது அநுவாகம்

வசதீவரியைக் கொண்டு வருவதைக் கூறும் பிராமணங்கள்.

ஆறு பஞ்சாதிக்குமேல் இருபத்தாறு பதங்களைக் கொண்டது.

देवा वै यज्ञमाग्नीध्रे व्यभजन्त ततो यदत्यशिष्यत तदब्रुवन्व-संतु नु न इदमिति तद्वसतीवरीणां वसतीवरित्वं तस्मिन्प्रातर्न समशक्नुवन्तदप्सु प्रावेशयन्ता वसतीवरीरभवन्वसतीवरीर्गृह्णाति यज्ञो वै वसतीवरीर्यज्ञमेवाऽऽरभ्य गृहीत्वोप वसति यस्यागृहीता अभि निम्रोचेदनारब्धोऽस्यं यज्ञस्स्यात् [६] यज्ञं वि च्छिन्द्या-ज्ज्योतिष्या वा गृह्णीयाद्धिरण्यं वाऽवधाय सशुक्राणामेव गृह्णाति यो वा ब्राह्मणो बहुयाजी तस्य कुम्भ्यानां गृह्णीयात्स हि गृहीत-वसतीवरीको वसतीवरीर्गृह्णाति पशवो वै वसतीवरीः पशूनेवाऽऽरभ्य गृहीत्वोप वसति यदन्वीपं तिष्ठन्गृह्णीयान्निर्मार्गुका अस्मात्पशवस्स्युः प्रतीपं तिष्ठन्गृह्णाति प्रतिरुध्यैवास्मै पशून्गृह्णातीन्द्रः

[७] वृत्रमहन्त्सो॑ऽपो॑ऽभ्यम्रियत तासां यन्मेध्यं यज्ञियꣳ सदे॑वमासीत्तदत्यमुच्यत ता वहन्तीरभवन्वहन्तीनां गृह्णाति या एव मेध्या यज्ञियाः सदेवा आपस्तासामेव गृह्णाति नान्तमा वहन्तीरतीयाद्यदन्तमा वहन्तीरतीयाद्यज्ञमति मन्येत न स्थावराणां गृह्णीयाद्वरुणगृहीता वै स्थावरा यत्स्थावराणां गृह्णीयात् [८] वरुणेनास्य यज्ञं ग्राहयेद्यद्वै दिवा भवत्यपो रात्रिः प्रविशति तस्मात्ताम्रा आपो दिवा ददृश्रे यन्नक्तं भवत्यपोऽहः प्रविशति तस्माच्चन्द्रा आपो नक्तं ददृश्रे छायायै चाऽऽतपतश्च संधौ गृह्णात्यहोरात्रयोरेवास्मै वर्णं गृह्णाति हविष्मतीरिमा आप इत्याह हविष्कृतानामेव गृह्णाति हविष्माꣳ अस्तु [९] सूर्य इत्याह सशुक्राणामेव गृह्णात्यनुष्टुभा गृह्णाति वाग्वा अनुष्टुग्वाचैवैनास्सर्वया गृह्णाति चतुष्पदयर्चा गृह्णाति त्रिस्सादयति सप्त सं पद्यन्ते सप्त पदा शक्वरी पशवश्शक्वरी पशूनेवाव रुन्धेऽस्मै वै लोकाय गार्हपत्य आधीयतेऽमुष्मा आहवनीयो यद्गार्हपत्य उपसादयेदस्मिँल्लोके पशुमान्त्स्याद्यदाहवनीयेऽमुष्मिन् [१०] लोके पशुमान्त्स्यादुभयोरुप सादयत्युभयोरेवैनं लोकयोः पशुमन्तं करोति सर्वतः परि हरति रक्षसामपहत्या इन्द्राग्नियोर्भागधेयीस्स्थेत्याह यथायजुरेवैतदाग्नीध्र उप वासयत्येतद्वै यज्ञस्यापराजितं यदाग्नीध्रं यदेव यज्ञस्यापराजितं तदेवैना उप वासयति यतः खलु वै यज्ञस्य विततस्य न क्रियते तदनु यज्ञꣳ रक्षाꣳस्यव चरन्ति यद्वहन्तीनां गृह्णाति क्रियमाणमेव तद्यज्ञस्य शये रक्षसामनन्ववचाराय न ह्येता ईल-

கொண்டுவருதல்)

यन्त्या तृतीयसवनात्परि शेरे यज्ञस्य संतत्यै [११]॥ स्यादिन्द्रो गृह्णीयाद्स्त्वमुष्मिन्क्रियते षड्विंशतिश्च ॥ २ ॥

இதில், வசதீவரி என்னும் நீரைக்கொண்டு வரும் முறை கூறப்படுகின்றது.

---

வசதீவரி என்னும் நீரை விதிக்கின்றது.

பிராமணம்—1

**देवा वै यज्ञमाग्नीध्रे व्यभजन्त ततो यदत्यशिष्यत तदब्रुवन्वसतु नु न इदमिति तद्वसतीवरीणां वसतीवरित्वं तस्मिन्प्रातर्न समशक्नुवन्तदप्सु प्रावेशयन्ता वसतीवरीरभवन्वसतीवरीर्गृह्णाति यज्ञो वै वसतीवरीर्यज्ञमेवाऽऽरभ्य गृहीत्वोप वसति ।**

என்பது.

உரை.

முன், தேவர்கள், ஆக்கினீத்ர மண்டபத்திலிருந்துகொண்டு, இது எமது இதுஎமது என்று வேள்விச் சாலையைக் கூறுகூறுகப் பங்கிட்டுக் கொண்டனர். அதில் எஞ்சியதை, இது இருக்குக காலையில் பங்கிட்டுக் கொள்வோம் என்றனர். பிறகு, காலையில் வந்து பார்க்கும்போது அது சிறிதளவாய் யாவருக்கும் பங்கிட்டுக்கொள்ள போதாததாயிருந்ததால் அதை நீரில் போட்டுவிட்டனர். வசது (இருக்குக) என்று சொல்லிவைத்த எக்ஞசாலையின் அமிசஞ் சேர்ந்த அந்நீர் வசதீவரி என்னுங்காரணப் பெயர் பெற்றது. ஆதலின், அந்நீரும் எக்ஞத்தின் அம்சமாதலால் எடுத்துக் கொள்ளல் வேண்டும். அதைக்கொண்டதால் எக்ஞமே எழும்பிவந்து உறுதியுடன் அருகில் வசிப்பதுபோலாகும் என்பது.

---

வசதீவரி நீர் எடுப்பதற்கு அத்த மனத்திற்கு முன் காலமே உரியது என்று, எதிர்மறை முகத்தால் விதிக்கின்றது.

பிராமணம்—2

**यस्यागृहीता अभि निम्रोचेदनारब्धोऽस्य यज्ञस्यायज्ञं विच्छिन्द्यात् ।**

என்பது

உரை.

நீர் எடுக்காமலே எடுக்கும் குறிப்புடனிருக்கும்போது சூரியன் ஒடுங்கில் முன் தினம் யாகம் தொடங்கப் பெறுததானது. மறுநாளிற் செய்யினும் விடுபட்டதாய்விடும்; ஆதலின், சூரியன் ஒடுங்குமுன் வசதீவரி நீரை எடுத்துக்கொள்ளல் வேண்டும் என்பது.

---

ஒருவாறு பொழுதுபோய்விடில் மூவகையான பரிகாரங்களை விதிக்கின்றது.

பிராமணம்—3

**ज्योतिष्या वा गृह्णीयाद्धिरण्यं वाऽवधाय सशुक्राणामेव गृह्णाति यो वा ब्राह्मणो बहुयाजी तस्य कुम्भ्यानां गृह्णीयात्स हि गृहीतवसतीवरीकः ।**

என்பது.

உரை.

கொள்ளியால் வெளிச்சங் காட்டியெடுத்தல் வேண்டும் என்பது முதல் பக்ஷம். குடத்தில் பொன்னைப்போட்டு எடுத்தல் வேண்டுமென்பது இரண்டாம் பக்ஷம். சோமயாகஞ் செய்தவனுடைய வீட்டிலுள்ள குடத்து நீரை எடுத்துக்கொள்ளல் வேண்டுமென்பது மூன்றும் பக்ஷம் என்பது.

---

மேற்கூறிய விதியையே எடுத்துக்கொண்டு புகழ்கின்றது.

பிராமணம்—4

**वसतीवरीर्गृह्णाति पशवो वै वसतीवरीः पशूनेवाऽऽरभ्य गृहीत्वोप वसति ।**

என்பது.

உரை.

வசதீவரியை எடுக்கின்றவன், வசதீவரி நீர் பசுவாம் ஆதலின் பசுவையடைவதற்குக் காரணமாதலால் பசுவாமென்க. இவ்வாற்றால் பசுவையே தொட்டு எடுத்துக்கொண்டு வைக்கின்றான் என்பது.

---

வசதீவரி நீரை எடுக்கும்போது ஓடுந் தண்ணீருக்கு எதிரே நின்று எடுப்பதை விதிக்கின்றது.

பிராமணம்—5

**यदन्वीपं तिष्ठन्गृह्णीयान्निर्मार्गुका अस्मात्पशवस्स्युः प्रतीपं तिष्ठन्गृह्णाति प्रतिरुध्यैवास्मै पशून्गृह्णाति ।**

என்பது

கொண்டுவருதல்)

உரை.

பிரவாகத்திற்குப் பின் முகமாய் நின்று எடுக்கில் பசுவைக் கேடுடைய தாகவே செய்து எடுக்கின்றான். நேர் முகமாய் எடுக்கின் கேட்டை நீக்கி எடுக்கின்றான் என்பது.

---

ஓடுந்தண்ணீரை விதிக்கின்றது.

பிராமணம்—6

**इन्द्रो वृत्रमहन्त्सोऽपोऽभ्यम्रियत तासां यन्मेध्यं यज्ञियꣳ सदेवमासी-त्तदत्यमुच्यत ता वहन्तीरभवन्वहन्तीनां गृह्णाति या एव मेध्या यज्ञिया-स्सदेवा आपस्तासामेव गृह्णाति ।**

என்பது.

உரை.

இந்திரனாற் கொல்லப்பட்ட விருத்திரன் தண்ணீரில் இறந்தனன். ஆதலின், தண்ணீர் புநிதமும் தேவத்தன்மையுடையதுமாய் ஓடுகின்றது. ஆனதால் ஓடுகின்ற தண்ணீரில் எடுத்தல் வேண்டும். எடுக்கில், புநிதம் தெய்வத்தன்மை எக்ஞயோக்யத் தன்மைகளுடன்கூட எடுத்ததாயிற்று என்பது.

---

ஓடுவதில் மிக அருகிலுள்ள நீரை எடுத்தல் வேண்டுமென்று எதிர் மறையால் விதிக்கின்றது.

பிராமணம்—7

**नान्तमा वहन्तीरतीयाद्यदन्तमा वहन्तीरतीयाद्यज्ञमति मन्येत ।**

என்பது.

உரை.

அருகிலுள்ள நீரைத் தாண்டில் எக்ஞத்தையே அவமதித்ததாகும். ஆகையால் கரைக்கருகிலுள்ளதாய் ஓடும் நீரையே எடுத்துக்கொள்ளல் வேண்டும் என்பது.

---

ஓடு நீரிலும், மடுவில் தங்கியதும், குளத்தில் நிறைந்துள்ளதும் கூடாதென விலக்குகின்றது.

பிராமணம்—8

**न स्थावराणां गृह्णीयाद्वरुणगृहीता वै स्थावरायस्स्थावराणां गृह्णीयाद्वरुणे-नास्य यज्ञं ग्राहयेत् ।**

என்பது.

உரை.

கட்டுபட்ட நீரையெடுத்தல்கூடாது. எடுக்கில், அது வருணனுற் கட்டுப்பட்டதாமாதலின் எக்ஞத்தை வருணனுல் கட்டுவித்ததாகும் என்பது

---

நீர் எடுப்பதற்கு நிழல் வெய்யில்களின் சந்திப்பு வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—9

**यद्वै दिवा भवत्यपो रात्रिः प्रविशति तस्मात्ताम्रा आपो दिवा ददृश्रे यन्नक्तं भवत्यपोऽहः प्रविशति तस्माच्चन्द्रा आपो नक्तं ददृश्रे छायायै चाऽऽतपतश्च संधौ गृह्णात्यहोरात्रयोरेवास्मै वर्णं गृह्णाति ।**

என்பது.

உரை.

சிறிது பகல் இருக்கும்போதே இரவு தண்ணீரிற் புகுந்து விடுகின்றது. அப்போது, தண்ணீரின் வெண்மையும் இரவின் கறுப்பும் கலந்ததால் சிறிது தாமிரநிறமாய்த் தோற்றுகின்றது. இது இராகுவாற் பிடிக்கப்பட்ட சந்திரன் போன்று என்க. சிறிது இரவு இருக்கும்போதே பகல் தண்ணீரிற் புகுந்து விடுகின்றது. அப்போது, தண்ணீரின் வெண்மையும் பகலின் வெண்மையுஞ்சேர்வதால் மிக வெண்மைமாய்த் தோற்றுகின்றது. ஆதலின், நிழலும் வெய்யிலும் கூடியிருக்குமிடத்தில் வசதீவரி நீரை எடுத்தல் வேண்டும் என்பது.

---

தண்ணீருக்கு விசேடணமாகிய மந்திரத்திலுள்ள "அவிழ்மதீ:" என்னுஞ் சொல்லால் அவியைத்தேடல் குறிப்பிடப்படுகின்றது என்கின்றது.

பிராமணம்—10

**हविष्मतीरिमा आप इत्याह हविष्कृतानामेव गृह्णाति ।**

என்பது.

உரை.

"ஹவிஷ்மதீ:" என்றது முதலியது, அவி செய்கின்றவைகளின் பொருட்டே (சோமங்களின் பொருட்டே) வசதீவரிநீர் எடுத்துக்கொள்ளப்படுகின்றது என்கின்றது.

---

கொண்டுவருதல்)

'சூரியன்' என்றது தண்ணீரின் ஒளியைக் குறிப்பிக்கின்றது என்கின்றது.

பிராமணம்—11

**हविष्मां॑ अस्तु सूर्य इत्याह सशुक्राणामेव गृह्णाति ।**

என்பது.

உரை.

*"ஹவிஷ்மாந்" என்றது முதலியது, ஒளியுடன்கூடவே நீரை எடுத்துக்கொள்கின்றான் என்பது.*

---

மந்திரத்திலுள்ள சந்தத்தின் உபயோகத்தைக் கூறுகின்றது.

பிராமணம்—12

**अनुष्टुभा गृह्णाति वाग्वा अनुष्टुग्वाचैवैनास्सर्वया गृह्णाति ।**

என்பது.

உரை.

*அநுஷ்டுப் சந்தத்தால் எடுக்கின்றான். அநுஷ்டுப் வாக்காம் ஆதலின் எல்லா வாக்காலும் எடுக்கின்றான் என்பது.*

---

ஹவிஷ்மதீः என்றது முதல், இருக்கின் பாதங்கள் நான்காம். வைக்குமிடங்கள் மூன்றும் ஆதலின் இவ்விரண்டையும் புகழ்கின்றது.

பிராமணம்—13

**चतुष्पद्यर्चा गृह्णाति त्रिस्सादयति सप्त संपद्यन्ते सप्तपदा शक्करी पशव-श्शाकरी पशूनेवावरुन्धे ।**

என்பது.

உரை.

*மந்திரத்தின் பாதங்கள் நான்கும், நீரை வைக்குமிடங்கள் மூன்றுஞ் சேர்ந்து ஏழாம். ஆதலின், ஏழு பாதங்களையுடையது சாக்வரி என்னுஞ் சந்தமாம் பசுக்கள் சாக்வரிச் சந்தங்களாகின்றன. இதனால் பசுக்களையடைகின்றான் என்பது.*

---

சாலாமுகீயம் உத்தரவேதி என்னும் இரண்டிடத்திலும் வைப்பதை விதிக்கின்றது.

பிராமணம்—14

**असौ वै लोकाय गार्हपत्य आधीयतेऽमुष्मा आहवनीयो यद्गार्हपत्य उपसादयेदस्मिँल्लोके पशुमान्त्स्याद्यदाहवनीयेऽमुष्मिन् लोके पशुमान्त्स्यादुभयोरुप सादयत्युभयोरेवैनं लोकयोः पशुमन्तं करोति ।**

என்பது.

உரை.

இவ்வுலகின் பொருட்டு காருகபத்தியத்தில் வைக்கின்றான். பரலோகத்தின் பொருட்டு ஆகவனீயத்தில் வைக்கின்றான். இவ்வாறு இரண்டிடத்திலும் வைத்தலால் இரண்டுலகங்களிலும் பசுக்களை யுடையவனாகின்றான் என்பது.

---

மூன்றிடங்களிலுஞ் சுற்றுதலை விதிக்கின்றது.

பிராமணம்—15

**सर्वतः परिहरति रक्षसामपहत्यै ।**

என்பது.

உரை.

இராக்கதர்களை நீக்குதற் பொருட்டு எல்லா விடங்களிலும் வசதீவரி நீரை எடுத்துக்கொண்டு சுற்றிப் போகின்றான் என்பது.

---

நான்கு மந்திரங்களும் வெளிப்படைகள் என்கின்றது.

பிராமணம்—16

**इन्द्राग्नियोर्भागधेयीस्स्थेत्याह यथायजुरेवैतत् ।**

என்பது.

உரை.

"இந்திராக்னியோ:" என்றது முதலியது, எசுர்களிலுள்ள பொருளையே உடையது என்கின்றது.

---

கொண்டுவருதல்)

விதிக்கின்றது

பிராமணம்—17

**आग्नीध्र उपवासयत्येतद्वै यज्ञस्यापराजितं यदाग्नीध्रं यदेव यज्ञस्यापराजितं तदेवैना उपवासयति ।**

என்பது.

உரை

ஆக்னீத்ரனுடைய இடத்தில் வைக்கின்றான். அது எக்ஞத்தின் தோல்வியிலாத இடமாம். ஆதலின் அங்கு நீரை வசிக்கும்படி வைக்கின்றான் என்பது.

---

ஓடும் நீரில் எடுத்தல் வேண்டும் என்றதையே புகழ்கின்றது.

பிராமணம்—18

**यतः खलु वै यज्ञस्य विततस्य न क्रियते तदनु यज्ञꣳ रक्षाꣳस्यव चरन्ति यद्वहन्तीनां गृह्णाति क्रियमाणमेव तद्यज्ञस्य शये रक्षसामनन्ववचाराय ।**

என்பது.

உரை.

விரிந்த யாகத்தின் அங்கத்தை விசாரித்துச் செய்யாவிடில் அவ்வழியாய் இராக்கதர் நுழைந்து வேள்வியைக் கவர்ந்து கொள்கின்றனர். ஓடும் நீரை எடுக்கில் செய்துகொண்டிருக்கும்போதே தாங்கிவிடுகின்றவரைப் போலாவர். இது, இராக்கதர் திரியாமலிருத்தற் பொருட்டு என்கின்றது.

---

ஆக்னீத்ரனிடத்தில் வைத்தது மூன்றாவது சவனம் வரை எடுக்காமல் இருத்தல்வேண்டும் என விதிக்கின்றது.

பிராமணம்—19

**न ह्येता ईलयन्त्या तृतीयसवनात्परि शेरे यज्ञस्य संतत्यै ॥**

என்பது.

உரை.

மூன்றும் முறையும் சோமரசம் பிழியும்வரை எக்ஞம் சந்ததமாம் பொருட்டு வைத்தநீரை எடுக்காமல் இருத்தல் வேண்டும் என்பது.

இரண்டாவது அநுவாகம்

முற்றிற்று.

---

## ஆறுங்காண்டம் நான்காம் பிரபாடகம்

### மூன்றாவது அநுவாகம்

*சோமத்தை வண்டியிலிருந்து இறக்குவதைக்கூறும் பிராமணங்கள்.*

நான்கு பஞ்சாதிக்குமேல் இருபத்தைந்து பதங்களை கொண்டது.

ब्रह्मवादिनो वदन्ति स त्वा अध्वर्युस्स्याद्यस्सोममुपावहरन्त्सर्वाभ्यो देवताभ्य उपावहरेदिति हृदे त्वेत्याह मनुष्येभ्य एवैतेन करोति मनसे त्वेत्याह पितृभ्य एवैतेन करोति दिवे त्वा सूर्याय त्वेत्याह देवेभ्य एवैतेन करोत्येतावतीर्वै देवतास्ताभ्य एवैनꣳ सर्वाभ्य उपावहरति पुरा वाचः [१२] प्रवदितोः प्रातरनुवाकमुपाकरोति यावत्येव वाक्तामव रुन्धेऽपोऽग्रेऽभिव्याहरति यज्ञो वा आपो यज्ञमेवाभि वाचं विसृजति सर्वाणि छन्दाꣳस्यन्वाह पशवो वै छन्दाꣳसि पशूनेवाव रुन्धे गायत्रिया तेजस्कामस्य परि दध्यात्त्रिष्टुभेन्द्रियकामस्य जगत्या पशुकामस्यानुष्टुभा प्रतिष्ठाकामस्य पङ्क्त्या यज्ञकामस्य विराजाऽन्नकामस्य शृणोत्वग्निस्समिधा हवम् [१३] म इत्याह सवितृप्रसूत एव देवताभ्यो निवेद्यापोऽच्छैत्यप इष्य होतरित्याहेषितꣳ हि कर्म क्रियते मैत्रावरुणस्य चमसाध्वर्यवा द्रवेत्याह मित्रावरुणौ वा अपां नेतारौ ताभ्यामेवैना अच्छैति देवीरापो अपां नपादित्याहाऽऽहुत्यैवैना निष्क्रीय गृह्णात्यथो हविष्कृतानामेवाभिघृतानां गृह्णाति [१४] कार्षिरसीत्याह शमलमेवाऽऽसामप प्लावयति समुद्रस्य वोऽक्षित्या उन्नय इत्याह तस्माद्यमानाः पीयमाना आपो न क्षीयन्ते योनिर्वै यज्ञस्य चात्वालं यज्ञो वसतीवरीर्होतृचमसं च मैत्रावरुणचमसं च सꣳस्पर्श्य वसती-

சோமத்தை இறக்குதல்)

वरीव्य्योनंयति यज्ञस्य सयोनित्वायाथो स्वादेवैना योनेः प्रजनयत्य ध्वर्योऽवेरपा३ इत्याहोतेमंनन्नमुरुतेमाः पश्येति वावैतदाह यद्यग्नि-ष्टोमो जुहोति यद्युक्थ्यः परिधौ नि मार्ष्टि यद्यतिरात्रो यजुर्वदन्प्र पद्यते यज्ञक्रतूनां व्यावृत्त्यै [१५] ॥ वाचो हवमभिघृतानां गृह्णा-त्युत पञ्चविंशतिश्च ॥ ३ ।

இதில், சோமத்தை வண்டியிலிருந்து கீழே இறக்கும்முறை கூறப்படுகின்றது.

---

ஈண்டு, "கீழே இறக்குக" என்னும் விதியைக் குறிப்பிட்டு "இருதயம்" என்பது முதலிய சொற்களுக்கு உரிய பொருள்களை விளக்குகின்றது.

பிராமணம்—1

ब्रह्मवादिनो वदन्ति स त्वा अध्वर्युस्स्याद्यस्सोममुपावहरन्त्सर्वाभ्यो देवताभ्य उपावहरेदिति हृदे त्वेत्याह मनुष्येभ्य एवैतेन करोति मनसे त्वेत्याह पितृभ्य एवैतेन करोति दिवे त्वा सूर्याय त्वेत्याह देवेभ्य एवैतेन करोत्येतावतीर्वै देवतास्ताभ्य एवैनꣳ सर्वाभ्य उपावहरति ।

என்பது.

உரை.

பிரமவாதிகள், எல்லாத் தேவர்களின் பொருட்டும் சோமத்தை வண்டியிலிருந்து இறக்குகின்றவனே அத்வரியு ஆகின்றான். ஆதலின், "ஹருதேத்வா" என்றது முதலியது, மனிதர், பிதிர்க்கள், சூரியன், மற்றும் எல்லாத் தேவர்கள் அனைவருக்கும் இச் சோமத்தால் களிப்புண்டாக்குகின்றான் என்கின்றது.

---

ஹோதாவின் பிரேஷையை விதிக்கின்றது.

பிராமணம்—2

पुरा वाचः प्रवदितोः प्रातरनुवाकमुपाकरोति यावत्येव वाक्तामवरुन्धे ।

என்பது.

உரை.

மனிதர் உஷாக்காலங்களிற் பேசிக்கொண்டிருக்கின்றனர். பறவைகள் கூச்சலிடுகின்றன. அவைகளும் பேச்சுக்கள். விடியலுக்குமுன் ஓதும் அநுவாகம் பிராதரநுவாகம். ஆதலின், பொழுது விடியுமுன் பிராதரநுவாகத்தை ஓதும்படி ஹோதாவை ஏவல்வேண்டும். இதனால், உள்ள வாக்குக்களனைத்தையும் அடைகின்றான் என்பது.

---

பிராதரநுவாகத்தின் முதலாம் இருக்கை விதிக்கின்றது.

பிராமணம்—3

**अपोऽग्रेऽभिव्याहरति यज्ञो वा आपो यज्ञमेवाभि वाचं विसृजति ।**

என்பது

உரை.

தண்ணீரைக்கூறும் இருக்கை முதலில் ஓதல்வேண்டும். ஏனெனின்? எக்ஞம் தண்ணீராம் ஆதலின் என்க. எக்ஞத்தைக்குறித்து வாக்கை விடுகின்றான் என்பது.

---

அதற்குமேல் ஓதவேண்டிய இருக்கு மந்திரங்களை விதிக்கின்றது.

பிராமணம்—4

**सर्वाणि छन्दाꣳस्यन्वाह पशवो वै छन्दाꣳसि पशूनेवावरुन्धे ।**

என்பது.

உரை.

ஏனைய சந்தங்களோடுகூடின இருக்குமந்திரங்களை ஓதுக. ஓதில், சந்தங்கள் பசுக்களாமாதலின் பசுக்களையடைகின்றான் என்பது.

---

பிராதநுவாக முடிவில் ஓதவேண்டிய இருக்கு மந்திரத்தை விருப்ப வேறுபாட்டால் விகற்பமாய் விதிக்கின்றது.

பிராமணம்—5

**गायत्रिया तेजस्कामस्य परि दध्यात्त्रिष्टुभेन्द्रियकामस्य जगत्या पशुकामस्यानुष्टुभा प्रतिष्ठाकामस्य पङ्क्त्या यज्ञकामस्य विराजाऽन्नकामस्य ।**

என்பது.

இறக்குதல்)

உரை.

அழகை விரும்பியவன் காயத்திரிச்சந்த இருக்கால் முடித்தல் வேண்டும். இந்திரிய விருப்புடையவன் திரிஷ்டுப் சந்த இருக்காலும், பசுவை விரும்பியவன் சகதிச் சந்த இருக்காலும், பிரதிட்டையை விரும்பியவன் அநுஷ்டுப் சந்த இருக்காலும், எக்ஞத்தை விரும்பியவன் பந்திச்சந்த இருக்காலும், உணவுப்பொருளை விரும்பியவன் விராட்சந்த இருக்காலும் முடித்தல் வேண்டும் என்பது.

---

ஏகதனமென்னும் குடநீரை எடுக்கும் மந்திரத்தில் அக்கினி முதலியவைகள் யான் அழைப்பதைக்கேட்க, என்பதின் பயனைக் கூறுகின்றது.

பிராமணம்—6

**शृणोत्वग्निस्समिधाहवम्म इत्याह सवितृप्रसूत एव देवताभ्यो निवेद्यापोऽच्छैति ।**

என்பது.

உரை.

"சுருணோது" என்றது முதலியது, சவிதாவின் ஏவலால் தேவர்கட்குத் தெரிவித்துவிட்டு நீரெடுப்பதற்குச் செல்கின்றான் என்பது.

---

பிரேஷை மந்திரத்தைத் தோற்றுவிக்கின்றது.

பிராமணம்—7

**अप इष्य होतरित्याहेषितꣳ हि कर्म क्रियते ।**

என்பது.

உரை.

"அப இஷ்ய" என்றது முதலியது, ஹோதாவே! நீ கொண்டுவரும் நீரைக்குறித்து, "பிர தேவத்ரா" என்றது முதலிய இருக்கு மந்திரத்தை ஓதுவாயாக என்கின்றான். ஏவப்பெற்ற காரியமே உலகிலும் நன்கு செய்யப்படுகின்றது என்பது கருத்து.

---

மற்றொரு பிரேஷையைத் தோற்றுவிக்கின்றது.

பிராமணம்—8

**मैत्रावरुणस्य चमसाध्वर्यवा द्रवेत्याह मित्रावरुणौ वा अपां नेतारौ ताभ्यामेवैना अच्छैति ।**

என்பது.

உரை.

சமசங்களை யெடுக்கும் அத்வர்யுக்கள் என்பவர்கள் வேட்போர்களின் பரிசாரகர்கள். அவர்களுள், மைத்திராவருணன் என்னும் சமசாத்வர்யுவைக் கூப்பிட்டு நீ வருவாயாக, என்று ஏவல்வேண்டும். இதனால், நீரையுண்டாக்கும் மித்திரன் வருணன் என்னும் இரண்டு தேவதைகளுடன் நீரையடையச் செல்கின்றான் என்பது.

---

நீரில் செய்யப்படும் ஆகுதி, எடுத்த தண்ணீருக்கு விலையாக அவியாகஞ் செய்தற் பொருட்டாம் என்கின்றது.

பிராமணம்—9

**देवीरापो अपां नपादित्याहाऽऽहुत्यैवैना निष्क्रीय गृह्णात्यथो हविष्कृताना-मेवाभिघृतानां गृह्णाति ।**

என்பது.

உரை.

"தேவீராபஃ" என்றது முதலியது, ஆகுதியால் இத்தண்ணீரை மீட்டு எடுத்துக்கொள்கின்றான். ஆதலின், அவிசெய்கின்றவைகளின் பொருட்டே இது எடுக்கப்படுகின்றது என்கின்றது.

---

நெய்யை, தண்ணீரிற் கலக்கி விடுவதை விதிக்கின்றது.

பிராமணம்—10

**कार्षिरसीत्याह शमलमेवाऽऽसामप प्लावयति ।**

என்பது.

உரை.

"கார்ஷிஃ" என்றது முதலியது, அதிலுள்ள மலினபாகத்தை தண்ணீரிற் கலக்கிவிடுகின்றான் என்பது.

---

அக்ஷிதிம் (குறைவிலாமை) என்பதை விரிக்கின்றது.

பிராமணம்—11

**समुद्रस्य वोऽक्षित्या उन्नय इत्याह तस्माद्द्यमानाः पीयमाना आपो न क्षीयन्ते ।**

என்பது.

இறக்குதல்)

உரை.

"சமுத்ரஸ்ய" என்றது முதலியது சமசத்தால் மும்முறை நெய் கலக்கிய நீரை, ஏகதனம் என்னுங் குடத்திலும், "பன்னேசனீ" என்னும் பாத்திரத்திலும் எடுத்துக்கொள்ளல் வேண்டும் என்பது.

---

அதை விதிக்கின்றது.

பிராமணம்—12

**योनिर्वै यज्ञस्य चात्वालं यज्ञो वसतीवरीर्होतृचमसं च मैत्रावरुणचमसं च सꣳस्पर्श्य वसतीवरीर्व्यानयति यज्ञस्य सयोनित्वायाथो स्वादेवैना योनेः प्रजनयति ।**

என்பது.

உரை.

மண்ணெடுக்குங் குழி, உத்தரவேதிகையை உண்டாக்குவதால் எக்ஞத்திற்குக் காரணமாம். எக்ஞத்திற்கு அங்கமாதலின் வசதீவரி நீர் எக்ஞமாம். ஹோதாவின் சமசத்தையும், மைத்திராவருண சமசத்தையும் தொட்டுவிட்டு வசதீவரி நீரை மொண்டு கொள்ளல்வேண்டும். இது, எக்ஞத்தின் காரணமுடையதாந்தன்மையின் பொருட்டாம். மற்றும், இக்காரணம் நீரில் இன்சுவையை உண்டாக்குகின்றது என்பது.

---

வினு விடை கூறும் மந்திரத்தைத் தோற்றுவிக்கின்றது.

பிராமணம்—13

**अध्वर्योऽवेरपा३ इत्याहोतेमनन्नमुरुतेमाः पश्येति वावैतदाह ।**

என்பது.

உரை.

அத்வரியுவே! நீ நீரை அடைந்தனையா? என்றது, ஹோதாவே! யான் அடைந்தனன். மற்றும், நீரும் இனிது கிடைத்தது நீயே இதை நேரில் பார்த்துக்கொள் என்கின்றான் என்பது.

---

கிருது கரணம் என்னும் ஹோம விஷயப் பாகுபாட்டை விதிக்கின்றது.

பிராமணம்—14

**यद्यग्निष्टोमो जुहोति यद्युक्थ्यः परिधौ नि मार्ष्टि यद्यतिरात्रो यजुर्वदन्प्रपद्यते यज्ञक्रतूनां व्यावृत्त्यै ॥**

என்பது.

உரை.

*அநுட்டிப்பது அக்கினிட்டோமமாயிருக்கில் மந்திரத்தால் கிரது கரணம் ஹோமஞ் செய்தல்வேண்டும். உக்த்யமாயிருக்கில், பருதியில் நெய்யைத் தடவல் வேண்டும். அதி ராத்ரமாயிருக்கில் மந்திரத்தை ஓதிக்கொண்டு அவிர்த்தானத்தை யடைதல் வேண்டும். இவ்வாறு அநுட்டிக்கத்தக்க அக்கினிட்டோம முதலியவைகளின் வேறுபாடுகளை இப்போது உணர்ந்துகொள்ளல் வேண்டும். உபநிடதத்திலும் கிருது என்னுஞ்சொல் கூறப்பட்டிருத்தலின் அதை நீக்குதற் பொருட்டு எக்ஞும் எனப்பட்டது. தவம் முதலியவைகளிலும் எக்ஞும் என்னுஞ்சொல் கூறப்பட்டிருத்தலின் அதை விலக்குதற்கு கிருது எனப்பட்டது என்பது.*

மூன்ருவது அநுவாகம்
*முற்றிற்று.*

---

## ஆருங்காண்டம் நான்காம் பிரபாடகம்

### நான்காவது அநுவாகம்

*சோமக்கொடியை அளத்தலை விதிக்கும் பிராமணங்கள்.*

மூன்று பஞ்சாதிக்குமேல் நாற்பத்துநான்கு பதங்களைக் கொண்டது.

देवस्य त्वा सवितुः प्रसव इति ग्रावाणमा दत्ते प्रसूत्या
अश्विनोर्बाहुभ्यामित्याहाश्विनौ हि देवानामध्वर्यू आस्तां पूष्णो
हस्ताभ्यामित्याह यत्यै पशवो वै सोमो व्यान उपांशुसवनो
यदुपांशुसवनमभि मिमीते व्यानमेव पशुषु दधातीन्द्राय त्वेन्द्राय
त्वेति मिमीत इन्द्राय हि सोम आह्रियते पञ्च कृत्वो यजुषा
मिमीते [१६] पञ्चाक्षरा पङ्क्तिः पाङ्क्तो यज्ञो यज्ञमेवाव रुन्धे
पञ्च कृत्वस्तूष्णीं दश सं पद्यन्ते दशाक्षरा विराडन्नं विराड्-
विराजैवान्नाद्यमव रुन्धे श्वात्रास्थ वृत्रतुर इत्याहैष वा अपां-
सोमपीथो य एवं वेद नाप्स्वार्तिमार्च्छति यत्ते सोम दिवि ज्योति
रित्याहैभ्य एवैनम् [१७] लोकेभ्यस्सं भरति सोमो वै राजा

அளத்தல்)

दिशोऽभ्यध्यायत्स दिशोऽनु प्राविशत्प्रागपागुदगधरागित्याह दिग्भ्य एवैनꣳ सं भरत्यथो दिश एवास्मा अव रुन्धेऽम्ब निष्वरेत्याह कामुका एनꣳ स्त्रियो भवन्ति य एवं वेद यत्ते सोमादाभ्यं नाम जागृवीति [१८] आहैष वै सोमस्य सोमपीथो य एवं वेद न सौम्यामार्तिमार्च्छति घ्नन्ति वा एतत्सोमं यदभिषुण्वन्त्यꣳशूनप गृह्णाति त्रायत एवैनं प्राणा वा अꣳशवः पशवस्सोमोऽꣳशून्पुनरपि सृजति प्राणानेव पशुषु दधाति द्वौद्वावपि सृजति तस्माद्द्वौद्वौ प्राणाः [१९] ॥ यजुषा मिमीत एनं जागृवीति चतुश्चत्वारिꣳशच्च ॥ ४ ॥

இதில், சோமக்கொடிகளை அளக்கும்வகை கூறப்படுகின்றது.

---

சோமரசம் பிழியுங்கல்லை எடுப்பதை விதிக்கின்றது.

பிராமணம்—1

देवस्य त्वा सवितुः प्रसव इति ग्रावाणमा दत्ते प्रसूत्या अश्विनोर्बाहुभ्यामित्याहाश्विनौ हि देवानामध्वर्यू आस्तां पूष्णो हस्ताभ्यामित्याह यत्यै ।

என்பது.

உரை.

சவிதா தேவதையின் ஏவலால் எடுக்கின்றான். அசுவினிகள், தேவர்களின் அத்வரியுக்களானதால் அவர்களுடைய கைகளாலும் பூஷாவின் கைகளாலும் என்றது, விரைவில் எடுக்க முயலுதற்பொருட்டு என்கின்றது.

---

சோமத்தை அளந்தெடுப்பதை விதிக்கின்றது.

பிராமணம்—2

पशवो वै सोमो व्यान उपाꣳशुसवनो यदुपाꣳशुसवनमभि मिमीते व्यानमेव पशुषु दधाति ।

என்பது,

உரை.

சோமங்கள் பசுக்களாம். குழவிக்கல் வியானனும், அதைக் குறித்து சோமத்தை அளந்தெடுத்தல் வேண்டும். இதனல், பசுக்களில் வியானனை நிலைக்கச் செய்கின்றான் என்பது.

---

எல்லா மந்திரங்களிலும் இந்திரன், என்னுஞ் சோல்லிருப்பதற்குக் கருத்தைக் கூறுகின்றது.

பிராமணம்—3

**इन्द्राय त्वेन्द्राय त्वेति मिमीत इन्द्राय हि सोम आह्रियते ।**

என்பது

உரை.

இந்திரன் பொருட்டு, இந்திரன் பொருட்டு என்று அளக்கின்றான் என்றது, இந்திரன் பொருட்டே சோமம் வாங்கிக் கொள்ளப்படுகின்றது என்பது.

---

அளப்பதை விதிக்கின்றது.

பிராமணம்—4

**पञ्च कृत्वो यजुषा मिमीते पञ्चाक्षरा पङ्क्तिः पाङ्क्तो यज्ञो यज्ञमेवावरुन्धे पञ्च कृत्वस्तूष्णीं दश सं पद्यन्ते दशाक्षरा विराडन्नं विराड्विराजैवान्नाद्यमव रुन्धे ।**

என்பது.

உரை.

ஐந்துமுறை எசுரால் அளந்தெடுக்கின்றான். ஐந்து எழுத்துக்களையுடையது பந்திச்சந்தம். எக்ஞம் பந்தி எனப்படும். இதனல், எக்ஞத்தையே யடைகின்றான். ஐந்துமுறை மந்திரமின்றி அளந்தெடுத்தல்வேண்டும். ஆக பத்தாகின்றது. பத்தெழுக்களைக்கொண்டது விராட்ச் சந்தம். விராட் அன்னமாம் இதனல் அன்னத்தை யடைகின்றான் என்பது.

---

"உபகூதாः சோமஸ்யபிபத" என்பதன் கருத்தைக் கூறுகின்றது.

பிராமணம்—5

**श्वात्रास्थ वृत्रतुर इत्याहैष वा अपाᳪँसोमपीथः ।**

என்பது,

இறக்குதல்)

உரை.

"ஸ்வாத்ரா:" என்றது முதலியது, தண்ணீர் சோமத்தை அருந்துகின்றது என்கின்றது. இதுவே சோமபானமாம்.

---

இதை யுணர்ந்தவனைப் புகழ்கின்றது.

பிராமணம்—6

**य एवं वेद नाप्स्वार्तिमार्च्छति ।**

என்பது

உரை.

இவ்வாறுணர்ந்தவன் நீரில் இறக்கமாட்டான் என்பது.

---

சோமத்தைப்போற்று மந்திரத்திலுள்ள "திவி" என்பது முதலியதின் கருத்தைக் கூறுகின்றது.

பிராமணம்—7

**यत्ते सोम दिवि ज्योतिरित्याहैभ्य एवैनं लोकेभ्यस्संभरति ।**

என்பது.

உரை.

"யத்தே" என்றது முதலியது, மூன்றுலகங்களிலும் இருந்து இச்சோமம் பாதுகாக்கின்றதென்கின்றது.

---

சோமக் கொடியின்மீது குழவிக்கல்லை வைத்துச் சுற்றுவதில், திசைகட்கு ஓடிவருந்தன்மை கூறியதின் கருத்தைக் கூறுகின்றது.

பிராமணம்—8

**सोमो वै राजा दिशोऽभ्यध्यायत्स दिशोऽनु प्राविशत्प्रागपागुदगधरागित्याह दिग्भ्य एवैनꣳ संभरत्यथो दिश एवास्मा अवरुन्धे ।**

என்பது.

உரை.

"சோமோவை" என்றது முதலியது, இதை திக்குக்களில் நிறைக்கின்றான். இதனால் திசைகளை யடைகின்றான் என்கின்றது.

---

'அம்ப' என்பது முதலிய சொற்கள் மாதர்களின் விளையாட்டின் பொருட்டே சொல்லப்படுகின்றன. ஆதலின், 'அம்ப' என்பதால் இங்கு, தியானவிதி குறிப்பிக்கப்படுகின்றது என்னுங் கருத்தால் உரை கூறுகின்றது.

பிராமணம்—9

**अम्ब निष्वरेत्याह ।**

*என்பது.*

உரை.

*"அம்ப" என விளையாடலின் தியானிக்க வேண்டுமென்பது கருத்து என்பது.*

---

இஃதுணர்ந்தவனைப் புகழ்கின்றது.

பிராமணம்—10

**कामुका एनं स्त्रियो भवन्ति य एवं वेद ।**

*என்பது.*

உரை.

*இத்தன்மையை யுணர்ந்தவனிடத்தில் மாதர்கள் மோகிக்கின்றார்கள் என்பது.*

---

"சோமாய ஸ்வாஹா" என்று கூறியதின் கருத்துச் சொல்லப்படுகின்றது.

பிராமணம்—11

**यत्ते सोमादाभ्यं नाम जागृवीत्याहैष वै सोमस्य सोमपीथः ।**

*என்பது.*

உரை.

*"யத்தே" என்றது முதலியது, அக்கினியில் ஹோமஞ் செய்வதின்றி நீருக்குச் சோமபானங் கூறப்பட்டதுபோல், இம்மந்திரத்தால் சோமக் கொடித் துண்டுக்களைப் போடல்வேண்டும் என்கின்றது.*

---

சோமபானத்தை உணர்ந்தவனைப் புகழ்கின்றது.

பிராமணம்—12

**य एवं वेद न सौम्यामार्तिमार्च्छति ।**

*என்பது.*

இறக்குதல்)

உரை.

*இவ்வாறுணர்ந்தவனுடைய சோமயாகங் கெட்டுப்போகாது என்பது.*

---

ஆறு சோமக்கோடித் துண்டுகளை, சோமக்கோடிக் கூட்டத்திலிருந்து பிரித்தல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—13

**घ्नन्ति वा एतत्सोमं यदभिषुण्वन्त्यंशूनप गृह्णाति त्रायत एवैनम् ।**

என்பது.

உரை.

*சோமக்கொடிகள் இடிக்கப்படுகின்றன. அவ்வேதனையிலிருந்து சோமக்கொடியின் துண்டுகளைப் பாதுகாக்கின்றான் என்பது.*

---

மகாபிஷவத்தி (பெரிய சோமரசம் பிழிவதி)ல் அவற்றைச் சேர்க்க வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—14

**प्राणा वा अंशवः पशवस्सोमोऽंशून्पुनरपि सृजति प्राणानेव पशुषु दधाति ।**

என்பது.

உரை.

*சோமக்கொடித் துண்டுகள் பிராணன்கள். சோமக்கொடிகள் பசுக்கள். அத்துண்டுகளை மீண்டுஞ் சேர்த்தல், பசுக்களிடத்தில் பிராணன்களை நிலைத்திருக்கும்படி செய்தல் என்பது.*

---

மும்முறை பிழியும்போதும் தனித்தனி சோமக்கோடித் துண்டுகளைச் சேர்த்தல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—15

**द्वौद्वावपि सृजति तस्माद्द्वौद्वौ प्राणाः ॥**

என்பது.

உரை.

இரட்டை இரட்டைகளாகச் சேர்க்கின்றான். ஆதலின், கண்கள், செவிகள், மூக்குக்கள், பிராணன்கள் தனித்தனி இரண்டிரண்டாக இருக்கின்றன என்பது.

நான்காவது அநுவாகம்
முற்றிற்று.

---

## ஆறுங்காண்டம் நான்காம்பிரபாடகம்

### ஐந்தாவது அநுவாகம்

*உபாம்சுக்கிரகத்தைக் கூறும் பிராமணங்கள்.*

ஏழு பஞ்சாதிக்குமேல் இரண்டு பதங்களைக் கொண்டது.

प्राणो वा एष यदुपाꣳशुर्यदुपाꣳश्वग्रा ग्रहा गृह्यन्ते प्राणमेवानु प्रयन्त्यरुणो ह स्माऽऽहौपवेशिः प्रातस्सवन एवाहं यज्ञꣳ सꣳस्थापयामि तेन ततस्सꣳस्थितेन चरामीत्यष्टौ कृत्वोऽग्रेऽभिषुणोत्यष्टाक्षरा गायत्री गायत्रं प्रातस्सवनं प्रातस्सवनमेव तेनाऽऽमोत्येकादश कृत्वो द्वितीयमेकादशाक्षरा त्रिष्टुप्त्रैष्टुभं माध्यंदिनं [२०] सवनं माध्यंदिनमेव सवनं तेनाऽऽप्नोति द्वादश कृत्व स्तृतीयं द्वादशाक्षरा जगती जागतं तृतीयसवनं तृतीयसवनमेव तेनाऽऽप्नोत्येताꣳह वाव स यज्ञस्य सꣳस्थितिमुवाचास्कन्दायास्कन्नꣳ हि तद्यद्यज्ञस्य सꣳस्थितस्य स्कन्दत्यथो खल्वाहुर्गायत्री वाव प्रातस्सवने नातिवाद इत्यनतिवादुक एनं भ्रातृव्यो भवति य एवं वेद तस्मादष्टावष्टौ [२१] कृत्वोऽभिषुत्यं ब्रह्मवादिनो वदन्ति पवित्रवन्तोऽन्ये ग्रहा गृह्यन्ते किंपवित्र उपाꣳशुरिति वाक्पवित्र इति ब्रूयाद्वाचस्पतये पवस्व वाजिन्नित्याह वाचैवैनं

पवयति वृष्णो अꣳशुभ्यामित्याह वृष्णो ह्येतावꣳशू यौ सोमस्य गभस्तिपूत इत्याह गभस्तिना ह्येनं पवयति देवो देवानां पवित्रमसीत्याह देवो ह्येषः [२२] सन्देवानां पवित्रं येषां भागोऽसि तेभ्यस्त्वेत्याह येषाꣳ ह्येष भागस्तेभ्य एनं गृह्णाति स्वांकृतोऽसीत्याह प्राणमेव स्वमकृत मधुमतीर्न इषस्कृधीत्याह सर्वमेवास्मा इदꣳ स्वदयति विश्वेभ्यस्त्वेन्द्रियेभ्यो दिव्येभ्यः पार्थिवेभ्य इत्याहोभयेष्वेव देवमनुष्येषु प्राणान्दधाति मनस्त्वा [२३] अष्टित्याह मन एवाश्नुत उर्वन्तरिक्षमन्विहीत्याहान्तरिक्षदेवत्यो हि प्राणस्स्वाहा त्वा सुभवस्सूर्यायेत्याह प्राणा वै स्वभवसो देवास्तेष्वेव परोक्षं जुहोति देवेभ्यस्त्वा मरीचिपेभ्य इत्याहाऽऽदित्यस्य वै रश्मयो देवा मरीचिपास्तेषां तद्भागधेयं तानेव तेन प्रीणाति यदि कामयेत वर्षुकः पर्जन्यः [२४] स्यादिति नीचा हस्तेन नि मृज्याद्वृष्टिमेव नि यच्छति यदि कामयेतावर्षुकः स्यादित्युत्तानेन नि मृज्याद्वृष्टिमेवोद्यच्छति यद्यभिचरेदमुं जह्यथ त्वा होष्यामीति ब्रूयादाहुतिमेवैनं प्रेप्सन्हन्ति यदि दूरे स्यादा तमितोस्तिष्ठेत्प्राणमेवास्यानुगत्य हन्ति यद्यभिचरेदमुष्य [२५] त्वा प्राणे सादयामीति सादयेदसन्नो वै प्राणः प्राणमेवास्य सादयति षड्भिरꣳशुभिः पवयति षड्वा ऋतव ऋतुभिरेवैनं पवयति त्रिः पवयति त्रय इमे लोका एभिरेवैनं लोकैः पवयति ब्रह्मवादिनो वदन्ति कस्मात्सत्यात्त्रयः पशूनाꣳ हस्तादाना इति

यच्चिरुपाꣳ शुꣳ हस्तेन विगृह्णाति तस्माच्चर्यः पशूनाꣳ हस्तादानाः पुरुषोहस्ती मर्कटः [२६] ॥ माध्यंदिनमष्टावष्टावेष मनस्त्वा पर्जन्योऽमुष्य पुरुषो द्वे च ॥ ५ ॥

இதில், உபாம்சுக்கிரகத்தின் ஹோம முறைக் கூறப்படுகின்றது.

---

விதிக்கின்றது.

பிராமணம்—1

प्राणो वा एष यदुपाꣳशुर्यदुपाꣳश्वग्रा ग्रहा गृह्यन्ते प्राणमेवानु प्रयन्ति ।

என்பது.

உரை

உபாம்சு என்னும் சோமரசப் பாத்திரம் எக்ஞத்திற்குப் பிராணனுமாதலின் அதிலேயே முதலில் சோமரசம்பிடித்து எடுத்துக்கொள்ளல் வேண்டுமென்பது அமையும். ஏனெனின்? அபானன் வாக் முதலியவைகள், அந்தரியாமி என்பது முதலிய சோமரசப் பாத்திரங்களாம். அவைகள் பிராணனைப்பற்றியே நடக்கின்றனவாதலின் என்பது

---

மூன்று முறையிலும் வேறாகிய எண்ணிக்கையுடைய சோமரசம் பிழிவதை விதிக்கின்றது.

பிராமணம்—2

अरुणो ह स्माऽऽहौपवेशिः प्रातस्सवन एवाहं यज्ञꣳ सꣳ स्थापयामि तेन ततस्सꣳस्थितेन चरामीत्यष्टौ कृत्वोऽग्रेऽभि षुणोत्यष्टाक्षरा गायत्री गायत्रं प्रातस्सवनं प्रातस्सवनमेव तेनाऽऽप्नोत्येकादश कृत्वो द्वितीयमेकादशाक्षरा त्रिष्टुप्त्रैष्टुभं माध्यं दिनꣳ सवनं माध्यंदिनमेव सवनं तेनाऽऽप्नोति द्वादश कृत्वस्तृतीयं द्वादशाक्षरा जगती जागतं तृतीयसवनं तृतीयसवनमेव तेनाऽऽप्नोत्येताꣳह वाव स यज्ञस्य सꣳस्थितिमुवाचास्कन्दाया-स्कन्नꣳ हि तद्यद्यज्ञस्य सꣳस्थितस्य स्कन्दति ।

என்பது.

உரை.

உபவேசனுடைய புத்திரனுகிய அருணன், யான் காலையில் சோமரசம் பிழிந்தே எக்ஞத்தை நிறுவி அதனுல் நடத்துவேன் என்று எண்ணிக்

கொண்டு, எட்டுத்தரம் காலையில் சோமத்தை இடித்துப் பிழிந்தனன். காயத்திரிச்சந்தம் எட்டெழுத்துக்களைக் கொண்டதாமாதலின் காலைச் சவனம் காயத்திரி எனப்படுகின்றது. அதனால் காலைச் சவனத்தையடைகின்றான். உச்சிப்போதில் பதினொருதரம் இடித்துப் பிழிந்தனன். திரிஷ்டுப் சந்தம் பதினொரு எழுத்துக்களைக் கொண்டதாமாதலின் மாத்தியந்தின சவனம் திரிஷ்டுப் எனப்படுகின்றது. அதனால் மாத்தியந்தின சவனத்தை யடைகின்றான். மூன்றாவது முறை பன்னிரண்டு தரம் இடித்துப் பிழிந்தனன். சகதிச்சந்தம் பன்னிரண்டு எழுத்துக்களைக்கொண்டது. ஆதலின் மூன்றாவது சவனம் சகதிச் சந்தமெனப்படுகின்றது ; அதனால் மூன்றாவது சவனத்தையடைகின்றான். இவ்வளவே எக்ஞத்தின் முடிவு என்றனன். இவ்வாறு செய்தல் கேடு இல்லாததின் பொருட்டாம். ஆதலின் முடிந்த யக்ஞத்தின் பொருள் யாது யாது கெடுகின்றதோ, அது அது கெடாததேயாம் என்பது.

---

மும்முறையிலும் எட்டுத்தரமே இடித்தல் வேண்டுமேன்னும் மற்றொரு பக்ஷத்தை விதிக்கின்றது.

பிராமணம்—3

**अथो खल्वाहुर्गायत्री वाव प्रातस्सवने नातिवाद इत्यनतिवादुक एनं भ्रातृव्यो भवति य एवं वेद तस्मादष्टावष्टौ कृत्वोऽभिषुत्यम् ।**

என்பது.

உரை.

காலையில் சோமரசம் பிழியும்போது எட்டெழுத்துக்கொண்ட காயத்திரிச்சந்தமாதலின் மிகுந்த எழுத்துக்களைக் கூட்டி ஓதல் இல்லை. மற்றவைகளிலோ, மிகுந்த எழுத்துக்களைக் கூட்டி ஓதல் இருக்கிறது. ஆதலின் மும்முறையும் எட்டுத்தரமே இடித்துப் பிழிதல் வேண்டுமென்பது.

---

மந்திரத்தின் முதற்பாகத்திலுள்ள 'வாக்' என்பதன் கருத்தைக் கூறுகின்றது.

பிராமணம்—4

**ब्रह्मवादिनो वदन्ति पवित्रवन्तोऽन्ये ग्रहागृह्यन्ते किंपवित्र उपांशुरिति वाक्पवित्र इति ब्रूयाद्वाचस्पतये पवस्व वाजिन्नित्याह वाचैवैनं पवयति ।**

என்பது.

உரை.

ஏனைய சோமரச பாத்திரங்களில் சோமரசம் பிடிக்கும்போது 'தசா பவித்திரம்' என்னும் ஆடை நுனியாற் புநிதமாக்கப்படுகின்றன. உபாம்

சுக்கிரகம் எதனுற் புநிதமாக்கப்படுகின்றது? என்று பிரமவாதிகள் ஆசங்கிக்கின்றனர். அதற்கு, வாக்கினுலே அது புநிதமாக்கப்படுகின்றது என்பது விடையாம். ஆதலின், "வாசஸ்பதே பவஸ்வ வாஜிந்" என்கின்றது. அதாவது உபாம்சுக்கிரகம் மந்திரத்தினுலேயே புநிதஞ் செய்யப்படுகின்றது. ஏனையவைகளால் அல்ல என்பது.

---

மந்திரத்தின் ஏனைய பாகங்களின் பொருள் வெளிப்படை என்கின்றது

பிராமணம்—5

**वृष्णो अꣳशुभ्यामित्याह वृष्णो ह्येतावꣳशू यौ सोमस्य गभस्तिपूत इत्याह गभस्तिना ह्येनं पवयति देवो देवानां पवित्रमसीत्याह देवो ह्येष सन्देवानां पवित्रं येषां भागोऽसि तेभ्यस्त्वेत्याह येषाꣳ ह्येष भागस्तेभ्य एनं गृह्णाति ।**

என்பது.

உரை.

"விருஷ்ணஃ" என்பது முதலியது, சோமக்கொடித் துண்டுகளாலும், இரவியின் கிரணங்களாலும் முன்னர் புநிதமாக்கப்பட்டது. தேவதையாயிருந்து தேவர்கட்குப் புநிதமாயிருக்கிறது. தேவர்களின் பாகமானதால் தேவர்களின் பொருட்டு இச் சோமரசம் எடுக்கப்படுகின்றது என்கின்றது.

---

உபாம்சுக் கிரகத்தை வாங்கிக்கோள்ளும் மந்திரத்திலுள்ள, திவ்யம் (வானிலுண்டாகின்றது) பார்த்திவம் (மண்ணிலுண்டாகின்றது) என்னுஞ் சொற்களால் இரண்டு பிறப்பு என்பதை விளக்குகின்றது.

பிராமணம்—6

**स्वांकृतोऽसीत्याह प्राणमेव स्वमकृत मधुमतीर्न इषस्कृधीत्याह सर्वमेवास्मा इदꣳ स्वदयति विश्वेभ्यस्त्वेन्द्रियेभ्यो दिव्येभ्यः पार्थिवेभ्य इत्याहोभयेष्वेव देवमनुष्येषु प्राणान्दधाति ।**

என்பது.

உரை.

"ஸ்வாம்கிருதஃ என்றது முதலியது, பிராணனை என்னுடையதாகக் கொண்டனன். எம்பொருட்டு இன்சுவை மிகுந்த உணவுப்பொருளை யுண்டாக்குவாயாக என்கின்றது. எல்லாருடைய இந்திரியங்களின் பொருட்டு உன்னை எடுக்கின்றேன் என்றது, தேவர்கள் மக்கள் என்னும் இருவகையர்களிடத்தும் பிராணனை நிறுவுகின்றுன் என்கின்றது.

---

பிராமணம்)

முறையாய் மந்திரத்திற்கு உரை கூறுகின்றது.

பிராமணம்—7

मनस्त्वाऽष्टित्याह मन एवाऽनुत उर्वन्तरिक्षमन्विहीत्याहान्तरिक्षदेवत्यो हि प्राणस्स्वाहा त्वा सुभवस्सूर्यायेत्याह प्राणा वै स्वभवसो देवास्तेष्वेव परोक्षं जुहोति देवेभ्यस्त्वा मरीचिपेभ्य इत्याहाऽऽदित्यस्य वै रश्मयो देवा मरीचिपास्तेषां तद्भागधेयं तानेव तेन प्रीणाति ।

என்பது.

உரை.

"மனஸ்த்வாஷ்டு" என்றது, மனமே இதை அடைகின்றது. பிராணன் அந்தரிட்சத்தையே தேவதையாகவுடையது. பிராண வடிவங்களான தேவர்களின் பொருட்டு பரோக்ஷமாக ஓமஞ்செய்கின்றேன் என்கின்றது. இதனால் சூரிய கிரணங்களின் பாகங்களைக் கொடுத்து அவைகளைக் களிப்புறும்படி செய்கின்றான் என்பதாம்.

---

பாத்திரத்தில் ஒட்டியுள்ள துளியை, பரிதியில் தடவும்போது உள்ளங்கை, மேலும், கீழுமாக இருத்தல் பயன் விருப்ப வேறுபாட்டாலாம் என்று விதிக்கின்றது.

பிராமணம்—8

यदि कामयेत वर्षुकः पर्जन्यस्स्यादिति नीचा हस्तेन नि मृज्याद्वृष्टिमेव नि यच्छति यदि कामयेतावर्षुकस्स्यादित्युत्तानेन नि मृज्याद्वृष्टिमेवोद्यच्छति ।

என்பது.

உரை.

மழை பெய்யவிரும்பில் உள்ளங்கை கீழாகத் துடைக்கில் மழை பெய்யும். மழை வேண்டாமென விரும்பில் உள்ளங்கை மேலாகத் துடைக்கில் மழையிராது என்பது.

---

பகைவனைக் கொல்ல விரும்பியவன் ஹோமத்திற்கு முன் ஓதவேண்டிய மந்திரத்தைத் தோற்றுவிக்கின்றது.

பிராமணம்—9

यद्यभिचरेदमुं जह्यथ त्वा होष्यामीति ब्रूयादाहुतिमेवैनं प्रेप्सन् हन्ति ।

என்பது.

உரை.

*பகைவனைக் கொல்லவேண்டுமெனின், பிராணவடிவ சூரியனே! நீ, இப்பகைவனை முதலில் கொல்வாயாக. பிறகு, உனக்கு ஓமஞ்செய்வேன், என்று கூறல் வேண்டும். இம்மந்திரத்தைக் கேட்டு ஹோமத்தை விரும்பும் போதே பகைவனைக் கொல்கின்றது என்பது.*

---

பகைவன் தூரதேசத்திலிருக்கில், பகைவனைக்கொல்ல விருப்புடையோன் செய்யவேண்டிய அநுட்டான விசேடத்தை விதிக்கின்றது.

பிராமணம்—10

**यदि दूरे स्यादातमितोस्तिष्ठेत्प्राणमेवास्यानुगत्यहन्ति ।**

என்பது.

உரை.

*பகைவன் தூரத்திலிருப்பானேல், மூச்சு விடாமல் இருக்க முடியும் வரை மூச்சடக்கிக்கொண்டு இருப்பானாக. இது, பகைவனுடைய பிராணனைப் பற்றிக்கொண்டு கொல்கின்றது என்பது.*

---

பகைவனைக் கொல்கின்றவன் பாத்திரத்தை வைப்பதற்கு மற்றொரு மந்திரத்தைத் தோற்றுவிக்கின்றது.

பிராமணம்—11

**यद्यभिचरेदमुष्य त्वा प्राणे सादयामीति सादयेदसन्नो वै प्राणः प्राणमेवास्य सादयति ।**

என்பது.

உரை.

*உபாம்சு பாத்திரமே! பிராணவடிவமாகிய உன்னை, பகைவனுடைய பிராணன் மீது வைக்கின்றேன் என்று கூறில், எசமானனுடைய உயிர்க்குக் கேடின்றி பகைவனுடைய உயிரையே கொல்கின்றது என்பது.*

---

பிழிந்த சோமரசத்தை, பிரதிப்பிரஸ்தாதாவின் கையிலுள்ள உபாம்சு பாத்திரத்திற் பிடிக்கும்போது ஆடையால் வடித்தல் இல்லை. மற்றோ, சோமக்கோடித் துண்டுகளால் புநிதம் ஆக்கல் வேண்டுமென்று விதிக்கின்றது

பிராமணம்—12

**षड्भिरंशुभिः पवयति षड्वा ऋतव ऋतुभिरेवैनं पवयति ।**

என்பது.

பிராமணம்)

உரை.

ஆறு சோமக்கொடித் துண்டுகளால் புநிதஞ் செய்கின்றான். இது, ஆறு இருதுக்களாலும் புநிதஞ் செய்ததாகின்றது என்பது.

---

ஆறு சோமக்கோடித் துண்டுகளாலும் ஒரே முறையிற் புநிதமாக்கலில்லை; மற்றோ, மும்முறைகளில் என்று விதிக்கின்றது.

பிராமணம்—13

त्रिः पवयति त्रय इमे लोका एभिरेवैनं लोकैः पवयति ।

என்பது.

உரை.

மூன்று முறையாய்ப் புநிதமாக்கில் மூன்றுலகங்களாலும் புநிதஞ் செய்கின்றான் என்பது.

---

மேலே கூறப்படும் கிரகங்களைப்போல், தசாபவித்திர நாபியின் ஒழுக்கால் சோமரசம் பிடித்தல் இல்லை; மற்றோ, மூன்று முறையும் அத்துவரியுவின் கையைக்குவித்துப் பிடித்துக்கோள்ளல் வேண்டுமேன்பதை விதிக்கின்றது.

பிராமணம்—14

ब्रह्मवादिनो वदन्ति कस्मात्सत्यात्त्रयः पशूनाꣳ हस्तादाना इति यत्त्रिरुपाꣳशुꣳ हस्तेन विगृह्णाति तस्मात्त्रयः पशूनाꣳ हस्तादानाः पुरुषो हस्ती मर्कटः ॥

என்பது.

உரை.

மனிதன், யானை, குரங்கு என்னும் மூன்று பசுக்கள் மாத்திரம் கைகளால் எடுத்து உண்கின்றன அது எதனால்! என்று பிரமவாதிகள் ஆசங்கித்ததற்கு, அத்வரியு மூன்றுமுறை கைகுவித்து உபாம்சு பாத்திரத்தில் சோமரசத்தைப் பிடித்ததால் என்று விடை பகர்ந்தனர் என்பது. "பிரமாவின் பொருட்டு பிராமணனைக் கொல்க" என்னும் விதியில் மனிதனும் பசுவானமை காண்க.

ஐந்தாவது அநுவாகம்

முற்றிற்று.

---

## ஆறுங்காண்டம் நான்காம்பிரபாடகம்

### ஆறுவது அநுவாகம்

*அந்தர்யாமிக் கிரகத்தைக் கூறும் பிராமணங்கள்.*

மூன்று பஞ்சாதிக்குமேல் நாற்பத்துநான்கு பதங்களைக் கொண்டது.

देवा वै यद्यज्ञेऽकुर्वत तदसुरा अकुर्वत ते देवा उपांशौ यज्ञꣳ संस्थाप्यमपश्यन्तमुपांशौ समस्थापयन्तेऽसुरा वज्रमुद्यत्य देवा नभ्यायन्त ते देवा बिभ्यत इन्द्रमुपाधावन्तानिन्द्रोऽन्तर्यामेणान्तरधत्त तदन्तर्यामस्यान्तर्यामत्वं यदन्तर्यामो गृह्यते भ्रातृव्यानेव तद्यजमानोऽन्तर्धत्तेऽन्तस्ते [२७] दधामि द्यावापृथिवी अन्त रुर्वन्तरिक्षमित्याहैभिरेव लोकैर्यजमानो भ्रातृव्यानन्तर्धत्ते ते देवा अमन्यन्तेन्द्रो वा इदमभूद्यद्वयꣳ स्म इति तेऽब्रुवन्मघवन्ननु न आ भजेति सजोषा देवैरवरैः परैश्चेत्यब्रवीद्ये चैव देवाः परे ये चावरे तानुभयान् [२८] अन्वाभजत्सजोषा देवैरवरैः परैश्चेत्याह ये चैव देवाः परे ये चावरे तानुभयानन्वाभजत्यन्तर्यामे मघ वन्मादयस्वेत्याह यज्ञादेव यजमानं नान्तरेत्युपयामगृहीतोऽसीत्याहापानस्य धृत्यै यदुभावपवित्रौ गृह्येयातां प्राणमपानोऽनु न्यृच्छेत्प्रमायुकस्स्यात्पवित्रवानन्तर्यामो गृह्यते [२९] प्राणापानयोर्विधृत्यै प्राणापानौ वा एतौ यदुपांश्वन्तर्यामौ व्यान उपांशुसवनो यं कामयेत प्रमायुकस्स्यादित्यसꣳस्पृष्टौ तस्य सादयेद्व्यानेनैवास्य प्राणापानौ विच्छिनत्ति ताजक्प्रमीयते यं कामयेत सर्वमायुरियादिति सꣳस्पृष्टौ तस्य सादयेद्व्यानेनैवास्य प्राणा

पानौ सं तनोति सर्वमायुरेति [३०] ॥ त उभयान्गृह्यते चतुश्चत्वारिंशच ॥ ६ ॥

இதில், அந்தரியாமி என்னும் ஒரு பாத்திரத்தில் சோமரசத்தைப் பிடிக்கும் வகை கூறப்படுகின்றது.

---

சோமரசத்தைப் பிடித்துவைப்பதை விதிக்கின்றது.

பிராமணம்—1

देवा वै यद्यज्ञेऽकुर्वत तदसुरा अकुर्वत ते देवा उपांशौ यज्ञं संस्थाप्यमपश्यन्तमुपांशौ समस्थापयन्तेऽसुरा वज्रमुद्यत्य देवानभ्यायन्त ते देवा बिभ्यत इन्द्रमुपाधावन्तानिन्द्रोऽन्तर्यामेणान्तरधत्त तदन्तर्यामस्यान्तर्यामत्वं यदन्तर्यामो गृह्यते भ्रातृव्यानेव तद्यजमानोऽन्तर्धत्ते ।

என்பது.

உரை.

தேவர்கள் செய்துவந்த எச்ஞங்களைப் பார்த்துக்கொண்டு செய்து வந்துள்ள அசுரர்களை மயக்குதற் பொருட்டு உபாம்சுக் கிரகத்திலேயே எச்ஞத்தை முடித்துவிடல் வேண்டுமென்று இரகசியமாய்ப் பேசிக்கொண்டு அவ்வாறே செய்தனர். அவ்வழியை அறியாமல் கோபங்கொண்ட அசுரர்களை, இவ்வந்தர்யாமிக் கிரகத்தால் இந்திரன் அந்தரமாய்ப் போம்படி (மறைந்து போம்படி) செய்ததால் இது அந்தரியாமிக் கிரகமெனப்படுகின்றது. ஆதலின், பகைவரைத் தொலைக்க இதில் சோமரசத்தை கிரகித்தல் வேண்டுமென்பதாம்.

---

மந்திரத்திலுள்ள த்யாவா பிருதிவீ (வான்மண்) என்னுஞ் சொற்களின் பயனைக் கூறுகின்றது.

பிராமணம்—2

अन्तस्ते दधामि द्यावापृथिवी अन्तरुर्वन्तरिक्षमित्याहैभिरेव लोकैर्यजमानो भ्रातृव्यानन्तर्धत्ते ।

என்பது.

உரை.

"அந்தஸ்தே" என்றது முதலியது, வான் மண் என்னும் இரண்டின் வழியாகவே பகைவனை மறைந்துபோகச் செய்கின்றான் என்கின்றது.

---

"சஜோஷா" என்பது முதலியவற்றின் பயனைக் கூறுகின்றது.

பிராமணம்—3

ते देवा अमन्यन्तेन्द्रो वा इदमभूद्यद्वयꣳ स्म इति तेऽब्रुवन्ननु न आ भजेति सजोषा देवैरवरैः परैश्चेत्यब्रवीद्ये चैव देवाः परे ये चावरे तानुभयानन्वाभजत्सजोषा देवैरवरैः परैश्चेत्याह ये चैव देवाः परे ये चावरे तानुभयानन्वाभजति ।

என்பது.

உரை.

எவ் வைசுவரியங்களை யாம் அடைய விரும்பியுள்ளோமோ, அவ்வைசுவரியங்களெல்லாம் இந்திரனுடையவைகளாயின. அப்போது, தேவர்கள், இந்திரனே! நீ எங்களையும் அதில் பங்குடையவர்களாக்கிக் கொள் என்றனர். அதைக்கேட்ட இந்திரன், "சஜோஷா" என்னுஞ் சொல்லால் அவ்வாறே செய்துகொண்டனன். அவ்வநுக்ஞையால் தேவர்களனைவரும் பங்கெடுத்துக்கொண்டனர். ஆதலின், இங்கும் "சஜோஷா" என்பது முதலியவைகளைச் சொல்லில் எல்லாரையும் பங்குள்ளவர்களாகச் செய்கின்றான் என்பது.

---

"மாதயஸ்வ" என்பதில் உள்ள பாகங்களால் தேவர்கள் களிப்படைந்ததுபோல், எக்ஞத்திற்குத் தடைகளின்மையால் எசமானனுக்குங் களிப்புண்டென்று அறிவுறுத்துகின்றது.

பிராமணம்—4

अन्तर्यामे मघवन्मादयस्वेत्याह यज्ञादेव यजमानं नान्तरेति ।

என்பது.

உரை.

"அந்தர்யாமே" என்றது முதலியது, எக்ஞத்திற்குத் தடைகளின்றியதால் எசமானனைக் களிப்படையச் செய்கின்றான் என்கின்றது

---

மந்திரத் தொடக்கத்திலுள்ள உபயாம கிருஹீதஃ (எடுத்துக்கொள்ளப் பட்டிருக்கின்றாய்) என்னுஞ்சொல்லின் பயனைக் கூறுகின்றது.

பிராமணம்—5

उपयामगृहीतोऽसीत्याहापानस्य धृत्यै ।

என்பது.

பிராமணம்)

உரை.

"உபயாமகிருஹீதோஸி" என்பது அபானனை நிறுத்துதற்பொருட்டு என்கின்றது. ஈண்டு, அபான தேவதை அந்தரியாமக்கிரக அபிமானி தேவதையானதால் அப்பாத்திரத்தைக் கிரகிக்கில் உயிர்களுடைய அபானன்களும் நிறுவப்பட்டவைகளாகின்றன என்பதை யுணர்க.

---

உபாம்சுக் கிரகத்தைப்போன்று கைகளாற் பிடிப்பதன்று, மற்றே, தசாபவித்திரமென்னும் ஆடையின் நடுவிலிருந்து ஒழுகுவதிற் பிடித்தல் வேண்டுமென்னுங் கருத்துக்கொண்டு கூறுகின்றது.

பிராமணம்—6

**यदुभावपवित्रौ गृह्येयातां प्राणमपानोऽनुन्यृच्छेत्प्रमायुकस्स्यात्पवित्रवानन्तर्यामो गृह्यते प्राणापानयोर्विधृत्यै ।**

என்பது.

உரை.

இயற்கையில் பிராணன் வெளியிற் செல்வதாம். ஆதலின், பிராணவடிவாகிய உபாம்சுக் கிரகத்தை ஆடையால் நியமிக்கவேண்டுவதில்லை. அதைப்போல் அபானவடிவாகிய அந்தரியாமிக் கிரகத்தையும் நியமிக்காவிடில் பிராணனைப் பின்பற்றிக்கொண்டு அபானனும் வெளியிற் செல்லும், செல்லும்போது இறப்பு வரும். ஆதலின், ஆடையால் அந்தரியாமிக் கிரகத்தை நியமிக்கில், அபானனுக்கு முன்னுள்ள பிராணன் வெளியிற் செல்லினும் உயிர்போகாது. ஆகையால் பிராண அபானன்களை நிறுவுதற்பொருட்டு 'தசாபவித்திரம்' என்னும் ஆடையிலிருந்து ஒழுகும் சோமத்தை அந்தரியாமி என்னும் பாத்திரத்தில் சோமரசத்தைப் பிடித்தல் வேண்டும் என்பது.

---

உபாம்சுக்கிரகம், அந்தரியாமிக்கிரகம் என்னும் இரண்டு பாத்திரங்களையும், நடுவிலுள்ள குழவிக்கல்லில் பட்டுக்கொண்டிருக்கும்படி வைத்தல் வேண்டு விதிக்கின்றது

பிராமணம்—7

**प्राणापानौ वा एतौ यदुपाꣳश्वन्तर्यामौ व्यान उपाꣳशुसवनो यं कामयेत प्रमायुकस्स्यादित्यसꣳस्पृष्टौ तस्य सादयेद्व्यानेनैवास्य प्राणापानौ विच्छिनत्ति ताजक्प्रमीयते यं कामयेत सर्वमायुरियादिति सꣳस्पृष्टौ तस्य सादयेद्व्यानेनैवास्य प्राणापानौ संतनोति सर्वमायुरेति ॥**

என்பது.

உரை.

உபாம்சுக்கிரகமும், அந்தரியாமிக் கிரகமும் பிராண அபானன்களாத லின், ஆயுள் குறைய விரும்பில் அவ்விரண்டு பாத்திரங்களையும் குழவிக் கல்லின்மீது படாமலிருக்கும்படி வைத்தல் வேண்டும். முழு ஆயுளையும் அடையவிரும்பில் அவ்விரண்டு பாத்திரங்களையும் குழவிக் கல்லின்மீது பட்டுக்கொண்டிருக்கும்படி வைத்தல்வேண்டும். வைக்கில், வியானனால் இவ னுடைய பிராண அபானன்கள் விரிவடைந்து முழு ஆயுளையுமடைகின் றுன் என்பது.

ஆறுவது அநுவாகம்
முற்றிற்று.

---

## ஆறுங்காண்டம் நான்காம் பிரபாடகம்

### ஏழாவது அநுவாகம்

ஐந்திரவாயவ்யக் கிரகத்தைக் கூறும் பிராமணங்கள்.

மூன்று பஞ்சாதிக்குமேல் இருபத்தெட்டு பதங்களை கொண்டது.

वाग्वा एषा यदैन्द्रवायवो यदैन्द्रवायवाग्रा ग्रहा गृह्यन्ते वाच-मेवानु प्रयन्ति वायुं देवा अब्रुवन्त्सोमꣳ राजानꣳ हनामेति सोऽब्रवीद्वरं वृणै मदग्रा एव वो ग्रहा गृह्यान्ता इति तस्मादैन्द्रवायवाग्रा ग्रहा गृह्यन्ते तमघ्नन्त्सोऽपूयत्तं देवा नोपाधृष्णुवन्ते वायुमब्रुवन्निमं नस्स्वदय [३१] इति सोऽब्रवीद्वरं वृणै मद्देवत्या-न्येव वः पात्राण्युच्यान्ता इति तस्मान्नानादेवत्यानि सन्ति वायव्यान्युच्यन्ते तमेभ्यो वायुरेवास्वदयत्तस्मायत्पूयति तत्प्रवाते विषजन्ति वायुर्हि तस्य पवयिता स्वदयिता तस्य विग्रहणं नाविन्दन्त्साऽदितिरब्रवीद्वरं वृणा अथ मया विगृह्णीध्वं मद्देवत्या एव वः सोमाः [३२] सन्ना असन्नित्युपयामगृहीतोऽसीत्याहादितिदेवत्या-स्तेन यानि हिदारुमयाणि पात्राण्यस्यैतानि योनेस्संभूतानि

கிரஹங்கள்)

यानि मृन्मयानि साक्षात्तान्यस्यै तस्मादेवमाह वाग्वै पराच्यव्या-
कृताऽवदत्ते देवा इन्द्रमब्रुवन्निमां नो वाचं व्याकुर्विति सोऽब्रवी-
द्वरं वृणै मह्यं चैवैष वायवे च सह गृह्याता इति तस्मादैन्द्रवायव-
स्सह गृह्यते तामिन्द्रो मध्यतोऽवक्रम्य व्याकरोत्तस्मादियं व्याकृता
वागुद्यते तस्मात्सकृदिन्द्राय मध्यतो गृह्यते द्विर्वायवे द्वौ हि स
वराववृणीत [३३] स्वदय सोमास्सहाष्टाविंशतिश्च ॥ ७ ॥

இதில், ஐந்திரவாயுக் கிரகமென்னும் சோம பாத்திரத்தில் இரசம் பிடிக்கும்வகை கூறப்படுகின்றது.

---

இரட்டைத் தேவதைகளையுடைய சோமரசம் பிடிக்கும் பாத்திரங்களுக்குள், இவ்வைந்திரவாயுக்கிரகம் முதன்மைவாய்ந்தது என்பதை விதிக்கின்றது.

பிராமணம்—1

वाग्वा एषा यदैन्द्रवायवो यदैन्द्रवायवाग्रा ग्रहा गृह्यन्ते वाचमेवानु प्रयन्ति ।

என்பது.

உரை.

ஐந்திரவாயவம், மைத்திராவருணம், ஆசுவினம் என்னும் சோம பாத்திரங்களின் அபிமானி தேவதைகள், வாக், கண், செவி என்பவைகளாம். ஆதலின், இக்கிரகம் வாக்கு எனப்பட்டது. இதில் முதலில் சோம ரசத்தைப் பிடிக்கின்றவர்கள் வாக்கை முதன்மையாக அடைகின்றார்கள் என்பது.

---

அதுவே முதன்மை என்பதை மற்றொருவகையாற் புகழ்கின்றது.

பிராமணம்—2

वायुं देवा अब्रुवन्त्सोमं राजानं हनामेति सोऽब्रवीद्वरं वृणै मदग्रा एव
वो ग्रहा गृह्यान्ता इति तस्मादैन्द्रवायवाग्रा ग्रहा गृह्यन्ते तमघ्नन् ।

என்பது.

உரை.

தேவர்கள், சோமராசனைக் கொல்லவேண்டுமென்று கேட்டனர். அப்போது வாயு, "எனக்குப் பிறகே உங்கட்குச் சோமரசங்கள் பிடித்து வைத்தல் வேண்டும் என்று வரத்தைக்கேட்டுப் பெற்றுக்கொண்டது. ஆதலின் முத

லின் ஐந்திரவாயுக் கிரகம், அதாவது, இந்திரன் வாயுக்கட்குரிய பாத்திரத்திற் சோமரசம் பிடிக்கப்படுகின்றது. சோமராசனைக் கொல்லல் இடித்து இரசம் பிழிதலாம்.

---

முற்கூறிய முதன்மையை வலிப்படுத்தற் பொருட்டு மீண்டும் வாயுவைப் புகழ்கின்றது. இனி, வாயுவைப் புகழ்தலால் "வாயுவின் பொருட்டுச் சோமரசம் பிடிக்க" என்றது விதியென யூகித்துணர்க என்கின்றது.

பிராமணம்—3

**सोऽपूयत्तं देवा नोपाधृष्णुवन्ते वायुमब्रुवन्निमं नस्स्वदयेति सोऽब्रवीद्वरं वृणै मद्देवत्यान्येव वः पात्राण्युच्यान्ता इति तस्मान्नानादेवत्यानि सन्ति वायव्यान्युच्यन्ते तमेभ्यो वायुरेवास्वदयत्तस्माद्यत्पूयति तत्प्रवाते विषजन्ति वायुर्हि तस्य पवयिता स्वदयिता ।**

என்பது.

உரை.

சோமம் இடிக்கப்பட்டு தீ நாற்றமுடையதானது; அதை, தேவர்கள் நறுமணமுடையதாகச் செய்ய மாட்டாதவர்களாய் வாயுவை நோக்கி, வாயுவே! நீ, இதை நறுமணமுடையதோடு இன்சுவையுடையதாகவுஞ் செய்வாயாக என்று கேட்டுக்கொண்டனர். அப்போது, பல தேவதைகளைக்கொண்ட பாத்திரங்களும் எனது பெயர்கொண்டே வழங்கல் வேண்டும் என்று வாயு வரங்கேட்டுப் பெற்றுக்கொண்டது. இதுபற்றியே, மைத்திராவருணக்கிரகம், ஆசுவினிக்கிரகம் முதலியவைகளும் வாயவீயங்கள் என்று வழங்கப் பெறுகின்றன. உலகிலும் நெகிழ்ச்சி மிகுந்த பொருள்களை நறுமணமுடையவைகளும் இன்சுவையுடையவைகளுமாகச் செய்வதற்கு காற்றில் வைக்கின்றனர். ஆதலின், வாயு, புனிதமாக்குவதும் இன்சுவையை யுண்டாக்குவதுமாம் என்பதை யுணர்க.

---

"உபயாமகிருஹீதோஸி" என்றது. எல்லாக் கிரகங்கட்கும் பொதுவானது என்னும் பொருளைப்பற்றி அம்மந்திரத்திற்கு உரை கூறுகின்றது.

பிராமணம்—4

**तस्य विग्रहणं नाविन्दन्त्साऽदितिरब्रवीद्वरं वृणा अथ मया विगृह्णीध्वं मद्देवत्या एव वस्सोमास्सन्ना असन्नित्युपयामगृहीतोऽसीत्याहादितिदेवत्यास्तेन यानि हिदारुमयाणि पात्राण्यस्यैतानि योनेस्संभूतानि यानि मृन्मयानि साक्षात्तान्यस्यै तस्मादेवमाह ।**

என்பது.

கிரஹங்கள்)

உரை.

தேவர்கள், எல்லாத் தேவதைகட்கும் சோமரசத்தைப் பிடித்து வைக்கும் ஒரு மந்திரத்தை அடைந்திலர். அப்போது, அதிதி என்னும் பூமியைக் கூறும் மந்திரத்தை முடிவிற் சொல்லில் உங்களுடைய சோமரசங்கள் முழுதையும் பிடித்தல் கூடும் என்று பூமி தேவியார் கூறினர். அம்மந்திரம், "உபயாம கிருஹீதோஸி" என்பதுதான் என்றுங்கூறினர். ஆதலின், மரத்தாற் செய்த பாத்திரங்களனைத்தும் மண்ணின் காரியமாகிய மரத்தாற் செய்திருத்தலின் மண்மயங்களாகின்றன மண்ணாற் செய்தவைகளோ, நேரே மண்மயங்கள் ஆதலின் கிரகங்களனைத்தும் இதனாற் பிடித்து வைக்கப்படுகின்றன என்பது.

---

இந்திரனுக்கும் வாயுவிற்கும் ஒரு பாத்திரத்தில் சோமரசம் பிடித்து வைப்பதை விதிக்கின்றது.

பிராமணம்—5

वाग्वै पराच्यव्याकृताऽवदत्ते देवा इन्द्रमब्रुवन्निमां नो वाचं व्याकुर्विति सोऽब्रवीद्वरं वृणै मह्यं चैवैष वायवे च सह गृह्याता इति तस्मादैन्द्रवायवस्सह गृह्यते तामिन्द्रो मध्यतोऽवक्रम्य व्याकरोत्तस्मादियं व्याकृता वागुद्यते ।

என்பது

உரை.

இம்மந்திரமாகிய வாக்கு, முன், வாக்கியம் பதம், சொல், பகுதி—விகுதி என்னும் பாகுபாடுகளின்றி கடலொலிபோல் நீண்ட சத்தமாயிருந்தது. தேவர்கள், இந்திரனைக் குறித்து இந்திர! நீ வாக்கை, வாக்கியம், பதம், சொல், தாது, பிரத்தியம் என்பது முதலான வேறுபாடுடையதாகச் செய்வாயாக என்று கேட்டுக்கொண்டனர். அதைக்கேட்ட இந்திரன், எனக்கும் வாயுவிற்கும் ஒரு பாத்திரத்திற் சோமரசம் பிடித்தல்வேண்டும் என்னும் வரத்தைக்கேட்டுப் பெற்றுக்கொண்டனன். பிறகு, வாக்கை நடுவில் வாக்கியம் முதலானவைகளாகப் பிரித்து விட்டனன். ஆதலின், இந்திரனுக்கும் வாயுவிற்கும் ஒரு பாத்திரத்திற் சோமரசத்தைப் பிடித்து வைத்தல் வேண்டும் என்பது.

---

ஐந்திர வாயுக்கிரகத்தை முடிக்கின்றது.

பிராமணம்—6

**तस्मात्सकृदिन्द्राय मध्यतो गृह्यते द्विर्वायवे द्वौ हि स वराववृणीत ॥**

என்பது.

உரை.

*இவ்வாறு வரங்கேட்டதால், வாயுவிற்கு முதலாவது சோமரசம் பிடித்தல், மந்திரமாகிய வாக்கை நடுவில் வேறு பிரித்தலால் நடுவில் இந்திரனுக்குச் சோமரசம் பிடித்தலாம். மீண்டும், இந்திர வாயுவிற்குச் சோமரசம் பிடித்தல் வேண்டும் என்னும் வரமும், எல்லாப் பாத்திரங்கட்கும் வாயவியம் என்னும் பெயர் இருத்தல் வேண்டுமென்னும் வரமும் இருத்தலின் இரண்டு முறை வாயுவிற்குச் சோமரசம் பிடித்தலாம் என்பது.*

ஏழாவது அநுவாகம்

*முற்றிற்று.*

---

## ஆறுங்காண்டம் நான்காம்பிரபாடகம்

### எட்டாவது அநுவாகம்

*மைத்திரா வருணக்கிரகத்தைக் கூறும் பிராமணங்கள்*

மூன்று பஞ்சாதிக்குமேல் இருபத்திரண்டு பதங்களைக் கொண்டது.

मित्रं देवा अब्रुवन्त्सोमꣳ राजानꣳ हनामेति सोऽब्रवीन्नाहꣳ सर्वस्य वा अहं मित्रमस्मीति तमब्रुवन् हनामैवेति सोऽब्रवीद्वरं वृणै पयसैव मे सोमꣳ श्रीणन्निति तस्मान्मैत्रावरुणं पयसा श्रीणन्ति तस्मात्पशवोऽपाक्रामन्मित्रस्सन्क्रूरमकरिति क्रूरमिव खलु वा एषः [३४] करोति यस्सोमेन यजते तस्मात्पशवोऽप क्रामन्ति यन्मैत्रावरुणं पयसा श्रीणाति पशुभिरेव तन्मित्रꣳ समर्धयति पशुभिर्यजमानं पुरा खलु वावैवं मित्रोऽवेदप मत्क्रूरं चक्रुषः पशवः क्रमिष्यन्तीति तस्मादेवमवृणीत वरुणं देवा अब्रुवन्त्वयाऽꣳशभुवा सोमꣳ राजानꣳ हनामेति सोऽब्रवीद्वरं वृणै मह्यं च [३५] एवैष

கிரஹங்கள்)

मित्राय च सह गृह्याता इति तस्मान्मैत्रावरुणस्सह गृह्यते तस्मा-
द्राज्ञा राजानमꣳशभुवा घ्नन्ति वैश्येन वैश्यꣳ शूद्रेण शूद्रं न वा
इदं दिवा न नक्तमासीदव्यावृत्तं ते देवा मित्रावरुणावब्रुवन्निदं
नो विवासयतमिति तावब्रूतां वरं वृणावहा एक एवाऽऽवत्पूर्वो
ग्रहो गृह्याता इति तस्मादैन्द्रवायवः पूर्वो मैत्रावरुणाद्गृह्यते प्राणा-
पानौ ह्येतौ यदुपाꣳश्वन्तर्यामा मित्रोऽहरजनयद्वरुणो रात्रिं ततो
वा इदं व्यौच्छद्यन्मैत्रावरुणो गृह्यते व्युष्ट्यै [३६] ॥ एष चैन्द्र-
वायवो द्वाविꣳशतिश्च ॥ ८ ॥

*இதில், மைத்திரா வருணக்கிரகம் என்னும் மரப்பாத்திரத்தில் சோம ரசத்தைப் பிடித்தல் கூறப்படுகின்றது.*

---

சோமரசத்தைப் பிடித்து அதில் பாலைக்கலப்பதை விதிக்கவிரும்பி முன்னுரை கூறுகின்றது.

பிராமணம்—1

मित्रं देवा अब्रुवन्त्सोमꣳ राजानꣳ हनामेति सोऽब्रवीन्नाहꣳ सर्वस्य वा अहं मित्रमस्मीति तमब्रुवन् हनामैवेति सोऽब्रवीद्वरं वृणै पयसैव मे सोमꣳ श्रीणन्निति तस्मान्मैत्रावरुणं पयसा श्रीणन्ति तस्मात्पशवोऽपाक्रा-मन्मित्रस्सन् क्रूरमकरिति ।

என்பது.

உரை.

*தேவர்கள், சோம ராசாவைக்கொல்ல வேண்டுமென்று மித்திரனுக்குக் கூறினர். மித்திரன், அனைவருக்கும் மித்திரனுதலின் அது முடியாதென்றனன். பிறகு, ஒரு தலையாக இடித்துப் பிழிதல் வேண்டுமென்று கூறும்போது எனது சோமரசத்துடன் பாலைக்கலத்தல் வேண்டுமென்று வரங்கேட்டுக் கொண்டனன். ஆதலின் மைத்திரா வருணனுடைய சோமரசத்தில் பாலைக் கலத்தல்வேண்டும். இதனால் மித்திரனுயிருந்தும் சோமத்தை வதைக்கின்றுன் எனப் பசுக்கள் பயந்தோடிவிட்டன என்பது.*

---

அதை விதிக்கின்றது.

பிராமணம்—2

**क्रूरमिव खलु वा एष करोति यस्सोमेन यजते तस्मात्पशवोऽपक्रामन्ति यन्मैत्रावरुणं पयसा श्रीणाति पशुभिरेव तन्मित्रꣳ समर्धयति पशुभिर्यजमानम् ।**

என்பது.

உரை.

சோமரசத்தால் எக்ஞஞ் செய்கின்றவன் சோமத்தைக் கோரமுடையதாகச் செய்கின்றான். ஆதலின், மைத்திராவருணர்களுடைய சோமரசத்தில் பாலைக் கலக்கின்றான். அதனால், மித்திரனுக்கும், எசமானனுக்கும் நிறைய பசு சம்பத்து உண்டாகின்றது என்பது.

---

எசமானனுக்குப் பசுக்களின் சம்பத்து உண்டாகுக மித்திரனுக்கு எவ்வாறும்? என்னும் ஆசங்கைக்கு, அதன்பொருட்டே அவன் வரம்வாங்கியதால் என்கின்றது.

பிராமணம்—3

**पुरा खलु वावैवं मित्रोऽवेद्प मत्क्रूरं चक्रुषः पशवः क्रमिष्यन्तीति तस्माद्वेवमवृणीत ।**

என்பது.

உரை.

சோமத்தைக்கொன்ற எனக்குப் பயந்து பசுக்கள் ஓடிவிட்டன என்றது, மித்திரன் சோமத்தைக் கொல்லும் முன்னரே தெரிவித்தனன் ஆதலின், பசுக்களின் சம்பத்தைத் தரும் பால் கலத்தல் வரத்தால் வேண்டப்பெற்றது என்கின்றது.

---

மித்திரன் வருணன் என்னும் இருவருக்கும் ஒருபாத்திரத்தில் சோமரசத்தைப் பிடித்தல் வேண்டுமென்று விதிக்கின்றது

பிராமணம்—4

**वरुणं देवा अब्रुवन्त्वयाऽꣳशभुवा सोमꣳ राजानꣳ हनामेति सोऽब्रवीद्वरं वृणै मह्यं चैवैष मित्राय च सह गृह्याता इति तस्मान्मैत्रावरुणस्सह गृह्यते तस्माद्राज्ञा राजानमꣳशभुवा घ्नन्ति वैश्येन वैश्यꣳ शूद्रेण शूद्रम् ।**

என்பது

உரை.

தேவர்கள், உனது தாயாதியாகிய சோமத்துடன் சேர்த்து உன்னையும் இடிப்போம் என்றனர். அதைக்கேட்ட வருணன், அற்றேல், மித்திரனுக்கும் எனக்கும் ஒரு பாத்திரத்தில் சோமரசத்தைப் பிடித்தல் வேண்டுமென்று வரங் கேட்டுக்கொண்டனன். ஆதலின் அவ்வாறே சோமரசம் பிடித்து வைத்தல்வேண்டும். இங்கு, வருணனும் சோமராசனும் அரசர் குலத்தார்களாதலின் தாயாதிகள், அவர்களைச் சேர்த்திடித்தல் கூடும். இவ்வாறே வணிகன், சூத்திரன் என்பவர்கட்கும் யூகித்துணர்ந்துகொள்க. "இந்திரோ வருணஃ சோமோருத்ரஃ" என்பது முதலியதால் பிருகதாரண்யமும் இதைக் கூறுகின்றதைக் காண்க.

---

மைத்திராவருணக்கிரகம், ஐந்திரவாயுக் கிரகத்திற்கு பிற்பட்ட தென்பதை விதிக்கின்றது.

பிராமணம்—5

न वा इदं दिवा न नक्तमासीदव्यावृत्तं ते देवा मित्रावरुणावब्रुवन्निदं नो विवासयतमिति तावब्रूतां वरं वृणावहा एक एवाऽऽवत्पूर्वो ग्रहो गृह्याता इति तस्मादैन्द्रवायवः पूर्वो मैत्रावरुणाद्गृह्यते ।

என்பது.

உரை.

பகல் இரவு முதலானவைகளாகப் பகுப்பற்ற கால வடிவத்தை, தேவர்கள், பாகுபாடு செய்யும்படி மித்திரனையும் வருணனையுங் கேட்டனர். அதைக்கேட்ட மித்திராவருணர்கள், எங்கட்கு முன், இந்திரனுக்கும் வாயுவிற்கும் உள்ள சோமரசத்தை மாத்திரம் பிடித்து வைப்பீர்களாகில் அவ்வாறு செய்கின்றோம் என்று வரங்கேட்டுக்கொண்டதால் மைத்திரா வருணக் கிரகத்திற்கு முன் இந்திரவாயுக்கிரகம் க்ரகிக்கப்படுகின்றது என்பது.

---

அற்றேல், உபாம்சுக்கிரகம் அந்தரியாமிக்கிரகம் என்னும் இரண்டையும் முன்னர் கிரகித்தல்வேண்டும் என்றாசங்கித்துக் கூறுகின்றது.

பிராமணம்—6

प्राणापानौ ह्येतौ यदुपांश्वन्तर्यामौ ।

என்பது,

உரை.

*உபாம்சுக்கிரகமும், அந்தரியாமிக்கிரகமும் பிராண அபானன்களாத லின் அவ்வாறன்று என்பது.*

---

பிராண அபானன்களிருக்கில் ஏனைய இந்திரியங்கட்கு இருப்புண்டு. ஆதலின் அவ்விரண்டு கிரகங்களும் முன் என்பதில் விவாதம் இல்லை. ஏனைய கிரகங்களுக்குள்ளும் மைத்திராவருணக் கிரகத்திற்கு முன் இந்திரவாயுக்கிர கம் என்பதோ, பகலிரவுகளைப் பிரித்ததால் வரம் பெற்றுக்கொண்டன என் கின்றது.

பிராமணம்—7

मित्रोऽहरजनयद्वरुणो रात्रिं ततो वा इदं व्यौच्छद्यन्मैत्रावरुणो गृह्यते व्युष्ट्यै ॥

*என்பது.*

உரை

*இரவி எழுந்ததிலிருந்து ஒடுங்கும்வரை உள்ள காலம் பகல் என்று மித்திரன் கற்பித்தனன். அதற்குமேல் இரவி எழும்வரை உள்ள காலத்தை இரவு என்று வருணன் கற்பித்தனன். பிறகு பகலிரவுகள் வேறுபாடுடை யவைகளாயின என்பது.*

எட்டாவது அநுவாகம்

*முற்றிற்று.*

---

## ஆறுங்காண்டம் நான்காம் பிரபாடகம்

### ஒன்பதாவது அநுவாகம்

*ஆசுவினக்கிரகத்தைக் கூறும் பிராமணங்கள்.*

நான்கு பஞ்சாதிக்குமேல் நாற்பத்தெட்டு பதங்களைக் கொண்டது.

यज्ञस्य शिरोऽच्छिद्यत ते देवा अश्विनावब्रुवन्भिषजौ वै स्थ इदं यज्ञस्य शिरः प्रति धत्तमिति तावब्रूतां वरं वृणावहै ग्रह एव नावत्रापि गृह्यतामिति ताभ्यामेतमाश्विनमगृह्णन्ततो वै तौ यज्ञस्य शिरः प्रत्यधत्तां यदाश्विनो गृह्यते यज्ञस्य निष्कृत्यै तौ देवा

अब्रुवन्नपूतौ वा इमौ मनुष्यचरौ [३७] भिषजाविति तस्माद्ब्राह्म
णेन भेषजं न कार्यमपूतो ह्ये१षोऽमेध्यो यो भिषक्तौ बहिष्पवमा-
नेन पवयित्वा ताभ्यामेतमाश्विनमगृह्णन्तस्माद्बहिष्पवमाने स्तुत
आश्विनो गृह्यते तस्मादेवं विदुषा बहिष्पवमान उपसद्यः पवित्रं
वै बहिष्पवमान आत्मानमेव पवयते तयोस्त्रेधा भैषज्यं विन्य-
दधुरग्नौ तृतीयमप्सु तृतीयं ब्राह्मणे तृतीयं तस्मादुदपात्रम् [३८]
उपनिधाय ब्राह्मणं दक्षिणतो निषाद्य भेषजं कुर्याद्यावदेव भेषजं
तेन करोति समर्धुकमस्य कृतं भवति ब्रह्मवादिनो वदन्ति कस्मा-
त्सत्यादेकपात्रा द्विदेवत्या गृह्यन्ते द्विपात्रा हूयन्त इति यदेक-
पात्रा गृह्यन्ते तस्मादेकोऽन्तरतः प्राणो द्विपात्रा हूयन्ते तस्मा-
द्द्वौद्वौ बहिष्टात्प्राणाः प्राणा वा एते यद्द्विदेवत्याः पशव इडा
यदिडां पूर्वां द्विदेवत्येभ्य उपह्वयेत [३९] पशुभिः प्राणानन्त-
र्दधीत प्रमायुकस्स्याद्द्विदेवत्यान्भक्षयित्वेडामुप ह्वयते प्राणा-
नेवाऽऽत्मन्धित्वा पशूनुप ह्वयते वाग्वा ऐन्द्रवायवश्चक्षुर्मैत्रावरुण-
श्श्रोत्रमाश्विनः पुरस्तादैन्द्रवायवं भक्षयति तस्मात्पुरस्ताद्वाचा वदति
पुरस्तान्मैत्रावरुणं तस्मात्पुरस्ताच्चक्षुषा पश्यति सर्वतः परिहारमा-
श्विनं तस्मात्सर्वतश्श्रोत्रेण शृणोति प्राणा वा एते यद्द्विदेवत्याः
[४०] अरिक्तानि पात्राणि सादयति तस्मादरिक्ता अन्तरतः प्राणा
यतः खलु वै यज्ञस्य विततस्य न क्रियते तदनु यज्ञꣳ रक्षाꣳस्यव
चरन्ति यदरिक्तानि पात्राणि सादयति क्रियमाणमेव तद्यज्ञस्य
शये रक्षसामनन्ववचाराय दक्षिणस्य हविर्धानस्योत्तरस्यां वर्तन्याꣳ-

सादयति वाच्येव वाचं दधात्या तृतीयसवनात्परि शेरे यज्ञस्य संतत्यै [४१] ॥ मनुष्यचरावुदपात्रमुपह्वयेत द्विदेवत्याष्षट्चत्वारिꣳशच्च ॥ ९ ॥

இதில், ஆசுவினிக் கிரகத்தின்வகை கூறப்படுகின்றது.

---

அதை விதிக்கின்றது.

பிராமணம்—1

यज्ञस्य शिरोऽच्छिद्यत ते देवा अश्विनावब्रुवन्भिषजौ वै स्थ इदं यज्ञस्य शिरः प्रति धत्तमिति तावब्रूतां वरं वृणावहै ग्रह एव नावत्रापि गृह्यतामिति ताभ्यामेतमाश्विनमगृह्णन्ततो वै तौ यज्ञस्य शिरः प्रत्यधत्तां यदाश्विनो गृह्यते यज्ञस्य निष्कृत्यै ।

என்பது.

உரை.

எக்ஞபுருடன் முன்னொருகால் தேவர்களுடைய பொருள்களைக் கவர்ந்து கொண்டு அவர்களுடன் போரிடுவதற்குத் தநுவை வளைத்தனன். அத்தநுவின் கோடி ஒன்று மண்ணில் இருந்தது. அதை, உபதீகம் (கறையான்) என்னும் ஒருபிராணி நாண்கயிற்றை அறுத்துவிட்டதால் எக்ஞபுருடன் தலையைக் கொண்டுபோய்விட்டது. அப்போது தேவர்கள், அசுவினிகளை வைத்தியஞ் செய்யும்படி கேட்டுக்கொண்டபோது அசுவினிகள், தமக்கும் சோமரசம் பிடித்துவைத்தல் வேண்டுமென்று வரங்கேட்டுக்கொண்டு எக்ஞத்தின் தலையை ஒட்டிவிட்டனர். ஆதலின், எக்ஞத்தினுடைய பரிகாரத்தின் பொருட்டு ஆசுவினிக்கிரகம் என்னும் பாத்திரத்தில் சோமரசத்தைப் பிடித்துவைத்தல் வேண்டும் என்பது.

---

பஹிஷ்பவமானத் துதியைத் துதித்தபிறகு அவர்கட்குச் சோமரசம் பிடித்தல் வேண்டுமேன்று விதிக்கின்றது.

பிராமணம்—2

तौ देवा अब्रुवन्नपूतौ वा इमौ मनुष्यचरौ भिषजाविति तस्माद्ब्राह्मणेन भेषजं न कार्यमपूतो ह्येषोऽमेध्यो यो भिषक्तौ बहिष्पवमानेन पवयित्वा ताभ्यामेतमाश्विनमगृह्णन्तस्माद्बहिष्पवमाने स्तुत आश्विनो गृह्यते ।

என்பது

கிரஹங்கள்)

உரை.

அசுவினிகாள் ! நீவிர், மனிதர்களைப்போல் வைத்தியஞ் செய்தமையால் அது பிராமணனுக்குக் குற்றமாம். ஆதலின் நீவிர் அசுத்தர்களாயினீர்கள். என்று கொண்டதால், வெளியிற் புனிதமாக்குந் துதிகளால் (பகிழ்ப்பவமானத்தால்) துதித்துப் புனிதமாக்கிய பிறகு அசுவினிகளுக்குச் சோமரசம் பிடித்து வைத்தல்வேண்டும் என்பது.

---

அதை விதிக்கின்றது.

பிராமணம்—3

**तस्मादेवं विदुषा बहिष्पवमान उपसद्यः पवित्रं वै बहिष्पवमान आत्मानमेव पवयते ।**

என்பது.

உரை.

இவ்வாறு பஹிஷ்ப்பவமான மென்னுந் துதியை யுணர்ந்து அநுட்டிக்கும் அறிஞன் ஆன்மாவைப் புனிதஞ் செய்கின்றான் என்பது.

---

இங்கு, தொடர்புபற்றி, உலகில் வைத்தியஞ் செய்யும்போது, புண்ணிய வுதவியை யுண்டாக்கும் ஒரு அங்கத்தை விதிக்கின்றது.

பிராமணம்—4

**तयोस्त्रेधा भैषज्यं विन्यदधुरग्नौ तृतीयमप्सु तृतीयं ब्राह्मणे तृतीयं तस्मादुदपात्रमुपनिधाय ब्राह्मणं दक्षिणतो निषाद्य भेषजं कुर्याद्यावदेव भेषजं तेन करोति समर्धुकमस्य कृतं भवति ।**

என்பது.

உரை.

அசுவினிகள் அவ் வைத்தியத்தை, அந்தணன் தண்ணீர் அக்கினி என மூவகையாய்ப் பிரித்தனர். ஆதலின், வைத்தியஞ் செய்யும்போது, தண்ணீர்க் குடம்வைத்து, அந்தணனை யழைத்து தட்சிணைகொடுத்து, அக்கினி வளர்த்துக்கொள்ளல் வேண்டும். இதனால், வைத்தியம் நிறையச் செய்ததாகின்றது என்பது.

---

இரண்டு தேவதைகளையுடைய, ஐந்திரவாயு, மைத்திராவருணம், ஆசுவினம் என்னுஞ் சோமபாத்திரங்கட்கு, அதனதன் பிரதிநிக்கிராஹிய சோமரசத்தை எடுக்கும்மற்றொரு பாத்திரங்களோடு ஹோமஞ்செய்யும் விதியை அர்த்தவாதத்தாற் குறிப்பிக்கின்றன.

பிராமணம்—5

ब्रह्मवादिनो वदन्ति कस्मात्सत्यादेकपात्रा द्विदेवत्या गृह्यन्ते द्विपात्रा हूयन्ते ।

*என்பது.*

உரை.

*சோமரசத்தை எடுக்கும்போது ஒரேபாத்திரம் ஹோமஞ் செய்யும்போது இரண்டு பாத்திரம் இது எவ்வாறு? என்று பிரமவாதிகள் ஆசங்கிக்கின்றனர் என்பது.*

---

அவ் வாசங்கைக்கு உத்தரங் கூறுகின்றது.

பிராமணம்—6

इति यदेकपात्रा गृह्यन्ते तस्मादेकोऽन्तरतः प्राणो द्विपात्रा हूयन्ते तस्माद्द्वौद्वौ बहिष्टात्प्राणाः ।

*என்பது.*

உரை.

*ஒருபாத்திரத்தில் பிடிப்பதால் உள்ளில் பிராணன் ஒன்றேயாம். இரண்டு பாத்திரங்களால் ஹோமஞ் செய்வதால் வெளியில் பிராணன் இரண்டாகின்றது என்பது. இதனால், இவ்வாறு ஒன்று இரண்டு என்னும் ஒப்புமையால் ஒருபாத்திரமும் இரண்டு பாத்திரங்களும் வேண்டும் என்பதை யுணர்க.*

---

சவனீய புரோடாசங்களுடைய சுவிஷ்ட கிருத்தின் ஹோமஞ் செய்துவிட்டு, இரண்டு தேவதைகளையுடைய சோமபாத்திரத்தின் ஹோமம் விதிக்கப்பட்டிருக்கின்றது. ஆண்டு, புரோடாசத்தைப்பற்றி இடாவின் ஆஹ்வானமு(அழைத்தலு)ம் சுவிஷ்டகிருதிற்குப் பிறகே செய்தல்வேண்டுமென்று விதிவாக்கியத்தால் காலங்கிடைத்தது. அக்காலத்தை விலக்கிவிட்டு, இரண்டு

கிரஹங்கள்)

தேவதைகளின் சேடங்களை அருந்தியபிறகு இடாவின் உபாஹ்வானத்தின் சிறப்பை விதிக்கின்றது.

பிராமணம்—7

प्राणा वा एते यद्द्विदेवत्याः पशव इडा यदिडां पूर्वां द्विदेवत्येभ्य उपह्वयेत पशुभिः प्राणानन्तर्दधीत प्रमायुकस्स्याद्द्विदेवत्यान्भक्षयित्वेडामुपह्वयते प्राणानेवाऽऽत्मन्धित्वा पशूनुपह्वयते ।

என்பது.

உரை.

*இரண்டு தேவர்களின் பாத்திரங்கள் பிராணன்களாம், இடா பசுக்களாம் ஆதலின் இரண்டு தேவதைகளின் சேடங்களை யருந்துமுன் பசுவாகிய இடாவை அழைத்தால் பிராணன் மறைபட்டதால் எசமானன் இறந்துவிடுவான். அதற்குப்பிறகு இடாவை அழைக்கில் பிராணனை ஆன்மாவில் நிறுத்திவிட்டு அழைத்தலால் இறக்கமாட்டான்; ஆதலின் அவ்வாறு செய்தலே சிறந்ததாம் என்பது.*

---

அருந்துவதில் விசேடத்தை விதிக்கின்றது.

பிராமணம்—8

वाग्वा ऐन्द्रवायवश्चक्षुर्मैत्रावरुणश्श्रोत्रमाश्विनः पुरस्तादैन्द्रवायवं भक्षयति तस्मात्पुरस्ताद्वाचा वदति पुरस्तान्मैत्रावरुणं तस्मात्पुरस्ताच्चक्षुषा पश्यति सर्वतः परिहारमाश्विनं तस्मात्सर्वतश्श्रोत्रेण शृणोति ।

என்பது.

உரை.

*ஐந்திரவாயுக் கிரகம் வாக்காம், மைத்திராவருணக் கிரகம் கண்ணும், ஆசுவினிக் கிரகம் செவியாம்; ஆதலின், ஐந்திரவாயுவை முன்பக்கமாய் அருந்துகின்றான். ஆதலின், முதலில் முன்னே வாக்காற் பேசுகின்றான். அதற்குப் பிறகு மைத்திராவருணக் கிரகத்தையும் முன்பக்கமாய் அருந்துவதால், முன் பக்கத்தில் கண்ணால் பார்க்கின்றான். அதற்குப்பிறகு ஆசுவினிக் கிரகத்தை தலையைச்சுற்றி அருந்துவதால் எல்லா வகையானுஞ்செவியால் கேட்கின்றான் என்பது.*

---

பாத்திரங்களை வைக்கும்போது புரோடாசத்துண்டு முதலியவைகளையுங் கூடவே வைத்தல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம் — 9

**प्राणा वा एते यद्विदेवत्या अरिक्तानि पात्राणि सादयति तस्मादरिक्ता अन्तरतः प्राणा यतः खलु वै यज्ञस्य विततस्य नक्रियते तदनु यज्ञꣳ रक्षाꣳस्यव चरन्ति यदरिक्तानि पात्राणि सादयति क्रियमाणमेव तद्यज्ञस्य शये रक्षसामनन्ववचाराय ।**

என்பது.

உரை.

ஐந்திரவாயுக் கிரகத்தில் புரோடாசத்துண்டும், மைத்திராவருணக் கிரகத்தில் ஆமிக்ஷையும் ஆசுவினக் கிரகத்தில் அரிசிப்பொரியும் போட்டுவைத்தல்வேண்டும். வைக்கில் பிராணன்களான இவைகள் உள்ளீரத்துடன் வைத்தவைகளாகின்றன. இதுபற்றியே பிராணன்கள் உள்ளில் ஈரப்பட்டிருக்கின்றன. இவ்வாற்ருல் பாத்திரங்கள் ஈரமாயிருத்தலின், விரிந்த எக்ஞங்களுட் சிலது மறந்தொழியினும் அது செய்யப்பட்டதே யாகின்றது. இதனுல் இராக்கதர்கள் நுழைவதற்கு துவாரம் இன்றிய தாகின்றது என்பது.

---

அதை வைக்கவேண்டிய இடத்தை விதிக்கின்றது.

பிராமணம் —10

**दक्षिणस्य हविर्धानस्योत्तरस्यां वर्तन्याꣳ सादयति वाचयेव वाचं दधाति ।**

என்பது.

உரை.

தெற்கிலுள்ள அவிர்த்தான வண்டியின் வடக்குச் சக்கரத்தின் வழியில் வைத்தல்வேண்டும் அது, வழியாகிய வாக்கில் சோமபாத்திரமாகிய வாக்கைவைக்கின்ருன் என்பது.

---

வைத்த பாத்திரங்களின் இருப்பு முறையை விதிக்கின்றது.

பிராமணம்—11

**आतृतीयसवनात्परि शेरे यज्ञस्य संतत्यै ॥**

என்பது.

உரை.

மூன்றும்முறை சோமரசம் பிழியும்வரை அங்கேயே இருத்தல்வேண்டும். இதனால் எக்ஞம் சந்ததமாய் நடக்கின்றது என்பது.

ஒன்பதாவது அநுவாகம்

முற்றிற்று.

---

## ஆறுங்காண்டம் நான்காம் பிரபாடகம்

### பத்தாவது அநுவாகம்

*சுக்கிராமந்திக் கிரகங்களைக் கூறும் பிராமணங்கள்*

ஐந்து பஞ்சாதிக்குமேல் முப்பத்தேழு பதங்களைக் கொண்டது.

बृहस्पतिर्देवानां पुरोहित आसीच्छण्डामर्कावसुराणां ब्रह्मण्वन्तो देवा आसन्ब्रह्मण्वन्तोऽसुरास्तेऽन्योऽन्यं नाशक्नुवन्नभिभवितुं ते देवाश्शण्डामर्कावुपामन्त्रयन्त तावब्रूतां वरं वृणावहै ग्रहावेव नावत्रापि गृह्येतामिति ताभ्यामेतौ शुक्रामन्थिनावगृह्णन्ततो देवा अभवन्पराऽसुरा यस्यैवं विदुषश्शुक्रामन्थिनौ गृह्येते भवत्यात्मना परा [४२] अस्य भ्रातृव्यो भवति तौ देवा अपनुद्याऽऽत्मन इन्द्रायाजुहवुरपनुत्तौ शण्डामर्कौ सहामुनेति ब्रूयाद्यं द्विष्याद्यमेव द्वेष्टि तेनैनौ सहापनुदते स प्रथमस्संकृतिर्विश्वकर्मेत्येवैनावात्मन इन्द्रायाजुहवुरिन्द्रो ह्येतानि रूपाणि करिक्रदचरदसौ वा आदित्यः शुक्रश्चन्द्रमा मन्थ्यपिगृह्य प्राञ्चौ निः [४३] क्रामतस्तस्मात्प्राञ्चौ यन्तौ न पश्यन्ति प्रत्यञ्चावावृत्य जुहुतस्तस्मात्प्रत्यञ्चौ यन्तौ पश्यन्ति चक्षुषी वा एते यज्ञस्य यच्छुक्रामन्थिनौ नासिकोत्तरवेदिरभितः परिक्रम्य जुहुतस्तस्मादभितो नासिकां चक्षुषी तस्मान्नासिकया चक्षुषी विधृते सर्वतः परिक्रामतो रक्षसामपहत्यै देवा

वै याः प्राचीराहुतीरजुहवुर्ये पुरस्तातसुरा आसन्ताꣳस्ताभिः प्र [४४] अनुदन्त याः प्रतीचीर्ये पश्चादसुरा आसन्ताꣳस्ताभिरपानुदन्त प्राचीरन्या आहुतयो हूयन्ते प्रत्यञ्चौ शुक्रामन्थिनौ पश्चाच्चैव पुरस्ताच्च यजमानो भ्रातृव्यान्प्र णुदते तस्मात्पराचीः प्रजाः प्रवीयन्ते प्रतीचीर्जायन्ते शुक्रामन्थिनौ वा अनु प्रजाः प्रजायन्तेऽत्रीश्चाऽऽद्याश्च सुवीराः प्रजाः प्रजनयन्परीहि शुक्रश्शुक्रशोचिषा [४५] सुप्रजाः प्रजाः प्रजनयन्परीहि मन्थी मन्थिशोचिषेत्याहैता वै सुवीरा या अत्रीरेतास्सुप्रजा या आद्या य एवं वेदात्र्यस्य प्रजा जायते नाऽऽद्या प्रजापतेरक्ष्यश्वयत्तत्पराऽपतत्तद्विकङ्कतं प्राविशत्तद्विकङ्कते नारमत तद्यवं प्राविशत्तद्यवेऽरमत तद्यवस्य [४६] यवत्वं यद्वैकङ्कतं मन्थिपात्रं भवति सक्तुभिश्श्रीणाति प्रजापतेरेव तच्चक्षुस्सं भरति ब्रह्मवादिनो वदन्ति कस्मात्सत्यान्मन्थिपात्रꣳ सदो नाश्नुत इत्यार्तपात्रꣳ हीति ब्रूयाद्यदश्नुवीतान्धोऽध्वर्युस्स्यादार्तिमार्छेत्तस्मान्नाश्नुते [४७] ॥ आत्मना परा निष्प्र शुक्रशोचिषा यवस्य सप्तत्रिꣳशच्च ॥ १० ॥

*இதில், சுக்கிரமந்திகட்குச் சோமரசத்தைப் பிடித்துவைக்கும் வகை கூறப்படுகின்றது.*

---

அக் கிரகங்களை விதிக்கின்றது.

பிராமணம்—1

बृहस्पतिर्देवानां पुरोहित आसीच्छण्डामर्कावसुराणां ब्रह्मण्वन्तो देवा आसन्ब्रह्मण्वन्तोऽसुरास्तेऽन्योऽन्यं नाशक्नुवन्नभिभवितुं ते देवाश्शण्डामर्कावुपामन्त्रयन्त तावब्रूतां वरं वृणावहै ग्रहावेव नावत्रापि गृह्येतामिति-

கிரஹங்கள்)

ताभ्यामेतौ शुक्रामन्थिनावगृह्णन्ततो देवा अभवन्पराऽसुरा यस्यैवं विदुषश्शुक्रामन्थिनौ गृह्येते भवत्यात्मना पराऽस्य भ्रातृव्यो भवति ।

என்பது.

உரை.

தேவர்கட்கு பிருகற்பதி புரோகிதரா யிருந்தனர். அசுரர்கட்கோ, சண்டன் மர்க்கன் என்னுமிருவரும் புரோஹிதஞ் செய்யும் மந்திரவல்லுநர் களாயிருந்தனர். இவர்களை வெல்லமுடியாதென்று கருதி அசுரர்களை வெல் லல்வேண்டுமென்று சண்டமர்க்கர்களை இரகசியத்தில் அழைத்துப் பேசி னர். அவர்கள், எங்கட்கு ஒரு எக்ஞத்திலும் அவிர்ப்பாகம் இல்லை ஆதலின் சோதிட்டோமத்தில் பாகம்வேண்டும். அதுவும், சோமபாத்திரத்தில் வேண் டும். அதிலும் ஒட்டியிருக்கின்றவைகள் வேண்டாம் என்று வரங்கேட்ட னர். தேவர்கள், அவ்வாறே பெற்றுக்கொள்வீர்களாக என்று உடன்பட்டுக் கொண்டனர். ஆனால் இங்கு, சண்டமர்க்கர்கள் அவி பெற்றுக்கொள்வோம் என்று மாத்திரம் வேண்டினார்களேயன்றி எமக்கு ஹோமஞ் செய்தல் வேண்டும் என்று கேட்கவில்லை. ஆதலின், தேவர்கள் அவர்களுக்குக் கொடுத்தல் மாத்திரத்தானே தமது காரியத்தை நிறைவேற்றிக் கொண்ட னர். இவ்வாறு சோமரசத்தைக் கொடுத்து தேவர்கள் வென்றனர் அசுரர் கள் தோற்றனர். இவ்வாறுணர்ந்து சுக்கிரா மந்திக்கிரகத்தில் சோமரசம் பிடிப்பவன் தனது பகைவரை வெல்கின்றான் என்பது.

---

அர்த்தவாதத்தால் சுக்கிராமந்திக் கிரகங்களின் அடியில் ஒட்டியிருக்கும் மண்ணைத் துடைத்தல் வேண்டுமென்று விதிப்பதற்கு விதியைக் கற்பிக் கின்றது.

பிராமணம்—2

तौ देवा अपनुद्याऽऽत्मन इन्द्रायाजुहवुरपनुत्तौ शण्डामर्कौ सहामुनेति ब्रूयाद्यं द्विष्यात्तमेव द्वेष्टि तेनैनौ सहापनुदते ।

என்பது.

உரை.

தேவர்கள் தமது காரியத்தை முடித்தபிறகு, சண்டன்மர்க்கன் என் னும் அவ்விரு அசுரர்களையும் விலக்கிவிட்டு, இந்திரன் பொருட்டு அவ் விரண்டு பாத்திர சோமரசங்களையும் ஹோமஞ்செய்தனர். ஆதலின், இவை களின் அடியில் ஒட்டிக்கொண்டிருக்கும் மண்ணைத் துடைத்தல்வேண்டும். அங்கு, "அபநுத்தௌ சண்டாமர்க்கௌ ஸஹாமுநா" என்னும் மந்திரத்தை ஓதல்வேண்டும். இதனால், துவேஷிப்பவன் துவேஷிக்கத்தக்கவன் என்பு

வர்களுடைய பெயரையுஞ் சொல்லவேண்டும். இதனால் இவர்களையும் நீக்கு கின்றான் என்பது.

---

வேறிடத்திற் கூறியுள்ள மந்திரத்தால் சோமரசஹோமஞ் செய்தல்வேண்டு மென்னும் விதியை அர்த்தவாதத்தாற் கற்பிக்கின்றது.

பிராமணம்—3

**स प्रथमस्संकृतिर्विश्वकर्मेत्येवैनावात्मन इन्द्रायाजुहवुरिन्द्रो ह्येतानि रूपाणि करिक्रदचरत् ।**

என்பது

உரை.

அவ் விந்திரன் தேவர்களுக்குட் சிறந்தவனும், விசுவகருமன், நன்கு படைப்பவனும், பிருகற்பதியும் ஆவன். அத்தகைய இந்திரன் பொருட்டுப் பிழிந்த சோமரசத்தை ஹோமஞ் செய்கின்றேன். இங்கு, இத்தகைய வடிவங் களைக்கொண்டு உலகைச் செலுத்துகின்றவன் இந்திரன் ஆதலின் இம் மந்தி ரத்தால் ஹோமஞ்செய்தல் பொருத்தமுடையதேயாம் என்பது.

---

ஹோமஞ்செய்யுமுன் இரண்டு சோமபாத்திரங்களையும் எடுத்து சிராப் போடிகளால் மூடிக்கொண்டு அத்வரியுவும் பிரதிப்பிரஸ்தாதாவும் கிழக்குமுக மாய் வெளிப்படல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—4

**असौ वा आदित्यश्शुक्रश्चन्द्रमा मन्थ्यपिगृह्य प्राञ्चौ निष्क्रामतस्तस्मात्प्राञ्चौ यन्तौ न पश्यन्ति ।**

என்பது

உரை.

இச் சுக்கிரக்கிரகம் சூரியனும், மந்திக்கிரகம் சந்திரனும் இவ்விரண்டும் மேற்கிலொடுங்கி பிறகு கிழக்கில் உதிப்பதை யாரும் உணரமுடியாது. ஆத லின், கிழக்காய்ச்செல்லும் சுக்கிரா மந்திக்கிரகங்களை ஒருவரும் பார்க்காமல் மூடிக்கொள்ளல்வெண்டும் என்பது.

---

கிரஹங்கள்)

மேற்குமுகமாய் நின்று ஹோமஞ் செய்தல்வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—5

**प्रत्यञ्चावावृत्य जुहुतस्तस्मात्प्रत्यञ्चौ यन्तौ पश्यन्ति ।**

என்பது.

உரை.

உதயத்திற்குப் பிறகு மேற்கேசெல்லும் சூரியசந்திரர்களை யாவரும் பார்க்கின்றார்களாதலின் மூடியிருந்ததை நீக்கிவிட்டு மேற்குமுகமாய் நின்று ஹோமஞ் செய்தல்வேண்டும் என்பது.

---

உத்தரவேதியை நாற்புறமுஞ் சுற்றிவரல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—6

**चक्षुषी वा एते यज्ञस्य यच्छुक्रामन्थिनौ नासिकोत्तरवेदिरभितः परिक्रम्य जुहुतस्तस्मादभितो नासिकां चक्षुषी तस्मान्नासिकया चक्षुषी विधृते सर्वतः परिक्रामतो रक्षसामपहत्यै ।**

என்பது.

உரை.

சுக்கிர மந்திக்கிரகங்களிரண்டும் எக்ஞத்திற்குக் கண்கள், உத்தரவேதிகை மூக்கு, ஆதலின், அதைச் சுற்றிக்கொண்டு ஹோமஞ்செய்தல்வேண்டும். இதனால், கண்கள் மூக்கால் பாதுகாக்கப்படுகின்றன. நாற்புறமுஞ் சுற்றுதல் இராக்கதரை நீக்குதற்பொருட்டென்பது.

---

இங்கு, சமசஹோமம் கிழக்குமுகமாகவும், கிரகஹோமம் மேற்கு முகமாகவுஞ் செய்தல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—7

**देवा वै याः प्राचीराहुतीरजुहवुर्ये पुरस्तादसुरा आसन्ताँस्ताभिः प्राणुदन्त याः प्रतीचीर्ये पश्चादसुरा आसन्ताँस्ताभिरपानुदन्त प्राचीरन्या आहुतयो हूयन्ते प्रत्यञ्चौ शुक्रामन्थिनौ पश्चाच्चैव पुरस्ताच्च यजमानो भ्रातृव्यान्प्र णुदते तस्मात्पराचीः प्रजाः प्रवीयन्ते प्रतीचीर्जायन्ते ।**

என்பது.

உரை.

தேவர்கள் கிழக்கில் ஓமங்களைச் செய்து அவைகளால் கிழக்கிலுள்ள அசுரர்களை விலக்கினர். மேற்கில் ஓமங்களைச் செய்து அவைகளால் மேற்கி

னுள்ள அசுரர்களை விலக்கினர். ஏனைய ஆகுதிகளனைத்தையும் கிழக்காகவே செய்தனர். சுக்கிர மந்திக்கிரகங்களை மேற்காகச் செய்கின்றார்கள். இதனால், முன்னும் பின்னுமுள்ள பகைவரை எசமானன் விலக்குகின்றான். இது பற்றியே எந்தமுகமாய்ப் புணர்கின்றானோ, அதற்கு நேர்முகமாக குழந்தைகள் பிறக்கின்றன என்பது.

---

சூத்திரகாரர் எடுத்துக்காட்டிய சுற்றிவரும் மந்திரங்களிரண்டும் வேறிடத்திற் கூறியுள்ளவைகள். அவைகட்கு இங்கு உரையைக் கூறுகின்றது.

பிராமணம்—8

**शुक्रामन्थिनौ वा अनु प्रजाः प्रजायन्तेऽत्त्रीश्चाऽऽद्याश्च सुवीराः प्रजाः प्रजनयन्परीहि शुक्रश्शुक्रशोचिषा सुप्रजाः प्रजाः प्रजनयन्परीहि मन्थी मन्थिशोचिषेत्याहैता वै सुवीरा या अत्त्रीरेतास्सुप्रजाया आद्याः ।**

என்பது.

உரை.

சுக்கிர மந்திக்கிரகங்களால் முதன்மையான சிறந்த செயலையுடைய உத்தம புத்திரர்களும், தாழ்ந்த செயலைச் செய்யும் புத்திரர்களும் பிறக்கின்றனர். சுக்கிரக்கிரகமே! நீ எசமானனுக்கு நல்ல புதல்வர்களை யுண்டாக்கி விட்டு உத்தரவேதிக்குத் தெற்கிலிருந்துகொண்டு உனது ஒளிகளால் அங்குள்ள அசுரர்களை விலக்குவாயாக. மந்திக் கிரகமே! நீ, உனது சம்பந்தமாகிய ஒளிகளால் அசுரர்களைப் போக்குவாயாக என்பது.

---

இவ்வாறுணர்ந்தவனைப் புகழ்கின்றது.

பிராமணம்—9

**य एवं वेदाऽत्त्यस्य प्रजा जायते नाऽऽद्या ।**

என்பது

உரை.

இவ்வாறு சுக்கிரமந்திகள் என்னுஞ் சோமரசப் பாத்திரங்களின் தன்மையை யுணர்ந்தவன் உத்தமமான புத்திரப்பேற்றையே யடைகின்றான். தாழ்ந்த புதல்வரைப் பெறமாட்டான் என்பது.

கிரஹங்கள்)

மந்திபாத்திரம் நரிமுருக்கை (வைகங்கத) மரத்தாற் செய்தல்வேண்டும் என்பதையும் கோதுமைமாவைக் கலத்தல்வேண்டும் என்பதையும் விதிக்கின்றது.

பிராமணம்—10

प्रजापतेरक्ष्यश्वयत्तत्पराऽपतत्तद्विकङ्कतं प्राविशत्तद्विकङ्कतेनारमत तद्यवं प्राविशत्तद्यवेऽरमत तद्यवस्य यवत्वं यद्वैकङ्कतं मन्थिपात्रं भवति सक्तुभिश्श्रीणाति प्रजापतेरेव तच्चक्षुस्सं भरति ।

என்பது.

உரை.

*பிரசாபதியினுடைய கண்கள் கீழேவிழுந்து விகங்கத மரத்திற்புகுந்தது. பிறகு அதிலும் இராமல் வாற்கோதுமைக்குட் புகுந்தது. இதனால் 'யவம்' எனப்படுகின்றது. மந்திபாத்திரத்தை வைகங்கத மரத்தாற் செய்கின்றவனும், கோதுமைமாவைக் கலக்கின்றவனும் பிரசாபதியின் கண்களை திருத்தி வைக்கின்றான் என்பது.*

---

ஆகவனீயத்தில் ஓமஞ் செய்துவிட்டு, மேற்காய்த் திரும்பிப்போய் சபையையடைந்து அருந்தல்வேண்டும் என்பதால், ஏனைய பாத்திரங்களைப்போல் மந்திபாத்திரமும் சபைக்குட் போதல்வேண்டும் என்று வந்ததை நீக்குவதைக் கடாவிடைகளாற் கற்பிக்கின்றது.

பிராமணம்—11

ब्रह्मवादिनो वदन्ति कस्मात्सत्यान्मन्थिपात्रꣳ सदो नाश्नुत इत्यार्तपात्रꣳ ह्यीति ब्रूयाद्यदश्नुवीतान्धोऽध्वर्युस्स्यादार्तिमार्छेत्तस्मान्नाश्नुते ॥

என்பது.

உரை.

*மந்தி பாத்திரம் ஏன் சபைக்குட் புகவில்லை? என்று பிரமவாதிகள் ஆசங்கித்ததற்கு, அது நோயுடன்கூடிய கண் வடிவாமாதலின் சபைக்குட் புகின் அத்வரியுவின் கண் கெட்டுவிடும் என்று விடைகூறினர் என்பது.*

பத்தாவது அநுவாகம்

*முற்றிற்று.*

---

## ஆறுங்காண்டம் நான்காம் பிரபாடகம்

### பதினோராவது அநுவாகம்

ஆக்கிராயணத்தைக் கூறும் பிராமணங்கள்.

நான்கு பஞ்சாதிக்குமேல் இருபது பதங்களை கொண்டது.

देवा वै यद्यज्ञेऽकुर्वत तदसुरा अकुर्वत ते देवा आग्रयणाग्रान्ग्रहानपश्यन्तानगृह्णत ततो वै तेऽग्रं पर्यायन् यस्यैवं विदुष आग्रयणाग्रा ग्रहा गृह्यन्तेऽग्रमेव समानानां पर्येति रुग्णवत्यर्चा भ्रातृव्यवतो गृह्णीयाद्भ्रातृव्यस्यैव रुक्त्वाऽग्रꣳ समानानां पर्येति ये देवा दिव्येकादश स्थेत्याह [४८] एतावतीर्वै देवतास्ताभ्य एवैनꣳ सर्वाभ्यो गृह्णात्येष ते योनिर्विश्वेभ्यस्त्वा देवेभ्य इत्याह वैश्वदेवो ह्येष देवतया वाग्वै देवेभ्योऽपाक्रामद्यज्ञायातिष्ठमाना ते देवा वाच्यपक्रान्तायां तूष्णीं ग्रहानगृह्णत साऽमन्यत वागन्तर्यन्ति वै मेति साऽऽग्रयणं प्रत्याऽगच्छत्तदाग्रयणस्याऽऽग्रयणत्वम् [४९] तस्मादाग्रयणे वाग्वि सृज्यते यत्तूष्णीं पूर्वे ग्रहा गृह्यन्ते यथात्सारीयति म आख इयति नापरात्स्यामीत्युपावसृजत्येवमेव तदध्वर्युराग्रयणं गृहीत्वा यज्ञमारभ्य वाचं वि सृजते त्रिर्हिं करोत्युद्गातॄनेव तद्वृणीते प्रजापतिर्वा एष यदाग्रयणं गृहीत्वा हिं करोति प्रजापतिरेव [५०] तत्प्रजा अभि जिघ्रति तस्माद्वत्सं जातं गौरभि जिघ्रत्यात्मा वा एष यज्ञस्य यदाग्रयणस्सवनेसवनेऽभि गृह्णात्यात्मन्नेव यज्ञꣳ सं तनोत्युपरिष्टादा नयति रेत एव तद्दधात्यधस्तादुप गृह्णाति प्रजनयत्येव तद्ब्रह्मवादिनो वदन्ति कस्मात्स

கிரஹங்கள்)

त्याद्गायत्री कनिष्ठा छन्दसाꣳ सती सर्वाणि सवनानि वहतीत्येष वै गायत्रियै वत्सो यदाग्रयणस्तमेव तदभिनिवर्तꣳ सर्वाणि सवनानि वहति तस्माद्वत्समपाकृतं गौरभि नि वर्तते [५१] ॥ आहाऽऽग्रयणत्वं प्रजापतिरेवेति विꣳशतिश्च ॥ ११ ॥

இப் பிரபாடகத்தின் அநுவாக எண்களைக் காட்டுந் தலைப்புச் சொற்கள்:—

यज्ञेन ता उपयड्भिर्देवा वै यज्ञमाग्नीध्रे ब्रह्मवादिनस्स त्वै देवस्य ग्रावणं प्राणो वा उपाꣳश्वग्रा देवा वा उपाꣳशौ वाग्वै मित्रं यज्ञस्य शिरो बृहस्पतिर्देवा वा आग्रयणाग्रानेकादश ॥ ११ ॥

பஞ்சாதிகளின் தொகையைக்காட்டும் தலைப்புச் சொற்கள்:—

यज्ञेन लोके पशुमान्त्स्यात्सवनं माध्यंदिनं वाग्वा अरिक्तानि तत्प्रजा एकपञ्चाशत् ॥ ५१ ॥

இதில், ஆக்ராயணம் என்னுஞ் சோமபாத்திரங் கூறப்படுகின்றது.

---

மந்திரங்கட்கு உரைகூறவிரும்பி ஆக்ராயணக்கிரகத்தை விதிக்கின்றது.

பிராமணம்—1

देवा वै यद्यज्ञेऽकुर्वत तदसुरा अकुर्वत ते देवा आग्रयणाग्रान्ग्रहानपश्यन्तानगृह्णत ततो वै तेऽग्रं पर्यायन् यस्यैवं विदुष आग्रयणाग्रा ग्रहा गृह्यन्तेऽग्रमेव समानानां पर्येति ।

என்பது.

உரை.

தேவர்கள் எக்ஞத்திற் செய்பவைகளனைத்தையும் அசுரர்களுஞ் செய்து கொண்டுவந்தனர். அதைக்கண்ட தேவர்கள், ஆக்ராயணத்தை முதலாகக் கொண்டு கிரகங்களைக் கண்டுபிடித்துச் செய்தனர். அதனால் தேவர்கள் மேம்பாடடைந்தனர். இவ்வாறுணர்ந்து ஆக்ராயணத்தை முதலாகக்கொண்ட கிரகங்களைக் கிரகிப்பவன் தன்னுடன் ஒத்தார்களுட் சிறந்தவனாகின்றான் என்பது.

---

"திரிம்சத்திரயः" என்னும் மந்திரத்தின் விஷயத்தை விளக்குகின்றது.

பிராமணம்—2

**रुग्णवत्यर्चा भ्रातृव्यवतो गृह्णीयाद्भ्रातृव्यस्यैव रुक्त्वाऽग्रं समानानां पर्येति ।**

என்பது.

உரை.

'ருக்' என்னும் பகுதியையுடைய மந்திரத்தால் பகையை யுடையவன் கிரகித்தல் (சோமரசத்தைப் பிடித்தல்) வேண்டும். இதனுல், பகைவனுக்கு நோயையுண்டாக்கிவிட்டு தன்னுடன் ஒத்தார்களுக்குட் சிறந்தவனுகின்ருன் என்பது.

---

அவ்விரண்டு மந்திரங்களிலும் தேவதைகளை எண்ணிக் கூறியது அத் தேவர் களனைவரையுங் குறித்துச் சோமரசத்தைப் பிடித்தற்பொருட்டு என்கின்றது.

பிராமணம்—3

**ये देवा दिव्येकादश स्थेत्याहैतावतीर्वै देवतास्ताभ्य एवैनं सर्वाभ्यो गृह्णाति ।**

என்பது.

உரை.

"ஏதே வா" என்றது முதலியது. இவ்வளவே தேவர்கள் அவர்க ளனைவரையுங் குறித்து இச் சோமரசத்தை எடுக்கின்ருன் என்கின்றது.

---

பாத்திரத்தை வைக்கும் மந்திரத்தில் 'விஸ்வேப்யः' என்றது பொருந்தும் என்கின்றது.

பிராமணம்—4

**एष ते योनिर्विश्वेभ्यस्त्वा देवेभ्य इत्याह वैश्वदेवो ह्येष देवतया ।**

என்பது.

உரை.

"ஏஷதே" என்றது முதலியது, இது வைசுவ தேவதேவதையின் பொருட்டு வைக்கப்படுகின்றது என்கின்றது.

---

வாக்கு நியமத்தை விடல்வேண்டுமென்று விதிக்கின்றது

பிராமணம்—5

**वाग्वै देवेभ्योऽपाक्रामद्यज्ञायातिष्ठमाना ते देवा वाच्यपक्रान्तायां तूष्णीं ग्रहानगृह्णत साऽमन्यत वागन्तर्यन्ति वै मेति साऽऽग्रयणं प्रत्याऽगच्छ-त्तदाग्रयणस्याऽऽग्रयणत्वं तस्मादाग्रयणे वाग्वि सृज्यते यत्तूष्णीं पूर्वे ग्रहा गृह्यन्ते ।**

என்பது.

உரை.

வாக்தேவதை கோபித்துக்கொண்டு தேவர்கள் செய்யும் எக்ஞத்தில் தனது வடிவை மறைத்துக்கொண்டது. தேவர்கள், வாக்குப் போனபோது மந்திரமோதாமலே சோமரசத்தைப் பாத்திரங்களிற் பிடித்தனர். அப்போது வாக்கு, என்னைத் தள்ளிவிட்டனர் என்றெண்ணிக்கொண்டு ஆக்ராயணத்தினிடத்தில் வந்தது. இதுவே ஆக்ராயண மெனப்படும். ஆதலின், முதலில் பேசாமல் சோமரசங்கிரகிக்கப்பட்டு இப்போது வாக்தேவதை வந்துவிட்டதால் இங்கு வாக் நியமத்தை விடல்வேண்டும். முதலிற் பேசாமல் கிரகிக்கப்பட்டன என்பதற்கு மெதுவாய் மந்திரத்தை ஓதல் எனப்பொருள் கொள்ளல் வேண்டும். இதனால், வாக் நியமம் வாக் நியமத்தை விடல் என்பதால் மெதுவாகவும் ஒரக்கவுங் கூறுதல் என்று கொள்ளகிடந்தமை காண்க என்பது.

---

இருவகைச் சத்தங்களையும் உலகியல் உவமையால் விரிக்கின்றது.

பிராமணம்—6

**यथा त्सारीयति म आख इयति नापरात्स्यामीत्युपावसृजत्येवमेव तदध्व-र्युराग्रयणं गृहीत्वा यज्ञमारभ्य वाचं वि सृजते ।**

என்பது.

உரை.

வேடனானவன், பன்றி முதலானவைகளைக் கொல்லுதல், அவை தனக்குப் பயந்துகொண்டு ஓடுதல், தான்விட்ட அம்பு பழுதுபடல் என்னுங் குற்றங்கள் நமக்கில்லை எனவும், மற்றும், பன்றி முதலியவைகள் வீழ்தற்பொருட்டு வழியில் பறித்து வைத்திருக்கும் படுகுழி இவ்வளவு தூரத்தில் இருக்கின்றது என்று உறுதி பண்ணிக்கொண்டுவந்து அங்கிருந்துகொண்டு சமயம் வந்தபோது பாணத்தை விடுகின்றான். அதைப்போல், அத்வரியு மெல்ல மெல்ல ஓதி சில சோமபாத்திரங்ளிற் சோமரசத்தைப் பிடிக்கின்

றுன். பிறகு எக்ஞம் வலுவடைந்ததுகண்டு வாக் நியமத்தை விட்டுவிடுகின் றுன் எனல் பொருந்தும் என்பது.

---

அதை விதிக்கின்றது.

பிராமணம்—7

त्रिर्हिं करोत्युद्गातृनेव तद्वृणीते ।

என்பது.

உரை.

மும்முறை ஹிம்ஹிம் என்றது, சாமமறைப்பாடகனை அழைத்தது போலாகின்றது. ஈண்டு, சாமவேதத்தில் ஹிம் என்றது வெளிப்படையா மாதலின் அச்சொல்லால் அழைத்தல் பொருந்துமாறுணர்க என்பது.

---

ஹிம் என்பதற்குக் காலத்தை விதிக்கின்றது.

பிராமணம்—8

प्रजापतिर्वा एष यदाग्रयणो यदाग्रयणं गृहीत्वा हिं करोति प्रजापतिरेव तत्प्रजा अभि जिघ्रति तस्माद्वत्सं जातं गौरभि जिघ्रति ।

என்பது.

உரை.

ஆக்ராயணக் கிரகம் பிரசாபதியாமாதலின் அதைக் கிரகித்துக் கொண்டு ஹிம் என்னல்வேண்டும். அது, பிரசாபதி பிரசையை முகந்து பார்த்தலாம். ஆதலின், பசுக்களும் கன்றை முகந்து பார்க்கின்றன என்பது.

---

மூன்று சவனங்களிலும் ஆக்ராயணத்தை விதிக்கின்றது.

பிராமணம்—9

आत्मा वा एष यज्ञस्य यदाग्रयणस्सवनेसवनेऽभि गृह्णात्यात्मन्नेव यज्ञꣳ सं तनोति ।

என்பது.

உரை.

ஆக்ராயணக் கிரகம் எக்ஞத்திற்கு ஆன்மாவாம். ஆதலின், ஒவ்வொரு முறை சோமரசம் பிழியும்போதுங் கிரகித்தல்வேண்டும். இதனுல் ஆன்மாவினிடத்தில் எக்ஞத்தை நன்கு விரிக்கின்ருன் என்பது.

---

தசாபவித்திரத்தி (வடிக்கும் ஆடையி) ல் சோமரசத்தை வார்ப்பதை விதிக்கின்றது.

பிராமணம்—10

**उपरिष्टादा नयति रेत एव तद्दधाति ।**

என்பது

உரை.

ஆடையின்மேல் வார்த்தலால் இரேதசை நிலைக்க வைக்கின்ருன் என்பது

---

தசாபவித்திரமென்னும் ஆடையின்கீழ் ஒழுகுவதைப் பிடித்தல்வேண்டும் என்று விதிக்கின்றது.

பிராமணம்—11

**अधस्तादुप गृह्णाति प्रजनयत्येव तत् ।**

என்பது

உரை.

கீழாகச் சோமரசத்தைப் பிடிக்கின்றது பிரசையை உண்டாக்குகின்றதாம் என்பது.

---

மூன்று சவனங்களிலும் உள்ள ஆக்ராயணக் கிரகத்தைப் புகழ்கின்றது.

பிராமணம்—12

**ब्रह्मवादिनो वदन्ति कस्मात्सत्याद्गायत्री कनिष्ठा छन्दसा॑ँ सती सर्वाणि सवनानि वहतीत्येष वै गायत्रियै वत्सो यदाग्रयणस्तमेव तदभिनिवर्त॑ँ-सर्वाणि सवनानि वहति तस्माद्वत्समपाकृतं गौरभि निवर्तते ॥**

என்பது.

உரை.

*சந்தங்களுள் காயத்திரிச் சந்தம் குறைந்த எழுத்துக்களையுடைதாமாயினும் அது எல்லாச் சவனங்களையும் வகித்தல் எதனல்? என்று பிரமவாதிகள் ஆசங்கிக்கின்றனர். காயத்திரிக்கு ஆக்ராயணம் கன்றுமாதலின் மீண்டும் மீண்டும் அதைப் பிரியப்படுத்துகின்றது. இதுபற்றியே கன்றைப் பிரித்துவிட்ட பசுவும் மீண்டும் கன்றினிடமே வந்துவிடுகின்றது என்பது.*

பதினோராம் அநுவாகம்
*முற்றிற்று.*

---

நான்காம் பிரபாடகம்
முடிந்தது.

---

ஐந்தாம் பிரபாடக விடயச் சுருக்கம்

उक्थ्यग्रहः पञ्चमाद्ये द्वितीये ध्रुव ईरितः ।
ऋतुग्रहास्तृतीये स्युरैन्द्राग्नस्तु चतुर्थके ॥ १ ॥
मरुत्वतीया माहेन्द्रश्चेत्येते पञ्चमे श्रुताः ।
स्यादादित्यग्रहष्षष्ठे सावित्रस्सप्तमे तथा ॥ २ ॥
वैश्वदेवोऽथाष्टमे हि श्रुतः पात्नीवतो ग्रहः ।
हारियोजनसंज्ञस्तु नवमे ग्रह ईरितः ॥ ३ ॥
क्षये त्वाग्रयणादीनां दशमे स्यात्पुनर्ग्रहः ।
सोमपात्रस्तुतिस्त्वन्त्ये पञ्चमोऽयं प्रपाठकः ॥ ४ ॥

இவ்வைந்தாம் பிரபாடகத்திலும் பதினொரு அநுவாகங்களுள்ளன. அவற்றுள், முதலாவதில் உக்த்யக்கிரகமும், இரண்டாவதிற் துருவஸ்தாலியும், மூன்றுவதில் இருதுக்கிரகங்களும், நான்காவதில் ஐந்திராக்னக்கிரகமும், ஐந்தாவதில் மருத்வதீயம் மாஹேந்திரம் என்னும் இரண்டுக்கிரகங்களும், ஆறுவதில் ஆதித்யக்கிரகமும், ஏழாவதில் சாவித்திரக்கிரகமும், எட்டாவதில் வைசுவதேவக்கிரக முதலியதும், ஒன்பதாவதில் ஹாரியோஜனகிரகமும், பத்தாவதில் ஆக்கிரயணம் முதலியவைகளில் சோமம் ஆய்விடில் மறுபடியுங் கிரகிப்பதும், பதினொன்றுவதில் சோமபாத்திரங்களின் துதியும் சவனீய புரோடாசவிதியுஞ் சொல்லப்படுகின்றன என்பது.

---

## ஆறுங்காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

### முதலாநுவாகம்

உக்தியக்கிரகத்தைக் கூறும் பிராமணங்கள்.

நான்த பஞ்சாதிக்குமேல் முப்பத்துமூன்று பதங்களைக் கொண்டது.

इन्द्रो वृत्राय वज्रमुदयच्छत्स वृत्रो वज्रादुद्यतादबिभेत्सोऽब्रवीन्मा मे प्रहारस्ति वा इदं मयि वीर्यं तत्ते प्रदास्यामीति तस्मा उक्थ्यं प्रायच्छत्तस्मै द्वितीयमुदयच्छत्सोऽब्रवीन्मा मे प्रहारस्ति वा इदं मयि वीर्यं तत्ते प्रदास्यामीति [१] तस्मा उक्थ्यमेव प्रायच्छत्तस्मै तृतीयमुदयच्छत्तं विष्णुरन्वतिष्ठत जहीति सोऽब्र

वीन्मा मे प्रहारस्ति वा इदं मयि वीर्यं तत्ते प्रदास्यामीति तस्मा उक्थ्यमेव प्रायच्छत्तं निर्मायं भूतमहन् यज्ञो हि तस्य मायाऽऽसीद्यदुक्थ्यो गृह्यत इन्द्रियमेव [२] तद्वीर्यं यजमानो भ्रातृव्यस्य वृङ्क्त इन्द्राय त्वा बृहद्वते वयस्वत इत्याहेन्द्राय हि स तं प्रायच्छत्तस्मै त्वा विष्णवे त्वेत्याह यदेव विष्णुरन्वतिष्ठत जहीति तस्माद्विष्णुमन्वाभजति त्रिर्निर्गृह्णाति त्रिर्हि स तं तस्मै प्रायच्छदेष ते योनिः पुनर्हविरसीत्याह पुनः पुनः [३] ह्यस्मान्निर्गृह्णाति चक्षुर्वा एतद्यज्ञस्य यदुक्थ्यस्तस्मादुक्थ्यꣳ हुतꣳ सोमा अन्वायन्ति तस्मादात्मा चक्षुरन्वेति तस्मादेकं यन्तं बहवोऽनु यन्ति तस्मादेको बहूनां भद्रो भवति तस्मादेको बह्वीर्जाया विन्दते यदि कामयेताध्वर्युरात्मानं यज्ञयशसेनार्पयेयमित्यन्तराऽऽहवनीयं च हविर्धानं च तिष्ठन्नव नयेत् [४] आत्मानमेव यज्ञयशसेनार्पयति यदि कामयेत यजमानं यज्ञयशसेनार्पयेयमित्यन्तरा सदोहविर्धाने तिष्ठन्नव नयेद्यजमानमेव यज्ञयशसेनार्पयति यदि कामयेत सदस्यान् यज्ञयशसेनार्पयेयमिति सद आलभ्याव नयेत्सदस्यानेव यज्ञयशसेनार्पयति [५] ॥ इतीन्द्रियमेव पुनःपुनर्नयेत्रयस्त्रिꣳशच्च ॥ १ ॥

*இதில், உக்த்யக் கிரகத்தின் வகை கூறப்படுகின்றது.*

---

மந்திரத்திற்கு உரை கூறவதன்பொருட்டு, முதலில் உக்த்யக்கிரகத்தை விதிக்கின்றது.

பிராமணம்—1

इन्द्रो वृत्राय वज्रमुदयच्छत्स वृत्रो वज्रादुद्यतादबिभेत्सोऽब्रवीन्मा मे प्रहारस्ति वा इदं मयि वीर्यं तत्ते प्रदास्यामीति तस्मा उक्थ्यं प्रायच्छत्तस्मै

கிரஹம்)

द्वितीयमुदयच्छत्सोऽब्रवीन्मा मे प्रहारस्ति वा इदं मयि वीर्यं तत्ते प्रदास्यामीति तस्मा उक्थ्यमेव प्रायच्छत्तस्मै तृतीयमुदयच्छत्तं विष्णुरन्वतिष्ठत जहीति सोऽब्रवीन्मा मे प्रहारस्ति वा इदं मयि वीर्यं तत्ते प्रदास्यामीति तस्मा उक्थ्यमेव प्रायच्छत्तं निर्मायं भूतमहन् यज्ञो हि तस्य मायाऽऽसीद्यदुक्थ्यो गृह्यत इन्द्रियमेव तद्वीर्यं यजमानो भ्रातृव्यस्य वृङ्क्ते ।

என்பது

உரை.

இந்திரன், விருத்திரன்மீது வச்சிராயுதத்தை ஏவினன் அதற்கு அவன் பயந்துகொண்டு என்னைக்கொல்லாதே உனக்கு வீரியத்தைக் கொடுக்கின்றேன் என்று உக்த்யக் கிரகத்தை யளித்தனன். இரண்டாமுறையும் விருத்திரன்மீது வச்சிரத்தை விடுத்தனன். அப்போதும், என்னைக் கொல்லாதே என்று வீரியமளித்தற்கு உக்த்யக் கிரகத்தைக் கொடுத்தனன். மூன்றுமுறையும் விருத்திரன்மீது வச்சிராயுதத்தை விடுத்தனன். அப்போதும் விஷ்ணு உதவியாகவந்து நின்றனர். அப்போது, என்னைக் கொல்லாதே வீரியத்தைக் கொடுக்கின்றேன் என்று உக்த்யக் கிரகத்தை யளித்தனன். உக்த்யமாகிய எக்ஞம் விருத்திரனுடைய மாயையாம். ஆதலின், உக்த்யத்தில் மோகம் வைத்த இந்திரன் விருத்திரனைக் கொல்லமாட்டாதவனாயினன். மூன்று சவனங்களிலும் உக்த்யத்தை யளித்தபோது மோகஞ் செய்விக்க முடியாமையின் இந்திரன் விருத்திரனைக் கொன்றனன். ஆதலின், இந்திரனைப்போல் பகைவனுடைய இந்திரிய வன்மையை ஒழிப்பதற்கு உக்தயத்தைக் கிரகித்தல் வேண்டுமென்பது.

---

விருத்திரன், இந்திரனுக்குக் கொடுத்ததால் மந்திரத்திலும் "இந்திரன் பொருட்டு" என்றது பொருந்தும் என்கின்றது.

பிராமணம்—2

इन्द्राय त्वा बृहद्वते वयस्वत इत्याहेन्द्राय हि स तं प्रायच्छत् ।

என்பது.

உரை.

"இந்திராய" என்றது முதலியது, இந்திரனுக்கு அவன் அதைக் கொடுத்தனன் என்கின்றது.

---

விஷ்ணுவும் உதவியாயிருந்ததால் அவரும் பங்குடையவர் ஆகையால் அவருடைய மந்திரமும் பொருந்தும் என்கின்றது.

பிராமணம்—3

**तस्मै त्वा विष्णवे त्वेत्याह यदेव विष्णुरन्वतिष्ठत जहीति तस्माद्विष्णुमन्वाभजति ।**

என்பது.

உரை.

*"தஸ்மை" என்றது முதலியது, விஷ்ணு உதவியாகவந்து நின்றதால் அவரும் பாகத்தை யநுபவிக்கின்றவராவர் என்கின்றது.*

---

மட்கலசத்தில் எடுத்துவைத்த சோமரசத்தை ஹோமஞ் செய்யும்போது மீண்டும் மரப்பாத்திரத்தில் மும்முறை எடுத்துக்கொள்ளல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—4

**त्रिर्निगृह्णाति त्रिर्हि स तं तस्मै प्रायच्छत् ।**

என்பது

உரை.

*அவ் விருத்திரன், இந்திரனுக்கு மும்முறை கொடுத்ததால் கலசத்திலுள்ள சோமத்தை மும்முறை எடுத்துக் கொள்ளல்வேண்டும் என்பது.*

---

மரப்பாத்திரத்திலெடுத்ததை வைக்கும் மந்திரத்திற்கும், கலசத்தைத் தொடும் மந்திரத்திற்கும் கற்பனைசெய்து உரை கூறுகின்றது.

பிராமணம்—5

**एष ते योनिः पुनर्हविरसीत्याह पुनः पुनर्ह्यस्मान्निगृह्णाति ।**

என்பது

உரை.

*"ஏஷ்தே" என்றது முதலியது, மேடையில் வைத்துவிட்டு மீண்டும் மீண்டும் உன்னை எடுத்துக்கொள்கின்றேன் என்கின்றது. இங்கு மூன்று முறையும் எடுத்தலும் அவிக்குரியதாகின்றது என்றது கருத்து.*

---

கிரஹம்)

உக்த்யஹோம சமசஹோமங்களை விதிக்கின்றது.

பிராமணம்—6

चक्षुर्वा एतद्यज्ञस्य यदुक्थ्यस्तस्मादुक्थ्यꣳ हुतꣳ सोमा अन्वायन्ति तस्मा-
दात्मा चक्षुरन्वेति तस्मादेकं यन्तं बहवोऽनु यन्ति तस्मादेको बहूनां भद्रो
भवति तस्मादेको बह्वीर्जाया विन्दते ।

என்பது.

உரை.

உக்த்யக்கிரகம் எக்ஞத்தின் கண்ணும், ஆதலின் அதை ஹோமஞ் செய்யில் கண்ணைப்பற்றிக்கொண்டு ஏனைய சமங்களின் சமுதாய ஆன்மாவும் பின்செல்லுகின்றது. எவைகளைப்போலெனின்? தலைவன் ஒருவனைப் பின்பற்றி பல ஏவலாளர்கள் பின்செல்கின்றனர். ஒரு ஆசிரியன் பல்லோர்களுக்குட் போற்றப்பெறுகின்றான். ஒரு சுவதந்திரன், பரதந்திரர் பல்லோர்களால் வழிபாடு செய்யப்படுகின்றான் இவைகளைப்போ லென்பதாம்.

---

முக்கியமாகிய சமசத்தில், ஹோமஞ்செய்து மீந்த சோமரசத்தை வார்த்துவிடல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—7

यदि कामयेताध्वर्युरात्मानं यज्ञयशसेनार्पयेयमित्यन्तराऽऽहवनीयं च हविर्धानं च तिष्ठन्नव नयेदात्मानमेव यज्ञयशसेनार्पयति यदि कामयेत यजमानं यज्ञयशसेनार्पयेयमित्यन्तरा सदोहविर्धाने तिष्ठन्नव नयेद्यजमानमेव यज्ञयशसेनार्पयति यदि कामयेत सदस्यान् यज्ञयशसेनार्पयेयमिति सद आलभ्याव नयेत्सदस्यानेव यज्ञयशसेनार्पयति ॥

என்பது.

உரை.

அத்வரியு, தன தான்மாவிற்குப் பெருமை வேண்டுமென்று விரும்பில் வரும்போது ஆகவனீயம் அவிர்த்தான மண்டபத்திற்கும் நடுவில் நின்றுகொண்டு மீதியை வார்த்தல்வேண்டும். அதனால் ஆன்மா எக்ஞத்தின் பயனையடைகின்றது. அப்பெருமையை எசமானன் யடையவிரும்பில், சபை அவிர்த்தானங்கட்டு நடுவில்நின்று மீதியை வார்த்தல்வேண்டும். இதனால் எசமானன் எக்ஞத்தின் பயனை யடைகின்றான். சபையிலுள்ளவர்கள்

எக்ஞபயனையடைய வேண்டுமென்று விரும்பில், சபைக்குட்புகுந்து மீதியை வார்த்தல்வேண்டும். இதனால் சபையிலுள்ளார்கள் எக்ஞத்தின் பயனை யடைகின்றனர் என்பது.

முதலாம் அநுவாகம்

*முற்றிற்று.*

---

## ஆறுங்காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

### இரண்டாவது அநுவாகம்

*துருவஸ்தாலியைக் கூறும் பிராமணங்கள்.*

இரண்டு பஞ்சாதிக்குமேல் முப்பத்தொன்பது பதங்களைக் கொண்டது.

आयुर्वा एतद्यज्ञस्य यद्ध्रुव उत्तमो ग्रहाणां गृह्यते तस्मादायुः प्राणानामुत्तमं मूर्धानं दिवो अरतिं पृथिव्या इत्याह मूर्धानमेवैनꣳ समानानां करोति वैश्वानरमृताय जातमग्निमित्याह वैश्वानरꣳ हि देवतयाऽऽयुरुभयतोवैश्वानरो गृह्यते तस्मादुभयतः प्राणा अधस्ताच्चोपरिष्टाचार्धिनोऽन्ये ग्रहा गृह्यन्तेऽर्धी ध्रुवस्तस्मात् [६] अर्ध्यवाङ्प्राणोऽन्येषां प्राणानामुपोप्तेऽन्ये ग्रहास्साद्यन्तेऽनुपोप्ते ध्रुवस्तस्मादस्थ्नाऽन्याः प्रजाः प्रतितिष्ठन्ति माꣳसेनान्या असुरा वा उत्तरतः पृथिवीं पर्याचिकीर्षन्तां देवा ध्रुवेणादृꣳहन्तद्ध्रुवस्य ध्रुवत्वं यद्ध्रुव उत्तरतस्साद्यते धृत्या आयुर्वा एतद्यज्ञस्य यद्ध्रुव आत्मा होता यद्धोतृचमसे ध्रुवमवनयत्यात्मन्नेव यज्ञस्य [७] आयुर्दधाति पुरस्तादुक्थस्यावनीय इत्याहः पुरस्ताद्ध्यायुषो भुङ्क्ते मध्यतोऽवनीय इत्याहुर्मध्यमेन ह्यायुषो भुङ्क्त उत्तरार्धेऽवनीय इत्याहुरुत्तमेन ह्यायुषो भुङ्क्ते वैश्वदेव्यामृचि शस्य-

துருவஸ்தாலி)

मानायामवं नयति वैश्वदेव्यो वै प्रजाः प्रजास्वेवाऽऽयुर्दधाति [८] ॥ अर्धी ध्रुवस्तस्मादेव यज्ञस्यैकान्नचत्वारिंशच्च ॥ २ ॥

இதில் துருவம் என்னுஞ் சோமபாத்திரத்தில் சோமரசம் பிடிக்கும் வகை கூறப்படுகின்றது.

---

துருவஸ்தாலியை விதிக்கின்றது.

பிராமணம்—1

आयुर्वा एतद्यज्ञस्य यद्ध्रुव उत्तमो ग्रहाणां गृह्यते तस्मादायुः प्राणाना-मुत्तमम् ।

என்பது.

உரை.

இத் துருவக்கிரகமானது எக்ஞத்தின் ஆயுளாம் ஆதலின் இது ஐந்திர வாயு முதலிய தாராக்கிரகங்களின் முடிவாகச் சோமரசம் பிடிக்கப் பெறுகின்றது. பிராணன் முதலிய வடிவங்களான கிரகங்களுக்குள் ஆயுளாகிய இத் துருவக்கிரகம் சிறந்து விளங்குகின்றது; இதனால், பிராணன்களுக்குள் ஆயுளுஞ் சிறந்து விளங்குகின்றது. 'இதுவும், பிழைத்திருக்கில் பிராணன்கள் அழகுடையவைகளாகின்றதா லெனக் என்பது.

---

மந்திரத்தில், 'மூர்த்தானம்' என்றது முதலிய சொற்களைக் கூறியிருத்தலின் சுற்றத்தார்களுக்குள் எசமானனைச் சிறந்தவனாக்குகின்றான் என்கின்றது.

பிராமணம்—2

मूर्धानं दिवो अरतिं पृथिव्या इत्याह मूर्धानमेवैनꣳ समानानां करोति ।

என்பது.

உரை.

"மூர்த்தானம்" என்றது முதலியது, இவனை ஒத்தவர்களுக்குட் சிறந்தவனாக்குகின்றது என்கின்றது.

---

ஆயுளானது வைசுவாநர அபிமானி தேவதையை யுடையதாமாதலின், ஆயுளாகிற துருவக் கிரகத்தைக் கிரகிப்பதில் 'வைசுவானரன்' என்னுஞ் சொல்பொருந்தும் என்கின்றது.

பிராமணம்—3

**वैश्वानरमृताय जातमग्निमित्याह वैश्वानरꣳ हि देवतयाऽऽयुः ।**

என்பது.

உரை.

"வைசுவாநரம்" என்றது முதலியது, வைசுவானரனே ஆயுளின் தேவதை என்கின்றது.

---

இந்த இருக்கிலும், மேல்வரும் எசுரிலும் 'வைசுவானரன்' என்று கூறல், நாபிக்கு மேலுங்கீழுமுள்ள பிராணன்களுக்கு ஒப்பாகின்றது என்கின்றது.

பிாரமணம்—4

**उभयतोवैश्वानरो गृह्यते तस्मादुभयतः प्राणा अधस्ताच्चोपरिष्टाच्च ।**

என்பது.

உரை.

இருபக்கமும் வைசுவாநரன் என்பதைக் கொள்ளுதலால் மேலும் கீழும் பிராணன்களிருக்கின்றன என்பது.

---

உடம்பின்மேலே பாதியிலுள்ள வாக் முதலியவைகள் ஊமை செவிடு பழுதுகளின்றி உடம்பின் பாதிச் செயலைக்கொண்டுசெலுத்துகின்றன. அங்ஙனமே, உடம்பின் கீழ்ப்பாதியிலுள்ள பிராணன் மல அடைப்பு நீரடைப்பு முதலியவைகளைத் தடுத்து உடம்பின் கீழ்ப்பாதியின் செயல்களைக்கொண்டு செலுத்துகின்றது. அதுபோல், ஏனைய கிருகங்கள் எக்ஞத்தின் பாதிச் செயலைக்கொண்டு செலுத்துகின்றன. துருவக் கிரகம் பாதிச் செயலைக்கொண்டு செலுத்துகின்றது என்று புகழ்கின்றது.

பிராமணம்—5

**अर्धिनोऽन्ये ग्रहा गृह्यन्तेऽर्धी ध्रुवस्तस्मादर्ध्यवाङ्प्राणोऽन्येषां प्राणानाम् ।**

என்பது

துருவஸ்தாலி)

உரை.

பாதியை ஏனைய கிருகங்கள்கொண்டு செலுத்துகின்றன. பாதியைத் துருவக்கிரகங் கொண்டு செலுத்துகின்றது. இதுபற்றியே பாதிச் செயலை வாக் முதலியவைகள் நடத்துகின்றன, பாதியை பிராணன்கள் நடாத்துகின்றன என்பது.

---

துருவக்கிரகம் வைக்குமிடம் ஏனைய கிரகங்களுடைய இடங்களின்றும் மாறுபட்டதென்கின்றது.

பிராமணம்—6

**उपोप्तेऽन्ये ग्रहास्सायन्तेऽनुपोप्ते ध्रुवस्तस्मादस्थाऽन्याः प्रजाः प्रतितिष्ठन्ति मांसेनान्याः ।**

என்பது

உரை.

மண்ணாற்செய்த மேடையின்மேல் ஏனையக் கிரகங்களை வைத்தலாம். கேவலம் பூமியில் துருவக் கிரகத்தை வைத்தலாம். இதனால், பசுமாடு முதலியவைகள் காலிலுள்ள கொளும்புகளைப் பூமியில் வைக்கின்றன. மக்கள் முதலிய ஏனைய பசுக்களோ, காலிலுள்ள மாமிசத்தைப் பூமியில் வைக்கின்றன என்பது.

---

பூமியில் வைக்கும் துருவக்கிரகத்திற்கு, வடக்கு அவிர்த்தான வண்டிக்கும் அருகில் இடம் என விதிக்கின்றது.

பிராமணம்—7

**असुरा वा उत्तरतः पृथिवीं पर्याचिकीर्षन्तां देवा ध्रुवेणादृंहन्तद्ध्रुवस्य ध्रुवत्वं यद्ध्रुव उत्तरतस्सायते धृत्यै ।**

என்பது.

உரை.

அசுரர்கள் வடக்காகவந்து பூமியைப் பிடித்துக்கொள்ள விரும்பினர். தேவர்கள், துருவம் என்னுஞ் சோமபாத்திரத்தை வடக்கில்வைத்து பூமியை நிலைப்படுத்தினர். துருவம் என்றது நிலையாம்; இதனால் துருவக்கிரகம் எனப்பட்டது. ஆதலின், இதை, பூமி நிலையின் பொருட்டு வடக்கில் வைக்கின்றான் என்பது.

---

துருவஸ்தாலியிலுள்ள சோமரசத்தை, ஹோதாவின் சமசத்தில் வார்த்து விடல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—8

**आयुर्वा एतद्यज्ञस्य यद्ध्रुव आत्मा होता यद्धोतृचमसे ध्रुवमवनयत्यात्मन्नेव यज्ञस्याऽऽयुर्दधाति ।**

என்பது.

உரை.

*துருவம் எக்ஞத்தின் ஆயுளாம். ஹோதாவினுடைய சமசம் ஆன்மாவாம்; ஆதலின் அதில் சோமரசத்தை விடுதல், ஆன்மாவினிடத்தில் எக்ஞத்தினுடைய ஆயுளை வைத்தல்போலாகின்றது என்பது.*

---

வார்க்கவேண்டிய காலத்தை விதிக்க விரும்பி வேறு மதங்களைக் கூறுகின்றது.

பிராமணம்—9

**पुरस्तादुक्थस्यावनीय इत्याहुः पुरस्ताद्ध्यायुषो भुङ्क्ते मध्यतोऽवनीय इत्याहुर्मध्यमेन ह्यायुषो भुङ्क्त उत्तरार्धेऽवनीय इत्याहुरुत्तमेन ह्यायुषो भुङ्क्ते ।**

என்பது

உரை.

*சஸ்திரம் என்னும் துதியை ஓதும்போது முதல்பாகத்தில் வார்த்தல் வேண்டும். இதனால், பூர்வ ஆயுளி(பாலப் பருவத்தி)ல் மிகுதியாய் அநுபவிக்கின்றான். நடுவில் ஓதும்போது வார்த்தல்வேண்டும். இதனால், நடுப் பருவமாகிய காளைப்பருவத்தில் மிகுதியாகிய உணவை யருந்துகின்றான். மூன்றாம்பாதியிற் பாடும்போது வார்த்தல்வேண்டும். இதனால் கிழப்பருவத்தில் வன்மை குறைந்தும் மிகுதியா யருந்துவதற்கு விரும்புகின்றனன் என்று சிலர்கள் கூறுகின்றனர் என்பது.*

---

இப்போது தனது பக்ஷத்தை விதிக்கின்றது.

பிராமணம்—10

**वैश्वदेव्यामृचि शस्यमानायामव नयति वैश्वदेव्यो वै प्रजाः प्रजास्वेवाऽऽयुर्दधाति ॥**

என்பது.

உரை

'வைசுவதேவம்' என்னும் இருக்குமந்திரத்தையும் 'உதநோ ஹிர்புத்நியஃ' என்னும் இருக்குமந்திரத்தையும் பாடும்போது வார்த்துவிடல்வேண்டும். இதனால், பிரசைகள் வைசுவதேவ சம்பந்திகளாதலின் பிரசைகளிடத்தில் ஆயுளை வைத்ததாகும் என்பது.

இரண்டாவது அநுவாகம்
முற்றிற்று.

---

## ஆறுங்காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

### மூன்றாவது அநுவாகம்

*இருதுக் கிரகங்களைக் கூறும் பிராமணங்கள்.*

மூன்று பஞ்சாதிக்குமேல் முப்பத்துநான்கு பதங்களைக் கொண்டது.

यज्ञेन वै देवास्सुवर्गं लोकमायन्तेऽमन्यन्त मनुष्या नोऽन्वा भविष्यन्तीति ते संवत्सरेण योपयित्वा सुवर्गं लोकमायन्तमृषय ऋतुग्रहैरेवानु प्राजानन् यदृतुग्रहा गृह्यन्ते सुवर्गस्य लोकस्य प्रज्ञात्यै द्वादश गृह्यन्ते द्वादश मासास्संवत्सरस्संवत्सरस्य प्रज्ञात्यै सह प्रथमौ गृह्येते सहोत्तमौ तस्माद्द्वौद्वावृतू उभयतोमुखमृतुपात्रं भवति कः [९] हि तद्वेद यत ऋतूनां मुखमृतुना प्रेष्येति षट्कृत्व आह षड्वा ऋतव ऋतूनेव प्रीणात्यृतुभिरिति चतुश्चतुष्पद एव पशून्प्रीणाति द्विः पुनर्ऋतुनाऽऽह द्विपद एव प्रीणात्यृतुना प्रेष्येति षट्कृत्व आहर्तुभिरिति चतुस्तस्माच्चतुष्पादः पशव ऋतूनुप जीवन्ति द्विः [१०] पुनर्ऋतुनाऽऽह तस्माद्द्विपादश्चतुष्पदः पशूनुप जीवन्त्यृतुना प्रेष्येति षट्कृत्व आहर्तुभिरिति चतुर्द्विः पुनर्ऋतुनाऽऽहाक्रमणमेव तत्सेतुं यजमानः कुरुते

सुवर्गस्य लोकस्य समष्ट्यै नान्योऽन्यमनु प्रपद्येत यदन्योऽन्यमनु प्रपद्येतर्तुर्ऋतुमनु प्रपद्येतर्तवो मोहु कास्स्युः [११] प्रसिद्धमेवाध्वर्युर्दक्षिणेन प्रपद्यते प्रसिद्धं प्रतिप्रस्थातोत्तरेण तस्मादादित्यः षण्मासो दक्षिणेनैति षडुत्तरेणोपयामगृहीतोऽसि सꣳसर्पोऽस्यꣳहस्पत्याय त्वेत्याहास्ति त्रयोदशो मास इत्याहुस्तमेव तत्प्रीणाति [१२] ॥ को जीवन्ति द्विस्स्युश्चतुस्त्रिꣳशच्च ॥ ३ ॥

இதில், இருது என்னும் பாத்திரத்தில் சோமரசத்தைப் பிடிக்கும்வகை கூறப்படுகின்றது.

---

இருதுக்கிரகங்களைக் கூறுகின்றது.

பிராமணம்—1

यज्ञेन वै देवास्सुवर्गं लोकमायन्तेऽमन्यन्त मनुष्या नोऽन्वाभविष्यन्तीति ते संवत्सरेण योपयित्वा सुवर्गं लोकमायन्तमृषय ऋतुग्रहैरेवानु प्राजानन् यदृतुग्रहा गृह्यन्ते सुवर्गस्य लोकस्य प्रज्ञात्यै ।

என்பது.

உரை.

தேவர்கள் எக்ஞத்தால் சுவர்க்கத்திற்குப் போகின்றபோது தம்மைப் பின்பற்றிக்கொண்டு மக்கள் வராதிருத்தற்பொருட்டு வருடத்தால், அதாவது காலதாமதத்தால் மோகிக்கச் செய்துவிட்டு சுவர்க்கஞ் செல்கின்றனர். பிறகு, மக்களுட்சிறந்த இருடிகள் இருது என்னும் சோமரசப் பாத்திரத்தைக்கண்டு பிடித்து சோமரசத்தைப் பிடித்து அதனால் சுவர்க்கலோகஞ் செல்கின்றனர். ஆதலின் சுவர்க்கலோக உணர்ச்சியின் பொருட்டு இருதுக் கிரகங்கள் கிரகிக்கப்படுகின்றன என்பது.

---

சோமரசம் பிடிக்கும் எண் விதிக்கப்படுகின்றது.

பிராமணம்—2

द्वादश गृह्यन्ते द्वादश मासास्संवत्सरस्संवत्सरस्य प्रज्ञात्यै ।

என்பது.

இருதுக் கிரஹங்கள்)

உரை.

மாதங்கள் பன்னிரண்டாதலின் பன்னிருமுறை சோமரசம் பிடிக்கப் படுகின்றது. இது வருடத்தின் உணர்ச்சியின் பொருட்டாம் என்பது.

ஈண்டு, பன்னிரண்டு என்றது, பதின்மூன்று பதினான்கிற்கும் உப லக்ஷணமாம் என்பதையுணர்க.

---

முதலிலும் முடிவிலும் இரண்டையுஞ்சேர்த்துப் பிடித்தல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—3

सह प्रथमौ गृह्येते सहोत्तमौ तस्माद्द्वौद्वावृतू ।

என்பது.

உரை.

முதலில் "மதுச்ச மாதவஶ்ச" என்னும் இரண்டையும் ஒருமித்து பிடித்தல்வேண்டும். முடிவில், "தபச்ச தபஸ்யஶ்ச" என இரண்டையும் ஒருமித்துப் பிடித்தல்வேண்டும். இதனால், இருதுக்களின் அவயவங்கள் இரட்டை இரட்டை மாதங்களாய் வருகின்றன என்பது.

---

பாத்திரத்திலுள்ள சோமரசத்தை அக்கினியில் ஒழுக விடுவதற்கு பாத்தி ரத் துவாரத்தின் பக்கத்தில் இரண்டு முகங்கள் செய்தல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—4

उभयतोमुखमृतुपात्रं भवति को हि तद्वेद यत ऋतूनां मुखम् ।

என்பது.

உரை.

இருதுக்கிரகங் தொடங்கியகாலம் இதிலிருந்து என்பது அறிதல் கூடாமையின் இருதுபாத்திரத்திற்கு இரண்டுமுகங்கள் செய்தல்வேண்டும் என்பது.

---

அத்வரியு, பிரதிப்பிரஸ்தாதா என்னும் இருவருடைய பிரேஷை (ஏவல்) மந்திரங்களைக் கற்பிக்கின்றது.

பிராமணம்—5

**ऋतुना प्रेष्येति षट्कृत्व आह षड्वा ऋतव ऋतूनेव प्रीणात्यृतुभिरिति चतुश्चतुष्पद एव पशून्प्रीणाति द्विः पुनर्ऋतुनाऽऽह द्विपद एव प्रीणाति ।**

என்பது.

**உரை.**

"இருதுநா ப்ரேஷ்ய" என்பது முதலியது, மைத்திராவருணா! நீ, இருது நிமித்தமாய் ஹோதாவை ஏவுவாயாக என்னும் மந்திரத்தை, முதலாவது மூன்றாவது ஐந்தாவதில் அத்வரியு கூறல்வேண்டும். இரண்டாவது நான்காவது ஆறாவதில் பிரதிப்பிரஸ்தாதா கூறல்வேண்டும். இவ்வாறு ஆறுமுறை கூறுவதால் இருதுக்களைப் பிரியப்படுத்துகின்றான். இருதுக்கள் நிமித்தமாக ஏவுவாயாக என்பதை ஏழாவது ஒன்பதாவதில் அத்வரியு கூறல்வேண்டும். எட்டாவது, பத்தாவதில் பிரதிப்பிரஸ்தாதா கூறல் வேண்டும். அவ்வாறு நான்குமுறை கூறுவதால் பசுக்களைப் பிரியப்படுத்துகின்றான். இருதுநாப்ரேஷ்ய என்பதை, பதினோராவதில் அத்வரியு கூறல் வேண்டும். பன்னிரண்டாவதில் பிரதிப்பிரஸ்தாதா கூறல்வேண்டும். இவ்வாறு இரண்டுமுறை கூறுவதால் மக்களையும் பறவைகளையும் பிரியப்படுத்துகின்றான் என்பது.

---

முற்கூறிய ஆறு, நான்கு, இரண்டு என்பவைகளையே, காரண காரியங்களாகப் புகழ்கின்றது.

பிராமணம்—6

**ऋतुना प्रेष्येति षट्कृत्व आहर्तुभिरिति चतुस्तस्माच्चतुष्पादः पशव ऋतूनुप जीवन्ति द्विः पुनर्ऋतुनाऽऽह तस्माद्द्विपादश्चतुष्पदः पशूनुप जीवन्ति ।**

என்பது.

**உரை.**

நான்குகாற் பிராணிகளான பசு முதலியவைகள் இருது தர்மங்களைக் கொண்டு பிழைக்கின்றன. இருகாற் பிராணியாகிய மக்கள் பசுவின்பால் முதலானவைகளாற் பிழைக்கின்றனர் என்பது.

(இருதுக் கிரஹங்கள்)

மீண்டும், சுவர்க்கத்திற்கு ஏறும்படிகளாகப் புகழ்கின்றது

பிராமணம்—7

ऋतुना प्रेष्येति षट्कृत्व आहर्तुभिरिति चतुर्द्धिः पुनर्ऋतुनाऽऽहाक्रमणमेव तत्सेतुं यजमानः कुरुते सुवर्गस्य लोकस्य समष्ट्यै ।

என்பது.

உரை.

"இருதுநாப்ரேஷ்ய" என்பது முதலியது, பாலம் கீழே பெருத்தும் மேலே சிறுத்தும் இருப்பதுபோல், ஆறு, நான்கு, இரண்டு என பாலப்படி போன்றிருத்தலின் எசமானனைச் சுவர்க்கத்திலேற்றி வைக்கும் படிகளைச் செய்கின்றான் என்பது.

---

அத்வரியுவும், பிரதிப்பிரஸ்தாதாவும் ஒன்றாய்ப் போதல் கூடாதென்கின்றது.

பிராமணம்—8

नान्योऽन्यमनु प्रपद्येत यदन्योऽन्यमनुप्रपद्येतर्तुर्ऋतुमनु प्रपद्येतर्तवो मोहुकास्स्युः ।

என்பது.

உரை.

அத்வரியுவும், பிரதிப்பிரஸ்தாதாவும் முதலாவது இரண்டாவது கிரகங்களை ஒன்றாகவே கிரகித்தல்வேண்டும். பிறகு, அவிர்த்தானத்திலிருந்து கிளம்பி, ஆசுவனீயத்தில் ஹோமஞ் செய்துவிட்டு, மீண்டுந் திரும்பிவந்து அவிர்த்தான மண்டபத்தில் மற்றொரு கிரகத்தைக் கிரகித்தல்வேண்டும். இங்கு, இருவரும் முன்னும் பின்னுமாக ஒன்றுசேர்ந்து போதல்கூடாது. முதன்முறை ஒருவன் இரண்டாமுறை ஒருவன் என முறையாகப் போதல் வேண்டும். ஒன்றாய்ப்போய்க் கிரகிக்கில் ஒரு இருதுவில் மற்றொரு இருது புகும் இதனாற் கலப்புண்டாய் இருதுக்கள் மோகத்திற்கே காரணங்களாகும் என்பது.

---

காலம் வேறுபட்டதுபோல் வழியும் வேறுபடல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—9

प्रसिद्धमेवाध्वर्युर्दक्षिणेन प्रपद्यते प्रसिद्धं प्रतिप्रस्थातोत्तरेण तस्मादादित्यः षण्मासो दक्षिणेनैति षडुत्तरेण ।

என்பது.

உரை.

முதலிலிருந்து அத்வரியு தெற்காகவும், பிரதிப்பிரஸ்தாதா வடக்காகவுஞ் செல்தலின், சூரியனும் ஆறுமாதம் வடக்காகவும் ஆறுமாதங்கள் தெற்காகவுஞ் செல்கின்றான். இவையே உத்தராயண தெட்சிணாயனங்கள் எனப்படுகின்றன.

ஈண்டு, பிரதிப்பிரஸ்தாதா அவிர்த்தானமண்டபத்திலிருந்து புறப்படும்போது, அத்வரியு அவிர்த்தானமண்டபத்திற்குட் புகுதல்வேண்டும். இவ்வாறு மாறிச்செல்வதால் இருவகை வழிகள் என்பது.

---

“மதுச்ச” என்பது முதலிய மந்திரங்களால் பன்னிரண்டு மாதங்களும் பிரியப்படும்போது, ‘சம்சர்ப்ப’ என்பது முதலிய மந்திரம் பொருளற்றதென்று ஆசங்கித்துரைக்கின்றது.

பிராமணம்—10

**उपयामगृहीतोऽसि सꣳसर्पोऽस्यꣳहस्पत्याय त्वेत्याहास्ति त्रयोदशो मास इत्याहुस्तमेव तत्प्रीणाति ।**

என்பது.

உரை.

“உபயாமக்ருஹீதோஸி” என்றது முதலியது, பதின்மூன்றாவது மாதமும் உண்டு என்று கூறுகின்றனர். ஆதலின் அதைப் பிரியப்படுத்துகின்றான் என்கின்றது.

மூன்றாவது அநுவாகம்
முற்றிற்று.

---

## ஆறாங்காண்டம் ஐந்தாம்பிரபாடகம்

### நான்காவது அநுவாகம்

ஐந்திராக்கினக் கிரகத்தைக் கூறும் பிராமணங்கள்.

ஒரு பஞ்சாதிக்குமேல் முப்பது பதங்களைக் கொண்டது.

**सुवर्गाय वा एते लोकाय गृह्यन्ते यदृतुग्रहा ज्योतिरिन्द्राग्नी यदैन्द्राग्नमृतुपात्रेण गृह्णाति ज्योतिरेवास्मा उपरिष्टाद्दधाति सुवर्गस्य लोकस्यानुख्यात्या ओजोभृतौ वा एतौ देवानां यदि-**

கிரஹங்கள்)

न्द्राग्नी यदैन्द्राग्नो गृह्यत ओज एवाव रुन्धे वैश्वदेवꣳ शुक्रपात्रेण गृह्णाति वैश्वदेव्यो वै प्रजा असावादित्यश्शुक्रो यद्वैश्वदेवꣳ शुक्रपात्रेण गृह्णाति तस्मादसावादित्यः [१३] सर्वाः प्रजाः प्रत्यङ्ङुदेति तस्मात्सर्व एव मन्यते मां प्रत्युदगादिति वैश्वदेवꣳ शुक्रपात्रेण गृह्णाति वैश्वदेव्यो वै प्रजास्तेजश्शुक्रो यद्वैश्वदेवꣳ शुक्रपात्रेण गृह्णाति प्रजास्वेव तेजो दधाति [१४] ॥ तस्माद सावादित्यस्त्रिꣳशच्च ॥ ४ ॥

இதில், ஐந்திராக்கினக் கிரகத்தில் சோமரசம் பிடிக்கும்வகை கூறப் படுகின்றது.

---

விதிக்கின்றது.

பிராமணம்—1

सुवर्गाय वा एते लोकाय गृह्यन्ते यदृतुग्रहा ज्योतिरिन्द्राग्नी यदैन्द्राग्नमृतुपात्रेण गृह्णाति ज्योतिरेवास्मा उपरिष्टाद्दधाति सुवर्गस्य लोकस्यानुख्यात्यै ।

என்பது.

உரை.

சுவர்க்கலோகத்தின் பொருட்டு இவைகள் கிரகிக்கப்படுகின்றன. அத்துவரியுவின் கையில் அருந்தத்தக்க சோமரசத்துடன் இருக்கும் இருது பாத்திரத்தில் ஐந்திராக்கினிகட்கும் சோமரசத்தைப் பிடித்தல்வேண்டும். இதனல், இருதுக்கிரகத்தால் கிடைத்த சுவர்க்கலோகம் இந்திராக்கினிகளின் ஒளியால் விளக்கப்பெற்றதாகின்றது என்பது.

---

வன்மையைக் கொடுக்குந் தன்மைபற்றி, ஐந்திராக்கினக் கிரகத்தைப் புகழ்கின்றது.

பிராமணம்—2

ओजोभृतौ वा एतौ देवानां यदिन्द्राग्नी यदैन्द्राग्नो गृह्यत ओज एवाव रुन्धे ।

என்பது

உரை.

இந்திரனும் அக்கினியும் தேவர்கட்கு வன்மையை நிலைநாட்டுகின்றவர்க ளாதலின், ஐந்திராக்கினக் கிரகத்தைக் கிரகிப்பவன் வன்மையை அடைகின்றான் என்பது.

---

மற்றொரு கிரகத்தை விதிக்கின்றது.

பிராமணம்—3

**वैश्वदेवꣳ शुक्रपात्रेण गृह्णाति वैश्वदेव्यो वै प्रजा असावादित्यश्शुक्रो यद्वैश्वदेवꣳ शुक्रपात्रेण गृह्णाति तस्मादसावादित्यस्सर्वाः प्रजाः प्रत्यङ्ङुदेति तस्मात्सर्व एव मन्यते मां प्रत्युदगादिति ।**

என்பது.

உரை.

வைசுவதேவம் சுக்கிரக்கிரகத்தில் கிரகித்தல்வேண்டும். வைசுவதேவம் பிரசையாம். சுக்கிரக்கிரகம் ஆதித்யனும், வைசுவதேவத்தைச் சுக்கிரபாத்திரத்தில் கிரகித்தலால் இவ்வாதித்தன் எல்லாச் சனங்கட்குந் தனித்தனி நேரே உதயமாகின்றான். இதுபற்றியே ஒவ்வொருவரும் எனக்கு நேர் இரவி யெழுகின்றது எனக்கு நேர் இரவி யெழுகின்றது என்கின்றனர் என்பது.

---

ஒளியைக் கொடுத்தலால் வைசுதேவக் கிரகத்தைப் புகழ்கின்றது.

பிராமணம்—4

**वैश्वदेवꣳ शुक्रपात्रेण गृह्णाति वैश्वदेव्यो वै प्रजास्तेजश्शुक्रो यद्वैश्वदेवꣳ-शुक्रपात्रेण गृह्णाति प्रजास्वेव तेजो दधाति ॥**

என்பது.

உரை.

வைசுவதேவத்தைச் சுக்கிரபாத்திரத்திற் கிரகித்தலால் பிரசைகளிடத்தில் ஒளியை நிறுவுகின்றான் என்பது.

நான்காவது அநுவாகம்.

முற்றிற்று.

---

## ஆறுங்காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

### ஐந்தாவது அநுவாகம்

*மருத்வதீயமாகேந்திரக் கிரகங்களில் சோமம் பிடிப்பதைக் கூறும் பிராமணங்கள்.*

மூன்று பஞ்சாதிக்குமேல் இருபத்தெட்டு பதங்களை கொண்டது.

इन्द्रो मरुद्भिस्सांविद्येन माध्यंदिने सवने वृत्रमहन् यन्माध्यं दिने सवने मरुत्वतीया गृह्यन्ते वार्त्रघ्ना एव ते यजमानस्य गृह्यन्ते तस्य वृत्रं जघ्नुष ऋतवोऽमुह्यन्त्स ऋतुपात्रेण मरुत्वतीयानगृह्णात्ततो वै स ऋतून्प्राजानाद्यदृतुपात्रेण मरुत्वतीया गृह्यन्त ऋतूनां प्रज्ञात्यै वज्रं वा एतं यजमानो भ्रातृव्याय प्रहरति यन्मरुत्वतीया उदेव प्रथमेन [१५] यच्छति प्रहरति द्वितीयेन स्तृणुते तृतीयेनाऽऽयुधं वा एतद्यजमानस्सꣳ स्कुरुते यन्मरुत्वतीया धनुरेव प्रथमो ज्या द्वितीय इषुस्तृतीयः प्रत्येव प्रथमेन धत्ते वि सृजति द्वितीयेन विध्यति तृतीयेनेन्द्रो वृत्रꣳ हत्वा परां परावतमगच्छदपाराधमिति मन्यमानस्स हरितोऽभवत्स एतान्मरुत्वतीयानात्मस्परणानपश्यत्तानगृह्णीत [१६] प्राणमेव प्रथमेनास्पृणुतापानं द्वितीयेनाऽऽत्मानं तृतीयेनाऽऽत्मस्परणा वा एते यजमानस्य गृह्यन्ते यन्मरुत्वतीयाः प्राणमेव प्रथमेन स्पृणुतेऽपानं द्वितीयेनाऽऽत्मानं तृतीयेनेन्द्रो वृत्रमहन्तं देवा अब्रुवन्महान् वा अयमभूद्यो वृत्रमवधीदिति तन्महेन्द्रस्य महेन्द्रत्वꣳ स एतं माहेन्द्रमुद्धारमुदहरत वृत्रꣳ हत्वाऽन्यासु देवतास्वधि यन्माहेन्द्रो गृह्यत उद्धारमेव तं यजमान उद्धरतेऽन्यासु प्रजास्वधि शुक्रपात्रेण

गृह्णाति यजमानदेवत्यो वै माहेन्द्रस्तेजश्शुक्रो यन्माहेन्द्रं शुक्र पात्रेण गृह्णाति यजमान एव तेजो दधाति [१७] ॥ प्रथमेना-गृहीत देवतास्सप्तविंशतिश्च ॥ ५ ॥

இதில், மருத்வதீயம் மாகேந்திரமென்னுஞ் சோம பாத்திரங்களில் சோமரசத்தைப் பிடித்துவைத்தல் கூறப்படுகின்றது.

---

மூன்று மருத்வதீயக் கிரகங்களை விதிக்கின்றது.

பிராமணம்—1

इन्द्रो मरुद्भिस्सांविद्येन माध्यंदिने सवने वृत्रमहन् यन्माध्यंदिने सवने मरुत्वतीया गृह्यन्ते वार्त्रघ्ना एव ते यजमानस्य गृह्यन्ते ।

என்பது

உரை.

இந்திரன், மருத்துக்களுடன் மனவொருமைப்பட்டு மத்தியானம் சோமம் பிழியும்போது விருத்திரனைக் கொன்றனன். ஆதலின், மத்தியான சவனத்தில் எசமானனுடைய பகைவன் தொலைதற்பொருட்டு மருத்வதீயக் கிரகங்களைக் கிரகிக்கின்றான் என்பது.

---

அக் கிரகங்கட்குப் பாத்திரங்களை விதிக்கின்றது.

பிராமணம்—2

तस्य वृत्रं जघ्नुष ऋतवोऽमुह्यन्त्स ऋतुपात्रेण मरुत्वतीयानगृह्णात्ततो वै स ऋतून्प्राजानाद्यदृतुपात्रेण मरुत्वतीया गृह्यन्त ऋतूनां प्रज्ञात्यै ।

என்பது.

உரை.

விருத்திரனைக் கொல்வதற்கு இருதுக்கள் மோகஞ்செய்தன. ஆதலின், இருதுபாத்திரங்களில் மருத்வதீயக் கிரகங்களைக் கிரகித்தல் வேண்டும் இது, இருதுக்களின் விளக்கத்தின் பொருட்டாம் என்பது.

---

மூன்று கிரகங்களையும் வச்சிரவடிவமாய்ப் புகழ்கின்றது.

பிராமணம்—3

वज्रं वा एतं यजमानो भ्रातृव्याय प्रहरति यन्मरुत्वतीया उदेव प्रथमेन यच्छति प्रहरति द्वितीयेन स्तृणुते तृतीयेन ।

என்பது.

உரை.

எசமானன் பகைவன்பொருட்டு, முதலாவது மருத்துவதீயக் கிரகத்தால் வச்சிரத்தை விடுகின்றான் இரண்டாவது கிரகத்தால் அடிக்கின்றான். மூன்றாவதால் பகைவனைக் கொல்கின்றான் என்பது.

---

வில்லைத்தேடும் வடிவால் மீண்டும் புகழ்கின்றது.

பிராமணம்—4

आयुधं वा एतद्यजमानस्सꣳ स्कुरुते यन्मरुत्वतीया धनुरेव प्रथमो ज्या द्वितीय इषुस्तृतीयः ।

என்பது.

உரை.

இம்மருத்வதீயக் கிரகங்களை கிரகித்தல், எசமானன் முதலாவதால் வில்லையும், இரண்டாவதால் நாண்கயிற்றையும், மூன்றாவதால் அம்பையுந் தேடுகின்றான். அதாவது ஏற்பாடு செய்கின்றான் என்பது.

---

தேடிய தநுவை விடும்வடிவாய் மீண்டும் புகழ்கின்றது.

பிராமணம்—5

प्रत्येव प्रथमेन धत्ते वि सृजति द्वितीयेन विध्यति तृतीयेन ।

என்பது.

உரை.

முதலாவதால், அம்பைப் பூட்டுகின்றான், இரண்டாவதால் அம்பை விடுகின்றான். மூன்றாவதால் பகைவனைக் கொல்கின்றான் என்பது.

---

பிராணன் முதலியவைகளைப் பிரியப்படுத்தும் வடிவாய் மீண்டும் புகழ்வதற்கு விருத்தாந்தத்தைக் கூறுகின்றது.

பிராமணம்—6

**इन्द्रो वृत्रँ᳚ हत्वा परां परावतमगच्छदपाराधमिति मन्यमानस्स हरितोऽभवत्स एतान्मरुत्वतीयानात्मस्परणानपश्यत्तानगृह्णीत प्राणमेव प्रथमेनास्पृणुतापानं द्वितीयेनाऽऽत्मानं तृतीयेन ।**

என்பது.

உரை.

இந்திரன் விருத்திரனைக் கொன்றதும், அவன், நான் பெரிய விரோதி குலத்துடன் பெரும்பகையைச் செய்துவிட்டேன் என்று எண்ணிக்கொண்டு பயந்து மிகத்தூரத்தில் போய் வேறு நிறமாகி விழுந்தனன். அப்போது, இம் மருத்வதீயக் கிரகங்களை எண்ணிக் கண்டுபிடித்து சோமரசத்தைக் கிரகித்தனன். இவைகளுள் முதலாவதால் பிராணனையும், இரண்டாவதால் அபானனையும், மூன்றாவதால் ஆன்மாவையும் பிரியப்படுத்தினன். இதனால் அவ்வாறு எண்ணியதால் வந்த பயம் நீங்கி பிரியப்படுத்திய பிராணன் முதலானவைகளை யடைந்தனன் என்பது.

---

இப்போது அவைகளைப் புகழ்கின்றது.

பிராமணம்—7

**आत्मस्परणा वा एते यजमानस्य गृह्यन्ते यन्मरुत्वतीयाः प्राणमेव प्रथमेन स्पृणुतेऽपानं द्वितीयेनाऽऽत्मानं तृतीयेन ।**

என்பது

உரை.

எசமானன் ஆன்ம நினைவின் பொருட்டே இம் மருத்வதீயக் கிரகங்களைக் கிரகிக்கின்றான். இதனால், முதலாவதால், பிராணனையும், இரண்டாவதால் அபானனையும், மூன்றாவதால் ஆன்மாவையுங் களிப்படையச் செய்கின்றான் என்பது.

---

இனி, மாகேந்திரக் கிரகத்தை விதிக்கின்றது.

பிராமணம்—8

**इन्द्रो वृत्रमहन्तं देवा अब्रुवन्महान् वा अयमभूद्यो वृत्रमवधीदिति तन्महेन्द्रस्य महेन्द्रत्वँ᳚ स एतं माहेन्द्रमुद्धारमुदहरत वृत्रँ᳚ हत्वाऽन्यासु देव-**

மாகேந்திரக் கிரஹங்கள்)

**ताखधि यन्माहेन्द्रो गृह्यत उद्धारमेव तं यजमान उद्धरतेऽन्यासु प्रजा-स्वधि ।**

என்பது.

உரை.

இந்திரன் விருத்திரனைக் கொன்றபோது தேவர்கள் அவனை மகான் என்றனர். விருத்திரனைக் கொன்றது காரணமாக மாஹேந்திரன் என வழங்கப்பெற்றனன். ஆதலின் மாகேந்திரக் கிரகத்தைக் கிரகித்து ஏனைய தேவர்களுக்குள் பெரியோனாதலின் எசமானனும் இம்மாகேந்திரக் கிரகத்தைக் கிரகித்தலால் ஏனைய சனங்களுக்குட் பெரியவனாகின்றான் என்பது.

---

மாகேந்திரக் கிரகத்திற்குப் பாத்திரத்தை விதிக்கின்றது.

பிராமணம்—9

**शुक्रपात्रेण गृह्णाति यजमानदेवत्यो वै माहेन्द्रस्तेजश्शुक्रो यन्माहेन्द्रꣳ शुक्र-पात्रेण गृह्णाति यजमान एव तेजो दधाति ॥**

என்பது

உரை.

சுக்கிரபாத்திரத்தில் மாகேந்திரக் கிரகத்தைக் கிரகிக்கின்றான். மாகேந்திரக்கிரகம் எசமானனைத் தேவதையாகவுடையது சுக்கிரக்கிரகம் ஒளியாம். சுக்கிர பாத்திரத்தில் மாகேந்திரக் கிரகத்தைக் கிரகிப்பவன் எசமானனிடத்தில் ஒளியை நிறுவுகின்றான் என்பது.

ஐந்தாவது அநுவாகம்
முற்றிற்று.

---

## ஆறுங்காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

### ஆறுவது அநுவாகம்

ஆதித்தியக் கிரகத்தை விதிக்கும் பிராமணங்கள்.

ஐந்து பஞ்சாதிக்குமேல் இருபத்தேழு பதங்களைக் கொண்டது.

**अदितिः पुत्रकामा साध्येभ्यो देवेभ्यो ब्रह्मौदनमपचत्तस्या उच्छेषणमददुस्तत्प्राश्नात्सा रेतोऽधत्त तस्यै चत्वार आदित्या अजायन्त सा द्वितीयमपचत्साऽमन्यतोच्छेषणान्म इमेऽज्ञत यदग्रे**

प्राशिष्यामीतो मे वसीयाꣳसो जनिष्यन्त इति साऽग्रे प्राश्नात्सा रेतोऽधत्त तस्यै व्यृद्धमाण्डमजायत साऽऽदित्येभ्य एव [१८] तृतीयमपचद्भोगाय म इदꣳ श्रान्तमस्त्विति तेऽब्रुवन्वरं वृणामहै योऽतो जायाता अस्माकꣳ स एकोऽसद्योऽस्य प्रजायामृध्याता अस्माकं भोगाय भवादिति ततो विवस्वानादित्योऽजायत तस्य वा इयं प्रजा यन्मनुष्यास्तास्वेक एवर्धो यो यजते स देवानां भोगाय भवति देवा वै यज्ञात् [१९] रुद्रमन्तरायन्त्स आदित्याननवाक्रमत ते द्विदेवत्यान्प्रापद्यन्त तान्न प्रति प्रायच्छन्तस्मादपि वध्यं प्रपन्नं न प्रति प्रयच्छन्ति तस्माद्द्विदेवत्येभ्य आदित्यो निर्गृह्यते यदुच्छेषणादजायन्त तस्मादुच्छेषणाद्गृह्यते तिसृभिर्ऋग्भिर्गृह्णाति माता पिता पुत्रस्तदेव तन्मिथुनमुल्बं गर्भो जरायु तदेव तत् [२०] मिथुनं पशवो वा एते यदादित्य ऊर्ग्दधि दध्ना मध्यत श्रीणात्यूर्जमेव पशूनां मध्यतो दधाति शृतातङ्क्येन मेध्यत्वाय तस्मादामा पक्वं दुहे पशवो वा एते यदादित्यः परिश्रित्य गृह्णाति प्रतिरुध्यैवास्मै पशून्गृह्णाति पशवो वा एते यदादित्य एष रुद्रो यदग्निः परिश्रित्य गृह्णाति रुद्रादेव पशूनन्तर्दधाति [२१] एष वै विवस्वानादित्यो यदुपाꣳशुसवनस्स एतमेव सोमपीथं परि शय आ तृतीयसवनाद्विवस्व आदित्यैष ते सोमपीथ इत्याह विवस्वन्तमेवाऽऽदित्यꣳ सोमपीथेन समर्धयति या दिव्या वृष्टिस्तया त्वा श्रीणामीति वृष्टिकामस्य श्रीणीयाद्वृष्टिमेवाव रुन्धे यदि ताजक्प्रस्कन्देद्वर्षुकः पर्जन्यस्स्याद्यदि चिरमवर्षुको न सादयत्य

கிரஹம்)

संन्नाद्धि प्रजाः प्रजायन्ते नानु वषट्करोति यदनुवषट्कुर्याद्रुद्रं प्रजा अन्ववसृजेन्न हुत्वाऽन्वीक्षेत यदन्वीक्षेत चक्षुरस्य प्रमायुकꣴ स्यात्तस्मान्नान्वीक्ष्यः [२२] ॥ एव यज्ञाज्जरायु तदेव तदन्तर्दधाति न सप्तविꣳशतिश्च ॥ ६ ॥

இதில் ஆதித்யக்கிரகங் கூறப்படுகின்றது.

---

ஆதித்தியக் கிரகத்தை விதித்தற் பொருட்டு விருத்தாந்தத்தைக் கூறுகின்றது.

பிராமணம்—1

अदितिः पुत्रकामा साध्येभ्यो देवेभ्यो ब्रह्मौदनमपचत्तस्या उच्छेषणमददु-स्तत्प्राश्नात्सा रेतोऽधत्त तस्यै चत्वार आदित्या अजायन्त ।

என்பது.

உரை.

புத்திரனை விரும்பிய அதிதி, சாத்தியர்கள், தேவர்கள் என்பவர்களின் பொருட்டு பிரமௌதனஞ் சமைத்தனள். அவ் வன்னத்தை ஹோமஞ் செய்துவிட்டு எஞ்சியதை தான் அருந்தியதால் கருப்பந்தரித்து நான்கு ஆதித்தர்களைப் பெற்றனள் என்பது.

---

நான்கு புத்திரர்களைப் பெற்றும் இச்சை நீங்காதவளாய் மீண்டும் பிரயோகஞ் செய்தனள் என்கின்றது.

பிராமணம்—2

सा द्वितीयमपचत्साऽमन्यतोच्छेषणान्म इमेऽज्ञत यदग्रे प्राशिष्यामीतो मे वसीयाꣳसो जनिष्यन्त इति साऽग्रे प्राश्नात्सा रेतोऽधत्त तस्यै व्यृद्ध-माण्डमजायत ।

என்பது.

உரை.

அவள் மீண்டும் பிரமௌதனஞ் சமைத்தனள். ஆனால், முன்னர் சேடம் அருந்தியதால் நான்கு பிள்ளைகள் பிறந்திருக்கின்றன. இப்போது ஆகுதி செய்வதற்கு முன்னமே அருந்தில் மிகுந்த தனமுடைய ஒரு புத்திரன் உதிப்பன் என்று எண்ணி முன்னர் அருந்தி விட்டனள். அதனால், கருத்தரிந்தும் அது கருப்பமின்றி வெறும் அண்டமாயிருந்தது என்பது.

---

கருப்பம் அழிந்ததை நீக்குவதற்கு மீண்டும் பிரயோகஞ் செய்தனள் என்கின்றது.

பிராமணம்—3

**साऽऽदित्येभ्य एव तृतीयमपचद्भोगाय म इद्ँ श्रान्तमस्त्विति तेऽब्रुवन्वरं वृणामहै योऽतो जायाता अस्माकँ स एकोऽसद्योऽस्य प्रजायामृध्याता अस्माकं भोगाय भवादिति ततो विवस्वानादित्योऽजायत तस्य वा इयं प्रजा यन्मनुष्यास्तास्वेक एवर्धो यो यजते स देवानां भोगाय भवति ।**

என்பது.

உரை.

அதிதி மூன்று முறையும் பிரமௌதனஞ் சமைத்தனள் இவ்வண்டம் கருப்பமின்றி வீணாய்விட்டது. இப்போது நான் கருப்பந்தரிப்பதால் அதிதியின் போகத்தின் பொருட்டு ஆகும் என்று பிரமௌதனத்தை ஆதித்தர்கட்கு ஹோமஞ் செய்தனள். இதனால், அண்டத்திலிருந்து உதிப்பவன் எங்களுக்குள் நடுவில் ஒரு ஆதித்தனாய் இருப்பானாக. இவ்வாதித்தனுடைய பிரசைகளின் சம்பத்து எமது போகத்தின் பொருட்டு ஆகுக என்று வரங் கேட்டுக்கொண்டனள். பிறகு அவ்வாறே, அவ்வண்டத்திலிருந்து "விவசுவான்" என்னும் ஆதித்யன் பிறந்தனன். அவ்வாதித்தனுடைய பிரசைகளே இம் மனிதர்களாயினர். அப் பிரசைகளுள் எவன் யாகஞ்செய்கின்றானோ அவன் மிகுந்த சம்பத்துடையனாவன் ஆதலின் தேவர்களுடைய போகத்தின் பொருட்டு அவனுடைய சம்பத்து உதவுகின்றது என்பது.

---

இவ்வாறு, விருத்தாந்தத்தால் கிரகத்தின் தேவதையைக் கூறிவிட்டு, சோமரசம் பிடித்துவைப்பதைக் கூறுவதற்கு மற்றொரு விருத்தாந்தத்தைக் கூறுகின்றது.

பிராமணம்—4

**देवा वै यज्ञाद्रुद्रमन्तरायन्त्स आदित्यानन्वाक्रमत ते द्विदेवत्यान्प्रापद्यन्त तान्न प्रति प्रायच्छन्तस्मादपि वध्यं प्रपन्नं न प्रति प्रयच्छन्ति ।**

என்பது.

உரை.

தேவர்கள் எக்ஞஞ் செய்தனர் அதில் உருத்திரனை மறந்துவிட்டனர். அவ் வுருத்திரன் ஆதித்தர்களை யடைந்து பீடித்தனன். பீடிக்கப்பட்ட ஆதித்தர்கள் ஐந்திரவாயு முதலிய த்விதேவத்தியக் கிரகங்களைச் சரணடைந்

தனர். அக் கிரகதேவர்கள், ஆதித்தர்களை உருத்திரனிடங் காட்டிக்கொடுத்திலர். இதனால், பிறரால் துன்புறுத்தப்பெறும் கள்வர் முதலானோர்களும் சரணமடைவரேல், பிறரிடம் அவர்களைக் காட்டிக்கொடுப்பதில்லை என்கின்றது.

---

ஆதித்யக் கிரகத்தை விதிக்கின்றது.

பிராமணம்—5

**तस्माद्द्विदेवत्येभ्य आदित्यो निर्गृह्यते ।**

என்பது

உரை.

ஆதித்தர்கள் இரட்டைத் தேவதைக் கிரகங்களைச் சரணமடைந்ததால், இரட்டைத் தேவதைச் கிரகங்களின் சேடத்தில் ஆதித்யக் கிரகத்தைக் கிரகித்தல் வேண்டும் என்பது.

---

பிரம ஓதனத்தின் ஹோம சேடத்தால் ஆதித்தர்கள் தோன்றினர்களாதலின், இரட்டைத் தேவதைக் கிரகசேடத்தில் சோமரசம் பிடித்தல் பொருந்தும் என்கின்றது.

பிராமணம்—6

**यदुच्छेषणादजायन्त तस्मादुच्छेषणाद्गृह्यते ।**

என்பது

உரை.

சேடத்தால் தோன்றினவர்களாதலின் அதன் சேடத்தில் பிடித்தல் என்பது.

---

பிடிப்பதற்கு, "கதாசன" என்றது முதலிய மந்திரத்தை விநியோகிக்கின்றது.

பிராமணம்—7

**तिसृभिर्ऋग्भिर्गृह्णाति माता पिता पुत्रस्तदेव तन्मिथुनमुल्बं गर्भो जरायु तदेव तन्मिथुनम् ।**

என்பது.

உரை.

மூன்று இருக்கு மந்திரங்களால் சோமரசத்தைப் பிடிக்கின்றான். ஏனெனின்? அன்னைபிதாக்கள் அவர்களின் புணர்ச்சி குழந்தை என்பன மூன்

ரும் என்க மற்றும், கருப்பம், அதில் பூரித்திருக்கும் நீர் அங்நீரின்பை என கருப்பமும் முவகைத்தாமாதலின் என்பது.

---

இக் கிரகத்தில் தயிரைக் கலத்தல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—8

**पशवो वा एते यदादित्य ऊर्ग्दधि दध्ना मध्यतश्श्रीणात्यूर्जमेव पशूनां मध्यतो दधाति ।**

என்பது.

உரை.

ஆதித்தக் கிரகங்கள் மழையால் பசுக்கட்கு உபகாரஞ் செய்தலின் பசுக்களாம். தயிர் அருந்தப்படுவதால் இரசமாம். ஆதலின், நடுவில் சோமத்தில் தயிரைக் கலத்தல்வேண்டும். அதாவது, முதல் மந்திரத்தால் ஒருமுறை சோமரசத்தைப் பிடித்துக்கொண்டு மூன்றுவது மந்திரத்தால் மீண்டும் பிடிக்கின்றவன் நடு மந்திரத்தால் தயிரைக் கலத்தல் வேண்டு மென்பதாம்.

---

தயிர்க்கு ஒரு குணத்தை விதிக்கின்றது.

பிராமணம்—9

**शृतातङ्क्येन मेध्यत्वाय तस्मादामा पक्वं दुहे ।**

என்பது

உரை.

இங்கு, தயிர்ப்பாத்திரத்தில் பால் குளிர்ந்தபிறகு உறை வார்த்தல் வேண்டும். மற்றையதயிர்க்கு கறந்து சூடாயுள்ள பாலில் உறை வார்த்துத் தோய்வித்தல்வேண்டும் என்பது. இது புனிதஞ் செய்தற்பொருட்டாம். இது பற்றியே பசுக்கள் சூடாகவே பாலைத் தருகின்றன என்பது.

---

கிரகத்தை மூடிக்கொள்ள வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—10

**पशवो वा एते यदादित्यः परिश्रित्य गृह्णाति प्रतिरुध्यैवास्मै पशून्गृह्णाति ।**

என்பது.

கிரஹம்)

உரை.

ஆதித்யக் கிரகம் பசுவாமாதலின், அதை, கையால் அல்லது தருப்பை யால் மறைத்துக்கொண்டு கிரகிக்கின்றான். இதனால் இவ்வெசமானனுக்கு பசுக்களை மடக்கிக் கவர்ந்து கொள்கின்றவனாகின்றான் என்பது.

---

ஆதித்தியக் கிரகத்தை மூடிக்கோள்வதை எடுத்துக்கொண்டு புகழ்கின்றது.

பிராமணம்—11

**पशवो वा एते यदादित्य एष रुद्रो यदग्निः परिश्रित्य गृह्णाति रुद्रादेव पशू-न्न्तर्दधाति ।**

என்பது.

உரை.

ஆதித்தியக் கிரகங்கள் பசுக்களாம். உருத்திரன் அக்கினியாம்; அதை மறைத்துக்கொண்டு கவர்கின்ற இதனால் உருத்திரனால் பசுக்கள் மறைக் கப்படுகின்றன என்பது.

---

ஆதித்தனை மேற்கொண்ட மந்திரம், கலக்கிவிடுங் குழவிக்கல்லாகிய பொருளை மேற்கொண்டதாக உரை கூறுகின்றது.

பிராமணம்—12

**एष वै विवस्वानादित्यो यदुपाँशुसवनस्स एतमेव सोमपीथं परि शय-आ तृतीयसवनाद्विवस्व आदित्यैष ते सोमपीथ इत्याह विवस्वन्तमेवा-ऽऽदित्यँ सोमपीथेन समर्धयति ।**

என்பது.

உரை.

தயிரையுஞ் சோமரசத்தையுங் கலக்குங் குழவிக்கல்லின் அபிமானி தேவதை விவசுவான் என்னும் ஆதித்யனாம குழவிக்கல்லே ஆதித்தனும் ஆதலின் இவ்வாதித்தக் கிரகத்திலுள்ள சோமம் மூன்றாவது சவனம் வரை இருக்கின்றது. ஆதலின், மூன்றாவது சவனம் வரை இருக்கும் ஆதித் தன் இக்குழவிக்கல் என்றதாம். ஆதலின் விவசுவானையுடைய ஆதித்திய னையே குழவிக்கல்லால் சோமம் பருகினவனாக்குகின்றான் என்றது பொருந் தும் என்பதாம்.

---

விருப்பால் தயிரை மந்திரத்துடன் கலத்தல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—13

**या दिव्या वृष्टिस्तया त्वा श्रीणामीति वृष्टिकामस्य श्रीणीयाद्वृष्टिमेवाव रुन्धे यदिताजप्रस्कन्देद्वर्षुकः पर्जन्यस्स्याद्यदि चिरमवर्षुकः।**

என்பது.

உரை.

'யாதிவ்யா' என்றது முதலியது, மழையை விரும்பியவன் இம் மந்திரத்தால் தயிரைக் கலக்கிவிடில் மழையை அடைகின்றான் என்பது.

---

ஏனைய கிரகங்களைப்போல் இதையும் வைத்தல்வேண்டுமென்று வந்தபோது அதை விலக்குகின்றது.

பிராமணம்—14

**न सादयत्यसन्नाद्धि प्रजाः प्रजायन्ते नानु वषट्करोति यदनुवषट्कुर्या-द्रुद्रं प्रजा अन्ववसृजेन्न हुत्वाऽन्वीक्षेत यदन्वीक्षेत चक्षुरस्य प्रमायुकँ-स्यात्तस्मान्नान्वीक्ष्यः॥**

என்பது.

உரை.

இக் கிரகத்தை வைப்பதற்கு மந்திரமின்மையின் வைத்தல் இல்லை. கிரகித்தவுடனே ஹோமஞ் செய்தல்வேண்டும். கருப்பாசயத்திற்கு வேறாகிய இடத்தில் இது விழாததால் பிரசைகளுண்டாகின்றன. அநுவஷட்காரம் இல்லை. அநுவஷட்காரஞ் செய்யில் பிரசைக்களைக் குறித்து உருத்திரனுக்குக் கோரத்தையுண்டாக்கியதாகும். ஆதலின், ஒருமுறையே ஹோமமாம். ஹோமத்தை அத்வரியு பார்க்கில் கண்கெடும் ஆதலின் பார்த்தல்கூடாது என்பது.

ஆறாவது அநுவாகம்

முற்றிற்று

---

## ஆறுங்காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

### ஏழாவது அநுவாகம்

*சாவித்திர கிரகத்தைக் கூறும் பிராமணங்கள்.*

மூன்று பஞ்சாதிக்குமேல் பத்தொன்பது பதங்களைக் கொண்டது.

अन्तर्यामपात्रेण सावित्रमाग्रयणाद्गृह्णाति प्रजापतिर्वा एष यदाग्रयणः प्रजानां प्रजननाय न सादयत्यसन्नाद्धि प्रजाः प्रजायन्ते नानु वषट्करोति यदनुवषट्कुर्याद्रुद्रं प्रजा अन्ववसृजेदेष वै गायत्रो देवानां यत्सवितैष गायत्रियै लोके गृह्यते यदाग्रयणो यदन्तर्यामपात्रेण सावित्रमाग्रयणाद्गृह्णाति स्वादेवैनं योनेर्निर्गृह्णाति विश्वे [२३] देवास्तृतीयꣳ सवनं नोदयच्छन्ते सवितारं प्रातस्सवनभागꣳ सन्तं तृतीयसवनमभि पर्यणयन्ततो वै ते तृतीयꣳसवनमुदयच्छन् यत्तृतीयसवने सावित्रो गृह्यते तृतीयस्य सवनस्योद्यत्यै सवितृपात्रेण वैश्वदेवं कलशाद्गृह्णाति वैश्वदेव्यो वै प्रजा वैश्वदेवः कलशस्सविता प्रसवानामीशे यत्सवितृपात्रेण वैश्वदेवं कलशाद्गृह्णाति सवितृप्रसूत एवास्मै प्रजाः प्र [२४] जनयति सोमे सोममभि गृह्णाति रेत एव तद्दधाति सुशर्माऽसि सुप्रतिष्ठान इत्याह सोमे हि सोममभिगृह्णाति प्रतिष्ठित्या एतस्मिन् वा अपि ग्रहे मनुष्येभ्यो देवेभ्यः पितृभ्यः क्रियते सुशर्माऽसि सुप्रतिष्ठान इत्याह मनुष्येभ्य एवैतेन करोति बृहदित्याह देवेभ्य एवैतेन करोति नम इत्याह पितृभ्य एवैतेन करोत्येतावतीर्वै देवतास्ताभ्य एवैनꣳ सर्वाभ्यो गृह्णात्येष ते योनिर्विश्वेभ्यस्त्वा देवेभ्य इत्याह

**वैश्वदेवोद्देषः [२५] ॥ विश्वे प्र पितृभ्य एवैतेन करोत्येकान्नविꣳ- शतिश्च ॥ ७ ॥**

இதில், சாவித்திர வைசுவதேவக் கிரகங்களில் சோமரசத்தைப் பிடித்து வைக்கும்முறை கூறப்படுகின்றது.

---

சவிதா தேவதையின் கிரகத்தை விதிக்கின்றது.

பிராமணம்—1

**अन्तर्यामपात्रेण सावित्रमाग्रयणाद्गृह्णाति प्रजापतिर्वा एष यदाग्रयणः प्रजानां प्रजननाय ।**

என்பது.

உரை.

ஆக்ராயணக் கிரகத்திலிருக்குஞ் சோமரசத்தை சவிதா தேவதையின் பொருட்டு அந்தர்யாமக் கிரக பாத்திரத்தில் எடுத்துக்கொள்கின்றான். ஆக்ராயணம் பிரசாபதியாமாதலின் இது பிரசைகளை உண்டாக்குதற்பொருட்டாம் என்பது.

---

முன் கிரகத்தைப்போல் இதற்கும் வைத்தன் முதலானவைகளை மறுக்கின்றது.

பிராமணம்—2

**न सादयत्यसन्नाद्धि प्रजाः प्रजायन्ते नानु वषट्करोति यदनुवषट्कुर्याद्रुद्रं प्रजा अन्ववसृजेत् ।**

என்பது.

உரை.

சுக்கிலம் கருட்பாசயத்தைத் தவிர்த்து ஏனைய விடத்தில் விழாதத்தால் இக்கிரகமும் வேறிடத்தில் வைக்கப்படுவதில்லை. இதற்கும் அநுவஷட்காரமும் இல்லை அநுவஷட்காரஞ் செய்யில், பிரசைகளை முன்னிட்டு உருத்திரனுக்குக் கோரத்தை யுண்டாக்கியதாகும் என்பது.

---

விதித்த சாவித்திரக் கிரகத்தைப் புகழ்கின்றது.

பிராமணம்—3

**एष वै गायत्रो देवानां यत्सवितैष गायत्रियै लोके गृह्यते यदाग्रयणो यद- न्तर्यामपात्रेण सावित्रमाग्रयणाद्गृह्णाति स्वादेवैनं योनेर्निर्गृह्णाति ।**

என்பது

கிரஹம்)

உரை.

இச் சவிதா, தேவர்களுட் காயத்திரிச் சம்பந்தமுடையது. இதை, "தத்சவிதுః" என்றது முதலிய காயத்திரி மந்திரத்திற்காண்க. ஆக்ரயணம் காலைச் சவனத்தில் காயத்திரியினுடைய இடத்திற் கிரகிக்கப்படுகின்றது. ஆதலின், அந்தர்யாமத்திலிருந்து ஆக்ரயணத்தில் சாவித்திர தேவதையின் பொருட்டுச் சோமரசத்தைக் கிரகிப்பவன் சவிதாவின் கிரகமாகிய காரணத்திலிருந்தே கிரகித்தவனாகின்றான் என்பது.

---

சாவித்திரத்திற்கு மூன்றாவது சவனத்தின் சம்பந்தத்தை விதிக்கின்றது.

பிராமணம்—4

**विश्वे देवास्तृतीयꣳ सवनं नोदयच्छन्ते सवितारं प्रातस्सवनभागꣳ सन्तं तृतीयसवनमभि पर्यणयन्ततो वै ते तृतीयꣳ सवनमुदयच्छन् यत्तृतीय-सवने सावित्रो गृह्यते तृतीयस्य सवनस्योद्यत्यै ।**

என்பது.

உரை.

விசுவே தேவர்கள் மூன்றாவது சவனத்தை ஏற்றுக்கொள்ள மாட்டாதவர்களாயினர். ஆதலின், காலைச் சவனத்தின் அவிர்ப்பாகனாகிய சவிதாவை உதவியாகக்கொண்டு மூன்றாவது சவனத்தை ஏற்றுக்கொண்டனர். ஆதலின் மூன்றாவது சவனத்தில் சவிதா தேவதைக்குக் கிரகிக்கப்படுகின்றது என்பது.

---

வைசுவதேவக் கிரகத்தை விதிக்கின்றது.

பிராமணம்—5

**सवितृपात्रेण वैश्वदेवं कलशाद्गृह्णाति वैश्वदेव्यो वै प्रजा वैश्वदेवः कलश-स्सविता प्रसवानामीशे यत्सवितृपात्रेण वैश्वदेवं कलशाद्गृह्णाति सवि-तृप्रसूत एवास्मै प्रजाः प्र जनयति ।**

என்பது.

உரை.

முதலில் அந்தர்யாம பாத்திரமாயிருந்தபோதிலும் இப்போது அது சவித்ரு பாத்திரமாயிற்று, அதில் கலசத்திலுள்ள சோமரசத்தில் வைசுவதேவக் கிரகத்தில் எடுத்துக்கொள்ளல் வேண்டும். பிரசைகளும் விசுவதேவர்களாற் பாதுகாக்கப்படுதலின் வைசுவதேவமாம். கலசமும் எல்லாத்

தேவதைகளின் சோமரசங்களையும் பொதுவாகத் தாங்குவதால் வைசுவ தேவமாம். சவிதா பிறக்கின்றவைகட்கு ஈசனுவன்; ஆதலின், சவித்ருபாத்திரத்தில் வைசுவ தேவதைக்குச் சோமரசத்தை எடுக்கின்றவன் சவிதாவின் ஏவலாலே இவனுக்குப் பிரசையை யுண்டாக்குகின்றான் என்பது.

---

சவிதாவின் சேமமாகிய சோமரசத்துடன் வைசுவதேவம் என்னுஞ் சோமரசத்தையும் பிடித்துக்கோள்ளல் வேண்டுமேன்று விதிக்கின்றது..

பிராமணம்—6

**सोमे सोममभि गृह्णाति रेत एव तद्दधाति ।**

என்பது.

உரை.

சோமரசத்தில் மற்றொரு சோமரத்தை வார்த்துக்கொள்கின்றான். இதனால் இரேதசை நிலைக்கச் செய்கின்றான் என்பதாம்.

---

மேற்கூறிய வகையால், மந்திரத்தில் சுப்ரதிஷ்ட்டானஃ என்றது போருந்துகின்றது என்கின்றது.

பிராமணம்—7

**सुशर्माऽसि सुप्रतिष्ठान इत्याह सोमे हि सोममभिगृह्णाति प्रतिष्ठित्यै ।**

என்பது

உரை.

"சுசர்மாஸி" என்றது முதலியது, சோமரசத்தில் மற்றொரு சோமரசத்தை எடுத்துவைக்கின்றான் என்கின்றது. இது நிலைத்தற் பொருட்டாம் என்பது.

---

மந்திரத்திலுள்ள பதங்களுக்கு ஒரு விசேடவிஷய மாந்தன்மையைக் காட்டுகின்றது.

பிராமணம்—8

**एतस्मिन् वा अपि ग्रहे मनुष्येभ्यो देवेभ्यः पितृभ्यः क्रियते सुशर्माऽसि सुप्रतिष्ठान इत्याह मनुष्येभ्य एवैतेन करोति बृहदित्याह देवेभ्य एवैतेन करोति नम इत्याह पितृभ्य एवैतेन करोत्येतावती वै देवतास्ताभ्य एवैनꣳ-सर्वाभ्यो गृह्णाति ।**

என்பது

கிரஹம்)

உரை.

இவ் வைசுவதேவக் கிரகத்தில், மனிதர்களின் பொருட்டும், தேவர்களின் பொருட்டும், பிதிர்க்களின் பொருட்டும் சோமரசத்தை எடுத்துக் கொள்ளுகின்றான். என்னை? "சுசர்மாஸி" என்றது முதலியதில், சுசர்ம என்பதால் நற்சுகத்தை விரும்பும் மனிதர்களையும், பிருகத் என்றதால் பெரும் மகிமைகளையுடைய தேவர்களையும், நமஃ என்றதால் பிதிர்க்களையுங் குறிப்பிட்டிருப்பதால் என்க இவர்களே வைசுவ தேவர்களாவர் இவர்களின் பொருட்டுச் சோமரசத்தை எடுக்கின்றான் என்பது.

---

வைத்தற்குரிய மந்திரத்தில் "விசுவேப்யஃ" என்னுமிது, எல்லோர்களின் பொருட்டாமாதலின் பொருந்தும் என்கின்றது.

பிராமணம் — 9

**एष ते योनिर्विश्वेभ्यस्त्वा देवेभ्य इत्याह वैश्वदेवो ह्येषः ॥**

என்பது.

உரை.

"ஏஷதேயோனிஃ விசுவேப்யஸ்த்வா" என்றது, எல்லாத் தேவர்களின் பொருட்டும் இங்குவைக்கின்றேன் என்பதாமாதலின், இது வைசுவதேவக் கிரகமாம் என்பது.

ஏழாம் அநுவாகம்

முற்றிற்று.

---

ஆறுங்காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

எட்டாவது அநுவாகம்

பாத்நீவதக் கிரகத்தைக் கூறும் பிராமணங்கள்.

ஆறு பஞ்சாதிக்குமேல் எட்டுப் பதங்களைக் கொண்டது.

प्राणो वा एष यदुपाꣳशुर्यदुपाꣳशुपात्रेण प्रथमश्चोत्तमश्च ग्रहौ गृह्येते प्राणमेवानु प्रयन्ति प्राणमनूद्यन्ति प्रजापतिर्वा एष यदाग्रयणः प्राण उपाꣳशुः पत्नीः प्रजाः प्रजनयन्ति यदुपाꣳशुपात्रेण पात्नीवतमाग्रयणाद्गृह्णाति प्रजानां प्रजननाय तस्मात्प्राणं प्रजा

अनु प्रजायन्ते देवा वा इतइतः पत्नीस्सुवर्गम् [२६] लोकमजि-
गाꣳसन्ते सुवर्गं लोकं न प्राजानन्त एतं पात्नीवतमपश्यन्तम-
गृह्णन्त ततो वै सुवर्गं लोकं प्राजानन्यत्पात्नीवतो गृह्यते सुवर्गस्य
लोकस्य प्रज्ञात्यै स सोमो नातिष्ठत स्त्रीभ्यो गृह्यमाणस्तं घृतं
वज्रं कृत्वाऽघ्नन्तं निरिन्द्रियं भूतमगृह्णन्तस्मात्स्त्रियो निरिन्द्रिया
अदायादीरपि पापात्पुꣳस उपस्तितरम् [२७] वदन्ति यद्घृतेन
पात्नीवतꣳश्रीणाति वज्रेणैवैनं वशे कृत्वा गृह्णात्युपयामगृही
तोऽसीत्याहेयं वा उपयामस्तस्मादिमां प्रजा अनु प्रजायन्ते
बृहस्पतिसुतस्य त इत्याह ब्रह्म वै देवानां बृहस्पतिर्ब्रह्मणैवास्मै
प्रजाः प्रजनयतीन्दो इत्याह रेतो वा इन्दू रेत एव तद्धातीन्द्रि-
याव इति [२८] आह प्रजा वा इन्द्रियं प्रजा एवास्मै प्रजनय-
त्यग्ना ३ इत्याहाग्निर्वै रेतोधाः पत्नीव इत्याह मिथुनत्वाय सजू-
र्देवेन त्वष्ट्रा सोमं पिबेत्याह त्वष्टा वै पशूनां मिथुनानाꣳरूप
कृद्रूपमेव पशुषु दधाति देवा वै त्वष्टारमजिघाꣳसन्त्स पत्नीः
प्रापद्यत तं न प्रति प्रायच्छन्तस्मादपि [२९] वध्यं प्रपन्नं न
प्रति प्रयच्छन्ति तस्मात्पात्नीवते त्वष्ट्रेऽपि गृह्यते न सादयत्यस-
न्नाद्धि प्रजाः प्रजायन्ते नानु वषट्करोति यदनुवषट्कुर्याद्रुद्रं प्रजा
अन्ववसृजेद्यन्नानुवषट्कुर्यादशान्तमग्नीत्सोमं भक्षयेदुपाꣳश्वनु वष-
ट्करोति न रुद्रं प्रजा अन्ववसृजति शान्तमग्नीत्सोमं भक्षयत्यग्नी-
न्नेष्टुरुपस्थमा सीद [३०] नेष्टः पत्नीमुदानयेत्याहाग्नीदेव नेष्टरि
रेतो दधाति नेष्टा पत्नियामुद्गात्रा सं ख्यापयति प्रजापतिर्वा एष

கிரஹம்)

यदुद्गाता प्रजानां प्रजननायाप उप प्रवर्तयति रेत एव तत्सिञ्च त्यूरुणोप प्रवर्तयत्यूरुणा हि रेतस्सिच्यते नग्नंकृत्योरुमुप प्रवर्तयति यदा हि नग्न ऊरुर्भवत्यथ मिथुनी भवतोऽथ रेतस्सिच्यतेऽथ प्रजाः प्रजायन्ते [ ३१ ] ॥ पत्नीस्सुवर्गमुपस्तितरमिन्द्रियाव इत्यपि सीद मिथुन्यष्टौ च ॥ ८ ॥

இதில், பாத்னீவதம் என்னுஞ் சோமரசபாத்திரத்தில் சோமரசத்தை எடுத்துவைப்பது கூறப்படுகின்றது.

---

பாத்னீவதம் என்னுஞ் சோமரசம் பிடிப்பதற்கு, பாத்திரம் இதுவென்று விதிக்கின்றது.

பிராமணம்—1

प्राणो वा एष यदुपांशुर्यदुपांशुपात्रेण प्रथमश्चोत्तमश्च ग्रहौ गृह्येते प्राणमेवानु प्रयन्ति प्राणमनूद्यन्ति ।

என்பது.

உரை.

உபாம்சுக்கிரகம் பிராணன் என்றது முன்னர்க் கூறப்பெற்றது. அதில், முதற்கிரகமும் முடிவுக் கிரகமும் எடுத்துக்கொள்ளப்படவேண்டும். ஈண்டு, நித்தியமாகிய சோமரசத்தைப் பிடிப்பதில், உபாம்சுக்கிரகமே முதலாவதாம். அக்கினிட்டோமத்தை நோக்க பாத்னீவதக் கிரகமே முடிவிற் கிரகிப்பதாம். இவ்வாறு தொடக்கத்திய உபாம் சுக்கிரகத்தையும் முடிந்த பாத்னீவதக் கிரகத்தையும் ஒன்றில் எடுக்கில் பிராணனைப் பற்றியே தொடக்கமும் முடிவுமாகின்றது என்பது.

---

பாத்னீவதக் கிரகத்தை விதிக்கின்றது.

பிராமணம்—2

प्रजापतिर्वा एष यदाग्रयणः प्राण उपांशुः पत्नीः प्रजाः प्रजनयन्ति यदुपांशुपात्रेण पात्नीवतमाग्रयणाद्गृह्णाति प्रजानां प्रजननाय तस्मात्प्राणं प्रजा अनु प्रजायन्ते ।

என்பது.

உரை.

பிரசாபதி, ஆக்ரயணஸ்தாலியாகும் உபாம் சுக்கிரகம் பிராணன் ஆதலின் ஆக்ரயணத்திலிருந்து உபாம்சுபாத்திரத்தில் பாத்னீவதக் கிரகத்தைக் கிரகித்தவன் பிராணனுடைய பிரசைகளை உண்டாக்குகின்றான். ஆதலின் பிரசைகள் உண்டாகின்றன என்பது.

---

விதித்த கிரகத்தைப் புகழ்கின்றது.

பிராமணம்—3

**देवा वा इतइतः पत्नीस्सुवर्गं लोकमजिगाꣳसन्ते सुवर्गं लोकं न प्राजानन्त एतं पात्नीवतमपश्यन्तमगृह्णत ततो वै सुवर्गं लोकं प्राजानन्यत्पात्नीवतो गृह्यते सुवर्गस्य लोकस्य प्रज्ञात्यै ।**

என்பது.

உரை.

தேவர்கள், பாத்னீவதக் கிரகத்தைத் தவிர்த்து ஏனையகிரகங்களால் சுவர்க்கத்தை யடைய முயன்றும் அடைய முடியவில்லை. பிறகு, பாத்னீவதம் என்னுங் கிரகத்தைக்கண்டு பிடித்து கிரகித்து சுவர்க்கத்தை யடைந்தனர். ஆதலின், இக் கிரகம் சுவர்க்கலோகத்தை உணர்ந்தடைதற் பொருட்டுக் கிரகிக்கப்படுகின்றது என்பது.

---

இக் கிரகத்தில் நெய்யைக் கலத்தல் வேண்டுமென்பதை விதிக்கின்றது.

பிராமணம்—4

**स सोमो नातिष्ठत स्त्रीभ्यो गृह्यमाणस्तं घृतं वज्रं कृत्वाऽघ्नन्तं निरिन्द्रियं भूतमगृह्णन्तस्मात्स्त्रियो निरिन्द्रिया अदायादीरपि पापात्पुꣳस उपस्तितरं वदन्ति यद्घृतेन पात्नीवतꣳश्रीणाति वज्रेणैवैनं वशे कृत्वा गृह्णाति ।**

என்பது.

உரை.

மாதரைத் தேவதையாகக் கொள்வதைப் பொறுக்கமுடியாத சோமம் தனதுவடிவை மறைத்துக்கொண்டது. அதை, நெய்யை வச்சிரமாக்கி அடித்தனர். ஆதலின், அச் சோமம் வீரியமற்றதாக்கியே கிரகிக்கப்பட்டது. இது பற்றியே, பெண்களும் வலுவற்றவர்களாய் தாயாதி பாகங்களை யடைய மாட்டாதவர்களாயினர். பாவத்தில் விழுந்தவனிலும் மாதர் வலுவிலாத

பாத்னீவதக்கிரஹம்)

வரென்று உலகில் வழங்குகின்றனர். இவ்வாற்றல், பாத்னீவதக் கிரகத்தில் நெய்யைக் கலக்கின்றவன் வச்சிரத்தால் அதைத் தன்வசப்படுத்திக் கிரகின்றான் என்பது.

---

"பிருகஸ்பதி ஸுதஸ்ய" என்றது முதலிய மந்திரத்தில் எஞ்சியதை நிறையச்செய்து உரைக்கின்றது.

பிராமணம்—5

**उपयामगृहीतोऽसीत्याहेयं वा उपयामस्तस्मादिमां प्रजा अनु प्रजायन्ते ।**

என்பது

உரை.

"உபயாம க்ருஹீதோஸி" என்றது, பிறத்தல் முதலியவற்றைத் தாங்கும் பூமியின் பாகத்தைப்பற்றியே பிரசைகள் உண்டாகின்றன என்கின்றது.

---

"பிருகஸ்பதி" என்றதற்குக் கருத்தைக் கூறுகின்றது.

பிராமணம்—6

**बृहस्पतिसुतस्य त इत्याह ब्रह्म वै देवानां बृहस्पतिर्ब्रह्मणैवास्मै प्रजाः प्रजनयतीन्दो इत्याह रेतो वा इन्दू रेत एव तद्दधाति ।**

என்பது.

உரை.

'பிருகற்பதி' என்றது முதலியது, தேவர்களுக்கு பிருகஸ்பதி பிரமமாம் பிரமத்தால் இவனுக்குப் பிரசைகளைப் பிறப்பிக்கின்றான் என்கின்றது.

---

"இந்து" என்றது நிகழ்ச்சி ஒப்புமையால் இரேதசை உபலக்கணமாய்க் காட்டுகின்றது என்கின்றது.

பிராமணம்—7

**इन्द्रियाव इत्याह प्रजा वा इन्द्रियं प्रजा एवास्मै प्रजनयति ।**

என்பது.

உரை.

'இந்திரியாவః' என்றது, இந்திரியம் பிரசையாம் இவனுக்குப் பிரசையை உண்டாக்குகின்றான் என்கின்றது.

---

அக்கினி 'பாத்னீவதம்' என்னுஞ் சொற்களின் கருத்தைக் கூறுகின்றது.

பிராமணம்—8

**अग्ना ३ इत्याहाग्निर्वै रेतोधाः पत्नीव इत्याह मिथुनत्वाय ।**

என்பது.

உரை.

*அக்கினி என்றது முதலியது, அக்கினி இரேதசைத் தரிக்கின்றது. இது புணர்ச்சியின் பொருட்டு என்கின்றது.*

---

"துவஷ்டா" என்பதன் பயனைக் கூறுகின்றது.

பிராமணம்—9

**सजूर्देवेन त्वष्ट्रा सोमं पिबेत्याह त्वष्टा वै पशूनां मिथुनानांꣳरूपकृद्रूपमेव पशुषु दधाति ।**

என்பது.

உரை.

*"சசூர்தேவேன" என்றது முதலியது, துவஷ்டா பசுக்களின் புணர்ச்சி வடிவை உண்டாக்குகின்றவனாதலின், 'பசுக்களுள் உருவத்தையே நிறுத்து கின்றான் என்கின்றது.*

---

பாத்னீவதக் கிரகத்தில், துஷ்டாவைக் கருதல் பொருந்தாதென்னும் ஆசங்கையை நீக்குகின்றது.

பிராமணம்—10

**देवा वै त्वष्टारमजिघांꣳसन्त्स पत्नीः प्रापद्यत तं न प्रति प्रायच्छन्तस्मादपि वध्यं प्रपन्नं न प्रति प्रयच्छन्ति तस्मात्पात्नीवते त्वष्ट्रेऽपि गृह्यते ।**

என்பது.

உரை.

*தேவர்கள் துவஷ்டாவைத் துன்புறுத்தினர். அவன், பத்னீ என்னுந் தேவதையைச் சரணடைந்தனன். அவனை, பத்னீதேவதை அவர்களிடங் காட்டிக் கொடுக்கவில்லை. உலகிலும் வருந்திவந்தடைந்தவனைக் காட்டிக் கொடுப்பதில்லை. ஆதலின், பத்தினீவதக் கிரகத்தில் துஷ்டாவிற்குஞ் சோம ரசங் கிரகிக்கப்படுகின்றது என்பது.*

---

பாத்னீவதக்கிரஹம்)

வைத்தல் வேண்டுமேன்று வந்தபோது அதை விலக்குகின்றது.

பிராமணம்—11

**न सादयत्यसन्नाद्धि प्रजाः प्रजायन्ते ।**

என்பது.

உரை

இக் கிரகத்தை வைத்தல் இல்லை. இரேதசு கருப்பாசயத்தைத் தவிர்த்து ஏனைய விடத்தில் விழாததால் பிரசைகளுண்டாகின்றன என்றது, இங்கு, வைக்காமல் உடனே ஹோமஞ் செய்வது கருப்பாதானஞ் செய்வது போன்றது என்பது கருத்து.

---

இரண்டாம் வஷட்காரஞ் சொல்லும்போது மெதுவாகச் சொல்வதில் குணமுண்டேன்கின்றது.

பிராமணம்—12

**नानु वषट्करोति यदनुवषट्कुर्याद्रुद्रं प्रजा अन्ववसृजेयन्नानुवषट्कुर्या-दशान्तमग्नीत्सोमं भक्षयेदुपांश्वनु वषट्करोति न रुद्रं प्रजा अन्ववसृ-जति शान्तमग्नीत्सोमं भक्षयति ।**

என்பது.

உரை.

அநுவஷட்காரம் இல்லை. அதைச் செய்யிலோ, உருத்திரனை யடைந்து படைப்பை நீக்கும். செய்யாதொழியிலோ, ஆக்னீத்ரன் வெறுப்புடன் சோமத்தை யருந்துவான். ஆதலின், மெதுவாக அநுவஷட்காரஞ் செய்யில் இவ்விரண்டு குற்றங்களுமில்லை என்பதாம்.

---

ஆக்னித்ரனையும் நேஷ்டாவையும், அத்வரியு ஏவவேண்டிய பிரேஷை மந்திரங்களைத் தோற்றுவிக்கின்றது.

பிராமணம்—13

**अग्नीन्नेष्टुरुपस्थमा सीद नेष्टः पत्नीमुदानयेत्याहाग्नीदेव नेष्टरि रेतो दधाति नेष्टा पत्नियाम् ।**

என்பது.

உரை.

ஆகனீத்ர ! நீ, நேஷ்டாவிற்கு அருகில்வந்து உட்காருவாயாக. நேஷ்டாவே ! நீ, பத்தினியை எழுப்பி இங்கு அழைத்து வருவாயாக, என்னும்

இவ்விரண்டு ஏவல்களாலும், இரேதசை, பிரசையா யுண்டாகும் வன்மை யுடையதாக்குகின்றான் என்பது.

---

நேஷ்டா செய்விப்பதும் உத்காதா செய்வதுமாகிய பத்தினியின் தரிசனத்தை விதிக்கின்றது.

பிராமணம்—14

**उद्गात्रा सं ख्यापयति प्रजापतिर्वा एष यदुद्गाता प्रजानां प्रजननाय ।**

என்பது.

உரை.

நேஷ்டா உத்காதாவை பத்தினியை பார்க்கும்படி செய்விக்கின்றான். உத்காதா பிரசாபதியாமாதலின் அவனை பிரசைகளை யுண்டாக்கும்படி செய் விக்கின்றான் என்பது.

---

பன்னேசனம் என்னும் பத்தினியின் பாத்திரத்திலுள்ள நீரின் செய்கையை விதிக்கின்றது

பிராமணம்—15

**अप उप प्रवर्तयति रेत एव तत्सिञ्चति ।**

என்பது

உரை.

அந் நீரை ஊத்தல்வேண்டும். அது, இரேதசை விடுதலாகும் என்பது

---

பிரவிர்த்தியின் பொருட்டு, அந்நீரை வார்க்கவேண்டிய இடத்தை விதிக்கின்றது.

பிராமணம்—16

**ऊरुणोप प्रवर्तयत्यूरुणा हि रेतस्सिच्यते ।**

என்பது.

உரை

தொடையில் அந்நீரை விடல்வேண்டும் அந்நீர் ஒழுகி யோனிவரை வரல்வேண்டும். உலகிலும் தொடையுடன்கூடிய யோனியில் ஆண்குறியால் சுக்கிலம் விடப்படுகின்றது. ஆதலின், இது சுக்கிலத்தை யோனியில் விட்ட தாகும் என்பது.

---

ஹாரியோசனக்கிரஹம்)

தொடையிலுள்ள சேலையை நீக்கல்வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—17

नग्नंकृत्योरुमुप प्रवर्तयति यदा हि नग्न ऊरुर्भवत्यथ मिथुनी भवतोऽथ रेतस्सिच्यतेऽथ प्रजाः प्रजायन्ते ॥

என்பது.

உரை.

*சேலையை யகற்றிவிட்டு நீரை வார்த்தல்வேண்டும். தொடையிலுள்ள சேலை நீங்கும்போது புணர்ச்சி யுண்டாகின்றது. புணர்ச்சியில் சுக்கிலத்தை விடுகின்றான். சுக்கிலத்தால் பிரசைகள் உண்டாகின்றன என்பது.*

எட்டாவது அநுவாகம்

*முற்றிற்று.*

---

## ஆறுங்காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

### ஒன்பதாவது அநுவாகம்

*ஹாரியோஜனக் கிரகத்தை விதிக்கும் பிராமணங்கள்.*

நான்கு பஞ்சாதியைக் கொண்டது.

इन्द्रो वृत्रमहन्तस्य शीर्षकपालमुदौब्जत्स द्रोणकलशोऽभवत्त-स्मात्सोमस्समस्रवत्स हारियोजनोऽभवत्तं व्यचिकित्सज्जुहवानी३ मा हौषा३मिति सोऽमन्यत यद्धोष्याम्यामꣳ होष्यामि यन्न होष्यामि यज्ञवेशसं करिष्यामीति तमध्रियत होतुꣳ सोऽग्निरब्रवीन्न मय्यामꣳ होष्यसीति तं धानाभिरश्रीणात् [३२] तꣳ शृतं भूतमजुहोद्यद्धानाभिर्हारियोजनꣳ श्रीणाति शृतत्वाय शृतमेवैनं भूतं जुहोति बह्वीभिश्श्रीणात्येतावतीरेवास्यामुष्मिंल्लोके कामदुघा भवन्त्यथो खल्वाहुरेता वा इन्द्रस्य पृश्नयः कामदुघा यद्धारियो-जनीरिति तस्माद्बह्वीभिश्श्रीणीयादृक्सामे वा इन्द्रस्य हरी सोम-पानौ तयोः परिधय आधानं यदप्रहृत्य परिधीञ्जुहुयादन्तराधा-

नाभ्याम् [३३] घासं प्रयच्छेत्प्रहृत्य परिधीञ्जुहोति निराधानाभ्यामेव घासं प्रयच्छत्युन्नेता जुहोति यातयामेव ह्येतर्ह्यध्वर्युस्स्वगाकृतो यदध्वर्युर्जुहुयाद्यथा विमुक्तं पुनर्युनक्ति तादृगेव तच्छीर्षन्नधिनिधाय जुहोति शीर्षतो हि स समभवद्विक्रम्य जुहोति विक्रम्य हीन्द्रो वृत्रमहन्त्समृद्ध्यै पशवो वै हारियोजनीर्यत्संभिन्द्यादल्पाः [३४] एनं पशवो भुञ्जन्त उप तिष्ठेरन्यन्न संभिन्द्याद्बहव एनं पशवोऽभुञ्जन्त उप तिष्ठेरन्मनसा सं बाधत उभयं करोति बहव एवैनं पशवो भुञ्जन्त उपतिष्ठन्त उन्नेतर्युपहवमिच्छन्ते य एव तत्र सोमपीथस्तमेवाव रुन्धत उत्तरवेद्यां नि वपति पशवो वा उत्तरवेदिः पशवो हारियोजनीः पशुष्वेव पशून्प्रतिष्ठापयन्ति [३५] ॥ अश्रीणादन्तराधानाभ्यामल्पास्स्थापयन्ति ॥ ९ ॥

*இதில், ஹாரியோசனம் என்னும் பாத்திரத்தில் சோமரசத்தைப் பிடித்தல் கூறப்படுகின்றது.*

---

ஹாரி யோசனம் என்னுங் கிரகவிதியை அர்த்தவாதத்தால் குறிப்பிடுகின்றது.

பிராமணம்—1

**इन्द्रो वृत्रमहन्तस्य शीर्षकपालमुदौब्जत्स द्रोणकलशोऽभवत्तस्मात्सोमस्समस्रवत्स हारियोजनोऽभवत् ।**

*என்பது*

உரை.

*இந்திரன் விருத்திரனைக் கொன்றபோது விருத்திரனுடைய தலையோடு மேலே எழும்பி துரோணகலசமாய்விட்டது. ஆகையால் அதிலிருந்து ஒழுகும் சோமரசம் ஹாரியோசனம் எனப்பட்டது. இவ்வாற்ருல், துரோண கலசத்திலிருந்து ஹாரியோசனக் கிரகத்திற் சோமரசத்தை எடுத்துக் கொள்ளல் வேண்டும் என்பது.*

---

ஹாரியோசனக் கிரஹம்)

அரிசிப்போரியைக் கலத்தல்வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—2

तं व्यचिकित्सज्जुहवानी ३ मा हौषा ३ मिति सोऽमन्यत यद्धोष्यामᳶयामᳶ-होष्यामि यन्न होष्यामि यज्ञवेशसं करिष्यामीति तमध्रियत होतुᳶ-सोऽग्निरब्रवीन्न मय्यामᳶ होष्यसीति तं धानाभिरश्रीणाच्छृतं भूतमजुहोद्यद्धानाभिर्हारियोजनᳶ श्रीणाति शृतत्वाय शृतमेवैनं भूतं जुहोति ।

என்பது

உரை.

இந்திரன், ஹாரியோசனக் கிரகத்தை ஹோமஞ் செய்யலாமா? கூடாதா? என்று ஐயுற்று, செய்தால் பக்குவமாகாததை ஹோமஞ் செய்ததாகிறது, செய்யாவிட்டிலோ, எக்ஞத்தைக் கெடுத்ததாகும் என்று ஆராய்ந்து ஹோமஞ் செய்தல்வேண்டு மென்றே துணிந்தனன். அப்போது, அக்கினி எனக்கு பக்குவமிலாததை ஹோமஞ் செய்வையேல் அரிசிப்பொரியைக் கலந்து ஹோமஞ் செய்வாயாக. அவ்வாறு செய்யில் அதுபக்குவமாயிற்று என்றது. அவ்வாறே செய்தனன். ஆதலின் ஹாரியோசனக் கிரகத்தில் அரிசிப்பொரியைக் கலக்கின்றவன் பக்குவத்தின் பொருட்டுச் செய்கின்றான். இதனால் பக்குவமானதையே ஹோமஞ் செய்கின்றான் என்பது.

---

அரிசிப்பொரி மிகுதியாயிருத்தல் வேண்டுமேன்று விதிக்கின்றது.

பிராமணம்—3

बह्वीभिश्श्रीणात्येतावतीरेवास्यामुष्मिंल्लोके कामदुघा भवन्त्यथो खल्वाहु-रेता वा इन्द्रस्य पृश्नयः कामदुघा यद्धारियोजनीरिति तस्माद्बह्वीभि-श्श्रीणीयात् ।

என்பது

உரை.

எவ்வளவுபொரிகள் இருக்கின்றனவோ, அவ்வளவும் பரலோகத்தில் காமதேநுக்களாகின்றன மற்றும், இவைகள் இந்திரனுடைய சிறியவுடம்புள்ள காமதேநுக்களாகின்றன. ஆதலின், ஹாரியோசனக் கிரகத்தில் மிகுதியாக அரிசிப் பொரிகளைக் கலத்தல்வேண்டும் என்பது.

---

சவனீய பசுசம்பந்தி பரிதி(விறகு)களை எரித்தபிறகே ஹாரியோசனக்
கிரக ஹோமகாலம் என்பதை விதிக்கின்றது.

பிராமணம்—4

**ऋक्सामे वा इन्द्रस्य हरी सोमपानौ तयोः परिधय आधानं यदप्रहृत्य परिधीञ्जुहुयादन्तराधानाभ्यां घासं प्रयच्छेत्प्रहृत्य परिधीञ्जुहोति निराधानाभ्यामेव घासं प्रयच्छति ।**

என்பது.

உரை.

*இந்திரனுடைய குதிரைகளிரண்டும் இருக்குவேத சாம வேதவடிவங்களாம். அவைகளும் இங்குச் சோமரச மருந்துவன. சவனீய பசுவிற்கு அங்கமாக தீயின் பக்கங்களில் வைக்கும் விறகுகள் அக்குதிரைகட்குக் கடிவாளம் போன்றன. அப்பரிதிகளை எரித்துவிட்ட பிறகு ஹோமஞ் செய்யில் கடிவாளம் இல்லாததால் குதிரை நன்கு புல்தின்னும் ஆதலின் பரிதிகளை எரித்துவிட்டு ஹாரியோசனம் என்னுஞ் சோமரசக் கிரகத்தை ஹோமஞ் செய்தல் வேண்டும் என்பது.*

---

இவ் வோமத்தை அத்வரியு செய்யான், மற்றோ உன்னேதா செய்தல்
வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—5

**उन्नेता जुहोति यातयामेव ह्येतर्ह्यध्वर्युस्स्वगाकृतो यदध्वर्युर्जुहुयाद्यथा विमुक्तं पुनर्युनक्ति तादृगेव तत् ।**

என்பது.

உரை.

*ஹாரியோசனக் கிரகத்தை உன்னேதா ஹோமஞ் செய்கின்றான். அத்வரியு ஹோமஞ் செய்யில், முக்கிய கிரகங்களின் ஹோமம் முடிந்துவிட்டதால் ஓய்வை அடக்கிக்கொண்டு செய்தல்வேண்டும். ஆதலின், அவன் சாரமற்றநுகிவிட்டனன். மற்றும், அது வண்டியிழுத்து அலுத்துப்போன எருதை மீண்டும் வண்டியிற் கட்டுவதுபோலாம் என்பது.*

---

ஹாரியோசனக் கிரகத்தைக் கவர்ந்து ஹோமஞ் செய்வதற்குமுன் தலையில் வைத்தல்வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—6

**शीर्षन्नधिनिधाय जुहोति शीर्षतो हि स समभवत् ।**

என்பது.

உரை.

*தலைமீதுவைத்து ஹோமஞ் செய்தல்வேண்டும். தலையில் அது உண்டாயிற்று ஆதலின் என்பது.*

---

ஹோமகாலத்தில், நிற்கும் அவ்விடத்திலிருந்து சிறிதுமுன்னே, எழும்பிக் குதித்துப்போய் ஹோமஞ் செய்தல்வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—7

**विक्रम्य जुहोति विक्रम्य ह्रीन्द्रो वृत्रमहन्त्समृद्ध्यै ।**

என்பது.

உரை.

*எழும்பிக் குதித்துப்போய் ஹோமஞ் செய்கின்றான். இந்திரன், சம்பத்தின் பொருட்டு வளைந்துபோய் விருத்திரனைக் கொன்றனன் என்பது.*

---

அருந்தும்போது ஹாரியோசனக் கிரகத்திலுள்ள அரிசிப்பொரியை மெல்லாமல் சுவைத்தல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—8

**पशवो वै हारियोजनीर्यत्संभिन्द्यादल्पा एनं पशवो भुञ्जन्त उप तिष्ठेरन् यन्न संभिन्द्याद्बहव एनं पशवोऽभुञ्जन्त उप तिष्ठेरन्मनसा सं बाधत उभयं करोति बहव एवैनं पशवो भुञ्जन्त उप तिष्ठन्ते ।**

என்பது.

உரை.

*ஹாரியோசனக் கிரகத்திற் கலந்துள்ள அரிசிப்பொரியை பற்களால் தூளாக்கில் இவனுடைய பசுக்கள் இரை மிகுதியாய்த் தின்னுமற் குறைந்து போய்விடும். பற்களால் பொரியைக் கடிக்காவிடினே, இவனுடைய பசுக்கள் இரை தின்னுமலே நின்றுவிடும். ஆதலின், நாக்காற் சுவைக்கில் பசுக்களுங் குறையாது பால்கொடுத்துக்கொண்டு வளரும் என்பது.*

---

உன்னேதாவின் கையிலுள்ள ஹாரியோசனக் கிரகசேடத்தை அனை வரும் அருந்துவதற்கு உன்னேதாவின் அநுமதிபெறல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—9

**उन्नेतर्युपहवमिच्छन्ते य एव तत्र सोमपीथस्तमेवात्र रुन्धते ।**

என்பது.

உரை.

*உன்னேதாவின் அநுமதியைப்பெற்று சேடத்தை அருந்தில், எந்நிமித்தமாய்ச் சேடத்தை அருந்துகின்றானோ அதை அடைகின்றான் என்பது.*

---

அனைவரும் அருந்திவிட்டு எஞ்சியதாகிய துரோணகலசத்திலிருந்த சோமரசத்தை ஊற்றிவிடல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—10

**उत्तरवेद्यां नि वपति पशवो वा उत्तरवेदिः पशवो हारियोजनीः पशुष्वेव पशून्प्रतिष्ठापयन्ति ॥**

என்பது.

உரை.

*எஞ்சியதை உத்தரவேதியிற் கொட்டிவிடல்வேண்டும். உத்தரவேதியும் பசுவாம், ஹாரியோசனமும் பசுவாம் ஆதலின், பசுக்களிடத்திலேயே பசுக்களை நிலைக்கவைக்கின்றான் என்பது.*

ஒன்பதாவது அநுவாகம்

*முற்றிற்று.*

---

## ஆறுங்காண்டம் ஐந்தாம்பிரபாடகம்

### பத்தாவது அநுவாகம்

*ஆக்கிரயண முதலியவைகளில் மீண்டுஞ் சோமரசத்தை எடுப்பதைக் கூறும் பிராமணங்கள்.*

மூன்று பஞ்சாதிக்குமேல் பதினெட்டுப் பதங்களைக் கொண்டது.

**ग्रहान् वा अनु प्रजाः पशवः प्रजायन्त उपांश्वन्तर्यामावजावयंश्शुक्रामन्थिनौ पुरुषा ऋतुग्रहानेकशफा आदित्यग्रहं गाव**

आदित्यग्रहो भूयिष्ठाभिर्ऋग्भिर्गृह्यते तस्माद्गावः पशूनां भूयिष्ठा यत्त्रिरुपाꣳशुꣳ हस्तेन विगृह्णाति तस्माद्द्वौ त्रीनजा जनयत्यथा-वयो भूयसीः पिता वा एषयदाग्रयणः पुत्रः कलशो यदाग्रयण उपदस्येत्कलशाद्गृह्णीयाद्यथा पिता [३६] पुत्रं क्षित उपधावति तादृगेव तद्यत्कलश उपदस्येदाग्रयणाद्गृह्णीयाद्यथा पुत्रः पितरं क्षित उपधावति तादृगेव तदात्मा वा एष यज्ञस्य यदाग्रयणो यद्ग्रहो वा कलशो वोपदस्येदाग्रयणाद्गृह्णीयादात्मन एवाधि यज्ञं निष्करोत्यविज्ञातो वा एष गृह्यते यदाग्रयणस्स्थाल्या गृह्णाति वायव्येन जुहोति तस्मात् [३७] गर्भेणाविज्ञातेन ब्रह्महाऽवभृथमव यन्ति परा स्थालीरस्यन्त्युद्वायव्यानि हरन्ति तस्मात्स्त्रियं जातां पराऽस्यन्त्युत्पुमाꣳसꣳहरन्ति यत्पुरोरुचमाह यथा वस्यस आह-रति तादृगेव तद्यद्ग्रहं गृह्णाति यथा वस्यस आहृत्य प्राऽऽह तादृगेव तद्यत्सादयति यथा वस्यस उपनिधायापक्रामति तादृगेव तद्यद्वै यज्ञस्य साम्ना यजुषा क्रियते शिथिलं तद्यदृचा तद्दृढं पुर-स्तादुपयामा यजुषा गृह्यन्त उपरिष्टादुपयामा ऋचा यज्ञस्य धृत्यै [३८] ॥ यथा पिता तस्मादपक्रामति तादृगेव तद्यद्ष्टादश च

॥ १० ॥

இதில், ஆக்ரயண முதலிய கிரகபாத்திரங்களில் மீண்டுஞ் சோமரசத்தைப் பிடித்தல் கூறப்படுகின்றது.

கிரகங்களின் ஹோமங்கள் முடிந்தவிடத்து கிரகங்களைப் புகழ்கின்றது.

பிராமணம்—1

**ग्रहान् वा अनु प्रजाः पशवः प्रजायन्ते ।**

என்பது.

உரை.

*கிரகங்களைப் பற்றிக்கொண்டு, பிரசைகளும், பசுக்களும் உண்டாகின்றன என்பது.*

---

இதையே வெளிப்படை யாக்குகின்றது.

பிராமணம்—2

**उपांश्वन्तर्यामावजावयश्शुक्रामन्थिनौ पुरुषा ऋतुग्रहानेकशफा आदित्यग्रहं गावः ।**

என்பது.

உரை.

*உபாம்சு அந்தர்யாமம் என்னுமிரண்டு கிரகங்களைக் கொண்டு இருவகை ஆடுகளும், சுக்கிரம் மந்தி என்னும் இரண்டு கிரகங்களைக்கொண்டு புருடர்களும், இருதுக் கிரகங்களைக்கொண்டு ஒற்றைக் குளம்புடையவைகளும், ஆதித்யக் கிரகத்தைக் கொண்டு பசுக்களுந் தோன்றின என்பது.*

---

ஆதித்யக் கிரகங்கட்கும் பசுக்கட்கும் ஒப்புமையை வெளிப்படுத்துவதால் கிரகத்தைப்பற்றி கோக்களின் பிறப்பைக் கூறுகின்றது.

பிராமணம்—3

**आदित्यग्रहो भूयिष्ठाभिर्ऋग्भिर्गृह्यते तस्माद्गावः पशूनां भूयिष्ठाः ।**

என்பது.

உரை.

*ஆதித்தியக் கிரகமும், 'சதாசனஸ்தரீரவஸி' என்பது முதலான மிகுந்த இருக்கு மந்திரங்களாற் கிரகிக்கப்படுகின்றன. ஆதலின், பசுக்களுக்(விலங்குகளுக்)குள் கோக்கள் மிகுந்தவைகளாகின்றன என்பது.*

---

உபாம்சுக் கிரகத்தைப்பற்றிப் பிறக்கும் ஆடுகள் கிரகங்களுடன் மூன்று என்பதே ஒப்புமை யுடையது எனக் காட்டுகின்றது.

பிராமணம்—4

**यत्त्रिरुपा॑ँशुꣳ हस्तेन विगृह्णाति तस्माद्द्वौ त्रीनजा जनयति ।**

என்பது

உரை.

*மும்முறை கையால் கிரகித்தலால், ஆடுகள் இரண்டு குட்டிகளை அல்லது மூன்று குட்டிகளை ஒன்றாய் ஈனுகின்றன. அதிகம் ஈனவில்லை என்பது.*

---

அந்தர்யாமக் கிரகத்தில் எண்ணிக்கை இல்லாததால் அதைப்பற்றித் தோன்றும் பள்ளை ஆடுகளும் பல குட்டிகளை ஒன்றாய் ஈனுகின்றன என்கின்றது.

பிராமணம்—5

**अथावया भूयसीः ।**

என்பது.

உரை.

*இதனால் பள்ளை ஆடுகள் பல குட்டிகளை ஒன்றாய் ஈனுகின்றன என்பது.*

---

ஒருகால் ஆக்ரயணத்திலுள்ள சோமங்குறைந்து விட்டால், துரோண கலசத்திலிருந்து எடுத்துக்கொள்ளல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—6

**पिता वा एषयदाग्रयणः पुत्रः कलशो यदाग्रयण उपदस्येत्कलशाद्गृह्णीयाद्यथा पिता पुत्रं क्षित उपधावति तादृगेव तत् ।**

என்பது.

உரை.

*முதலாவதானதால் ஆக்ரயணம் பிதாவாம், பிறகு உண்டானதால் துரோணகலசம் புதல்வனும் ஆதலின் ஆக்ராயணங் குறைவுபடில், புத்திரன் செயல் குறையில் பிதா அவன் பிழைத்தற் பொருட்டுத் திரிவதுபோல் துரோண கலசத்திலிருந்து எடுத்துக்கொள்ளல் பொருந்தும் என்பது.*

---

துரோண கலசத்திலுள்ள சோமங் குறையில் மாறிச் செய்து கொள்ளல் வேண்டுமென்பதை விதிக்கின்றது.

பிராமணம்—7

**यत्कलश उपदस्येदाग्रयणाद्गृह्णीयाद्यथा पुत्रः पितरं क्षित उपधावति तादगेव तत् ।**

என்பது.

உரை.

*துரோண கலசத்திலுள்ள சோமரசங் குறைவுபடுமாகில், பிதாவின் செயல் குறையில் அவன் பிழைத்தற் பொருட்டு புத்திரன் திரிவதுபோல் ஆக்ராயணத்திலிருந்து எடுத்துக்கொள்ளல் வேண்டும் என்பது.*

---

கலசத்தின் நியாயத்தை கிரகித்திலுங் காட்டுகின்றது.

பிராமணம்—8

**आत्मा वा एष यज्ञस्य यदाग्रयणो यद्ग्रहो वा कलशो वोपदस्येदाग्रयणाद्गृह्णीयादात्मन एवाधि यज्ञं निष्करोति ।**

என்பது.

உரை.

*எக்ஞத்தின் நடுவிலிருந்ததால் எக்ஞத்தின் ஆன்மாவாகிய ஆக்கிரயணத்திலிருந்து கிரகங்கள் குறையினும், கலசத்திற் குறைவுபடினும் எடுத்துக் கொள்க. இதனால், கேடடைந்த எக்ஞத்தின் ஆன்மா மீண்டும் மேலே தூக்கிவிடப்பெறுகின்றது என்பது.*

---

கலசம், ஹோமசாதன மின்மையின் அதைப் பழிப்பதுபோல் மரப் பாத்திரங்கள் ஹோம சாதனங்களெனப் புகழ்கின்றது.

பிராமணம்—9

**अविज्ञातो वा एष गृह्यते यदाग्रयणस्थाल्या गृह्णाति वायव्येन जुहोति तस्माद्गर्भेणाविज्ञातेन ब्रह्महा ।**

என்பது.

உரை.

*"ஆவாயோ பூஷ" என்றது முதலிய மந்திரத்தில் பூஷாதேவதையின் பெயர் சிறப்பாய் அறியப்படுகின்றது. அவ்வாறு, "யே தேவா திவி ஏகாதசஸ்த்த" என்றதில் தேவதையின் பெயர் கூறப்படாமையின், அறியப்*

படாத மட் கலசத்தில் சோமரசங் கிரகிக்கப் படுகின்றதேயன்றி ஹோமஞ் செய்தல் இல்லை. முப்பத்து மூன்று தேவதைகளைக் குறித்து மட் கலசத்தில் இன்ன தேவதை என்று தெரியாமலே சோமரசம் எடுக்கப்பட்டு அதனல் அத் தேவதைகள் களிப்புறினும் அக் கலசந்தள்ளத்தக்கதேயாம். என்னை? கள்ளபுருடனுக்குப் பிறந்த குழந்தை அந்தணத் தன்மையைக் கொல்வதாம். ஏனெனின்? பிதா இன்னரெனத் தெரியாமையின் அதுபோல் அறியப் படாத கருப்பமும் ஆக்ராயணமும் தள்ளியதற் கொப்பாம் ஆதலின் என்க. பிறகு என்செய்வதெனின்? கலசத்திலுள்ள சோமரசத்தை மீண்டும் மரத்தாலாகிய அந்தர்யாம பாத்திரத்தில் எடுத்துக்கொண்டு ஹோமஞ் செய்தல் வேண்டும் ஆதலின் மரப் பாத்திரமே சிறந்தது என்பது.

---

மற்றொரு வகையால் மரப் பாத்திரங்களைப் புகழ்கின்றது.

பிராமணம்—10

**अवभृथमव यन्ति परा स्थालीरस्यन्त्युद्वायव्यानि हरन्ति तस्मात्स्त्रियं जातां पराऽस्यन्त्युत्पुमाꣳसꣳ हरन्ति ।**

என்பது.

உரை.

அவபிருதத்திற் (முடிவுநீராடுதவற்)குப் போகும்போது ஆக்ராயணம், உக்த்யம், துருவம், ஆதித்யம் என்னும் நான்கையும் வேதிகையிலேயே விட்டு விடுகின்றனர். வாயவ்ய பாத்திரங்களை முடிவு நீராடுமிடத்திற்கு எடுத்துக்கொண்டு போகின்றனர். ஆதலின், உலகிலும் கலசங்களைப்போல் மகளை மணம்புரிவித்துக் கணவனுடைய குலத்திலேயே விட்டுவிடுகின்றனர். கணவனை வாயவ்ய பாத்திரம்போல் பாதுகாக்கின்றனர் என்பது.

---

முன்னர்க் கூறப்பட்டுள்ள இருக்கு மந்திரங்கள், சோமரசக் கிரகம், அவற்றைவைத்தல் என்னும் மூன்றையும் முறையாய்ப் புகழ்கின்றது.

பிராமணம்—11

**यत्पुरोरुचमाह यथा वस्यस आहरति तादृगेव तद्यद्ग्रहं गृह्णाति यथा वस्यस आहृत्य प्राऽऽह तादृगेव तद्यत्सादयति यथा वस्यस उपनिधायापक्रामति तादृगेव तत् ।**

என்பது.

உரை.

'உபயாம க்ருஹீதோஸி' என்பதற்கு முன் கூறப்பட்டிருத்தலின், 'ஆவாயோ' என்றது முதலியன முன் இருக்கு மந்திரங்களாம் என்றது, உலகிலுள்ளார் அரசன் மந்திரி முதலானோர்கட்குக் கொடுக்கவேண்டியதை எடுத்துக்கொண்டுபோய் முன்பு வைத்துவிட்டு இவ்வளவுதான் எமக்குள தென்று போய்விடுகின்றார்கள் அதைப்போலாம் முன் மந்திரத்தாலே சோமரசங் கிரகித்தலும் வைத்தலுமாம் என்பது.

---

எசுரையும், சாமத்தையும் பழிப்பதுபோய் முன்னுள்ள இருக்கு மந்திரங்களைப் புகழ்கின்றது.

பிராமணம்—12

**यद्वै यज्ञस्य साम्ना यजुषा क्रियते शिथिलं तद्यदृचा तद्दृढं पुरस्तादुपयामा यजुषा गृह्यन्त उपरिष्टादुपयामा ऋचा यज्ञस्य धृत्यै ॥**

என்பது.

உரை.

விசுவாசத்தின் பொருட்டு வேதங்களில் எவ்விடத்தும், "இது இருக்காற் கூறப்பட்டது" என்று கூறுதலின், எசுராலும் சாமத்தாலுஞ் செய்யப்படும் எக்ஞாங்கம் வலுவுடையதன்றாம். இருக்கு மந்திரத்தாற் செய்யப்படுவது வலுவுடையதாம். எசுருக்கு முன்னர் உபயாம க்ருஹீதமாம். இருக்குக்கு பின்னர் உபயாம க்ருஹீதமாம். இவற்றுள், எசுரின் வலுவின் பொருட்டு இருக்கின் உபயாமமாம், இருக்கோ, தானே வலுவுடையதாமாதலின் எசுரைக்கொண்டு வலுவடைவதன்றாம். இவ் விருவகையும் எக்ஞம் உறுதிப்படுதற் பொருட்டாமென்பது.

பத்தாவது அநுவாகம்
முற்றிற்று.

---

ஆறுங்காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

பதினோராவது அநுவாகம்

சோம பாத்திரங்களைப் போற்றும் பிராமணங்கள்.

நான்கு பஞ்சாதிக்குமேல் பதினான்கு பதங்களைக் கொண்டது.

**प्रान्यानि पात्राणि युज्यन्ते नान्यानि यानि पराचीनानि प्रयुज्यन्तेऽमुमेव तैर्लोकमभि जयति पराङिव ह्यसौ लोको यानि**

போற்றுதல்)

पुनः प्रयुज्यन्त इममेव तैर्लोकमभि जयति पुनः पुनरिव ह्ययं लोकः प्रान्यानि पात्राणि युज्यन्ते नान्यानि यानि पराचीनानि प्रयुज्यन्ते तान्यन्वोषधयः परा भवन्ति यानि पुनः [३९] प्रयुज्यन्ते तान्यन्वोषधयः पुनरा भवन्ति प्रान्यानि पात्राणि युज्यन्ते नान्यानि यानि पराचीनानि प्रयुज्यन्ते तान्यन्वारण्याः पशवोऽरण्यमप यन्ति यानि पुनः प्रयुज्यन्ते तान्यनु ग्राम्याः पशवो ग्राममुपावयन्ति यो वै ग्रहाणां निदानं वेद निदानवान्भवत्याज्यमित्युक्थं तद्वै ग्रहाणां निदानं यदुपाꣳशु शꣳसति तत् [४०] उपाꣳश्वन्तर्यामयोर्यदुच्चैस्तदितरेषां ग्रहाणामेतद्वै ग्रहाणां निदानं य एवं वेद निदानवान्भवति यो वै ग्रहाणां मिथुनं वेद प्र प्रजया पशुभिर्मिथुनैर्जायते स्थालीभिरन्ये ग्रहा गृह्यन्ते वायव्यैरन्य एतद्वै ग्रहाणां मिथुनं य एवं वेद प्र प्रजया पशुभिर्मिथुनैर्जायत इन्द्रस्त्वष्टुस्सोममभीषहाऽपिबत्स विष्वङ् [४१] व्यार्च्छत्स आत्मन्नारमणं नाविन्दत्स एताननुसवनं पुरोडाशानपश्यत्तान्निरवपत्तैर्वै स आत्मन्नारमणमकुरुत तस्मादनुसवनं पुरोडाशा निरुप्यन्ते तस्मादनुसवनं पुरोडाशानां प्राश्नीयादात्मन्नेवाऽऽरमणं कुरुते नैनꣳ सोमोऽति पवते ब्रह्मवादिनो वदन्ति नर्चा न यजुषा पङ्क्तिराप्यतेऽथ किं यज्ञस्य पाङ्क्तत्वमिति धानाः करम्भः परिवापः पुरोडाशः पयस्या तेन पङ्क्तिराप्यते तद्यज्ञस्य पाङ्क्तत्वम् [४२] ॥ भवन्ति यानि पुनश्शꣳसति तद्विष्वङ्किं चतुर्दश च ॥ ११ ॥

இப் பிரபாடகத்தின் அநுவாகங்களின் தொகையைக்காட்டும் தலைப் புச் சொற்கள்:—

इन्द्रो वृत्रायाऽऽयुवै यज्ञेन सुवर्गायेन्द्रो मरुद्भिरदितिरन्तर्याम-पात्रेण प्राण उपाꣳशुपात्रेणेन्द्रो वृत्रमहन्तस्य ग्रहान्वै प्रान्यानि पात्राण्येकादश ॥ ११ ॥

பஞ்சாதிகளின் தொகையைக் காட்டுந் தலைப்புச் சொற்கள்:—

इन्द्रो वृत्राय पुनर्ऋतुनाऽऽह मिथुनं पशवो नेष्टः पत्नीमुपाꣳश्वन्तर्यामयोर्द्विचत्वारिꣳशत् ॥ ४२ ॥

இதில், சோம பாத்திரங்கள் போற்றப் பெறுகின்றன.

---

சோம பாத்திரங்களைப் புகழ்வதற்கு இருவகையாகப் பிரிக்கின்றது.

பிராமணம்—1

प्रान्यानि पात्राणि युज्यन्ते नान्यानि ।

என்பது.

உரை.

உபாம்சு பாத்திரம் முதலான சில பாத்திரங்கள் மீண்டுஞ் சோம ரசத்தைக் கிரகிக்கத் தக்கவைகள். ஏனைய இரட்டைத் தேவதைக் கிரகங்கள் முதலாயின மீண்டுங் கிரகிக்கத் தக்கவைகளல்ல என்பது.

---

மீண்டும் மீண்டுங் கிரகிப்பதால் இவ்வுலகை வெல்கின்றான் எனப் புகழ்கின்றது.

பிராமணம்—2

यानि पराचीनानि प्रयुज्यन्तेऽमुमेव तैर्लोकमभि जयति पराङिव ह्यसौ लोको यानि पुनः प्रयुज्यन्त इममेव तैर्लोकमभि जयति पुनः पुनरिव ह्ययं लोकः ।

என்பது.

உரை.

மீண்டுங் கிரகிக்கப்படுங் கிரகங்களால் இவ்வுலகை வெல்கின்றான். இவ்வுலகம், மீண்டும் மீண்டும் பிறப்புக்களை யுடையதாம் ஆதலின், மீண்டுமீண்டுஞ் சோமக் கிரகண பாத்திரங்களால் இவ் வுலகை வெற்றிபெற்றுக் கொள்ளுகின்றான். சுவர்க்கமோ, மீண்டுமீண்டும் பிறப்புக்களை யுடையதன்றாம். ஆதலின் இவ்வுலகிலுள்ளவன் மீண்டுமீண்டும் முயலல்வேண்டும் என்பது.

---

மற்றொரு வகையாற் புகழ்கின்றது.

பிராமணம்--3

**प्रान्यानि पात्राणि युज्यन्ते नान्यानि यानि पराचीनानि प्रयुज्यन्ते तान्यन्वोषधयः परा भवन्ति यानि पुनः प्रयुज्यन्ते तान्यन्वोषधयः पुनरा भवन्ति ।**

என்பது

உரை.

மீண்டும் மீண்டுஞ் சோமரச பாத்திரங்கள் கிரகிக்கப்படுதலின் பலன் வந்தபோது சில கொடிசெடிகள் கெட்டுப்போய் மீண்டும் உற்பத்தியாகின்றன என்பது.

---

மற்று மொருவகையாற் புகழ்கின்றது.

பிராமணம்—4

**प्रान्यानि पात्राणि युज्यन्ते नान्यानि यानि पराचीनानि प्रयुज्यन्ते तान्यन्वारण्याः पशवोऽरण्यमपयन्ति यानि पुनः प्रयुज्यन्ते तान्यनु ग्राम्याः पशवो ग्राममुपावयन्ति ।**

என்பது

உரை.

சில பாத்திரங்களில் மீண்டும் மீண்டுஞ் சோமரசத்தைக் கிரகித்தலால் ஆரணியத்திலுள்ள புலி முதலானவைகள் அரணியத்தையே மீண்டும்போயடைகின்றன கிராமத்தை யடைகிறதில்லை. கிராமத்திலுள்ள கோக்கள்

முதலாயின புல்லருந்திவிட்டு மீண்டும் கிராமத்தையே யடைகின்றன ஆரணியத்தை யடைவதில்லை என்பது.

---

சஸ்திரம் என்னும் ஒருவகைத் துதியைப் புகழ்கின்றது

பிராமணம்—5

**यो वै ग्रहाणां निदानं वेद निदानवान्भवत्याज्यमित्युक्थं तद्वै ग्रहाणां निदानं यदुपाꣳशु शꣳसति तदुपाꣳश्वन्तर्यामयोर्यदुच्चैस्तदितरेषां ग्रहाणामेतद्वै ग्रहाणां निदानं य एवं वेद निदानवान्भवति ।**

என்பது.

உரை.

கிரகங்களின் மூலகாரணத்தை அறிந்தவன் நீண்டநாள் வாழும் மாதாபிதாக்கள் முதலானோருடன் கூடியிருக்கின்றான். இங்கு, ஆஜ்யம் பிரவுகம் என்றது முதலிய நாமங்களையுடையன சஸ்திரங்கள். அவை புகழ்தல் வாயிலாக கிரகங்களின் அநுட்டானத்திற்குக் காரணங்களாமாதலின் கிரகங்களின் மூலகாரணங்களாம். அதை, உபாம்சுக் கிரகம் அந்தர்யாமிக் கிரகம் என்னும் இரண்டிற்கும் மெல்ல ஓதல்வேண்டும். ஏனைய கிரகங்கட்கு உரக்க ஓதல் வேண்டும். இதுவே கிரகங்களின் மூலகாரணமாம். இதை யுணர்ந்தவன் நீண்டநாள் வாழுகின்றவர்களுடன் கூடியிருக்கின்றான் என்பது.

---

மட் கலசத்திற்கும், வாயவ்ய வுருவத்திற்கும் துவந்துவத்தைப் புகழ்கின்றது.

பிராமணம்—6

**यो वै ग्रहाणां मिथुनं वेद प्र प्रजया पशुभिर्मिथुनैर्जायते स्थालीभिरन्ये ग्रहा गृह्यन्ते वायव्यैरन्य एतद्वै ग्रहाणां मिथुनं य एवं वेद प्र प्रजया पशुभिर्मिथुनैर्जायते ।**

என்பது.

உரை.

கிரகங்களின் சேர்க்கையை யுணர்ந்தவன் பிரசை பசுக்கள் என்பவைகளின் சேர்க்கையுடன் உண்டாகின்றான். ஆக்ராயணம் உக்த்யம் என்றது முதலியவைகள் பெண் வடிவமான மட்குடங்களால் கிரகிக்கப் பெறுகின்றன உபாம்சுக் கிரகம் அந்தர்யாமக் கிரகம் என்பன ஆண்வடிவமாகிய வாய

போற்றுதல்)

வீயக் கிரகங்களால் கிரகிக்கப் படுகின்றன. இதை யுணர்ந்தணர்ந்தவன் என்றது முதலியது முடிவின் பொருட்டு மீண்டுங் கூறப்படுகின்றது என்பது.

---

இனி, சவனீய புரோடாசங்களை விதிக்கின்றது.

பிராமணம்—7

इन्द्रस्त्वष्टुस्सोममभीषहाऽपिबत्स विष्वङ्ङ्व्यार्च्छत्स आत्मन्नारमणं नाविन्दत्स एताननुसवनं पुरोडाशानपश्यत्तान्निरवपत्तैर्वै स आत्मन्नारमणमकुरुत तस्मादनुसवनं पुरोडाशा निरुप्यन्ते तस्मादनुसवनं पुरोडाशानां प्राश्नीयादात्मन्नेवाऽऽरमणं कुरुते नैनꣳ सोमोऽति पवते ।

என்பது.

உரை.

இந்திரனால் துவஷ்டாவின் புதல்வனாகிய விசுவரூபன் இறந்ததால் முனிவுற்ற துவஷ்டா, இந்திரனை விலக்கிவிட்டு சோமயாகஞ் செய்யத் தொடங்கினன். இந்திரன் வலியால் அதில் சோமரசத்தை அருந்திவிட்டனன். அருந்திவிட்டு வேகமாய் ஓடியதால் வயிற்றில் பல்வகை நோய்களையடைந்தனன். அவைகளாற் பீடிக்கப்பட்ட இந்திரன் இன்ப முற்றிலன். பிறகு, மூன்றுமுறை சோமரசம் பிழியும்போதும் புரோடாசஞ் செய்து ஹோமஞ் செய்துவிட்டு எஞ்சியதை அருந்தியதால் இன்ப முற்றனன். ஆதலின், ஒவ்வொரு சவனத்திலும் புரோடாசஞ் செய்கின்றவன் இன்ப மடைகின்றான். சோமமும் அவனைத் துன்புறுத்தா தென்பது.

---

சவனீய புரோடாசங்களுள், ஐந்து பொருளின்விதி அர்த்த வாதத்தாற் குறிப்பிடுகின்றது.

பிராமணம்—8

ब्रह्मवादिनो वदन्ति नर्चा न यजुषा पङ्क्तिराप्यतेऽथ किं यज्ञस्य पाङ्क्तत्वमिति धानाः करम्भः परिवापः पुरोडाशः पयस्या तेन पङ्क्तिराप्यते तद्यज्ञस्य पाङ्क्तत्वम् ॥

என்பது.

உரை.

ஐந்தெழுக்களைக் கொண்டது பந்திச் சந்தமாம். எக்ஞத்திற்கு பாந்தத்வம் சொல்லவேண்டு மெனின்? இருக்கு எசுர்களால் முடியாது ஐந்தென்பது நியமமின்மையின். ஆதலின், எக்ஞம் பாந்தம் என்றது எவ்வாற்றால்? என்று பிரமவாதிகள் ஆசங்கிக்கின்றனர். நியதமாய் அரிசிப்பொரி, நெய் சேர்த்தமா, நெற்பொரி, புரோடாசம், முறிந்தபால் என்னும் ஐந்து பொருள்களிருத்தலைக் கொண்டே எக்ஞம் ஐந்துடையது என்னல்வேண்டும் என்று உத்தரங் கூறுகின்றார்கள் என்பதாம்.

பதினோராம் அநுவாகம்
முற்றிற்று.

---

ஐந்தாவது பிரபாடகமும்
முடிந்தது.

---

தட்சிணை)

### ஆறும் பிரபாடக விடயச் சுருக்கம்.

षष्ठाद्ये दक्षिणाहोमस्समिष्टयजुरुत्तरे ।
तृतीयेऽवभृथस्तुर्ये यूपैकादशिनी स्मृता ॥ १ ॥

पश्वेकादशिनी तूर्ध्वे षष्ठे पात्नीवतः पशुः ।
सौम्यश्चरुस्सप्तमे स्यादतिग्राह्यास्तथाऽष्टमे ॥ २ ॥

अदाभ्यो नवमे तद्वदंशुस्तु दशमे श्रुतः ।
षोडश्येकादशे प्रोक्त एवं षष्ठस्समापितः ॥ ३ ॥

*இவ் வாறும் பிரபாடகத்திலும் பதினொரு அநுவாகங்களுள்ளன. அவற்றுள் முதலாவதில் தக்ஷிணையின் பொருட்டுச் செய்யப்படும் ஹோமமும், இரண்டாவதில் சமிஷ்டயசுர் ஹோமமும், மூன்றாவதில் அவபிருதமும், நான்காவதில் பதினொரு யூபங்களும், ஐந்தாவதில் பதினொரு பசுக்களும், ஆறாவதில் பாத்தினீவதப் பசுவும், ஏழாவதில் சௌம்ய சருவும், எட்டாவதில் அதிக்கிராகியக் கிரகங்களும், ஒன்பதாவதில் அதாப்யக் கிரகமும், பத்தாவதில் அம்சுக் கிரகமும், பதினொன்றாவதில் சோடசிக் கிரகமுஞ் சொல்லப்படுகின்றன.*

---

## ஆறுங்காண்டம் ஆறும் பிரபாடகம்

### முதலாவது அநுவாகம்

*தட்சிணையைக் கூறும் பிராமணங்கள்.*

நான்கு பஞ்சாதிக்குமேல் முப்பத்தெட்டுப் பதங்களைக் கொண்டது.

सुवर्गाय वा एतानि लोकाय हूयन्ते यद्दाक्षिणानि द्वाभ्यां गार्हपत्ये जुहोति द्विपाद्यजमानः प्रतिष्ठित्या आग्नीध्रे जुहोत्यन्तरिक्ष एवाऽऽक्रमते सदोऽभ्यैति सुवर्गमेवैनं लोकं गमयति सौरीभ्यामृग्भ्यां गार्हपत्ये जुहोत्यमुमेवैनं लोकꣳसमारोहयति नयवत्यर्चाऽऽग्नीध्रे जुहोति सुवर्गस्य लोकस्याभिनीत्यै दिवं गच्छ सुवःपतेति हिरण्यम् [१] हुत्वोद्गृह्णाति सुवर्गमेवैनं लोकं गमयति रूपेण वो रूपमभ्यैमीत्याह रूपेण ह्यासाꣳ रूपमभ्यैति

यद्धिरण्येन तुथोवो वि श्ववेदा वि भजत्वित्याह तुथो ह स वै विश्ववेदा देवानां दक्षिणा वि भजति तेनैवैना वि भजत्येतत्ते अग्ने राधः [२] ऐति सोमच्युतमित्याह सोमच्युतꣳ ह्यस्य राध ऐति तन्मित्रस्य पथा नयेत्याह शान्त्या ऋतस्य पथा प्रेत चन्द्र-दक्षिणा इत्याह सत्यं वा ऋतꣳसत्येनैवैना ऋतेन वि भजति यज्ञस्य पथा सुविता नयन्तीरित्याह यज्ञस्य ह्येताः पथा यन्ति यद्दक्षिणा ब्राह्मणमद्य राध्यासम् [३] ऋषिमार्षेयमित्याहैष वै ब्राह्मण ऋषिरार्षेयो यश्शुश्रुवान्तस्मादेवमाह वि सुवः पश्य व्यन्तरिक्षमित्याह सुवर्गमेवैनं लोकं गमयति यतस्व सदस्यै-रित्याह मित्रत्वायास्मद्दात्रा देवत्रा गच्छत मधुमतीः प्रदातारमा विशतेत्याह वयमिह प्रदातारस्स्मोऽस्मा नमुत्र मधुमतीरा विश तेति [४] वावैतदाह हिरण्यं ददाति ज्योतिर्वै हिरण्यं ज्योतिरेव पुरस्ताद्धत्ते सुवर्गस्य लोकस्यानुख्यात्या अग्नीधे ददात्यग्निमुखाने-वर्तून्प्रीणाति ब्रह्मणे ददाति प्रसूत्यै होत्रे ददात्यात्मा वा एष यज्ञस्य यद्धोताऽऽत्मानमेव यज्ञस्य दक्षिणाभिस्समर्धयति [५] ॥ हिरण्यꣳराधो राध्यासं मधुमतीरा विशतेत्यष्टात्रिꣳशच्च ॥ १ ॥

இது தட்சிணைகொடுக்க விருப்புடையவன் செய்யும் ஹோமத்தைக் கூறுகின்றது.

---

தட்சிணையின் பொருட்டுச் செய்யும் ஹோமத்தை விதிக்கின்றது.

பிராமணம்—1

सुवर्गाय वा एतानि लोकाय हूयन्ते यद्दाक्षिणानि ।

என்பது.

(தட்சிணை)

உரை.

தட்சிணைகொடுக்க விருப்புடையோனாற் செய்யப்படும் ஹோமங்கள் தாக்ஷிண ஹோமங்கள். இவை, சுவர்க்கலோகத்தின் பொருட்டுச் செய்யப் படுகின்றன என்பது.

---

ஹோமங்கட்கு இடத்தை விதிக்கின்றது.

பிராமணம்—2

**द्वाभ्यां गार्हपत्ये जुहोति द्विपाद्यजमानः प्रतिष्ठित्या आग्नीध्रे जुहोत्यन्तरिक्ष एवाऽऽक्रमते ।**

என்பது

உரை.

இரண்டு காலுடைய எசமானனுடைய நிலையின் பொருட்டு மேல்வரும் இரண்டாலும் கார்கபத்தியத்திலும், ஆக்னீத்ரத்திலுஞ் செய்யப்படுகின்றன. ஆக்னீத்ரத்திற் செய்வது அந்தரிக்ஷத்தில் ஏறுகின்றான் என்பது.

---

ஆக்னீத்ரத்தில் ஹோமஞ் செய்த பிறகு சபையிற் புகுதல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—3

**सदोऽभ्यैति सुवर्गमेवैनं लोकं गमयति ।**

என்பது.

உரை.

சபையை யடைகின்றான். அது, இவனைச் சுவர்க்கலோகத்திற் சேர்க்கின்றது என்பது.

---

மந்திரங்களை விநியோகிக்கின்றது.

பிராமணம்—4

**सौरीभ्यामृग्भ्यां गार्हपत्ये जुहोत्यमुमेवैनं लोकꣳसमारोहयति नयवत्यर्चाऽऽग्नीध्रे जुहोति सुवर्गस्य लोकस्याभिनीत्यै ।**

என்பது.

உரை.

உதாத்யம், சித்ரம் என்னும் இரண்டு சூரிய இருக்குக்களால் காருகபத்யத்திலும், 'அக்னயே நய' என்னும் நயவதி இருக்கால் ஆக்னீத்ரத்திலும் ஹோமஞ் செய்தல்வேண்டும். இவை, இவனை நல்லவழியாற் சுவர்க்கத்திலேற்றிவைக்கின்றன என்பது.

---

பொன்னை, நெய்யிற் போட்டெடுத்தலால் எசமானனுக்கு சுவர்க்கங் கிடைக்கின்றது என்கின்றது.

பிராமணம்—5

**दिवं गच्छसुवःपतेति हिरण्यꣳ हुत्वोद्गृह्णाति सुवर्गमेवैनं लोकं गमयति ।**

என்பது.

உரை

"திவம் கச்ச" என்றது முதலியதால் பொன்னை நெய்யிற்கட்டிப் போட்டுவைத்திருந்து ஹோமஞ்செய்த பிறகு எடுத்துவிடல் வேண்டும் என்பது.

---

தட்சிணைப் பசுக்களைக் கொண்டுவரும் மந்திரத்திலுள்ள, 'ரூபேண' (உருவத்தால்) என்னுஞ்சொல் பொன்னை மேற்கொண்டது என்கின்றது.

பிராமணம் – 6

**रूपेण वो रूपमभ्यैमीत्याह रूपेण ह्यासाꣳ रूपमभ्यैति यद्धिरण्येन ।**

என்பது.

உரை.

'ரூபேண வோ ரூபம்' என்றது முதலியது, பொன்னாற் கொண்டுவரும் இவைகளின் உருவங்களை இம் மந்திரங் கூறுகின்றது என்கின்றது.

---

தட்சிணைப் பசுக்களை விபாகஞ் செய்வதையே விளக்குகின்றது.

பிராமணம்—7

**तुथोवो विश्ववेदा विभजत्वित्याह तुथो ह स्म वै विश्ववेदा देवानां दक्षिणा वि भजति तेनैवैना वि भजति ।**

என்பது.

தட்சிணை)

உரை.

"துதோ வோ" என்றது முதலியது, எல்லாவற்றையு முணர்ந்தவன் என்பவன் தேவர்களுடைய தட்சிணைகளைப் பங்கிடுகின்றவ ஒருவனுளன். அவனே இத் தட்சிணைப் பசுக்களையும் பிரிக்கின்றான் என்கின்றது.

---

தட்சிணைப் பசுக்கள் சோமயாகத்திற் கிடைத்தவைகள் எனின் சிறப்புடையன என்கின்றது.

பிராமணம்—8

**एतत्ते अग्ने राध ऐति सोमच्युतमित्याह सोमच्युतꣳह्यस्य राध ऐति ।**

என்பது.

உரை.

"ஏதத்தே" என்றது முதலியது, சோமயாகத்திற் கிடைத்த தட்சிணையே இவனுக்கு தனத்தை யடைய நிமித்தமாம் என்கின்றது.

---

மித்திரன், என்னுஞ் சொல்லின் பயனைக் கூறுகின்றது.

பிராமணம்—9

**तन्मित्रस्य पथा नयेत्याह शान्त्यै ।**

என்பது.

உரை.

"துதன் உருத்திரன்" என்று கூறப்பட்டிருத்தலின் உருத்திரனுடைய மார்க்கமாகில் சாந்தமாயிராது ஆதலின் மித்திரனுடைய மார்க்கம் என்றது.

---

இதிலுள்ள, "ருத" என்னுஞ்சொல் எக்ஞப்பொருளை யுடையதன்று, மற்றோ சத்தியத்தை மேற்கொண்டது என்கின்றது.

பிராமணம்—10

**ऋतस्य पथा प्रेत चन्द्रदक्षिणा इत्याह सत्यं वा ऋतꣳसत्येनैवैना ऋतेन वि भजति ।**

என்பது

உரை.

"ருதஸ்ய பதா" என்றது முதலியது, ருதம்சத்தியமாம். சத்தியத்தால், முக்கிய இருத்துவிக்குக் கட்கும் பாதிப் பங்குடையவனுக்கும் மூன்றிலொன்றுள்ள இருத்துவிக்குக் கட்கும் நான்கிலொன்று உள்ளவர்கட்கும் உள்ளவாறு பங்கிடுகின்றான் என்கின்றது.

---

தட்சிணைப் பசுக்கள், காருகபத்தியம் சபை என்னு மிரண்டிற்கும் நடுவிலுள்ள எக்ஞமார்க்கத்தாற்போதல் வெளிப்படை என்கின்றது.

பிராமணம்—11.

यज्ञस्य पथा सुविता नयन्तीरित्याह यज्ञस्य ह्येताः पथा यन्ति यद्दक्षिणाः ।

என்பது.

உரை.

"எக்ஞஸ்ய" என்றது முதலியது, தட்சிணைக் கோக்கள் எக்ஞவழியாகச் செல்கின்றன என்கின்றது.

---

தட்சிணை கொடுக்கும் மந்திரத்தில் பிராமணன் என்றது முதலான சொற்களுக்கு வேதசாத்திரங்களை முழுது முணர்ந்தவனே பொருள் என்னுங் குறிப்பாம் என்று விளக்குகின்றது.

பிராமணம்—12

ब्राह्मणमद्य राध्यासमृषिमार्षेयमित्याहैष वै ब्राह्मण ऋषिरार्षेयो यश्शुश्रुवावान्तस्मादेवमाह ।

என்பது.

உரை.

"பிராமணன்" என்றது முதலியது, பிராமணன், இருடி, இருடியின் சந்ததிகள் என்னு மிவர்கள் நன்கு சுருதிகளைக் கற்றவர்களாதலின் இவ்வாறு என்கின்றது.

---

சபையை நோக்கும் மந்திரத்தில் "விசுவஃ பஶ்யஃ" (சுவர்க்கத்தைப் பார்ப்பாயாக) என்பதன் கருத்தை விளக்குகின்றது.

பிராமணம்—13

वि सुवः पश्य व्यन्तरिक्षमित्याह सुवर्गमेवैनं लोकं गमयति ।

என்பது.

தட்சிணை)

உரை.

"சுவர்க்கத்தைப் பார்ப்பாயாக" என்றது முதலியது, இதனால் இவனைச் சுவர்க்கலோக மடையச் செய்கின்றான் என்கின்றது.

---

இம் மந்திரத்தில், "சபையி லுள்ளவர்களோடு" என்னும் மூன்றும் வேற்றுமையால், மித்திரத்தன்மை கூறப்பட்டுள்ளது என்கின்றது.

பிராமணம்—14

**यतस्व सदस्यैरित्याह मित्रत्वाय ।**

என்பது.

உரை.

"யதஸ்வ" என்றது முதலியது, சபையிலுள்ளார்களோடுகூட முயலுதல் மித்திரத் தன்மையின் பொருட்டு என்கின்றது.

---

தட்சிணைப் பசுக்களைப் போற்றும் மந்திரத்தில், "பிரதாதாரம் ஆவிஶத" (கொடுக்கின்றவனை யடைவீர்களாக) என்பதன் பொருளைக் கூறுகின்றது.

பிராமணம்—15

**अस्मद्दात्रा देवत्रा गच्छत मधुमतीः प्रदातारमा विशतेत्याह वयमिह प्रदातारस्स्मोऽस्मा नमुत्र मधुमतीरा विशतेति वावैतदाह ।**

என்பது.

உரை.

"அஸ்மத்" என்றது முதலியது, நாங்கள் தட்சிணைகளைக் கொடுத்தவனைப் பற்றிக்கொண்டிருக்கின்றோம். நீங்கள், பரலோகத்தில், இன்சுவை மிகுந்த பாலுடையோர்களாகி கொடுத்த அவனை யடைவீர்களாக என்கின்றது.

---

முதலில் தட்சிணை கொடுக்கவேண்டியதை விதிக்கின்றது.

பிராமணம்—16

**हिरण्यं ददाति ज्योतिर्वै हिरण्यं ज्योतिरेव पुरस्ताद्धत्ते सुवर्गस्य लोकस्यानुख्यात्यै ।**

என்பது.

உரை.

பொன்னையே முதலிற் கொடுக்கின்றான். பொன் ஒளியுடையதாமாதலின் சுவர்க்கலோகத்தை விளக்குகின்றது என்பது.

---

அப்போன் பிரதிக்கிருஹீதாவிற் (வாங்க உரிமையுடையவனு)குச் சம்பந்த முடையதென்று விதிக்கின்றது.

பிராமணம்—17

**अग्नीधे ददात्यग्निमुखानेवर्तून्प्रीणाति ।**

என்பது.

உரை.

*ஆக்னீத்ரனுக்குக் கொடுக்கின்றான். ஏனெனின்? அக்னியோடுகூடிய வைகளும் அக்கினி யுண்டாக்குங் காலத்திலுள்ளவைகளுமான வசந்த முதலான இருதுக்களைப் பிரியப்படுத்துவதன் பொருட்டு என்கின்றது.*

---

வேறு இருத்துவிக்குக் கட்குக்கொடுப்பதை விதிக்கின்றது.

பிராமணம்—18

**ब्रह्मणे ददाति प्रसूत्यै होत्रे ददात्यात्मा वा एष यज्ञस्य यद्धोताऽऽत्मानमेव यज्ञस्य दक्षिणाभिस्समर्धयति ॥**

என்பது.

உரை.

*அநுக்ஞையின் பொருட்டு பிரமனுக்குக் கொடுத்தலாம். ஹோதா மிகுந்த மந்திரங்களை ஓதுவோனாதலின் எக்ஞத்தின் ஆன்மாவாம்; அவனுக்குக் கொடுத்தலால் ஆன்மாவை நிறையச் செய்கின்றான் என்பது. மற்றும் இவ்வாறே யூகித்துக்கொள்க.*

முதலாவது அநுவாகம்
*முற்றிற்று.*

---

ஆறுங்காண்டம் ஆறும் பிரபாடகம்

இரண்டாவது அநுவாகம்

*சமிஷ்டயசுசைக் கூறும் பிராமணங்கள்.*

இரண்டு பஞ்சாதிக்குமேல் நாற்பத்தொரு பதங்களைக் கொண்டது.

**समिष्टयजूंषि जुहोति यज्ञस्य समिष्ट्यै यद्वै यज्ञस्य क्रूरं यद्विलिष्टं यदत्येति यन्नात्येति यदतिकरोति यन्नापि करोति तदेव तैः प्रीणाति नव जुहोति नव वै पुरुषे प्राणाः पुरुषेण यज्ञः**

संमितो यावानेव यज्ञस्तं प्रीणाति षड्गिमयाणि जुहोति षड्वा ऋतव ऋतूनेव प्रीणाति त्रीणि यजूꣳषि [६] त्रय इमे लोका इमानेव लोकान्प्रीणाति यज्ञ यज्ञं गच्छ यज्ञपतिं गच्छेत्याह यज्ञपतिमेवैनं गमयति स्वां योनिं गच्छेत्याह स्वामेवैनं योनिं गमयत्येष ते यज्ञो यज्ञपते सहसूक्तवाकस्सुवीर इत्याह यजमान एव वीर्यं दधाति वासिष्ठो ह सात्यहव्यो देवभागं पप्रच्छ यत्सृ-ञ्जयान्बहुयाजिनोऽयीयजो यज्ञे [७] यज्ञं प्रत्यतिष्ठिपा३ यज्ञ-पता३ विति स होवाच यज्ञपताविति सत्याद्वै सृञ्जयाः परा बभूवुरिति होवाच यज्ञे वाव यज्ञः प्रतिष्ठाप्य आसीद्यजमानस्याप-राभावायेति देवा गातुविदो गातुं वित्त्वा गातुमितेत्याह यज्ञ एव यज्ञं प्रतिष्ठापयति यजमानस्यापराभावाय [८] ॥ यजूꣳषि यज्ञ एकचत्वारिꣳशच्च ॥ २ ॥

*இதில், சமிஷ்டயசுர் ஹோமங் கூறப்படுகின்றது.*

---

"தாதாராதிः" என்றது முதலான மந்திரங்களை ஓதிச் செய்யும் ஹோமங்களை விதிக்கின்றது.

பிராமணம்—1

समिष्टयजूꣳषि जुहोति यज्ञस्य समिष्ट्यै यद्वै यज्ञस्य क्रूरं यद्विलिष्टं यदत्येति यन्नात्येति यदतिकरोति यन्नापि करोति तदेव तैः प्रीणाति ।

*என்பது.*

உரை.

*எங்ஙனம் நல்ல முறையில் அநுட்டிக்கப்பெற்றதென்பதன் பொருட்டு "தாதாராதிः" என்பது முதலான மந்திரங்களை ஓதி நெய்யை ஹோமஞ் செய்தல் வேண்டும் என்பது. அதாவது, பசுவின் கொலையாகிய கோரம், தட்சிணை குறைதல், காலந்தவறல், விலக்கியதைச் செய்தல், மறத்தல் என்*

றது முதலான எக்ஞத்தின் குற்றங்களைச் சமாதானஞ் செய்துகொள்ளுத லாம். இவ் வோமங்களால் அவைகளைப் பிரியப்படுத்துகின்றான் என்பது முடிந்த பொருள் என்பது.

---

ஆகுதிகளின் எண்ணிக்கையை விதிக்கின்றது.

பிராமணம்—2

**नव जुहोति नव वै पुरुषे प्राणाः पुरुषेण यज्ञस्संमितो यावानेव यज्ञस्तं प्रीणाति ।**

என்பது.

உரை.

புருடனுக்குப் பிராணன்களும் அவைகளின் துவாரங்களும் ஒன்பதாம். புருடனால் அளக்கப்படுவது எக்ஞமாம். ஆதலின், ஒன்பது ஹோமங்களால் ஒன்பது பிராணன்களையும் களிப்படைவிக்கின்றான் என்பது.

---

ஒன்பது மந்திரங்களுக்குள்ளும் இடையிலுள்ள இருக்கு எசுர் என்பவைக ளின் எண்ணிக்கையை விதிக்கின்றது.

பிராமணம்—3

**षड्ग्मियाणि जुहोति षड्वा ऋतव ऋतूनेव प्रीणाति त्रीणि यजूंषि त्रय इमे लोका इमानेव लोकान्प्रीणाति ।**

என்பது

உரை.

ஆறு இருக்குக்களும் மூன்று எசுர்களுமாம். இவற்றுள், இருக்குக்க ளால் இருதுக்களையும், எசுர்களால் மூன்றுலகங்களையும் பிரியமடையச் செய் கின்றான் என்பது.

---

எக்ஞத்திற்கு, எசமானன் கிடைப்பதும் தனது காரணங்கிடைப்பதும் மந்திரபாடத்தாலேயே அமைகின்றது என்கின்றது.

பிராமணம்—4

**यज्ञ यज्ञं गच्छ यज्ञपतिं गच्छेत्याह यज्ञपतिमेवैनं गमयति स्वां योनिं गच्छेत्याह स्वामेवैनं योनिं गमयति ।**

என்பது

ஹோமம்)

உரை.

"எக்ஞ எக்ஞம்" என்றது முதலியது, இவ் வெக்ஞபதியை அடைவிக்கின்றது தனது காரணத்தை யடைவிக்கின்றதாம் என்கின்றது.

---

"சுவீரஃ" என்பதால் வீரியத்தையடைதல் குறிப்பிடப்படுகின்றது என்கின்றது.

பிராமணம்—5

**एष ते यज्ञो यज्ञपते सहसूक्तवाकस्सुवीर इत्याह यजमान एव वीर्यं दधाति ।**

என்பது

உரை.

"ஏஷதே" என்றது முதலியது, எசமானனிடத்தில் வீரியத்தை நிலைநாட்டுகின்றது என்கின்றது.

---

"தேவா காதுவிதஃ" என்னும் மந்திரத்தைப் புகழ்தற் பொருட்டு, விருத்தாந்தத்தைக் கூறுகின்றது.

பிராமணம்—6

**वासिष्ठो ह सात्यहव्यो देवभागं पप्रच्छ यत्सृञ्जयान्बहुयाजिनोऽयीयजो यज्ञे यज्ञं प्रत्यतिष्ठिपा३ यज्ञपता३ विति स होवाच यज्ञपताविति सत्याद्वै सृञ्जयाः परा बभूवुरिति होवाच यज्ञे वाव यज्ञः प्रतिष्ठाप्य आसीद्यजमानस्यापराभावायेति देवा गातुविदो गातुं वित्त्वा गातुमितेत्याह यज्ञ एव यज्ञं प्रतिष्ठापयति यजमानस्यापराभावाय ॥**

என்பது.

உரை.

சிருஞ்சு என்னுந் தேசத்தில் பல்வகையான சோமயாகங்களைச் செய்தார்களே அக் காலத்தில், 'எக்ஞம் ஸ்வாஹா' என்னும் எக்ஞ லிங்கத்தையுடைய, "தேவா காதுவிதஃ" என்றது முதலிய மந்திரத்தில் எக்ஞத்தின் சமிஷ்ட யசுர்ஹோமங்களை அவர்கள் முடித்தார்களா? அல்லது, "எக்ஞபதிம் கச்ச" என்னும் எக்ஞபதியின் இலிங்கத்தை யுடைய 'எக்ஞ எக்ஞம் கச்ச' என்னும் மந்திரத்தில் முடித்தனரா? என்று வசிஷ்ட குலத்திலுதித்த சாத்தியஹவ்யர் தேவபாக முனிவரை வினவினர். அதற்கவர்,

இரண்டாவது பக்ஷத்தைக் கொள்ளில் எக்ஞத்திலிருந்து எசமானன் நழுவி விடுவான்; ஆதலின், முதற்பக்ஷமே கொள்ளத்தக்கது என்று விடையளித்தனர் என்பது.

இரண்டாவது அநுவாகம்
முற்றிற்று.

---

## ஆறுங்காண்டம் ஆறும் பிரபாடகம்

### மூன்றுவது அநுவாகம்

*அவபிருதத்தைக் கூறும் பிராமணங்கள்.*

ஐந்து பஞ்சாதிக்குமேல் பன்னிரண்டு பதங்களைக் கொண்டது.

अवभृथयजूꣳषि जुहोति यदेवार्वाचीनमेकहायनादेनः करोति तदेव तैरव यजतेऽपोऽवभृथमैत्यप्सु वै वरुणस्साक्षादेव वरुणमव यजते वर्त्मना वा अन्वित्य यज्ञꣳरक्षाꣳसि जिघाꣳसन्ति साम्ना प्रस्तोताऽन्ववैति साम वै रक्षोहा रक्षसामपहत्यै त्रिर्निधनमुपैति त्रय इमे लोका एभ्य एव लोकेभ्यो रक्षाꣳसि [९] अप हन्ति पुरुषः पुरुषो निधनमुपैति पुरुषःपुरुषो हि रक्षस्वी रक्षसामपहत्या उरुꣳहि राजा वरुणश्चकारेत्याह प्रतिष्ठित्यै शतं ते राजन्भिषजस्सहस्रमित्याह भेषजमेवास्मै करोत्यभिष्ठितो वरुणस्य पाश इत्याह वरुणपाशमेवाभि तिष्ठति बर्हिरभि जुहोत्याहुतीनां प्रतिष्ठित्या अथो अग्निवत्येव जुहोत्यपबर्हिषः प्रयाजान् [१०] यजति प्रजा वै बर्हिः प्रजा एव वरुणपाशान्मुञ्चत्याज्यभागौ यजति यज्ञस्यैव चक्षुषी नान्तरेति वरुणं यजति वरुणपाशादेवैनं मुञ्चत्यग्नीवरुणौ यजति साक्षादेवैनं वरुणपाशान्मुञ्चत्यपबर्हिषावनूयाजौ यजति प्रजा वै बर्हिः प्रजा एव वरुणपाशान्मुञ्चति

चतुरः प्रयाजान् यजति द्वावनूयाजौ षट्संपद्यन्ते षड्वा ऋतवः [११] ऋतुष्वेव प्रति तिष्ठत्यवभृथ निचङ्कुणेत्याह यथोदितमेव वरुणमव यजते समुद्रे ते हृदयमप्स्वन्तरित्याह समुद्रे ह्यन्तर्वरुण-स्सं त्वा विशन्त्वोषधीरुताऽऽप इत्याहाद्भिरेवैनमोषधीभिस्सम्यञ्चं दधाति देवीराप एष वो गर्भ इत्याह यथायजुरेवैतत्पशवो वै [१२] सोमो यद्भिन्दूनां भक्षयेत्पशुमान्त्स्याद्वरुणस्त्वेनं गृह्णीया-द्यन्न भक्षयेदपशुस्स्यान्नैनं वरुणो गृह्णीयादुपस्पृश्यमेव पशुमान्भ-वति नैनं वरुणो गृह्णाति प्रतियुतो वरुणस्य पाश इत्याह वरुण-पाशादेव निर्मुच्यतेऽप्रतीक्षमा यन्ति वरुणस्यान्तर्हित्या एधोऽस्ये-धिषीमहीत्याह समिधैवाग्निं नमस्यन्त उपायन्ति तेजोऽसि तेजो मयि धेहीत्याह तेज एवाऽऽत्मन्धत्ते [१३] ॥ रक्षाꣳसि प्रया-जानृतवो वै नमस्यन्तो द्वादश च ॥ ३ ॥

இதில், முடிவு நீராடலின் பொருட்டுச் செய்யப்படும் ஹோமங்கள் கூறப்படுகின்றன.

---

"உரும் ஹி ராஜா" என்றது முதலிய அவபிருத எசுர்ஹோம மந்திரங்கட்கு உரைகூற விருப்புடையதாய் அதற்கு முன்னருள்ள அநுட்டானத்தை விதிக்கின்றது.

பிராமணம்—1

अवभृथयजूꣳषि जुहोति यदेवार्वाचीनमेकहायनादेनः करोति तदेव तैरव यजते ।

என்பது.

உரை.

முடிவு நீராடுதற்கு நீரையடையச்செல்ல விரும்பியவன், "ஆயுர் தா:" என்றது முதலான எசுர் மந்திரங்களால் ஹோமஞ் செய்கின்றான். இது ஒருவருடம்வரை செய்த பாவங்களைப் போக்குகின்றது என்பது.

---

யாகமுடிவு நீராடுவேதற்கு, தண்ணீர்க்கருகிற் செல்வதை விதிக்கின்றது.

பிராமணம்—2

**अपोऽवभृथमवैत्यप्सु वै वरुणस्साक्षादेव वरुणमव यजते ।**

என்பது.

உரை.

*நீரை யடைந்ததால் அதற்கபிமானி தேவதையாகிய வருணனை நேரே பூசித்ததாகின்றது என்பது.*

---

பிரஸ்தோதா (சாமமறைப் பாடகனுடைய உதவி) சாமமறையைப் பாடிக்கொண்டு மார்க்கத்தைப் பின்பற்றி வருவதைவிதிக்கின்றது.

பிராமணம்—3

**वर्त्मना वा अन्वित्य यज्ञꣳरक्षाꣳसि जिघाꣳसन्ति साम्ना प्रस्तोताऽन्ववैति साम वै रक्षोहा रक्षसामपहत्यै ।**

என்பது

உரை.

*நடுவழியில் நுழைந்து அசுரர்கள் எக்ஞத்தைக் கெடுப்பார்கள். ஆதலின், சாமமறையைப் பாடிக்கொண்டு பிரஸ்தோதா பின்றொடர்ந்து வரில், சாமம் அசுரர்களைக் கொல்வதாம் ஆதலின் அசுரர்கள் விலகுகின்றனர் என்பது.*

---

சாமமுடிவை ஓதுதல் மூன்று முறை என்பதை விதிக்கின்றது.

பிராமணம்—4

**त्रिर्निधनमुपैति त्रय इमे लोका एभ्य एव लोकेभ्यो रक्षाꣳस्यपहन्ति ।**

என்பது.

உரை.

*சாமமுடிவை மும்முறை பாடில் மூன்றுலகங்கிலுள்ள அசுரர்களும் விலகுகின்றனர் என்பது.*

---

அனைவரும் அச் சாமத்தின் முடிவை ஓதல்வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—5

**पुरुषः पुरुषो निधनमुपैति पुरुषःपुरुषो हि रक्षस्वी रक्षसामपहत्यै ।**

என்பது.

உரை.

தனித்தனி ஒவ்வொருவருக்கு அசுரர்களுடைய பீடை இருத்தலின் அனைவருஞ் சாமமறைப்பாடலின் முடிவைப் பாடல்வேண்டும் என்பது.

---

மந்திரத்தில் வழியைப் பெரிதென்றது, வழியைப் பெருமைப்படுத்து தற் பொருட்டு என்கின்றது.

பிராமணம்—6

**उरुꣳहि राजा वरुणश्चकारेत्याह प्रतिष्ठित्यै ।**

என்பது.

உரை.

"உரும் ஹி" என்றது முதலியது, வழியின் பெருமையின் பொருட்டாம் என்கின்றது.

---

பிழக் (வைத்யம்) என்பதால் எசமானனுடைய பாவபீடையினை பரிகாரங் குறிப்பிடப்படுகின்றது என்கின்றது.

பிராமணம்—7

**शतं ते राजन्भिषजस्सहस्रमित्याह भेषजमेवास्मै करोति ।**

என்பது

உரை.

"சதம் தே" என்றது முதலியது, இவ் வெசமானனுக்கு வைத்தியஞ் செய்கின்முன் என்கின்றது.

---

மந்திரத்தாலேயே வருணக்கட்டு அவிழ்க்கப்படுகின்றது என்கின்றது.

பிராமணம்—8

**अभिष्ठितो वरुणस्य पाश इत्याह वरुणपाशमेवाभि तिष्ठति ।**

என்பது.

உரை.

"அபிஷ்டிதః" என்றது முதலியது, வருணனுடைய பாசத்தை அவிழ்க்கின்றுன் என்கின்றது.

---

நீரின்மீது தருப்பையைப்போட்டு அதன்மேல் ஹோமஞ் செய்தல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—9

**बर्हिरभि जुहोत्याहुतीनां प्रतिष्ठित्या अथो अग्निवत्येव जुहोति ।**

என்பது

உரை.

*தருப்பை அக்கினியையுடையதாமாதலின், ஹோமம் நிலைத்தற் பொருட்டு அக்கினியின்மீதே ஹோமஞ் செய்கின்றான் என்பது.*

---

விதியால்வந்த ஐந்து பிரயாசயாகங்களுள், பர்ஹி (தருப்பை) என்னும் நான்காவது பிரயாசத்தை விலக்குகின்றது.

பிராமணம்—10

**अपबर्हिषः प्रयाजान् यजति प्रजा वै बर्हिः प्रजा एव वरुणपाशान्मुञ्चति ।**

என்பது

உரை.

*தண்ணீரில் தருப்பைகளில் பிரயாச யாகஞ் செய்கின்றான் என்றது, தருப்பை பிரயாசையாமாதலின் பிரசையை வருணபாசத்திலிருந்து விடுவிக்கின்றான் என்கின்றது.*

---

இதில், ஆச்சியபாகங்களிரண்டும் விதியால் கிடைத்துள்ளன. ஆயினும் மந்திரவிசேடத்தை முன்னிட்டு மீண்டும் விதிக்கின்றது.

பிராமணம்—11

**आज्यभागौ यजति यज्ञस्यैव चक्षुषी नान्तरेति ।**

என்பது.

உரை.

*எக்ஞத்திற்கு கண்கள் ஆச்சியபாகங்களிரண்டுமாம். அவைகளைச் செய்யில் குருடு இல்லை என்பது.*

---

முக்கியமாகிய தேவதையை விதிக்கின்றது.

பிராமணம்—12

**वरुणं यजति वरुणपाशादेवैनं मुञ्चति ।**

என்பது

நீராடுதல்)

உரை.

வருணனை வழிபடுகின்றான். இதனால் இவனை வருண பாசத்திலிருந்தும் அவிழ்த்து விடுகின்றான் என்பது.

---

சுவிஷ்டகிருத் தேவதையை விதிக்கின்றது.

பிராமணம்—13

**अग्नीवरुणौ यजति साक्षादेवैनं वरुणपाशान्मुञ्चति ।**

என்பது.

உரை.

அக்கினியையும் வருணனையும் வழிபடுகின்றான். அதனால் இவனை, நேரே (விரைவில்) வருணபாசத்திலிருந்து விடுவிக்கின்றான் என்பது.

---

விதிவாக்கியத்தால்வந்த மூன்று அநுயாசங்களுள் முதலாவது அநுயாசத்தை விலக்குகின்றது.

பிராமணம்—14

**अपबर्हिषावनूयाजौ यजति प्रजा वै बर्हिः प्रजा एव वरुणपाशान्मुञ्चति ।**

என்பது

உரை.

தண்ணீரில்போட்ட தருப்பையின்மீது அநுயாச யாகஞ்செய்தலால், அநுயாசம் பிரசையாமாதலின் பிரசையை வருணபாசத்திலிருந்து விலக்கி விடுகின்றான் என்பது.

---

பிரயாச அநுயாசங்களைப் புகழ்கின்றது.

பிராமணம்—15

**चतुरः प्रयाजान् यजति द्वावनूयाजौ षट्सम्पद्यन्ते षड्वा ऋतव ऋतुष्वेव प्रति तिष्ठति ।**

என்பது.

உரை.

நான்கு பிரயாசைகளையும் இரண்டு அநுயாசைகளையுஞ் செய்கின்றான். இதனால் ஆறாகின்றன. இருதுக்களும் ஆறாதலின் இருதுக்களில் பெருமையை யடைகின்றான் என்பது.

---

பாடமுறையைவிட்டு 'அவபிருதம்' என்றது முதலிய மந்திரத்திற்கு முதலில் உரை கூறுகின்றது.

பிராமணம்—16

**अवभृथ निचङ्कुणेत्याह यथोदितमेव वरुणमव यजते ।**

என்பது.

உரை.

"அவபிருத" என்றது முதலியதாலும், 'நிசங்குண' என்றது முதலிய சொற்களாலுங் கூறிய வருணனை வழிபடுகின்றான் என்கின்றது.

---

வருணனுடைய சம்போதன (விளி) பட்சத்தைத்தழுவி உரை கூறுகின்றது.

பிராமணம்—17

**समुद्रे ते हृदयमप्स्वन्तरित्याह समुद्रे ह्यन्तर्वरुणः ।**

என்பது.

உரை.

"சமுத்ரே" என்றது முதலியது, கடலுக்குள் வருணன் இருக்கின்றான் என்கின்றது.

---

'ஸம்' என்பதால், எசமானனுக்கு தண்ணீராலும் கொடிசெடிகளாலும் வரும் சம்பத்தைக் குறிக்கின்றது.

பிராமணம்—18

**सं त्वा विशन्त्वोषधीरुताऽऽप इत्याहाद्भिरेवैनमोषधीभिस्सम्यञ्चं दधाति ।**

என்பது.

உரை.

"சம்த்வா" என்றது முதலியது, இவனுக்கு தண்ணீராலும் கொடிசெடிகளாலும் சம்பத்தை நிலைக்கவைக்கின்றான் என்கின்றது.

---

வெளிப்படையாமாதலின், "சுமித்ராநஃ" என்னும் மந்திரத்தை விட்டுவிட்டு "தேவீராபஃ" என்னும் மந்திரத்தின்பொருள் வெளிப்படை என்கின்றது.

பிராமணம்—19

**देवीराप एष वो गर्भ इत्याह यथायजुरेवैतत् ।**

என்பது.

நீராடுதல்)

உரை.

"தேவீராப:" என்றது முதலியது, இது எசுரில் உள்ள பொருளையே உடையது என்கின்றது.

---

சோமக் கொடியா லடித்தலாலெழும் நீர்த்துளியை அருந்தினும் அருந்தா விடினுங் குற்றமாமாதலின் அதை நீக்குதற்கு அதைத் தொடல்வேண்டு மென்று விதிக்கின்றது.

பிராமணம்—20

**पशवो वै सोमो यद्विप्रुषां भक्षयेत्पशुमान्त्स्याद्वरुणस्त्वेनं गृह्णीयाद्यन्न भक्षयेदपशुस्स्यान्नैनं वरुणो गृह्णीयादुपस्पृश्यमेव पशुमान्भवति नैनं वरुणो गृह्णाति ।**

என்பது.

உரை.

சோமம் பசுக்களாம் ஆதலின் சோமத்தாலடித்தெழுந்த துளிகளை யருந்தில் பசுக்களை யடைவான். ஆனால் வருணபாசத்தாற் கவரப்படுவான். அருந்தாவிடில் பசுக்களை யடையமாட்டான். ஆனால் வருணபாசத்தாற் கட்டுப்படமாட்டான். ஆதலின், அதைத் தொட்டுவிடில், பசுக்களையு மடைகின்றான். வருணபாசமும் இல்லை. ஈண்டு வருணபாசம் என்பது பெருவயிறு ஆதல் என்க.

---

மந்திரப் பொருட்படியே பயனை யடைகின்றான் என்கின்றது.

பிராமணம்—21

**प्रतियुतो वरुणस्य पाश इत्याह वरुणपाशादेव निर्मुच्यते ।**

என்பது.

உரை.

"பிரதியுத:" என்றது முதலியது, வருணபாசத்திலிருந்தே விடுபடுகின்றான் என்கின்றது.

---

உரை.

ரதந்தரம் முதலிய பிருஷ்டியத் துதிகளுள் சர்வ பிருஷ்டமென்னும் விசுவஜித்தில் அதிக்கிராகியங்களைக் கிரகித்தல் வேண்டும் என்பது.

---

அக்கினிட் டோமத்தில் அதை விதிக்கின்றது.

பிராமணம்—6

प्रजापतिर्देवेभ्यो यज्ञान्व्यादिशत्स प्रियास्तनूरप न्यधत्त तदतिग्राह्या अभवन्वितनुस्तस्य यज्ञ इत्याहुर्यस्यातिग्राह्या न गृह्यन्त इत्यप्यग्निष्टोमे ग्रहीतव्या यज्ञस्य सतनुत्वाय ।

என்பது.

உரை.

பிரமன் தேவர்களுக்கு எக்ஞத்தைப் பங்கிட்டுக் கொடுத்தனன். அது எக்ஞத்தின் பிரிய தநுவாயிற்று. அதை எடுத்து எங்கேயோ மறைத்து வைத்தனன் அப்பிரிய வுடம்புகளே அதிக்கிராகியங்களாயின. ஆதலின், அக்கினிட்டோமத்தின் பிரிய தநுவுடன் கூடியதாக்குவதற்கு அதிக்கிராகியங்களைக் கிரகித்தல் வேண்டும். இன்றெனின், எக்ஞத்தின் பிரிய தநுக்கள் இன்றென்பர். இங்கு, பிருஷ்டிய ஆறு நாள் முதலிய விகிருதிகளிலும் அதிக்கிராகியங்கள் காணப்படுகலின் அக்கினிட்டோமத்திலும் அவை விதிக்கப்படுகின்றன என்பது.

---

ஐசுவரிய மிகுதியால் பிறரிடத்திலிருந்து சிறந்திருக்க விரும்பியவனுக்கு அவ் வதிக்கிராகியங்களை விதிக்கின்றது.

பிராமணம்—7

देवता वै सर्वाःसदृशीरासन्ता न व्यावृतमगच्छन्ते देवा एत एतान्ग्रहानपश्यन्तानगृह्णताऽऽग्नेयमग्निरैन्द्रमिन्द्रस्सौर्यꣳसूर्यस्ततो वै तेऽन्याभिर्देवताभिर्व्यावृतमगच्छन्यस्यैवं विदुष एते ग्रहा गृह्यन्ते व्यावृतमेव पाप्मना भ्रातृव्येण गच्छति ।

என்பது.

உரை.

தேவர்கள், எல்லோரையும்போன்றே ஐசுவரியமுடையோர்களாயிருந்தனரேயன்றி ஐசுவரியம் மிகுந்தவரென்னும் வேறுபாட்டை யடைந்திலர். பிறகு, ஆக்னேயத்தால் அக்கினியும், ஐந்திரத்தால் இந்திரனும், சௌர்யத்தால் சூரியனும் என்னும் அதிக்கிராகியங்களைக் கண்டுபிடித்து ஏனையோர்

## ஆறுங்காண்டம் ஆறும் பிரபாடகம்

### நான்காவது அநுவாகம்

*யூபங்கள் பதினென்றென்பதைக் கூறும் பிராமணங்கள்.*

ஐந்து பஞ்சாதிக்குமேல் முப்பது பதங்களைக் கொண்டது.

स्फ्येन वेदिमुद्धन्ति रथाक्षेण वि मिमीते यूपं मिनोति त्रिवृतमेव वज्रꣳ संभृत्य भ्रातृव्याय प्र हरति स्तृत्यै यदन्तर्वेदि मिनुयाद्देवलोकमभि जयेद्यद्बहिर्वेदि मनुष्यलोकं वेद्यन्तस्य संधौ मिनोत्युभयोर्लोकयोरभिजित्या उपरसंमितां मिनुयात्पितृलोककामस्य रशनसंमितां मनुष्यलोककामस्य चषालसंमितामिन्द्रियकामस्य सर्वान्त्समान्प्रतिष्ठाकामस्य ये त्रयो मध्यमास्तान्त्समान्पशुकामस्यैतान्वै [१४] अनु पशव उप तिष्ठन्ते पशुमानेव भवति व्यतिषजेदितरान्प्रजयैवैनं पशुभिर्व्यतिषजति यं कामयेत प्रमायुकस्स्यादिति गर्तमितं तस्य मिनुयादुत्तरार्ध्यं वर्षिष्ठमथ ह्रसीयाꣳसमेषा वै गर्तमिद्यस्यैवं मिनोति ताजक्प्र मीयते दक्षिणार्ध्यं वर्षिष्ठं मिनुयात्सुवर्गकामस्याथ ह्रसीयाꣳसमाक्रमणमेव तत्सेतुं यजमानः कुरुते सुवर्गस्य लोकस्य समष्ट्यै [१५] यदेकस्मिन् यूपे द्वे रशने परिव्ययति तस्मादेको द्वे जाये विन्दते यन्नैकाꣳ रशनां द्वयोर्यूपयोः परिव्ययति तस्मान्नैका द्वौ पती विन्दते यं कामयेत स्त्र्यस्य जायेतेत्युपान्ते तस्य व्यतिषजेत्स्त्र्येवास्य जायते यं कामयेत पुमानस्य जायेतेत्यान्तं तस्य प्र वेष्टयेत्पुमानेवास्य [१६] जायतेऽसुरा वै देवान्दक्षिणत उपानयन्तान्देवा उपशयेनैवापानुदन्त तदुपशयस्योपशयत्वं यद्दक्षिणत उपशय उपशये भ्रातृव्यप-

नुत्त्यै सर्वे वा अन्ये यूपाः पशुमन्तोऽथोपशय एवापशुस्तस्य यज॑-
मानः पशुर्यन्न निर्दिशेदार्तिमार्छेद्यजमानोऽसौ ते पशुरिति निर्दि॑-
शेद्यं द्विष्याद्यमेव [१७] द्वेष्टि तमस्मै पशुं निर्दिशति यदि न
द्विष्यादाखुस्ते पशुरिति ब्रूयान्न ग्राम्यान्पशून्हिनस्ति नाऽऽर॑-
ण्यान्प्रजापतिः प्रजा असृजत सोऽन्नाद्येन व्यार्ध्यत स एतामेका-
दशिनीमपश्यत्तया वै सोऽन्नाद्यमवारुन्ध यद्दश यूपा भवन्ति
दशाक्षरा विराडन्नं विराड्विराजैवान्नाद्यमव रुन्धे [१८] य
एकादसस्तनं एवास्यै स दुह एवैनां तेन वज्रो वा एषा सं
मीयते यदेकादशिनी सेश्वरा पुरस्तात्प्रत्यञ्चं यज्ञꣳ संमर्दितोर्य-
त्पात्नीवतं मिनोति यज्ञस्य प्रत्युत्तब्ध्यै सयत्वाय [१९] वै समष्ट्यै
पुमानेवास्य यमेव रुन्धे त्रिꣳशच्च ॥ ४ ॥

இதில், யூபங்கள் பதினொன்று என்று கூறப்படுகின்றது.

---

பதினொரு பசுக்களின் பொருட்டு பதினொரு யூபங்கள் என்பதை
விதிக்கின்றது.

பிராமணம்—1

**स्फ्येन वेदिमुद्धन्ति रथाक्षेण वि मिमीते यूपं मिनोति त्रिवृतमेव वज्रꣳ-
संभृत्य भ्रातृव्याय प्रहरति स्तृत्यै ।**

என்பது.

உரை.

பூமியின்மேல் மண் அசுத்தமானதால் மரக்கத்தியால் கெல்லி எடுத்து விடல்வேண்டும். பிறகு, வேதியின் தெற்கு மூலை(அம்சம்)யிலிருந்து வடக்கு மூலைவரை வண்டியின் அச்சால் அளந்து வரிசையாக பதினொரு குழிகள் கெல்லி பதினொரு யூபங்களை நாட்டுதல் வேண்டும். இங்கு, யூபம், மரக்கத்தி இரதம் என்னும் மூன்றும் வச்சிரவடிவங்கள் இவை ஒன்று சேர்ந்திருத்தலின் இது பகைவனைக் கொல்லுதற் பொருட்டாம் என்பது.

---

பதினொரு யூபங்கள்)

யூபக்குழிகள், வேதியில் பாதியும் வெளியிற் பாதியுமாக உள்ள விடமென விதிக்கின்றது.

பிராமணம்—2

**यदन्तर्वेदि मिनुयाद्देवलोकमभि जयेद्यद्बहिर्वेदि मनुष्यलोकं वेद्यन्तस्य संधौ मिनोत्युभयोर्लोकयो रभिजित्यै ।**

என்பது.

உரை.

வேதிக்குள்ளிருக்கில் தேவலோகத்தை வெல்வன், வேதிக்கு வெளியிலிருக்கில் மனித லோகத்தை வெல்வன் வேதிக்கு உள்ளும் புறம்புமிருக்கில் இரண்டுலகங்களையும் வெல்வன் என்பது.

---

நடுவேதில் சில காமியங்களை விதிக்கின்றது.

பிராமணம்—3

**उपरसंमितां मिनुयात्पितृलोककामस्य रशनसंमितां मनुष्यलोककामस्य चषालसंमितामिन्द्रियकामस्य सर्वान्त्समान्प्रतिष्ठाकामस्य ये त्रयो मध्यमास्तान्त्समान्पशुकामस्य ।**

என்பது.

உரை.

பிதிர்லோகத்தை விரும்பியவன், செதுக்காத யூபத்தின் அடிப்பாகம் எவ்வளவு இருக்கிறதோ, அவ்வளவே ஏனைய பத்து யூபங்கட்கும் அளவு வைத்து நாட்டுதல் வேண்டும் மனிதலோகத்தை விரும்பியவன். கயிறு கட்டும் இடத்தின் பெருமன் அளவு வைத்து நடல்வேண்டும். இந்திரியத்தை விரும்பியவன் மரவளையம் மாட்டிவைக்கும் இடத்தின் பருமனளவு அளவு வைத்து நாட்டல்வேண்டும். பெருமையை விரும்பியவன் இம் மூவகை யளவையும் வைத்து நாட்டல்வேண்டும். பன்னிரண்டிற்குள் நடுவானது ஆறுவதாம். அதற்கும் பக்கத்திலுள்ளவைகள் இரண்டு என்னும் மூன்றுமே அடிப்பாகப் பருமன் அளவையுடையவைகள் ஏனையவைகளன்று. இவ்வாறு செய்கின்றவன் பசுக்களை யடைகின்றான் என்பது.

---

மேற்கூறிய பசுப்பிராப்தியை விளக்குகின்றது.

பிராமணம்—4

**एतान्वा अनु पशव उपतिष्ठन्ते पशुमानेव भवति ।**

என்பது.

உரை.

இவைகளின் அளவைப்பற்றியே பசுக்களும் அளவாய் எசமானனுக்குக் கிடைக்கின்றன என்பது.

---

மூன்றைத் தவிர்த்து, ஏனைய ஒன்பதும் ஒன்றையொன்று
தொட்டுக்கொண்டிருத்தல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—5

**व्यतिषजेदितरान्प्रजयैवैनं पशुभिर्व्यतिषजति ।**

என்பது.

உரை.

ஒன்றை யொன்று சேர்ந்திருக்கில் இவனை பசுக்களோடு சேர்த்து வைக்கின்றது என்கின்றது.

---

பதினொரு யூபங்களை நாட்டுவதில் காமிய வேறுபாட்டால் தெற்குப்பாதி உயர்த்திவைத்து நடுவதைப் பழித்துவிட்டு, வடபாதிகள் உயர்த்தி நடுவதை விதிக்கின்றது.

பிராமணம்—6

**यं कामयेत प्रमायुकस्स्यादिति गर्तमितं तस्य मिनुयादुत्तरार्ध्यं वर्षिष्ठमथ ह्रसीयाꣳसमेषा वै गर्तमिद्यस्यैवं मिनोति ताजक्प्र मीयते दक्षिणार्ध्यं वर्षिष्ठं मिनुयात्सुवर्गकामस्याथ ह्रसीयाꣳसमाक्रमणमेव तत्सेतुं यजमानः कुरुते सुवर्गस्य लोकस्य समष्ट्यै ।**

என்பது

உரை.

தெற்குப் பாதிதணிந்திருக்கும் சுடுகாடு கர்த்தமாம்; அதைப்போற் செய்வது என்றது கருத்து. எவனைக் கொல்லவிரும்புகின்றானோ, அவனுக்கு சுடுகாடுபோன்று, அக்கினிஷ்டம் என்னும் நடு யூபத்திற்குத் தெற்கிலுள்ள ஐந்தும் தாழ்ந்தவைகளாகவும், வடக்குப் பாதியிலுள்ள ஐந்தும் உயர்ந்தவைகளாகவும் நாட்டுதல் வேண்டும். நாட்டில் உடனே அவன் இறப்பன். சுவர்கத்தை விரும்புகின்றவன் வடக்கில் தாழ்ந்தவைகளாகவும் தெற்கில் உயர்ந்தவைகளாகவும் நடல்வேண்டும். இது சுவர்க்க மேறுவதற்குப் பாலமாம் என்பது.

---

பதினொரு யூபங்கள்)

உலகியல் ஒப்புமையால் இரண்டு கயிறுகளை விதிக்கின்றது.

பிராமணம்—7

**यदेकस्मिन् यूपे द्वे रशने परिव्ययति तस्मादेको द्वे जाये विन्दते यन्नैकाꣳ-रशनां द्वयोर्यूपयोः परिव्ययति तस्मान्नैका द्वौ पती विन्दते ।**

என்பது.

உரை.

ஒரு யூபத்தில் இரண்டு கயிறுகளைக் கட்டுவதால் ஒருவனுக்கு இரண்டு மனைவிகள் இருக்கின்றனர். இரண்டு யூபங்களில் ஒருகயிறு கட்டாமையால் ஒருமாதர் இரண்டு கணவர்களை யடையார் என்பது.

---

கயிறுகளின் நுனிகளைச் சேர்த்தலை விதிக்கின்றது.

பிராமணம்—8

**यं कामयेत स्त्र्यस्य जायेतेत्युपान्ते तस्य व्यतिषजेत्स्त्र्येवास्य जायते यं कामयेत पुमानस्य जायेतेत्यान्तं तस्य प्रवेष्टयेत्पुमानेवास्य जायते ।**

என்பது.

உரை.

இவனுக்குப் பெண்பிறக்கவேண்டுமென்று விரும்பில் இரண்டு கயிறுகளின் நுனிகளை சிறிது நீளம்விட்டு ஒன்றாய்ச் சேர்த்துவிடல்வேண்டும். ஆண்பிறக்கவேண்டுமென்று விரும்பில் நுனிகளையே சேர்த்தல் வேண்டு என்பது.

---

பதினொன்றிற்குமேல் 'உபசயம்' என்னும் பன்னிரண்டாவது யூபத்தை விதிக்கின்றது.

பிராமணம்—9

**असुरा वै देवान्दक्षिणत उपानयन्तान्देवा उपशयेनैवापानुदन्त तदुपशय-स्योपशयत्वं यद्दक्षिणत उपशय उपशये भ्रातृव्यापनुत्त्यै ।**

என்பது.

உரை.

அசுரர்கள், தேவர்களைத் தம் வசப்படுத்தி அக்கினிஷ்ட மென்னும் யூபத்திற்குத் தெற்கில் கொண்டுவந்து விட்டனர். அப்போது, தேவர்கள் பன்னிரண்டாவதாக ஒரு யூபத்தைக் கொண்டுவந்து பதினொரு யூபங்கட்கரு

கிற் படுக்கப்போட்டு வைத்தனர். அதனல், அது உபசயமெனப்படுகின்றது. இவ்வாறு செய்த யூபத்தால் அசுரர்களைக் கொன்றனர். ஆதலின், பகைவரைக் கொல்வதன் பொருட்டு இவ் வுபசயம் என்னும் பன்னிரண்டாவது யூபமும் உண்டு என்பது.

---

பகைவனைப் பசுவாக நிர்த்தேசஞ் செய்தல் வேண்டுமேன்று விதிக்கின்றது.

பிராமணம்—10

**सर्वे वा अन्ये यूपाः पशुमन्तोऽथोपशय एवापशुस्तस्य यजमानः पशुर्यन्न निर्दिशेदार्तिमार्छेद्यजमानोऽसौ ते पशुरिति निर्दिशेद्यं द्विष्यात्तमेव द्वेष्टि तमस्मै पशुं निर्दिशति ।**

என்பது.

உரை

ஏனைய பதினொரு யூபங்களும் பசுக்களுடன் கூடியவைகள். உபசயம் என்னும் பன்னிரண்டாவது யூபத்திற்கோ, பசு இல்லை. எசமானன், அதற்குப் பசுவைக் குறிப்பிடாவிடில் துன்புறுவன். ஆதலின், "வெறுக்கின்றவனும் வெறுக்கப்படுகின்றவனுமாகிய பகைவன் உனக்குப் பசுவாவன்" என்று மனிதனை அதற்குங் குறிப்பிடல்வேண்டும் என்பது.

---

பகைவன் இன்றேனின், எலியைப் பசுவாகக்குறிப்பிடல் வேண்டுமேன்று விதிக்கின்றது.

பிராமணம்—11

**यदि न द्विष्यादाखुस्ते पशुरिति ब्रूयान्न ग्राम्यान्पशून्हिनस्ति नाऽऽरण्यान् ।**

என்பது

உரை.

பகைவனின்றெனின், கிராமத்திலுள்ள பசுக்களையும் வனத்திலுள்ள பசுக்களையுங் குறிப்பிடாமல் எலியைப் பசுவாகக் குறிப்புச் செய்தல்வேண்டும் என்பது.

---

யூபங்கள்)

விதிக்கப்பட்ட யூபங்களின் பதினொன்றைப் புகழ்கின்றது.

பிராமணம்—12

प्रजापतिः प्रजा असृजत सोऽन्नाद्येन व्यार्ध्यत स एतामेकादशिनीमपश्य-
त्तया वै सोऽन्नाद्यमवारुन्ध यद्दश यूपा भवन्ति दशाक्षरा विराडन्नं
विराड्विराजैवान्नाद्यमव रुन्धे य एकादशस्स्तन एवास्यै स दुह एवैनां
तेन ।

என்பது.

உரை.

பிரமன் பிரசைகளைப் படைத்தனன். அவைகள் உணவு முதலியவை களின்றித் துன்புற்றன. பிறகு பதினொரு யூபங்களையுடைய யாகத்தைக் கண்டுபிடித்துச் செய்து அன்னம் முதலான உணவுப்பொருள்களை யடைந் தனன். பத்து எழுத்துக்களைக்கொண்ட விராட்ச்சந்தம் அன்னமாமாதலின் பத்து யூபங்களாலும் உணவுப்பொருளை யடைகின்றான். ஆனால், பத்து யூபம் விராட்வடிவத்தால் பாற்பசுவாமாதலின், பதினொன்றாவது அதன் முலைகளாகின்றன. அதனால் அவற்றைக் கறக்கின்றான். கறத்தல்=பயனை யடைதல் என்பது.

---

பாத்னீவதம் என்னும் பதின்மூன்றாவது யூபத்தை விதிக்கின்றது.

பிராமணம்—13

वज्रो वा एषा सं मीयते यदेकादशिनी सेश्वरा पुरस्तात्प्रत्यञ्चं यज्ञं संम-
र्दितोर्यत्पात्नीवतं मिनोति यज्ञस्य प्रत्युत्तब्ध्यै सयत्वाय ॥

என்பது.

உரை.

பதினொரு யூபத்தைக்கொண்டு செய்வது வச்சிரமாகி எக்ஞத்திற்கு முன்னே நின்று எக்ஞத்தைக் கெடுக்கும் வன்மையை யுடையதாகின்றது. ஆதலின், பாத்னீவதம் என்னும் யூபத்தை நாட்டுகின்றான். ஏனெனின்? கெட்டுப்போன எக்ஞம் மீண்டும் உறுதியாதற் பொருட்டாதலினென்பது.

நான்காவது அநுவாகம்
முற்றிற்று.

---

## ஆறுங்காண்டம் ஆறும் பிரபாடகம்

### ஐந்தாவது அநுவாகம்

பசுக்களின் பதினென்றைக் கூறும் பிராமணங்கள்.

மூன்று பஞ்சாதிக்குமேல் முப்பத்தேழு பதங்களைக் கொண்டது.

प्रजापतिः प्रजा असृजत स रिरिचानोऽमन्यत स एतामेकादशिनीमपश्यत्तया वै स आयुरिन्द्रियं वीर्यमात्मन्नधत्त प्रजा इव खलु वा एष सृजते यो यजते स एतर्हि रिरिचान इव यदेषैकादशिनी भवत्यायुरेव तयेन्द्रियं वीर्यं यजमान आत्मन्धत्ते प्रैवाऽऽग्नेयेन वापयति मिथुनꣳ सारस्वत्या करोति रेतः [२०] सौम्येन दधाति प्रजनयति पौष्णेन बार्हस्पत्यो भवति ब्रह्म वै देवानां बृहस्पतिर्ब्रह्मणैवास्मै प्रजाः प्रजनयति वैश्वदेवो भवति वैश्वदेव्यो वै प्रजाः प्रजा एवास्मै प्रजनयतीन्द्रियमेवैन्द्रेणाव रुन्धे विशं मारुतेनौजो बलमैन्द्राग्नेन प्रसवाय सावित्रो निर्वरुणत्वाय वारुणो मध्यत ऐन्द्रमा लभते मध्यत एवेन्द्रियं यजमाने दधाति [२१] पुरस्तादैन्द्रस्य वैश्वदेवमा लभते वैश्वदेवं वा अन्नमन्नमेव पुरस्ताद्धत्ते तस्मात्पुरस्तादन्नमद्यत ऐन्द्रमालभ्य मारुतमा लभते विड्वै मरुतो विशमेवास्मा अनु बध्नाति यदि कामयेत योऽवगतस्सोऽप रुध्यतां योऽपरुद्धस्सोऽव गच्छत्वित्यैन्द्रस्य लोके वारुणमा लभेत वारुणस्य लोक ऐन्द्रम् [२२] य एवावगतस्सोऽप रुध्यते योऽपरुद्धस्सोऽव गच्छति यदि कामयेत प्रजा मुह्येयुरिति पशून्व्यतिषजेत्प्रजा एव मोहयति यदभिवाहतोऽपां वारुणमालभेत प्रजा वरुणो गृह्णीयाद्दक्षिणत उदञ्चमा लभतेऽपवाहतोऽपां प्रजानामव

பசுக்கள்)

रुणग्राहाय [२३] ॥ रेतो यजमाने दधाति लोक ऐन्द्र॑ꣳसप्तत्रि॑ꣳशच्च ॥ ५ ॥

இதில், பசுக்கள் பதினொன்று எனல் கூறப்படுகின்றது.

---

பசுக்கள் பதினொன்று என விதிக்கின்றது.

பிராமணம்—1

प्रजापतिः प्रजा असृजत स रिरिचानोऽमन्यत स एतामेकादशिनीमपश्यत्तया वै स आयुरिन्द्रियं वीर्यमात्मन्नधत्त प्रजा इव खलु वा एष सृजते यो यजते स एतर्हि रिरिचान इव यदेषैकादशिनी भवत्यायुरेव तयेन्द्रियं वीर्यं यजमान आत्मन्धत्ते ।

என்பது

உரை.

பிரமன் யாம் பிரசைகளைப் படைத்ததால் வன்மை முதலியன குறைந்து வீணாய்விட்டனம், எக்கு முயற்சியாலும் அவ்வண்ணமேயாயினம் என்னும் எண்ணத்தைக் கொண்டனன். பிறகு, இப் பதினொரு பசுக்களைக் கொண்ட யாகத்தைக் கண்டுபிடித்துச் செய்து தனது வன்மை ஆயுள் முதலியவைகளை யடைந்தனன். ஆதலின், இங்கு யாகஞ் செய்கின்றவன், பிரசைகளையே உண்டாக்குகின்றான். அவன் வன்மை குறைந்து வீணாய்விடுவன். ஆதலின், பசுக்கள் பதினொன்றுகொண்ட வேள்வியைச் செய்யின் எசமானனுக்கு வன்மை முதலியவைகளை நிலைக்கவைக்கின்றான் என்பது.

---

அப்பசுக்களையே சிறப்பாய்ப் புகழ்ந்து, விசேடமாகிய விதியைக் குறிப்பிடுகின்றது.

பிராமணம்—2

प्रैवाऽऽग्नेयेन वापयति मिथुनꣳ सारस्वत्या करोति रेतस्सौम्येन दधाति प्रजनयति पौष्णेन बार्हस्पत्यो भवति ब्रह्म वै देवानां बृहस्पतिर्ब्रह्मणैवास्मै प्रजाः प्रजनयति वैश्वदेवो भवति वैश्वदेव्यो वै प्रजाः प्रजा एवास्मै प्रजनयतीन्द्रियमेवैन्द्रेणाव रुन्धे विशं मारुतेनौजो बलमैन्द्राग्नेन प्रसवाय सावित्रो निर्वरुणत्वाय वारुणः ।

என்பது.

உரை.

ஆக்னேய பசுவால் விதையை (பீசத்தை)தானே தேடிக்கொள்கின்ருன். மற்றும் ஆக்னேயத்தால் புருடத்தன்மையை யடைகின்ருன். சாரசுவதத்தால் பெண்ணுடன் கூடுகின்ருன். சௌம்யமாகிய மாதரால் சுக்கிலத்தைத் தரிக்கின்ருன். பௌஷ்ணத்தால் பிரசையை யுண்டாக்குகின்ருன். பார்ஹஸ்பத்தியத்தால் பிரமாவின் படைப்பிற்குச் சாதனத்தைத் தேடுகின்ருன். வைசுவ தேவத்தால் பிரசைகட்கு அநுக்கிரகத்தைச் செய்விக்கின்ருன். ஐந்திரத்தால் இந்திரியங்கட்கு வன்மையை யுண்டாக்குகின்ருன். மாருதத்தால் கிராமத்தின் பிராப்தியாம். ஐந்திராக்னத்தால் புஷ்டியையும் வன்மையையுந்தேகின்ருன். சாவித்திரத்தால் அநுட்டானத்திற்கு ஏவுதலாம். வாருணத்தால் பீடை நீங்கலாம் என்பது.

---

இதில், ஆருவது, ஏழாவது, எட்டாவது பசுக்களான வைசுவதேவம், ஐந்திரம், மாருதம் என்பவைகட்கு ஏனைய பசுக்களைப்போல் பாடத்தாலேயே முறையும் பொருந்தும், அங்ஙனமாயினும், அம்முறையை எடுத்துக்கொண்டு புகழ்கின்றது.

பிராமணம்—3

**मध्यत ऐन्द्रमा लभते मध्यत एवेन्द्रियं यजमाने दधाति पुरस्तादैन्द्रस्य वैश्वदेवमा लभते वैश्वदेवं वा अन्नमन्नमेव पुरस्ताद्धत्ते तस्मात्पुरस्तादन्न-मद्यत ऐन्द्रमालभ्य मारुतमा लभते विड्वै मरुतो विशमेवास्मा अनु बध्नाति ।**

என்பது.

உரை.

வைசுவதேவம் மாருதம் என்னும் இரண்டிற்கு மிடையே ஐந்திர பசுவாம். இதனல், நடுவயதில் (காளைப் பருவத்தில்) எசமானனுக்கு மிகுந்த வன்மையை (வீரியத்தை) நிலைநாட்டுகின்ருன். விசுவே தேவர்கள் உணவுப் பொருளபிமானிகள். வைசுவதேவபசு முன்னர் அநுட்டிக்கப்படுவதால் உணவுப்பொருள் முன்பக்கமாய் வாடால் அருந்தப்படுகின்றன மாருதப்பசு ஐந்திரத்தைத் தொடர்ந்து செய்யப்படுவதால் மருத்துக்களான கிராமத்தில் வாழுகின்றவர்கள் எசமானனுக்கு அநுகூலர்களாகத் தொடர்ந்து நடக்கின்ருர்கள் என்பது.

---

காம விசேடத்தால் முறை மாறுமேன்பதை விதிக்கின்றது.

பிராமணம்—4

**यदि कामयेत योऽवगतस्सोऽप रुध्यतां योऽपरुद्धस्सोऽव गच्छत्विति ऐन्द्रस्य लोके वारुणमा लभेत वारुणस्य लोक ऐन्द्रं य एवावगतस्सोऽप रुध्यते योऽपरुद्धस्सोऽव गच्छति ।**

என்பது.

உரை.

ஐசுவரிய முடையவன் வறுமை யுடையவனுகவும், வறுமை யுடையவன் ஐசுவரிய முடையனுகவும் விரும்பில், பதினென்ருவதான வாருணத்தை ஏழாவதாகவும் ஏழாவதான ஐந்திரத்தை பதினென்ருவதாகவும் மாற்றிச் செய்வானுக. இதனுல், ஐசுவரிய முடையவன் ஐசுவரியத்தை இழந்துவிடுகின்ருன். ஐசுவரியத்தை இழந்தவன் ஐசுவரியத்தை யடைகின்ருன் என்பது.

---

மற்ருென்றை விதிக்கின்றது.

பிராமணம்—5

**यदि कामयेत प्रजा मुह्येयुरिति पशून्व्यतिषजेत्प्रजा एव मोहयति ।**

என்பது

உரை.

பிரசைகள் மோகிக்கவேண்டுமென்று விரும்புகின்றவன் பசுக்களை ஒன்றற்கொன்று மாற்றிச் செய்தல்வேண்டும் என்பது.

---

வாருணபசுவை தென்கோடியில் இருக்கும் யூபத்தில் கட்டவேண்டு மென்று விதிக்கின்றது.

பிராமணம்—6

**यदभिवाहतोऽपां वारुणमालभेत प्रजा वरुणो गृह्णीयाद्दक्षिणत उदञ्चमा लभतेऽपवाहतोऽपां प्रजानामवरुणग्राहाय ॥**

என்பது.

உரை.

வடக்கில் தாழ்ந்திருக்குமாறு நாட்டிய யூபங்களுள் உத்தரயூபத்தில் வருணனுக்குரிய சடாவைகட்டிக்கொன்ருல் பிரசைகள் வருணக் கிரகங்களான நோய்களைய(மகோதர வ்யாதியை)டைவார்கள். தெற்குயூபத்தில்

வடக்கு முகமாய்ப் பசுவைக் கட்டில் வருணபாசமாகிய நோய்வராது. ஆத லின், வாருணப்பசுவை தெற்கு யூபத்தில் வடக்குமுகமாய்க் கட்டல்வேண் டும் என்பது.

ஐந்தாம் அநுவாகம்
முற்றிற்று.

---

## ஆறுங்காண்டம் ஆறும் பிரபாடகம்

### ஆறுவது அநுவாகம்

*பாத்னீவதப் பசுவைக் கூறும் பிராமணங்கள்.*

ஒரு பஞ்சாதிக்குமேல் முப்பத்தாறு பதங்களைக் கொண்டது.

**इन्द्रः पत्निया मनुमयाजयत्तां पर्यग्निकृतामुदसृजत्तया मनुरार्ध्नोद्यत्पर्यग्निकृतं पात्नीवतमुत्सृजति यामेव मनुर्ऋद्धिमार्ध्नोत्तामेव यजमान ऋध्नोति यज्ञस्य वा अप्रतिष्ठितायज्ञः परा भवति यज्ञं पराभवन्तं यजमानोऽनु परा भवति यदाज्येन पात्नीवतꣳ सꣳस्थापयति यज्ञस्य प्रतिष्ठित्यै यज्ञं प्रतितिष्ठन्तं यजमानोऽनु प्रति तिष्ठतीष्टं वपया [२४] भवत्यनिष्टं वशयाऽथ पात्नीवतेन प्रचरति तीर्थ एव प्रचरत्यथो एतर्ह्येवास्य यामस्त्वाष्ट्रो भवति त्वष्टा वै रेतसस्सिक्तस्य रूपाणि वि करोति तमेव वृषाणं पत्नीष्वपि सृजति सोऽस्मै रूपाणि वि करोति [२५] ॥ वपया षट्त्रिꣳशच्च ॥ ६ ॥**

*இதில், பாத்னீவதம் என்னும் பசு கூறப்படுகின்றது.*

---

பாத்னீவதப் பசுவை விதிக்கின்றது.

பிராமணம்—1

**इन्द्रः पत्निया मनुमयाजयत्तां पर्यग्निकृतामुदसृजत्तया मनुरार्ध्नोद्यत्पर्यग्निकृतं पात्नीवतमुत्सृजति यामेव मनुर्ऋद्धिमार्ध्नोत्तामेव यजमान ऋध्नोति ।**

என்பது.

பாத்னீவதப் பசு)

உரை.

இந்திரன், பாத்னீவதமாகிய பசுவால் மநுவிற்கு யாகஞ் செய்துவைத்தனன். இது ஏகாதச பசுவிற்குள்ளடங்கிய பத்தினி சம்யாஜைக்குப் பிறகு செய்யப்படுவதால் யூபத்திற்கு பாத்னீவதம் எனப்பெயர் வந்தது. அந்தயூபத்தில் துவஷ்டா தேவதையின் பொருட்டுக் கட்டிவைத்துச்சொல்லும் பசு பாத்னிவத மென்றும் பசுவாம். அப்பசுவைக் குறிப்பிட்டபிறகு விட்டுவிட்டு எஞ்சிய யாகத்தை நெய்யாற் செய்வித்தனன். இதனால், மநு சம்பத்தை யடைந்தனன். இவ்வாறு எசமானனுஞ் செய்யில் சம்பத்தை யடைகின்றான் என்பது.

---

அக்கினி சுற்றிய பசுவை விட்டுவிட்டால் எஞ்சிய கருமத்தை நெய்யாற் செய்து முடித்தல்வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—2

यज्ञस्य वा अप्रतिष्ठिताद्यज्ञः परा भवति यज्ञं पराभवन्तं यजमानोऽनु परा भवति यदाज्येन पात्नीवतं संस्थापयति यज्ञस्य प्रतिष्ठित्यै यज्ञं प्रतितिष्ठन्तं यजमानोऽनु प्रति तिष्ठति ।

என்பது

உரை.

யக்ஞம் நிலையின்றிக் கெட்டுவிடுகின்றது. அதைப்பற்றி எசமானனுங் கெட்டுவிடுகின்றான். நெய்யால் பாத்னிவதப் பசுவின் யாகத்தைச் செய்து முடிக்கில் எக்ஞம் நிலைப்படுகின்றது. இதனால் எசமானனும் நிலைக்கின்றான் என்பது.

---

இப் பசுவின் காலத்தை விதிக்கின்றது.

பிராமணம்—3

इष्टं वपया भवत्यनिष्टं वशाऽथ पात्नीवतेन प्रचरति तीर्थ एव प्रचरत्यथो एतर्ह्येवास्य यामः ।

என்பது.

உரை.

"அநுவந்தியம்" என்னும் மலட்டு ஆட்டின் வபையை ஹோமஞ் செய்தபிறகும் இருதய முதலிய அங்க ஹோமங்கட்கு முன்னும் பாத்னிவதப் பசுவின் காலமாம். அதுவே நலமானதாம். மற்றும் இக்காலத்தில் அது

பந்திய பசுவின் சருமம் முடிகின்றது. அதற்கும் முடிவில் பசு இருத்தலின் முடிவதற்கு முன்பே பாத்னீவதப் பசுவைச் செய்தல் பொருந்தும் என்பது.

---

தேவதையை விதிக்கின்றது.

பிராமணம்—4

त्वाष्ट्रो भवति त्वष्टा वै रेतसस्सिक्तस्य रूपाणि वि करोति तमेव वृषाणं पत्नीष्वपि सृजति सोऽस्मै रूपाणि वि करोति ॥

என்பது.

உரை.

துவஷ்டா சுக்கிலம்விடும் புணர்ச்சி வடிவைச் செய்கின்றவனுதலின் அவனே, அவ்வித்தை பத்னிகளிடத்திலும் உண்டாக்குகின்றான். அவன், இவனுக்கு பல்வகை யுருவங்களை பல் வேறுவகைகளாகச் செய்கின்றான் என்பது.

ஆறும் அநுவாகம்
முற்றிற்று.

---

## ஆறுங்காண்டம் ஆறும் பிரபாடகம்

### ஏழாவது அநுவாகம்

சௌம்ய சருவைக் கூறும் பிராமணங்கள்.

நான்கு பஞ்சாதிக்குமேல் ஆறு பதங்களைக் கொண்டது.

घ्नन्ति वा एतत्सोमं यदभिषुण्वन्ति यत्सौम्यो भवति यथा मृतायानुस्तरणीं घ्नन्ति तादृगेव तद्यदुत्तरार्धे वा मध्ये वा जुहुयाद्देवताभ्यस्समदं दध्याद्दक्षिणार्धे जुहोत्येषा वै पितृणां दिक्स्वायामेव दिशि पितृन्निरवदयत उद्गातृभ्यो हरन्ति सामदेवत्यो वै सौम्यो यदेव साम्नश्छम्बट्कुर्वन्ति तस्यैव स शान्तिरव [२६] ईक्षन्ते पवित्रं वै सौम्य आत्मानमेव पवयन्ते य आत्मानं न परिपश्येदितासुस्स्यादभिदादिं कृत्वाऽवेक्षेत तस्मिन् ह्यात्मानं परिपश्यत्यथो आत्मानमेव पवयते यो गतमनास्स्यात्सोऽवेक्षेत यन्मे

मनः परागतं यद्वा मे अपरागतम् । राज्ञा सोमेन तद्वयमस्मासु धारयामसीति मन एवाऽऽत्मन्दाधार [२७] न गतमना भवत्यप वै तृतीयसवने यज्ञः क्रामतीजानादनीजानमभ्याग्नावैष्णव्यर्चा घृतस्य यजत्यग्निस्सर्वा देवता विष्णुर्यज्ञो देवताश्चैव यज्ञं च दाधारोपाꣳशु यजति मिथुनत्वाय ब्रह्मवादिनो वदन्ति मित्रो यज्ञस्य स्विष्टं युवते वरुणो दुरिष्टं क्व तर्हि यज्ञः क्व यजमानो भवतीति यन्मैत्रावरुणीं वशामालभते मित्रेणैव [२८] यज्ञस्य स्विष्टꣳ शमयति वरुणेन दुरिष्टं नाऽऽर्तिमार्छति यजमानो यथा वै लाङ्गलेनोर्वरां प्रभिन्दन्त्येवमृक्सामे यज्ञं प्रभिन्तो यन्मैत्रावरुणीं वशामालभते यज्ञायैव प्रभिन्नाय मत्यमन्ववास्यति शान्त्यै यातयामानि वा एतस्य छन्दाꣳसि य ईजानश्छन्दसामेष रसो यद्वशा यन्मैत्रावरुणीं वशामालभते छन्दाꣳस्येव पुनरा प्रीणात्ययातयामत्वायाथो छन्दस्स्वेव रसं दधाति [२९] ॥ अव दाधार मित्रेणैव प्रीणाति षट्च ॥ ७ ॥

*இதில், சோமத்திற்குரிய பொங்கல் கூறப்படுகின்றது.*

---

சோமத்தின் பொங்கலை விதிக்கின்றது.

பிராமணம்—1

घ्नन्ति वा एतत्सोमं यदभिषुण्वन्ति यत्सौम्यो भवति यथा मृतायानुस्तरणीं घ्नन्ति तादृगेव तत् ।

என்பது.

உரை.

*சோமத்தைப்பிடித்துப் பிழிதல் அதைக் கொல்வதுபோலாம். அதற்குப் பொங்கலிடுவது "அநுஸ்தரணி" என்னும் கோவைப்போலாம். ஆதலின்*

சோமத்திற்குப் பொங்கலிடல் வேண்டும். தீட்சை செய்யப்பெற்ற சவத்தின் இருதய முதலிய அவயவங்களில், ஒரு கோவின் அவயவங்களை எடுத்து வைத்துக் கொளுத்தல்வேண்டும். அதன் பொருட்டுச் சொல்லப்படும் கோ அநுஸ்தரணியாம் என்பது.

---

பொங்கலை ஹோமஞ் செய்யுமிடத்தை விதிக்கின்றது.

பிராமணம்—2

**यदुत्तरार्धे वा मध्ये वा जुहुयाद्देवताभ्यस्समदं दध्याद्दक्षिणार्धे जुहोत्येषा वै पितृणां दिक्स्वायामेव दिशि पितॄन्निरवदयते ।**

என்பது.

உரை.

அக்கினியின் வடபாதியும் நடுவும் தேவ ஆகுதிகட்கு இடங்களாதலின், வடக்குப் பாதித் தீயிலேனும் நடுத் தீயிலேனும் ஹோமஞ் செய்தல்கூடாது. ஆதலின் அக்கினியின் தெற்குப்பாதியே பிதிர்க்களுக்குரிய இடமாம். அதில் பொங்கலை ஹோமஞ் செய்தல்வேண்டும். இவ்வாறு பிரித்துச் செய்தல்வேண்டும்; இன்றெனின் தேவவர்கட்கும் பிதிர்க்கட்குங் கலசம் வரும் என்பது.

---

எஞ்சிய பொங்கலைத் தானஞ்செய்தல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—3

**उद्गातृभ्यो हरन्ति सामदेवत्यो वै सौम्यो यदेव साम्नश्छम्बट्कुर्वन्ति तस्यैव स शान्तिः ।**

என்பது.

உரை.

பொங்கலின் அபிமானி தேவதை சாமமறையாமாதலின் சாமமறை பாடுவோர்கள் சாமமறையின் சம்பந்தமாகிய அவர்களுடைய அங்கத்தை சம்பட் (நாசஞ்) செய்கின்றார்கள். அக்குற்றத்திற்கு பரிஹாரமாக சாமமறை பாடுவோர்க்கு மீந்த பொங்கலைக் கொடுத்தல்வேண்டும் என்பது.

---

அப் பொங்கலின்மீது நெய்யை நிறையவிட்டு அதில் உத்காதாக்கள் தமது நிழல்களைப் பார்த்தல் வேண்டுமென்று விதிக்கின்றது

பிராமணம்—4

**अवेक्षन्ते पवित्रं वै सौम्य आत्मानमेव पवयन्ते ।**

என்பது.

பொங்கல்)

உரை.

*சோமத்தின் பொங்கல் புநிதமாமாதலின், அதில் தமது நிழலைப்பார்த்தலால் தமது தேகங்களைப் புநிதஞ் செய்துகொள்ளுகின்றூர்கள் என்பது.*

---

நெய் குறைவுபடில், வேறு நெய்யை நிறைத்துக் கொள்வதை விதிக்கின்றது.

பிராமணம் — 5

**य आत्मानं न परिपश्येदितासुस्स्यादभिदद्दिं कृत्वाऽवेक्षेत तस्मिन् ह्यात्मानं परिपश्यत्यथो आत्मानमेव पचयते ।**

*என்பது.*

உரை.

*ஆன்மாவைப் பார்க்காவிடில் உயிர் போய்விடும். ஆதலின், நெய்யை நிறையவிட்டுப் பொங்கலில் தனது நிழலைப் பார்க்கின்றுன் என்பது.*

---

காமியமாய்ப் பார்க்கில் அதற்கு மந்திரவிசேடத்தை விதிக்கின்றது.

பிராமணம்—6

**यो गतमनास्स्यात्सोऽवेक्षेत यन्मे मनः परागतं यद्वा मे अपरागतम् । राज्ञा सोमेन तद्वयमस्मासु धारयामसीति मन एवाऽऽत्मन्दाधार न गतमना भवति ।**

*என்பது*

உரை.

*சாமமறை பாடுவோர்களுக்குள் மன வொருமைப்பாடு இல்லாதவன், "யந்மே மனஃ" என்றது முதலிய இம் மந்திரத்தால் பார்த்தல்வேண்டும். மந்திரப் பொருள்:— என்மனம் என்னைவிட்டுப் போகும்போதும் போக எத்தனிக்கும்போதும் சோமராசனுடைய அருளால் அம்மனத்தை எம்மிடத்தில் நிறுத்திக்கோள்வோம் என்பது.*

---

"அக்ஞ விஷ்ணூ மஹிதாம ப்ரியம்வாம்" என்னும் இருக்கால் செய்யப்படும் நெய் யாகத்தை விதிக்கின்றது.

பிராமணம் — 7

**अप वै तृतीयसवने यज्ञः क्रामतीजानादनीजानमभ्यग्नाविष्णव्यर्चा घृतस्य यजत्यग्निस्सर्वा देवता विष्णुर्यज्ञो देवताश्चैव यज्ञं च दाधार ।**

*என்பது*

உரை.

மூன்றும்முறை சோமம் பிழியும்போது அதாவது மூன்றுஞ் சவனத்தில் வேள்வியைச் செய்த எசமானனிடத்திலிருந்து, எக்ஞஞ் செய்யாதவனிடத்திற்கு எக்ஞம் ஓடிப்போகின்றது. அதன்பொருட்டு, அக்கினி விஷ்ணுக்களுடைய இருக்கு மந்திரத்தால் நெய் ஓமஞ் செய்கின்றான். எக்ஞவடிவாகிய விஷ்ணுவும், எல்லாத் தேவதைகளின் வடிவாகிய அக்கினியும் அதை நிலைக்கவைக்கின்றார்கள் என்பது.

---

அதில், மெதுவாய் ஓதல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—8

उपांशु यजति मिथुनत्वाय ।

என்பது.

உரை.

சோமப்பொங்கலிலுள்ள உரத்த வொலியுடன் இம் மெல்லிய வொலியும் ஒன்றுபடுதற் பொருட்டு மெதுவாய் ஓதல் வேண்டுமென்பது.

---

'அநுபந்தியம்' என்னும் மலட்டு ஆட்டை விதிக்கின்றது

பிராமணம்—9

ब्रह्मवादिनो वदन्ति मित्रो यज्ञस्य स्विष्टं युवते वरुणो दुरिष्टं क तर्हि यज्ञः क यजमानो भवतीति यन्मैत्रावरुणीं वशामालभते मित्रेणैव यज्ञस्य स्विष्टꣳ शमयति वरुणेन दुरिष्टं नाऽऽर्तिमार्छति यजमानः ।

என்பது.

உரை.

நன்கு அநுட்டிக்கப்பெறும் எக்ஞாங்கத்திற்குத் தலைவன் மித்திரன். அவன், தான் ஆராதிக்கப்பெறுதவனைப் நன்கு அநுட்டிக்கப்பெறாத அங்கத்துடன் சேர்க்கின்றான். அதற்குத் தலைவன் வருணன். அவன், தான் ஆராதிக்கப் பெறுதவனைப் பிரிய மிலாமையைத்தேடி பிரியமிருப்பதுடன் கலந்துவிடுகின்றான். இவ்வாறெனின் எக்ஞம் எங்கே? எசமானன் பயனடைதல் எங்கே? என்று பிரமவாதிகள் ஆசங்கிக்கின்றனர். அதற்கு, மித்திர வருணர்கட்குரிய மலட்டு ஆட்டைக்கொன்று வேட்கில் எசமானன் மித்திரனால் எக்ஞத்தின் பிரியமாகிய அங்கத்தைச் சாந்தமாக்குகின்றான். வருணனால் பிரியமிலாத அங்கத்தைத் தேடாமல் விட்டுவிடுகின்றான் என்பது.

---

பொங்கல்)

அம் மலட்டு ஆட்டைப் புகழ்கின்றது.

## பிராமணம்—10

**यथा वै लाङ्गलेनोर्वरां प्रभिन्दन्त्येवमृक्सामे यज्ञं प्रभिन्तो यन्मैत्रावरुणीं वशामालभते यज्ञायैव प्रभिन्नाय मत्यमन्ववास्यति शान्त्यै ।**

என்பது.

உரை.

கலப்பையால் பூமியைக் கீறிவிட்டு அதாவது உழுது உடனே பூமியில் ஒருசக்தி உண்டாதற் பொருட்டு சாணம் முதலான எருவைப் போடுகின்றான். அதைப்போல், இருக்கு சாமங்களால் யோக்கியத்தன்மையை உண்டாக்கப்பெற்ற எக்ஞத்திற்கு, மலட்டு ஆட்டைக்கொன்று வேட்பதால் எருப்போல் பயனைக் கொடுக்கும் சக்தி யுண்டாகின்றது; இதனால், சக்தியில்லாமையாகிய குற்றம் நீங்குகின்றது என்பது.

---

மீண்டும் மலட்டு ஆட்டைப் புகழ்கின்றது.

## பிராமணம்—11

**यातयामानि वा एतस्य छन्दाꣳसि य ईजानश्छन्दसामेष रसो यद्वशा यन्मैत्रावरुणीं वशामालभते छन्दाꣳस्येव पुनरा प्रीणात्ययातयामत्वा-याथो छन्दस्स्वेव रसं दधाति ॥**

என்பது.

உரை.

எக்ஞஞ்செய்தவனுக்கு சந்தங்கள் சாரமற்றவைகளாயின. ஆதலின், சந்தங்களின் இரசவடிவாகிய மலட்டு ஆட்டைக்கொன்று வேட்பதால் மீண்டுஞ் சாரமற்றவைக ளாகாததோடு சாரமுடையவைகளுமாதலின் பிரியமுடைய தாகின்றன. ஈண்டுக் காயத்திரி தேவதையின் தலையில் வஷட்கார தேவதை அடித்ததால் தலை வெட்டப்பட்டுக் கீழே விழும்போது விழுந்த இரசத்தால் மலட்டு ஆடு உண்டானதாமாதலின் சந்தங்கள் இரசவடிவாம் என்பதை யுணர்க என்பது.

ஏழாவது அநுவாகம்
முற்றிற்று.

---

## ஆறுங்காண்டம் ஆறும் பிரபாடகம்

### எட்டாவது அனுவாகம்

*அதிக்கிராஹ்யம் என்னும் கிரஹங்களைக் கூறும் பிராமணங்கள்.*

மூன்று பஞ்சாதிக்குமேல் முப்பத்தொன்பது பதங்களைக் கொண்டது.

देवा वा इन्द्रियं वीर्यं व्यभजन्त ततो यदत्यशिष्यत तदति-ग्राह्या अभवन्तदतिग्राह्याणामतिग्राहत्वं यदतिग्राह्या गृह्यन्त इन्द्रि-यमेव तद्वीर्यं यजमान आत्मन्धत्ते तेज आग्नेयेनेन्द्रियमैन्द्रेण ब्रह्मवर्चसꣳ सौर्येणोपस्तम्भनं वा एतद्यज्ञस्य यदतिग्राह्याश्चक्रे पृष्ठानि यत्पृष्ठ्येन गृह्णीयात्प्राञ्चं यज्ञं पृष्ठानि सꣳ शृणीयुर्यदुक्थ्ये [३०] गृह्णीयात्प्रत्यञ्चं यज्ञमतिग्राह्याः सꣳ शृणीयुर्विश्वजिति सर्व-पृष्ठे ग्रहीतव्या यज्ञस्य सवीर्यत्वाय प्रजापतिर्देवेभ्यो यज्ञान्व्यादि-शत्स प्रियास्तनूरप न्यधत्त तदतिग्राह्या अभवन्वितनुस्तस्य यज्ञ इत्याहुर्यस्यातिग्राह्या न गृह्यन्त इत्यप्यग्निष्टोमे ग्रहीतव्या यज्ञस्य सतनुत्वाय देवता वै सर्वाः सदृशीरासन्ता न व्यावृतमगच्छन्ते देवाः [३१] एत एतान्ग्रहानपश्यन्तानगृह्णताऽऽग्नेयमग्निरैन्द्र-मिन्द्रः सौर्यꣳ सूर्यस्ततो वै तेऽन्याभिर्देवताभिर्व्यावृतमगच्छन् यस्यैवं विदुष एते ग्रहा गृह्यन्ते व्यावृतमेव पाप्मना भ्रातृव्येण गच्छ-तीमे लोका ज्योतिष्मन्तस्समावद्वीर्याः कार्या इत्याहुराग्नेयेनास्मि-ल्लोके ज्योतिर्धत्त ऐन्द्रेणान्तरिक्ष इन्द्रवायू हि सयुजौ सौर्येणा-मुष्मिँल्लोके [३२] ज्योतिर्धत्ते ज्योतिष्मन्तोऽस्मा इमे लोका

भवन्ति समावद्वीर्यानेनान्कुरुत एतान्वै ग्रहान्बम्बाविश्ववयसाववित्तां ताभ्यामिमे लोकाः पराञ्चश्चार्वाञ्चश्च प्राभुर्यस्यैवं विदुष एते ग्रहा गृह्यन्ते प्रास्मा इमे लोकाः पराञ्चश्चार्वाञ्चश्च भान्ति ॥ २३ ॥ उक्थ्ये देवा अमुष्मिँल्लोक एकान्नचत्वारिꣳशच्च ॥ ८ ॥

இதில், அதிக்கிராகியம் என்னுஞ் சோமபாத்திரங் கூறப்படுகின்றது.

---

அதிக்கிராகியம் என்னுஞ் சோமரசம் பிடிப்பதை விதிக்கின்றது.

பிராமணம்—1

**देवा वा इन्द्रियं वीर्यᳲ१ व्यभजन्त ततो यदत्यशिष्यत तदतिग्राह्या अभवन्तदतिग्राह्याणामतिग्राह्यत्वं यदतिग्राह्या गृह्यन्त इन्द्रियमेव तद्वीर्यं यजमान आत्मन्धत्ते ।**

என்பது.

உரை.

இந்திரன், வாயு, மித்திரன், வருணன் என்னுந் தேவர்களால் இந்திரியங்களின் வன்மைக்குக் காரணமாகிய சோமரசம் பங்கிட்டுக்கொண்ட போது, அதிரிக்தம் (மீந்த சோமரசத்தைக் கிரகித்தல்) அதிக் கிராகியமாம். இவ் வதிக்கிராகியத்தைக் கிரகிப்பதால் எசமானனுடைய ஆன்மாவில் இந்திரிய வன்மையை நிறுவுகின்றான் என்பது.

---

விதித்த அதிக்கிராகியங்கட்கு, அக்கினி முதலிய தேவதைகளின் சம்பந்தத்தை விதிக்கின்றது.

பிராமணம்—2

**तेज आग्नेयेनेन्द्रियमैन्द्रेण ब्रह्मवर्चसꣳ सौर्येण ।**

என்பது.

உரை.

ஆக்னேயக் கிரகத்தால் அழகையும், ஐந்திரக் கிரகத்தால் இந்திரிய வன்மையையும், சௌர்யக் கிரகத்தால் மறையோதல் முதலிய அந்தண ஒளியையும் ஆன்மாவில் தரித்துக்கொள்கின்றான் என்பது

---

எதிர்மறை முகத்தால் பிருஷ்டியம் என்னும் ஆறு துதிகளின் நாளில் அவ் வதிக்கிராகியக் கிரகங்களைக் கிரகித்தல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம்—3

उपस्तम्भनं वा एतद्यज्ञस्य यदतिग्राह्याश्चक्रे पृष्ठानि यत्पृष्ठ्येन गृह्णीयात्प्राञ्चं यज्ञं पृष्ठानि सꣳ शृणीयुः ।

என்பது.

உரை.

அதிக் கிராகியங்கள், எக்ஞமாகிய வண்டிக்கு ஏர்க்கால்களாம் (தாங்குங் கொம்புக்களாம்.) ஆறு சோமரசம்பிழியும் நாட்களிற் செய்யப்படும் முறையாய் ரதந்தரம், பிருகத், வைரூபம், வைராஜம், சாக்வரம், ரைவதம் என்னும் ஆறு பிருஷ்டியத் துதிகளும் சக்கரங்களாம். ஆதலின், பிருஷ்டத் துதிகள் செய்யும் ஆறு நாளில் வண்டியின் ஏர்க்காலாகிய அதிக்கிராகியம் இல்லாவிடில் பிருஷ்டியத் துதிகள் எக்ஞமாகிய இரதத்தை முன்னே தள்ளி விட்டுக் கெடுக்கும்; ஆதலின், அவற்றில் கிரகித்தல் வேண்டும் என்பது.

---

உக்த்தியத்தில் விதியால் வந்தடைந்த அதிக் கிராகியங்களை விலக்குகின்றது.

பிராமணம்—4

यदुक्थ्ये गृह्णीयात्प्रत्यञ्चं यज्ञमतिग्राह्यास्सꣳ शृणीयुः ।

என்பது.

உரை.

உக்தியத்தில் கிரகிக்கும் அதிக்கிராகியங்கள் வண்டியைத் தாங்கும் கொம்புபோல் தாங்குகின்றவைகளாதலின் மிகமுன் கிமிர்ந்துபோய் பின்னால் விழுந்துவிடும் வண்டிபோல் எக்ஞத்தைக் கெடுத்துவிடும். ஆதலின் உக்த்தியத்தில் அதிக்கிராகியங் கூடாது என்பது.

---

பிருஷ்டிய ஆறு நாளிலும் உக்த்யம் இருத்தலின் இவ் விலக்கைப் போக்குதற்கு பூர்வ வாக்கியத்தாலேயே இவைகள் விதிக்கப்பெற்றன. அதைப் போல் விசுவசித் யாகம் சாகாந்தரத்திற் கூறியிருத்தலின் அங்கும் நிஷேதத்தை விலக்குவதன் பொருட்டு விதிக்கின்றது.

பிராமணம்—5

विश्वजिति सर्वपृष्ठे ग्रहीतव्या यज्ञस्य सवीर्यत्वाय ।

என்பது.

உரை.

ரதந்தரம் முதலிய பிருஷ்டியத் துதிகளுள் சர்வ பிருஷ்டமென்னும் விசுவசித்தில் அதிக்கிராகியங்களைக் கிரகித்தல் வேண்டும் என்பது.

---

அக்கினிட் டோமத்தில் அதை விதிக்கின்றது.

பிராமணம்—6

प्रजापतिर्देवेभ्यो यज्ञान्व्यादिशत्स प्रियास्तनूरप न्यधत्त तदतिग्राह्या अभवन्वितनुस्तस्य यज्ञ इत्याहुर्यस्यातिग्राह्या न गृह्यन्त इत्यप्यग्निष्टोमे ग्रहीतव्या यज्ञस्य सतनुत्वाय ।

என்பது.

உரை.

பிரமன் தேவர்களுக்கு எக்ஞத்தைப் பங்கிட்டுக் கொடுத்தனன். அது எக்ஞத்தின் பிரிய தநுவாயிற்று. அதை எடுத்து எங்கேயோ மறைத்து வைத்தனன் அப்பிரிய வுடம்புகளே அதிக்கிராகியங்களாயின. ஆதலின், அக்கினிட்டோமத்தின் பிரிய தநுவுடன் கூடியதாக்குவதற்கு அதிக்கிராகியங்களைக் கிரகித்தல் வேண்டும். இன்றெனின், எக்ஞத்தின் பிரிய தநுக்கள் இன்றென்பர். இங்கு, பிருஷ்டிய ஆறு நாள் முதலிய விகிருதிகளிலும் அதிக்கிராகியங்கள் காணப்படுதலின் அக்கினிட்டோமத்திலும் அவை விதிக்கப்படுகின்றன என்பது.

---

ஐசுவரிய மிகுதியால் பிறரிடத்திலிருந்து சிறந்திருக்க விரும்பியவனுக்கு அவ் வதிக்கிராகியங்களை விதிக்கின்றது.

பிராமணம்—7

देवा वै सर्वेसहशीरासन्ता न व्यावृतमगच्छन्ते देवा एत एतान्ग्रहानपश्यन्तानगृह्णताऽऽग्नेयमग्निरैन्द्रमिन्द्रस्सौर्यं सूर्यस्ततो वै तेऽन्याभिर्देवताभिर्व्यावृतमगच्छन्यस्यैवं विदुष एते ग्रहा गृह्यन्ते व्यावृतमेव पाप्मना भ्रातृव्येण गच्छति ।

என்பது.

உரை.

தேவர்கள், எல்லோரையும்போன்றே ஐசுவரியமுடையோர்களாயிருந்தனரேயன்றி ஐசுவரியம் மிகுந்தவரென்னும் வேறுபாட்டை யடைந்திலர். பிறகு, ஆக்னேயத்தால் அக்கினியும், ஐந்திரத்தால் இந்திரனும், சௌர்யத்தால் சூரியனும் என்னும் அதிக்கிராகியங்களைக் கண்டுபிடித்து ஏனையோர்

களினும் ஐசுவரியமிகுந்து வேறுபாட்டையடைந்தனர். ஆதலின், இதை யுணர்ந்து அதிக்கிராகியங்களைக் கிரகிக்கின்றவன், ஏனைய பகைவனுடைய ஐசுவரியங்களினும் மிகுந்த ஐசுவரியங்களை யுடையோனாய் வேறுபாடடைவன் என்பது.

---

அவ் வதிக்கிராகியங்களைப் புகழ்கின்றது.

பிராமணம்—8

इमे लोका ज्योतिष्मन्तस्समावद्वीर्याः कार्या इत्याहुराग्नेयेनास्मिँल्लोके ज्योतिर्धत्त ऐन्द्रेणान्तरिक्ष इन्द्रवायू हि सयुजौ सौर्येणामुष्मिँल्लोके ज्योतिर्धत्ते ज्योतिष्मन्तोऽस्मा इमे लोका भवन्ति समावद्वीर्यानेनान्कुरुते ।

என்பது,

உரை.

மண், விண், சுவர்க்கம் என்னும் இம் மூன்றுலகங்களையும், ஒத்த வன்மை (ஒளி) யுடையவைகளாகச் செய்யவேண்டுமென்று கூறுகின்றனர். ஆகையால், ஆக்னேயமென்னும் அதிக்கிராக்கியத்தால் இவ்வுலகையும், ஐந்திரத்தால், அந்தரிக்ஷ வுலகையும், இதில் இந்திரனும் வாயுவும் ஒன்று கூடியிருக்கின்றனர். சௌர்ய அதிக்கிராகியத்தால் சுவர்க்கத்தையும் ஒத்த வீரியமுடையவைகளாகச் செய்தனர். ஆதலின், இவ்வதிக்கிராகியங்களால் மூன்றுலகங்களையும் ஒத்த வீரியமுடையவைகளாக்குகின்றான் என்பது.

---

மற்றோராற்றால் அவைகளையே புகழ்கின்றது.

பிராமணம்—9

एतान्वै ग्रहान्बम्बाविश्ववयसाववित्तां ताभ्यामिमे लोकाः पराञ्चश्चार्वाञ्चश्च प्राभुर्यस्यैवं विदुष एते ग्रहा गृह्यन्ते प्रास्मा इमे लोकाः पराञ्चश्चार्वाञ्चश्च भान्ति ॥

என்பது.

உரை.

பம்பா விசுவவயஃ என்பவர்கள் இவ்வதிக்கிராகியங்களை யுணர்ந்தவர். ஆனதால், அவர்கட்கு உத்தம அதமங்களாக விளங்கும் இவ்வுலகங்கள் பெருமைகொடுத்தன. ஆதலின், இவைகளையுணர்ந்து கிரகிப்பவனுக்கு நல்லவைகளுங் கெட்டவைகளுமாக விளங்கும் இவ்வுலகம் நலந்தருவதாகின்றது என்பது.

எட்டாவது அநுவாகம்

முற்றிற்று.

---

## ஆறுங்காண்டம் ஆறும் பிரபாடகம்

### ஒன்பதாவது அநுவாகம்

*அதாப்யக் கிரகத்தைக் கூறும் பிராமணங்கள்.*

இரண்டு பஞ்சாதிக்குமேல் பத்தொன்பது பதங்களைக் கொண்டது.

देवा वै यद्यज्ञेऽकुर्वत तदसुरा अकुर्वत ते देवा अदाभ्ये छन्दाꣳसि सवनानि समस्थापयन्ततो देवा अभवन्परासुरा यस्यैवं विदुषोऽदाभ्यो गृह्यते भवत्यात्मना पराऽस्य भ्रातृव्यो भवति यद्वै देवा असुरानदाभ्येनादभ्नुवन्तददाभ्यस्यादाभ्यत्वं य एवं वेद दभ्नोत्येव भ्रातृव्यं नैनं भ्रातृव्यो दभ्नोति [३४] एषा वै प्रजापतेरतिमोक्षिणी नाम तनूर्यददाभ्य उपनद्धस्य गृह्णात्यतिमुक्त्या अति पाप्मानं भ्रातृव्यं मुच्यते य एवं वेद घ्नन्ति वा एतत्सोमं यदभिषुण्वन्ति सोमे हन्यमाने यज्ञो हन्यते यज्ञे यजमानो ब्रह्मवादिनो वदन्ति किं तद्यज्ञे यजमानः कुरुते येन जीवन्त्सुवर्गं लोकमेतीति जीवग्रहो वा एष यददाभ्योऽनभिषुतस्य गृह्णाति जीवन्तमेवैनꣳ सुवर्गं लोकं गमयति वि वा एतद्यज्ञं छिन्दन्ति यददाभ्ये सꣳस्थापयन्त्यꣳशूनपि सृजति यज्ञस्य संतत्यै [३५] ॥ दभ्नोत्यनभिषुतस्य गृह्णात्येकान्नविꣳशतिश्च ॥ ९ ॥

இதில், அதாப்யம் என்னுஞ் சோமபாத்திரங் கூறப்படுகின்றது.

---

ஆதாப்யக் கிரகத்தை விதிக்கின்றது.

பிராமணம்—1

देवा वै यद्यज्ञेऽकुर्वत तदसुरा अकुर्वत ते देवा अदाभ्ये छन्दाꣳसि सवनानि समस्थापयन्ततो देवा अभवन्पराऽसुरा यस्यैवं विदुषोऽदाभ्यो गृह्यते भवत्यात्मना पराऽस्य भ्रातृव्यो भवति ।

என்பது,

**உரை.**

பொறுமையால், தேவர்கள் அநுட்டித்த எக்ஞங்களை யெல்லாம் அசுரர்களுஞ் செய்துவந்தனர். அதைக்கண்ட தேவர்கள் அசுரர்களை வஞ்சிக்க விரும்பி, காயத்திரி, திரிஷ்டுப், சகதி என்னும் மூன்று சந்தங்களால் உண்டாகத்தக்க மூன்று சவனங்களை (மும்முறை சோமரசம் பிழிவதை)யும் அதாப்யக் கிரகத்தில் முடித்துவிட்டனர். இதிற் செய்யவேண்டியதோ, மூன்று மந்திரங்களால் மூன்று சோமக்கொடித் துண்டுகளை வேறேயெடுத்து வைத்தலாம். இதனால், தேவர்கட்கும் வெற்றியும் அசுரர்கட்குத் தோல்வியும் உண்டாயிற்று. ஆதலின், இதை அறிந்து அதாப்யக் கிரகத்தைக் கிரகிப்பவனுக்கு வெற்றியும் பகைவருக்குத் தோல்வியும் உண்டாகின்றது என்பது.

---

விரித்துரைத்தலாற் புகழ்கின்றது.

பிராமணம்—2

**यद्वै देवा असुरानदाभ्येनादभ्नुवंस्तददाभ्यस्यादाभ्यत्वम् ।**

என்பது.

உரை.

தேவர்கள் அசுரர்களை எதனால் துன்புறுத்தினர்களோ, தான் இயற்கையில் எதனால் துன்புறுத்தப்படாததோ, அது அதாப்யம் என்பதாம்.

---

இதை யுணர்ந்தவனைப் புகழ்கின்றது.

பிராமணம்—3

**य एवं वेद दभ्नोत्येव भ्रातृव्यं नैनं भ्रातृव्यो दभ्नोति ।**

என்பது.

உரை.

இத்தன்மை யுணர்ந்தவனுடைய பகைவன் இவனைத் தம்பனஞ் செய்யமாட்டான் என்பது.

---

அதாப்யக் கிரகத்திற்குக் காலத்தை விதிக்கின்றது.

பிராமணம்—4

**एषा वै प्रजापतेरतिमोक्षिणी नाम तनूर्यददाभ्य उपनद्धस्य गृह्णात्यति-मुक्त्यै ।**

என்பது.

கிரகம்)

உரை.

இது, பிரசாபதியை, பாவத்தினின்றும் அதிசயமாய் விடுவிக்குங் கிரகமாம். இது, அதி மோக்ஷவடிவமானது. இது, அணியாற் கட்டிவைத்திருந்த சோமத்தை விடுவித்தற் பொருட்டுக் கிரகிக்கப் படுகின்றது. அதாவது, வண்டியிலிருந்து இறக்கிய சோமம் பிழியும் பலகைகளின் மேல்வைக்கப்பட்டிருக்கின்றது. அச் சோமத்தை உபாம்சுக் கிரகிக்கும்போது அவிழ்த்து "இந்திராயத்வா" என்றது முதலிய மந்திரங்களால் சோமம் அளக்கப்படுகின்றது. அவிழ்ப்பதற்கு முன்னேயே அதாப்யக் கிரகத்தைக் கிரகித்தல் வேண்டும் என்பது.

---

இதை யுணர்ந்தவனைப் புகழ்கின்றது.

பிராமணம்—5

अति पाप्मानं भ्रातृव्यं मुच्यते य एवं वेद ।

என்பது.

உரை.

இவ்வாறுணர்தல், பாவியாகிய பகைவராற் செய்யப்படும் துன்பங்களிலிருந்து விடுவிக்கின்றது என்பது.

---

அதாப்யம் என்பது சோமத்தினும் வேறாகிய ஒரு பொருள் என்கின்றது.

பிராமணம்—6

घ्नन्ति वा एतत्सोमं यदभिषुण्वन्ति सोमे हन्यमाने यज्ञो हन्यते यज्ञे यजमानो ब्रह्मवादिनो वदन्ति किं तद्यज्ञे यजमानः कुरुते येन जीवन्त्सुवर्गं लोकमेतीति जीवग्रहो वा एष यददाभ्योऽनभिषुतस्य गृह्णाति जीवन्तमेवैनꣳ सुवर्गं लोकं गमयति ।

என்பது.

உரை.

இடித்துப் பிழிவதால் சோமங் கொல்லப்பட்டதாகின்றது. சோமங் கொல்லப்படில் எகஞுமுங் கொல்லப்பட்டதாகும். ஆகவே, எசமானனுங் கொல்லப்படுகின்றான். என்றிவ்வாறு பிரமவாதிகள் ஆராய்ந்துகொண்டு கொல்லாமல் உயிருடனிருக்கும் கிரகம் அதாப்யக் கிரகம் எனக் கண்டுபிடித்தனர். ஆதலின், இடித்துப் பிழியாமற் கிரகிக்கப்படும் இவ்வதாப்யக் கிரகத்தைக் கிரகிப்பவன் உயிருடனே சுவர்க்கத்தை யடையச் செய்கின்றான் என்பது.

---

அதாப்யக் கிரகத்தை, (சோமக் கோடித்துண்டை) அலசுவதற்குக் காரணமான சவனங்கள் மூன்றிலுமுள்ள மிகுந்த சோமரசம் பிழிவதிற்கலந்து விடல் வேண்டுமேன்று விதிக்கின்றது.

பிராமணம்—7

**वि वा एतद्यज्ञं छिन्दन्ति यद्दाभ्ये स॑ᳪस्थापयन्त्य॑ᳪशूनपि सृजति यज्ञस्य संतत्यै ।**

என்பது.

உரை.

அசுரர்களை வஞ்சித்தற் பொருட்டு, "வஸவஸ்த்வா" என்றது முதலிய மந்திரங்களால் சோமக்கொடித் துண்டுகள் மூன்றையும் வேறுபடுத்துவதாகிய சவனத்திரய (சமாபன)ஞ் செய்தனர். அதைப்போல் பிறராலுஞ் செய்யப்படில் அவைகளின் கலப்பின்றி உபாம்சு, அந்தர்யாம முதலானவைகளின் அநுட்டானஞ் செய்தலின் எச்ஞம் இடையில் கெடும் ஆதலின், வேறுபடுத்திய சோமக்கொடித் துண்டுகளை சோமரசம் பிழிவதிற் கலந்து விடல் வேண்டும். இது, எச்ஞந் தொடர்ந்து நடந்தேறுவதன் பொருட்டாம் என்பது.

ஒன்பதாவது அநுவாகம்
*முற்றிற்று.*

---

## ஆறுங்காண்டம் ஆறும் பிரபாடகம்

### பத்தாவது அநுவாகம்

*அம்சுக்கிரகத்தைக் கூறும் பிராமணங்கள்.*

இரண்டு பஞ்சாதிக்குமேல் இருபது பதங்களைக் கொண்டது.

**देवा वै प्रबाहुग्ग्रहानगृह्णत स एतं प्रजापतिर॑ᳪशुमपश्यत्तमगृह्णत तेन वै स आर्ध्नोद्यस्यैवं विदुषो॑ᳪशुर्गृह्यत ऋध्नोत्येव सकृदभिषुतस्य गृह्णाति सकृद्धि स तेनाऽऽर्ध्नोन्मनसा गृह्णाति मन इव हि प्रजापतिः प्रजापतेराप्त्या औदुम्बरेण गृह्णात्यूर्ग्वा उदुम्बर ऊर्जमेवाव रुन्धे चतुस्स्रक्ति भवति दिक्षु [२६] एव प्रति तिष्ठति यो वा अ॑ᳪशोरायतनं वेदाऽऽयतनवान्भवति वामदेव्यमिति साम**

கிரகம்)

तद्वा अस्याऽऽयतनं मनसा गायमानो गृह्णात्यायतनवानेव भवति यदध्वर्युरꣳशुं गृह्णन्नार्धयेदुभाभ्यां नर्ध्येताध्वर्यवे च यजमानाय च यदर्धयेदुभाभ्यामृध्येतानवानं गृह्णाति सैवास्यार्धिर्हिरण्यमभि व्यनित्यमृतं वै हिरण्यमायुः प्राण आयुषैवामृतमभि धिनोति शतमानं भवति शतायुः पुरुषश्शतेन्द्रिय आयुष्येवेन्द्रिये प्रति तिष्ठति [३७] ॥ दिक्ष्वनिति विꣳशतिश्च ॥ १० ॥

இதில், 'அம்சு' என்னுங்கிரகங் கூறப்படுகின்றது.

---

அம்சுக்கிரகத்தை விதிக்கின்றது.

பிராமணம்—1

देवा वै प्रबाहुग्ग्रहानगृह्णत स एतं प्रजापतिरꣳशुमपश्यत्तमगृह्णीत तेन वै स आर्ध्नोद्यस्यैवं विदुषोऽꣳशुर्गृह्यत ऋध्नोत्येव ।

என்பது

உரை.

தேவர்கள் ஒத்த இயல்புடைய கிரகங்களைக் கிரகித்தனர். பிரசாபதி, விலக்ஷணமாகிய அம்சுக்கிரகத்தைக் கண்டுபிடித்துக் கிரகித்து நிறைந்த சம்பத்தை யடைந்தனன். ஆதலின், அம்சுக்கிரகத்தைக் கிரகிப்பவன் நிறைந்த சம்பத்தை யடைகின்றான் என்பது.

---

இது ஏனைய கிரகங்களினும் விலக்ஷணமானதென்று முறையாய்த் தெரிவித்து, இரசம் பிழிதலில் ஆவிருத்தி இல்லையென்று விதிக்கின்றது.

பிராமணம்—2

सकृदभिषुतस्य गृह्णाति सकृद्धि स तेनाऽऽर्ध्नोत् ।

என்பது.

உரை.

ஒரு முறை இடித்துப் பிழிந்து கிரகித்தல் வேண்டும் ஏனையவைகளைப் போல் எட்டு முறையன்று. பிரசாபதி, ஒரு முறையே பிழிந்து சம்பத்தை யடைந்தனன் என்பது.

---

கிரகிக்கும் மந்திரத்தை ஓதுவதை நீக்குதற்கு மானசமாய் அநுசந்தானஞ் செய்வதை விதிக்கின்றது.

பிராமணம்—3

**मनसा गृह्णाति मन इव हि प्रजापतिः प्रजापतेराप्त्यै ।**

என்பது.

உரை.

*மனதில் நினைத்துக்கொண்டு கிரகிக்கின்றான். மனத்தினாற் சங்கற்பித்து பிரமன் உலகைப் படைத்தனன். ஆதலின் மனமே பிரசாபதியாம் மனத்தில் நினைத்துக் கிரகிக்கில் பிரசாபதியை யடைகின்றான் என்பது.*

---

கிரகிக்கும் பாத்திரத்தை விதிக்கின்றது.

பிராமணம்—4

**औदुम्बरेण गृह्णात्यूर्ग्वा उदुम्बर ऊर्जमेवाव रुन्धे ।**

என்பது.

உரை.

*அத்தி மரத்தாற்செய்த பாத்திரத்திற் கிரகித்தல் வேண்டும் அத்திமரம் இரசமாம் ஆதலின் இரசத்தையடைகின்றான் என்பது.*

---

பாத்திரத்தின் வடிவை விதிக்கின்றது.

பிராமணம்—5

**चतुस्स्रक्ति भवति दिक्ष्वेव प्रति तिष्ठति ।**

என்பது.

உரை.

*நான்கு மூலைகளையுடையதாயிருத்தல் வேண்டும் இதனால், நான்கு திக்குக்களிலும் பெருமையை யடைகின்றான் என்பது.*

---

வாமதேவரால் காணப்பெற்ற, "கயா நஶ்சித்ர" என்பது முதலிய இருக்கிலுண்டாகிய சாம மறைப்பாடங் கிரகணமந்திரம் என்கின்றது.

பிராமணம்—6

**यो वा अꣳशोरायतनं वेदाऽऽयतनवान्भवति वामदेव्यमिति साम तद्वा अस्याऽऽयतनं मनसा गायमानो गृह्णात्यायतनवानेव भवति ।**

என்பது

கிரகம்)

உரை.

அம்சுக்கிரகத்தின் இடம் வாமதேவ்யமென்னுஞ் சாமப்பாடல் என்று உணர்ந்தவன் கிருகத்தை யடைகின்றான். வாமதேவ்யமென்னும் சாமத்தை மனத்தில் நினைத்துக்கொண்டு அம்சுக்கிரகத்தைக் கிரகிப்பவன் வீட்டை யடைகின்றான் என்பது.

---

கிரகிக்கும்போது மூச்சு விட்க்கூடாதென விதிக்கின்றது.

பிராமணம்—7

**यदध्वर्युरꣳशुं गृह्णन्नार्धयेदुभाभ्यां नर्ध्येताध्वर्यवे च यजमानाय च यदर्धये-दुभाभ्यामृध्येतानवानं गृह्णाति सैवास्यर्धिः ।**

என்பது

உரை.

அம்சுக்கிரகத்தைக் கிரகிக்கும்போது அத்வரியு சம்பத்தைச் செய்யா (மூச்சு) விடில், அத்துவரியுவிற்கும் எசமானனுக்கும் சம்பத்து இல்லாத தாய்விடும். அத்வரியுவிற்கும் எசமானனுக்கும் சம்பத்தை யுண்டாக்கவேண் டிலோ, மூச்சுவிடாமற் கிரகித்தல்வேண்டும். இதுவே, அம்சுவின் சம்பத் தாம் என்பது.

---

ஒருவாறு மூச்சுவிடிலோ, அக்குற்ற நீக்குதற்பொருட்டுக் கூறுகின்றது.

பிராமணம்—8

**हिरण्यमभि व्यनित्यमृतं वै हिरण्यमायुः प्राण आयुषैवामृतमभि विनोति ।**

என்பது.

உரை.

பொன்னை மூக்கிற்கு நேரில்வைத்து அதன்மேல் மூச்சு விடுவானாக. பொன் அமுதமாதலின் ஆயுள் பிராணன் அதை பொன் மிகக் களிப்படை விக்கின்றது என்பது.

---

பொன் இவ்வளவென்று விதிக்கின்றது.

பிராமணம்—9

**शतमानं भवति शतायुः पुरुषश्शतेन्द्रिय आयुष्येवेन्द्रिये प्रति तिष्ठति ॥**

என்பது.

உரை.

நூறு வராகனிடை பொன்னிருத்தல் வேண்டும். நூறு வயதுடைய வன் மனிதன். நூறு இந்திரியம். அதாவது, பத்து இந்திரியங்களும் தனித் தனி பத்துப்பத்து நாடிகளிற் செல்லுதலின் என்க. ஆதலின், ஆயுளை இந்தி ரியத்தில் நிறுத்துகின்றது என்பது.

பத்தாம் அநுவாகம்
முற்றிற்று.

---

ஆறுங்காண்டம் ஆறும் பிரபாடகம்

பதினோராவது அநுவாகம்

*சோடசிக் கிரகத்தைக் கூறும் பிராமணங்கள்.*

ஐந்து பஞ்சாதிக்குமேல் நாற்பத்தேழு பதங்களைக் கொண்டது.

प्रजापतिर्देवेभ्यो यज्ञान्व्यादिशत्स रिरिचानोऽमन्यत स यज्ञानाꣳषोडशधेन्द्रियं वीर्यमात्मानमभि समक्खिदत्तत्षोडश्य-भवन्न वै षोडशी नाम यज्ञोऽस्ति यद्वाव षोडशꣳ स्तोत्रꣳ षोडशꣳ-शस्त्रं तेन षोडशी तत्षोडशिनष्षोडशित्वं यत्षोडशी गृह्यत इन्द्रियमेव तद्वीर्यं यजमान आत्मन्धत्ते देवेभ्यो वै सुवर्गो लोकः [३८] न प्राभवत्त एतꣳषोडशिनमपश्यन्तमगृह्णत ततो वै तेभ्य-स्सुवर्गो लोकः प्राभवद्यत्षोडशी गृह्यते सुवर्गस्य लोकस्याभिजित्या इन्द्रो वै देवानामानुजावर आसीत्स प्रजापतिमुपाधावत्तस्मा एतꣳ-षोडशिनं प्रायच्छत्तमगृह्णीत ततो वै सोऽग्रं देवतानां पर्यैद्यस्यैवं विदुषष्षोडशी गृह्यते [३९] अग्रमेव समानानां पर्येति प्रात-स्सवने गृह्णाति वज्रो वै षोडशी वज्रः प्रातस्सवनꣳ स्वादेवैनं योनेर्निर्गृह्णाति सवनेसवनेऽभि गृह्णाति सवनात्सवनादेवैनं प्रजन

यति तृतीयसवने पशुकामस्य गृह्णीयाद्वज्रो वै षोडशी पशवस्तृती-
यसवनं वज्रेणैवास्मै तृतीयसवनात्पशूनव रुन्धे नोक्थ्ये गृह्णीया
त्प्रजा वै पशव उक्थानि यदुक्थ्ये [४०] गृह्णीयात्प्रजां पशूनस्य
निर्दहेदतिरात्रे पशुकामस्य गृह्णीयाद्वज्रो वै षोडशी वज्रेणैवास्मै
पशूनवरुध्य रात्रियोपरिष्टाच्छमयत्यप्यग्निष्टोमे राजन्यस्य गृह्णी-
याद्व्यावृत्कामो हि राजन्यो यजते साह्न एवास्मै वज्रं गृह्णाति स
एनं वज्रो भूत्वा इन्धे निर्वा दहत्येकविꣳशꣳ स्तोत्रं भवति प्रति-
ष्ठित्यै हरिवच्छस्यत इन्द्रस्य प्रियं धाम [४१] उपाऽऽप्नोति कनी-
याꣳसि वै देवेषु छन्दाꣳस्यासञ्ज्यायाꣳस्यसुरेषु ते देवाः कनीयसा
छन्दसा ज्यायश्छन्दोऽभि व्यशꣳसन्ततो वै तेऽसुराणां लोकम-
वृञ्जत यत्कनीयसा छन्दसा ज्यायश्छन्दोऽभि विशꣳसति भ्रातृ-
व्यस्यैव तल्लोकं वृङ्क्ते षडक्षराण्यति रेचयन्ति षड्वा ऋतव
ऋतूनेव प्रीणाति चत्वारि पूर्वाण्यव कल्पयन्ति [४२] चतुष्पद
एव पशूनव रुन्धे द्वे उत्तरे द्विपद एवाव रुन्धेऽनुष्टुभमभि संपा-
दयन्ति वाग्वा अनुष्टुप्तस्मात्प्राणानां वागुत्तमा समयाविषिते
सूर्ये षोडशिनस्स्तोत्रमुपाकरोत्येतस्मिन्वै लोक इन्द्रो वृत्रमह-
न्त्साक्षादेव वज्रं भ्रातृव्याय प्रहरत्यरुणपिशङ्गोऽश्वो दक्षिणैतद्वै
वज्रस्य रूपꣳ समृद्ध्यै [४३] ॥ लोको विदुषष्षोडशी गृह्यते
यदुक्थ्ये धाम कल्पयन्ति सप्तचत्वारिꣳशच्च ॥ ११ ॥

தலைப்புச் சொற்களைக்கொண்ட அநுவாகத் தொகை:—

सुवर्गाय यद्दाक्षिणानि समिष्टयजूꣳष्यवभृथयजूꣳषि स्फ्येन प्रजापतिरिन्द्रो घ्नन्ति देवा वा इन्द्रियं देवा वा अदाभ्ये देवा वै प्रबाहुक्प्रजापतिस्स रिरिचानस्सयज्ञानाꣳ षोडशधैकादश ॥ ११ ॥

தலைப்புச் சொற்களைக்கொண்ட பஞ்சாதிகளின் தொகை :—

सुवर्गाय यजति प्रजास्सौम्येन गृह्णीयात्प्रत्यश्वं गृह्णीयात्प्रजां पशून्त्रिचत्वारिꣳशत् ॥ ४३ ॥

இதில், சோடசி என்னுங் கிரகம் விதிக்கப்படுகின்றது.

---

அதை விதித்தல்.

பிராமணம்—1

प्रजापतिर्देवेभ्यो यज्ञान्व्यादिश्य स रिरिचानोऽमन्यत स यज्ञानाꣳषोडश-धेन्द्रियं वीर्यमात्मानमभि समक्षिखदत्तत्षोडश्यभवन्न वै षोडशी नाम यज्ञोऽस्ति यद्वाव षोडशꣳ स्तोत्रꣳ षोडशꣳ शस्त्रं तेन षोडशी तत्षोड-शिनष्षोडशित्वं यत्षोडशी गृह्यत इन्द्रियमेव तद्वीर्यं यजमान आत्म-न्धत्ते ।

என்பது

உரை.

பிரசாபதி; தேவர்கட்கு எக்ஞத்தை பங்கிட்டுக் கொடுத்துவிட்டு தனக்குப் பயன் ஒன்றுமே யிலாமையின் யான் வீணுள் என எண்ணிக் கொண்டனன். பிறகு, தனக்கு எல்லா எக்ஞங்களின் சம்பந்தமாகிய இந்திரிய வன்மையை பதினறுவகைப்படுத்திக்கொண்டு சாந்தமாயினன். அவ்வன்மையே சோடசி என்னும் எக்ஞமாயிற்று. அது, சோம யாகத்தினும் வேருகிய ஒரு புதியயாகமல்ல இதில், பதினறு சஸ்திரங்களும், பதினறு துதிகளும் இருத்தலின் சோடசி எனப்பட்டது. இவ்வாறு, சோடசியைக் கிரகிப்பவன், எசமானனுடைய ஆன்மாவில் இந்திரிய வன்மையை நிலைக்க வைக்கின்றுன் என்பது.

---

கிரகம்)

மற்ருெரு வகையால் சோடசியைப் புகழ்கின்றது.

பிராமணம்—2

देवेभ्यो वै सुवर्गो लोको न प्राभवत्त एतꣳषोडशिनमपश्यन्तमगृह्णत ततो वै तेभ्यस्सुवर्गो लोकः प्राभवद्यत्षोडशी गृह्यते सुवर्गस्य लोकस्याभिजित्यै ।

என்பது.

உரை.

தேவர்கட்கு சுவர்க்கம் வசப்படவில்லை. பிறகு இச் சோடசியைக் கண்டுபிடித்துக் கிரகித்து சுவர்க்கத்தை தம் வசம்படுத்தினர். ஆதலின், சுவர்க்கலோகம் தன் வசமாதற்பொருட்டு சோடசியைக் கிரகிக்கின்ருன் என்பது.

---

மீண்டும் மற்ருெரு வகையாற் புகழ்கின்றது.

பிராமணம்—3

इन्द्रो वै देवानामानुजावर आसीत्स प्रजापतिमुपाधावत्तस्मा एतꣳ षोडशिनं प्रायच्छत्तमगृह्णीत ततो वै सोऽग्रं देवतानां पर्यैद्यस्यैवं विदुषः षोडशी गृह्यतेऽग्रमेव समानानां पर्येति ।

என்பது.

உரை.

இந்திரன், தேவர்களுக்குள் மிகத் தாழ்ந்தவனுயிருந்தனன். பிறகு, அவன் பிரசாபதியை யடைந்தனன். பிரசாபதி, அவனுக்கு இச் சோடசியைக் கொடுத்தனர். இந்திரன், இச் சோடசியைக் கிரகித்து தேவர்களுக்குள் மிகச்சிறந்தோனுயினன். ஆதலின், இத்தன்மையை யுணர்ந்து சோடசியைக் கிரகிப்பவன் தன்னைப்போன்ருேர்களுக்குள் மிகச் சிறப்புடையவனுகின்ருன் என்பது.

---

காலத்தை விதிக்கின்றது.

பிராமணம்—4

प्रातस्सवने गृह्णाति वज्रो वै षोडशी वज्रः प्रातस्सवनꣳ स्वादेवैनं योनेर्निर्गृह्णाति ।

என்பது

உரை.

பிராதசவனமும் சோடசியும் வேண்டாதவைகளை விலக்கலின் வச்சிரங்களாம். ஆதலின், பிராதசவனத்தில் சோடசியைக் கிரகிக்கில் தனது காரணத்திலேயே கிரகித்ததாகின்றது என்பது.

---

மற்றொரு பக்ஷத்தை விதிக்கின்றது.

பிராமணம்—5

**सवनेसवनेऽभि गृह्णाति सवनात्सवनादेवैनं प्रजनयति ।**

என்பது.

உரை

ஒவ்வொரு சவனத்திலும் இது கிரகிக்கப்படுகின்றது. ஒவ்வொன்றிலும் இதை உண்டாக்குகின்றான் என்பது.

---

நித்தியமாய் விதித்ததற்கு காமியத்தை விதிக்கின்றது.

பிராமணம்—6

**तृतीयसवने पशुकामस्य गृह्णीयाद्वज्रो वै षोडशी पशवस्तृतीयसवनं वज्रेणैवास्मै तृतीयसवनात्पशूनव रुन्धे ।**

என்பது.

உரை.

பசுவை விரும்பியவன், மூன்றாஞ் சவனத்தில் இச் சோடசியைக் கிரகித்தல்வேண்டும். கிரகிக்கில், சோடசி வச்சிரமாதலின், மூன்றாஞ் சவனமாகிய பசுக்கள் வச்சிரத்தால் அடையப்படுகின்றன என்பது. இங்கு, கருங்காலி மரம்யூபமாம் அதுவே வீரியத்தை விரும்பியவனுக்கு காமியமானது போல் என்பதை யுணர்க.

---

உக்த்தியக் கிருதுவிலும், வேறு சாகைப்படி சோடசிக்கிரகம் உண்டு என்பதை விலக்குகின்றது.

பிராமணம்—7

**नोक्थ्ये गृह्णीयात्प्रजा वै पशव उक्थानि यदुक्थ्ये गृह्णीयात्प्रजां पशूनस्य निर्दहेत् ।**

என்பது.

உரை.

உக்த்யக் கிருதுவிலுள்ள சஸ்திரங்கள் பசுக்களாமாதலின், சோடசியாகிய வச்சிரத்தால் தரிக்கப்படும். ஆதலின், உக்த்யத்தில் சோடசியைக் கிரகித்தல் கூடாது என்பது.

---

சோடசிக் கிருதுவில்போல், அதிராத்திரிக் கிருதுவிலும் காமியக் கிரகத்தை விதிக்கின்றது.

பிராமணம்—8

**अतिरात्रे पशुकामस्य गृह्णीयाद्वज्रो वै षोडशी वज्रेणैवास्मै पशूनवरुध्य रात्रियापरिष्टाच्छमयति ।**

என்பது.

உரை.

அதிராத்திரியில் பசுவை விரும்பியவன் சோடசியைக் கிரகித்தல்வேண்டும். வச்சிரமாகிய சோடசியால் பசுக்கள் தடைப்படினும் கேடொன்றுமில்லை. சோடசிக்கிரக சஸ்திரம் மேலே அநுட்டிக்கப்படுவதால், ராத்திரி என்பதால் குறிப்பிட்ட சஸ்திரக் கூட்டங்களால் அது சாந்தமாகின்றது. ஏனைய அதிராத்திரிகளில் சோடசிக்கிரகம் இல்லை என்பது.

---

அதிகாரி விசேடணத்தால் கிரகத்தை விதிக்கின்றது.

பிராமணம்—9

**अग्निष्टोमे राजन्यस्य गृह्णीयाद्व्यावृत्कामो हि राजन्यो यजते ।**

என்பது.

உரை.

பன்னிரண்டு துதிகளுடனும், சஸ்திரங்களுடனுங் கூடியது அக்கினிஷ்டோமமாம். அதில், அரசன் அந்தண வணிகர்களினும் மேம்பாட்டையடைய விரும்பி யாகஞ்செய்தலின் அவன் அதில் கிரகித்தல்கூடும் என்பது. இது மூவருணத்தார்கட்கும் பொதுவாகிய கிருதுவாம் என்பது.

---

இதில், சோடசிக்கிரகத் தோத்திரத்திற்கு இருபத்தோரு ஸ்தோமம் என்னுந் துதியை விதிக்கின்றது.

பிராமணம்—10

**साह्न एवास्मै वज्रं गृह्णाति स एनं वज्रो भूत्या इन्धे निर्वा दहत्येकविंशः स्तोत्रं भवति प्रतिष्ठित्यै ।**

என்பது.

உரை.

ஒரு நாளிற் செய்யுஞ் சோமயாகத்தில், எசமானன் பொருட்டு சோடசியாகிய வச்சிரத்தைக் அத்வரியு கிரகிக்கின்றான். அது பகைவனைக்கொல்வதன் பொருட்டாமாயினும், எசமானனுடைய ஐசுவரியத்தின் பொருட்டும் விளங்குகின்றது. இனி, பிரயோக வல்லமையின்மையால் இவ் வெசமானனையே சுடினுஞ்சுடும். ஆதலின், பக்ஷத்தில் சுடுதலை நீக்குதற்கும், எசமானனுடைய நிலையின் பொருட்டும் இருபத்தொரு முறைத் துதிகள் தேடவேண்டும். அது, "அஸாவிசோம" என்பது முதலியது முதலாவதாகவும், "இந்திரமித்தரீ" என்பது முதலியது இரண்டாவதாகவும், "ஆதிஷ்ட" என்பது முதலியது மூன்றாவதாகவும் இச்சோடசியில் துதிக்கப்படுகின்றன இம்மூன்று இருக்குக்களாய் துதியை மும்முறை திருப்புவதால் இருபத்தொரு ஸ்தோமமாகச் செய்தல்வேண்டும் என்பது.

---

சோடசியின் சஸ்திரத்தை விதிக்கின்றது.

பிராமணம்—11

**हरिवच्छस्यत इन्द्रस्य प्रियं धामोपाऽऽप्नोति ।**

என்பது

உரை.

"இந்திரமித்தரீவஹத" என்பது முதலிய இருக்குக்களில் "ஹரி" என்னுஞ் சொல் மிகுதியாயிருத்தலின் ஹரிவச்சஸ்திரமாம். அதனால், அத்தகைய சஸ்திரமென்னுந் துதிவிசேடத்தால் இந்திரனைப் பிரியப்படுத்தில் இந்திரலோகத்தை அடைகின்றான் என்பது.

---

பல் வேறுவகைச் சந்தங்களையுடைய இருக்குக்களைச் சேர்த்தலால் வருவது விகரணம் எனவும், உள்ளவாறே இருப்பது அவிகரணம் எனவும் சஸ்திரம் இருதிறப்படும். அவற்றுள், விகரணம் என்னுஞ் சஸ்திர வகையை விதிக்கின்றது.

பிராமணம்—12

**कनीयाꣳसि वै देवेषु छन्दाꣳस्यासञ्ज्यायाꣳस्यसुरेषु ते देवाः कनीयसा छन्दसा ज्यायश्छन्दोऽभि व्यशꣳसन्ततो वै तेऽसुराणां लोकमवृञ्जत यत्कनीयसा छन्दसा ज्यायश्छन्दोऽभि विशꣳसति भ्रातृव्यस्यैव तल्लोकं वृङ्क्ते ।**

என்பது.

உரை.

இச்சஸ்திரத்தில், மூன்று காயத்திரிச் சந்தங்களும், இரண்டு பந்திச் சந்தங்களும், உஷ்ணிக் பிருகத் என்னுஞ் சந்தங்களும் இருக்கின்றன. இவற்றுள், காயத்திரி இருபத்துநான்கு எழுத்துக்களைக்கொண்டது. உஷ்ணிக் இருபத்தெட் டெழுத்துக்களைக்கொண்டது. இவ்விரண்டும் குறைந்த எழுத்துக்கொண்டதால் தேவச் சந்தங்களாகின்றன. ஏனைய, பந்திச்சந்தம் நாற்பது எழுத்துக்களையும், பிருகத் முப்பத்தாறு எழுத்துக்களையுங் கொண்டவைகளாமாதலின் மிகுந்த எழுத்துக்களைக் கொண்டவைகளாயிற்று. ஆதலின் இவை அசுரச்சந்தங்களாம். இவைகளை காயத்திரியின் முதற்பாதத்தை. பந்திச்சந்தத்தின் முதற்பாதத்தோடு சேர்த்து பாதி இருக்கைத் தேடிக் கொள்ளல்வேண்டும். இவ்வாறே, இரண்டாம்பாதம் மூன்றும் பாதங்களையுஞ்சேர்த்து மீண்டும் இரண்டு பாதி இருக்குக்களைத் தேடல்வேண்டும். பந்திச் சந்தத்தில் மீந்த பாதமிரண்டையுஞ் சேர்த்து பாதி இருக்காக்கி முடிவில் பிரணவமோதுக. இவ்வாறு, நான்கு பாதி இருக்குக்களால் இரண்டு அநுஷ்டுப் ஆகிவிடுகிறது. இவ்வாறே ஏனையவைகளையுஞ் சேர்த்துக்கொள்க. இவ்வாறு பாகுபடுத்திக்கொள்ளில் அசுரலோக மடையாததுடன் பகைவருடைய இடத்தையுங் கெடுக்கின்றான் என்பது.

---

எண்ணிக்கைகள் வேறென்னுங் கருத்தைக்கொண்டு விஹரணத்தைக் காட்டுகின்றது.

பிராமணம்—13

**षडक्षराण्यति रेचयन्ति षड्वा ऋतव ऋतूनेव प्रीणाति चत्वारि पूर्वाण्यव कल्पयन्ति चतुष्पद एव पशूनव रुन्धे द्वे उत्तरे द्विपद एवात्र रुन्धे ।**

என்பது

உரை.

இருபத்தெட்டு எழுத்துககளைக்கொண்டது சில இருக்கு, முப்பத்தெட்டு எழுத்துக்களைக் கொண்டன சில. முப்பது எழுத்துக்களைக் கொண்டன சில. இவற்றுள், முப்பத்தெட்டு எழுத்துக்களில் ஆறு எழுத்துக்களை மற்றொன்றுடன் சேர்க்கில் ஆறு இருதுக்களைப் பிரியப்படுத்துகின்றான். அதாவது முன் இருக்கில் நான்கு எழுத்துக்களையும் ஈற்றிலுள்ள இருக்கில் இரண்டு எழுத்துக்களையுஞ் சேர்த்தலாம். இவற்றுள்ளும் நான்கெழுத்தைச் சேர்த்தலால் நாற்காற் பிராணிகளான பசுக்களையடைகின்றான். இரண்டெழுத்தைச் சேர்த்தலால் இருகாற் பிராணிகளையடைகின்றான் என்பது.

---

விகரணத்தின் பயனைக் கூறுகின்றது.

பிராமணம்—14

**अनुष्टुभमभि संपादयन्ति वाग्वा अनुष्टुप्तस्मात्प्राणानां वागुत्तमा ।**

என்பது.

உரை.

அநுஷ்டுப்ச் சந்தத்தையுந் தேடிக்கொள்கின்றது. அநுஷ்டுப்ச் சந்தம் வாக்காம். ஆதலின் பிராணன் முதலானவைகளுக்குள் வாக்குச் சிறந்ததாம் என்பது.

---

துதியின் உபாகரணத்திற்குக் காலத்தை விதிக்கின்றது.

பிராமணம்—15

**समयाविषिते सूर्ये षोडशिनस्स्तोत्रमुपाकरोत्येतस्मिन्वै लोक इन्द्रो वृत्र-महन्त्साक्षादेव वज्रं भ्रातृव्याय प्रहरति ।**

என்பது.

உரை.

இந்திரன், பாதிச் சூரியாத்தமனம்போதில் விருத்திரனைக் கொன்றதால், சூரியன் பாதி மறைந்தபோது சோடசியின் துதிக்கு உபாகரணஞ் (தருப்பை கொடுத்துக் குறிப்புச்) செய்தல்வேண்டும். இதனால், நேரே பகைவன்பொருட்டு வச்சிரத்தை விடுக்கின்றவனாவன் என்பது.

---

சோடசிக்குரிய தட்சிணையை விதிக்கின்றது.

பிராமணம்—16

**[illegible]रुणपिशङ्गोऽश्वो दक्षिणैतद्वै वज्रस्य रूपꣳ समृद्ध्यै ॥**

என்பது.

உரை.

சிவப்புக்கலந்த மங்கல் நிறமுடைய குதிரை இதற்குத் தானங் கொடுத்தல் வேண்டும். இது வச்சிரத்தின் நிறமாதலின் சம்பத்தின் பொருட்டாகின்றது என்பது.

பதினோராவது அநுவாகம்
முற்றிற்று.

---

கிருஷ்ண எசுர்வேதத் தைத்திரீய சங்கிதையில்
ஆறுங்காண்டம்
முடிந்தது.

---

சுப்ரமண்யோம். சுப்ரமண்யோம். சுப்ரமண்யோம்.